# உட்பொதிவு

# 1

# குழப்பத்திற்கான அடிப்படைக் காரணம்

**பொ**துவாக 'சொற்பொழிவு' என்று கருதப்படும் ஒன்றாகவோ, அல்லது, குறிப்பிட்ட துறையைப் பற்றி விளக்கிச் சொல்லும் பிரசங்கமாகவோ இந்த நிகழ்ச்சி இல்லை என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். உங்களுக்கும் பேச்சாளராகிய எனக்கும் இடையே நிகழும் உரையாடல் இது. குறிப்பிட்ட ஒன்றைப் பற்றிய விளக்கங்களை நான் உங்களுக்கு அறிவுறுத்துவதாகவோ, அல்லது, உங்கள் சிந்தனையை அல்லது அபிப்பிராயங் களை உருவமைத்து நெறிப்படுத்திச் செல்வதாகவோ, இவ்வுரையாடல்கள் இருக்கப் போவதில்லை. ஒரு பூங்காவில், அங்கிருக்கும் இருக்கையில் உட்கார்ந்து கொண்டு பிரச்சினைகளை அலசி ஆராயும் நண்பர்களைப் போல, நாமும் கலந்துரையாடப் போகிறோம் என்பதை இக்கலந்துரையாடல் தொடர் முழுவதற்கும் நினைவில் பதித்துக் கொள்ளவும். உலகில் நிகழ்ந்துகொண்டிருக்கும் கலவரங்கள், குழப்பங்கள், அராஜகம் பற்றி, உலக நலனில் தீவிர அக்கறை கொண்டுள்ள நண்பர்களாகிய நாம் இப்போது கலந்துரையாடலாம்.

உங்களுடைய கோட்பாடுகளை, கருத்துகளை, ஏமாற்றத்தை, விரக்தியை, உணர்ச்சிகளை, நீங்கள் கொட்டித் தீர்க்கும் அளவிற்கு நெருக்கமான ஒரு நண்பர் உங்களுக்கு இருப்பாரா என்று எண்ணி வியக்கிறேன் - இருப்பார் என்று நம்புகிறேன். அப்படிப்பட்ட நண்பரும் நீங்களும் விவாதிக்கலாம், பேசலாம். அங்கு, ஒருவர், மற்றவரை தன் வழிக்கு உடன்பட வைப்பதற்கான தூண்டுதலோ, அல்லது, அவரின் குறிப்பிட்ட சிந்தனையை செதுக்கி வடிவமைக்கும் முயற்சியோ இருக்காது. நீங்கள் ஏற்றுக்கொண்டால், நாமும் மேற்கூறிய முறையில் கலந்துரையாடலாம். பிரச்சினையை ஆழமாக விசாரணை செய்யலாம்; மற்றவர் சொல்வதை அப்படியே ஆமோதிப்பதோ, அல்லது, நம் உறுதியான கருத்தை வலியுறுத்துவதோ செய்யாமல், மிகுந்த நேசத்துடன், மற்றும், விருப்பு வெறுப்புகளைக் கொண்டிராமல், கலந்துரையாடலாம். இரகசியமாக வைக்கப்பட்டிருக்கும் தீர்மானங்களையும், உள்நோக்கங் களையும் மனதில் கொண்டிராமல், ஒருவருக்கொருவர் மரியாதையுடன், மிகுந்த நேசத்துடன் உரையாடுவதாக நம் உரையாடல் அமையும்.

எனவே, நண்பர்களாக நாம் மேற்கொள்ளப் போகும் இவ்விசாரணையில், அதிகாரமோ, அதிகாரம் தோற்றுவிக்கும் உறுதி செய்யப்பட்ட தீர்மானங்களோ இல்லை. பேச்சாளர், உங்களுடைய குருவும் இல்லை, அவருக்கு எந்தவித அதிகாரமும் இல்லை. குறிப்பிட்ட வொரு கண்ணோட்டத்தை ஊர்ஜிதப்படுத்தும், அல்லது, புதிய வகை சித்தாந்தத்தை அறிமுகப்படுத்தும் விரிவுரையாளராக பேச்சாளர் இல்லை. ஆணை எதையும் பிறப்பிக்கும் அதிகார சக்தியாக பேச்சாளர் இல்லை என்பது தெளிவாக்கப்பட வேண்டும். இந்த நாட்டில்

என்ன நடக்கிறது என்பதைப் பற்றி விசாரணை செய்யலாம். அரசியல், பொருளாதாரம், வணிகம், சுற்றுச்சூழல் போன்ற வெளிப்புற நடவடிக்கைகள் மட்டுமின்றி, நம் சொந்த வாழ்வில், உள்முகத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கும் நம் குழப்பம், நம் இடர்பாடுகள், நம் துயரங்கள் போன்றவைகளைப் பற்றியும் விசாரணை செய்யலாம். இவ்விசாரணையில், நம் இருவருக்குமே பொறுப்பு உண்டு. எப்படிச் செயல்பட வேண்டும், எப்படிச் சிந்திக்க வேண்டும் என்பதைப் பற்றியோ, புதிய சித்தாந்தங்கள் பற்றியோ பேச்சாளர் உங்களுக்குச் சொல்லிக் கொண்டிருக்கப் போவதில்லை. நாம் இருவருமே சமமானவர்கள். நம் வாழ்க்கையைப் பற்றியும், மற்றவர்களின் வாழ்க்கைப் பற்றியும் நாம் அக்கறை கொண்டுள்ளோம்.

உலகத்தில் நம்மைச் சுற்றி என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதை முதலில் பார்க்கலாம். இந்தியன், ஜெர்மானியன், ஆங்கிலேயன், அமெரிக்கன், ரஷ்யன் என்பது போன்ற பாகுபாடுகளை மனதில் கொண்டிராமல், எந்தவித விருப்பு வெறுப்பும் இல்லாமல் உலக நிகழ்வுகளைப் பார்க்கலாம். எந்த நாட்டைச் சேர்ந்தவராய் இருந்தால் என்ன, நாம் அனைவரும் மனிதகுலமே. மிகுந்த கலக்கத்தையும், குழப்பத்தையும் எதிர்கொள்ளும் நாம், மிகவும் பயங்கரமான உலகத்தை எதிர்கொள்ள வேண்டி இருக்கிறது. மனம் குழம்பிப் போயிருக்கும்போது, நம் பாதுகாப்பிற்காக அதிகாரப் பூர்வமானதாயிருக்கும் ஏதாவது ஒன்றை நாடிச் செல்கிறோம். இந்தியா, மாபெரும் குழப்பத்தை நோக்கி சென்று கொண்டிருக்கிறது. எதிலும் நிச்சயமற்றத் தன்மை நிலவுகிறது. மக்கள், திக்குத் தெரியாமல் திகைத்து போயிருக்கிறார்கள்.

குழப்பம், நம்பிக்கையற்ற நிலை, பாதுகாப்பின்மை போன்ற உணர்ச்சிகளால் நாம் பாதிக்கப்படும்போது, பாரம்பரியத்தின் பக்கம் திரும்பி, கடந்த கால அனுபவங்களிலிருந்து பிரச்சினைக்குத் தீர்வு கிடைக்குமா என்று தேடுகிறோம். உலகம் முழுவதும் இவ்வகை செயல்பாடுதான் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. விவிலியத்தை பிரமாணமாகக் கொள்ளும் அடிப்படை வாதிகள் இருக்கின்றனர். குரானை பிரமாணமாகக் கொள்ளும் அடிப்படைவாதிகளும் உள்ளனர். மார்க்ஸ்ஸை ஏற்றுக்கொள்ளும் அடிப்படைவாதிகளும் உள்ளனர். ஆக, நாம் பெரிதும் குழம்பிப் போயிருக்கும் போது, ஒரு வகையான அதிகாரத்திற்கு, ஒரு வகைப்பட்ட நூல்களுக்கு, மற்றும், கடந்த கால அனுபவங்களுக்கு நம்மை ஆட்படுத்திக் கொண்டு, குழப்பத்திலிருந்து மீளும் வழியைக் காண முயல்கிறோம்.

இந்தியாவிலோ, கணக்கிலடங்கா நூல்கள் உள்ளன, எண்ணிலடங்கா தலைவர்களும் உள்ளனர். இதன் காரணமாய், நமது பாரம்பரியம் நிச்சயமற்றதாய் உள்ளது. பெருந்தலைவர்கள், குருமார்கள், துறவிகள் என்று நம்மிடையே பலர் இருந்தபோதிலும், அவர்களிடமிருந்து மனிதகுலத்திற்கு எவ்வித உதவியும் கிடைக்கவில்லை. நிகழ்காலத்தின் அக்கணத்தில் உண்மையில் எப்படிப்பட்ட வராக இருக்கிறோமோ, அப்படிப்பட்டவர்தான் நாம் என்பதால் கடந்த கால அனுபவங்களைச் சார்ந்ததாய் இருக்கும் குருமார்களின் உபதேசங்கள் நமக்கு உதவிகரமாய் இருப்பதில்லை.

நமக்கிருக்கும் இந்தக் குழப்பத்திற்கு மூலகாரணம் எது? காரணம் என்ற ஒன்றிருந்தால், அதற்கு முடிவு என்ற ஒன்றிருக்கும். மூலகாரணத்தைக் கண்டுபிடித்து

விட்டால், ஒன்றை முடிவிற்குக் கொண்டுவந்து விடலாம். எனவே நாம் வினவுகிறோம்: இந்தக் குழப்பம், இந்த நாணயமற்றத் தன்மை, இந்தச் சீர்குலைவு ஆகியவைகளுக்கு எது காரணம்? எவையெல்லாம் காரணங்கள்? நம்மில் பலர், மேலோட்டமாய் தென்படும் அறிகுறிகளைப் பார்த்துவிட்டு, ஜனத்தொகைப் பெருக்கம் மற்றும் திறமை அற்ற அரசாங்கம்தான் இச்சீர்குலை விற்குக் காரணம் என்று சொல்கிறோம்.

தலைமைப்பண்பு பற்றாக்குறை மற்றும் ஒழுக்கமின்மை போன்ற குறைபாடுகள் உலகெங்கும் இருக்கிறது. ஆனால், இவையெல்லாம் சீர்குலைவின் அறிகுறிகள் மட்டுமே. சீர்குலைவிற்கான காரணம் என்ன என்பதைப் பற்றி நாம் வினவுவதே இல்லை. காரணத்தை ஆராய முற்பட்டால், நாம் ஒவ்வொருவரும் வெவ்வேறு கருத்தைத் தெரிவிப்போம். மெத்தப் படித்தவராய் நாம் இருப்பின், காரணம் / காரணங்கள் என்று நாம் எதைக் கருதுகிறோமோ அதுவே சரி என்று அழுத்தமாய் உறுதிபட சொல்வது, இன்னும் கொஞ்சம் கூடுதலாய் இருக்கும். ஆனால், இங்கு கூடியுள்ள நாம் சாமானியர்கள், மெத்தப் படித்த மேதாவிகள் அல்லர். ஆனால், நாமும் உலகின் இந்தப் பெருங்குழப்பத்தில் மாட்டிக்கொண்டிருக்கிறோம்.

ஒவ்வொரு நாடும், ஒவ்வொரு கும்பலும், யுத்தத்திற்கு தன்னை தயார்படுத்திக் கொள்கின்றது. யுத்தங்களும் உலகில் நடந்து கொண்டிருக்கின்றது. குறிப்பாக, தொழில் வளர்ச்சியில் முன்னேறியுள்ள நாடுகள், மற்ற பிற நாடுகளுக்கு போர்த்தளவாடங்களை விற்பனை செய்கின்றன. சமீபத்தில் இலண்டன் தொலைக்காட்சி நேர்காணல் நிகழ்ச்சி ஒன்றில் ஒரு

தொழிலதிபர் கூறினார் : 'நாங்கள் உற்பத்தி செய்வதில் எண்பது விழுக்காடு போர்த்தளவாடங்களை, வெளிநாடு களுக்கு அனுப்பிவிடுகிறோம். மீதமுள்ள இருபது விழுக்காடு தளவாடங்களை நாங்கள் வைத்துக் கொள்வோம்' என்று. தொழில் வளர்ச்சியடைந்துள்ள நாடுகள் அனைத்திலும் இதுதான் நடந்துகொண்டிருக் கிறது. 'போர்கள் ஏன் நடக்க வேண்டும்? எதற்காக நாம் ஒருவரையொருவர் கொல்ல வேண்டும்?' என்ற கேள்விகளை யாரும் வினவுவதில்லை. அணு ஆயுதப் போர் நிகழாவண்ணம் தடுப்பது பற்றி பேசப்படுகிறதே தவிர, மற்ற எல்லாப் போர்களையும் தடுத்து நிறுத்துவது பற்றி பேசப்படவில்லையே, ஏன்? மனிதர்கள் தங்களை ஏன் இந்த நிலைமைக்குத் தாழ்த்திக்கொண்டு விட்டார்கள்?

ஏன் பிறரைக் கொல்கிறீர்கள்? எதற்காக? உங்கள் நாட்டிற்காகவா? குறிப்பிட்ட உங்கள் கும்பலுக்காகவா? – இக்கேள்விகள் கேட்கப்பட வேண்டிய மிக முக்கியமான கேள்விகள். சரித்திரத்தின் வழிமுறையாக, 'போர்' எனும் கருத்தை நீங்கள் ஏற்றுக்கொண்டு விட்டீர்கள். அதனால் அக்கருத்து, மிகப்பெரிய அளவில் நிஜமாகிவிட்டது. உங்கள் நாடு பாதுகாக்கப்பட வேண்டும் என்ற மாயையில் நீங்கள் வாழ்வதுதான் 'போர்' எனும் கருத்தின் ஆதாரமாய் அமைந்துள்ளது. தயவுசெய்து இக்கேள்விகளை எழுப்புங்கள் : உங்கள் நாடு என்றால் என்ன? எதை நீங்கள் பாதுகாக்கிறீர்கள்? உங்கள் வீட்டையா, உங்கள் வங்கிக் கணக்கையா, உங்கள் கருத்தையா? - எதைப் பாதுகாக்கிறீர்கள்? உலகம் சீரழிந்து கொண்டிருக்கிறது, சின்னாபின்னமாய் சிதறிக் கொண்டிருக்கிறது - நீங்களோ, அதற்கான அடிப்படைக் காரணங்களைப் பற்றி சிந்திக்கவே இல்லை.

தலைவர் என்று எவர் வந்தாலும், அவரைப் பின்பற்றியோடிக் கொண்டும், சீக்கியர், முஸ்லீம், ஹிந்து என பல்வேறு விதத்தில் பிரிவுபட்டு நாட்டையே துண்டாடப் பார்த்துக்கொண்டும், குழப்பத்திலும், பெரும் கலக்கத்திலும் இருக்கும் நம்முடைய இந்த அவலநிலைக்கு எது காரணம் என்பதை நாம் ஆராய்வோம். எது காரணம் என்பதை நான் சொல்வேன் என்று காத்திருக்கிறீர்களா? இல்லை, விடையைக் காண, பேச்சாளரை நம்பிக் கொண்டிராமல், தானே கண்டறிவதற்கான துடிப்புடன் உங்கள் மனம், உங்கள் அறிவு இருக்கிறதா? 'நான் ஒரு ஹிந்து', 'நான் ஒரு பௌத்தர்' என்ற முறையில் நீங்கள் சிந்திக்காமலிருந்தால்தான், உங்கள் மனம் துடிப்புடன் செயலாற்ற முடியும்.

விசாரணை செய்ய நீங்கள் சுதந்திரத்தோடு இருக்க வேண்டும். உண்மையில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை உள்ளபடி பார்த்தலே விசாரணை. நிகழ்வைப் பற்றிய கருத்துக் கோட்பாடு மூலம் அதைப் பார்க்காமல், உங்கள் இதயம் மற்றும் உங்கள் மனத்தால் உங்கள் முழு ஆற்றலோடும், சக்தியோடும் அந்நிகழ்வை உள்ளபடி பார்ப்பதே விசாரணையாகும்.

அரசியல் தலைவர்கள், மதத் தலைவர்கள், பொருளாதார நிபுணர்கள் போன்றோர் அவரவர் களுக்கான குறிப்பிட்ட கொள்கைகளையும், வழிமுறை களையும் கொண்டுள்ளனர். நீங்கள் அவர்களை பின்பற்றிச் சென்று அவர்களைச் சார்ந்திருக்கிறீர்கள். நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதற்கு அவர்கள் வழிகாட்டுவார்களென்று பிறரை நம்பியிருக்கிறீர்கள். இவ்வாறு சார்ந்திருப்பதுதான் குழப்பங்களுக்குக்

காரணமா? இல்லையென்றால், நீங்கள், தகுதியான தலைவரைக் கொண்டிராத அரசாங்கம் தோற்றுவிக்கும் சூழலை குற்றம் சாட்டுகிறீர்களா? அதுவா காரணம்? அதுதான் காரணம் என்றால் நீங்கள் அதிகாரத்திற்கு முற்றிலுமாகப் பணிந்து, அதைச் சார்ந்திருக்கிறீர்கள் என்று பொருள்படுகிறது.

பாரம்பரியத்தின் அதிகாரம், நூல்களின் அதிகாரம், தலைவர்களின் அதிகாரம், குருமார்களின் அதிகாரம் மற்றும் இன்னபிற அதிகாரத்திற்கு நீங்கள் அடிபணிகிறீர்கள். ஒன்றை நம்பியிருக்கும்போது, நீங்கள் மெதுமெதுவே பலவீனப்பட்டு சக்தியற்றவராகிறீர்கள். ஒன்றைச் சார்ந்திருப்பதால், தெளிவாகச் சிந்திப்பதற்கு உங்களால் முடியவில்லை - இது ஒரு உண்மை. என்ன சிந்திக்க வேண்டும் என்று செய்தித்தாட்கள் உங்களுக்குச் சொல்கின்றன. நீங்கள் பங்கேற்கும் கூட்டங்களிலும், பிரசங்கங்களிலும் உங்களுக்குப் பல விஷயங்கள் அறிவுறுத்தப்படுகின்றன. தற்சார்பின்மையும், பிறரைச் சார்ந்திராமல் சுயமாய் பொறுப்புணர்ச்சி கொண்டிருக்க வேண்டும் என்ற எண்ணம் இல்லாமலிருப்பதும், இப்பிரச்சினைகளுக்கு மூலகாரணமாய் இருக்கக்கூடும். பிறரைச் சார்ந்திருப்பதால், நாம் பொறுப்பற்றவர்களாய் இருக்கிறோம்.

நாம் இங்கு ஒன்றுகூடிப் பேசுகிறோம். பேச்சாளர், அவர் சொல்வதுதான் சரி என்று எதையும் சாதிக்க வில்லை. அவர் உங்களுடைய தலைவரும் இல்லை, குருவும் இல்லை. நீங்கள் அவரைப் பின்பற்ற வேண்டும் என்றும் அவர் விரும்பவில்லை. ஆனால், அவர், உங்களுக்கு முற்றிலும் வித்தியாசமான ஒரு வாழ்க்கை முறையைப் பற்றி சொல்ல விரும்புகிறார். அம்முறையை

நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற கட்டாயம் ஏதுமில்லை. ஆனால், மனதையும், இதயத்தையும் முழுவதுமாக ஈடுபடுத்தி இம்முறையைப் பற்றி எண்ணிப்பார்த்தால், மிகுந்த தன்முனைப்போடும், தன்னலத்துடனும் நீங்கள் இருப்பதைப் பார்க்க முடியும். தன்முனைப்பும், மிகுந்த தன்னலமும் கொண்டிருக்கும் நிலையில், இப்பிரச்சினைக்குக் காரணம் என்ன என்று நீங்கள் கேட்டாலும், உங்களால் மேற்கொண்டு தொடர முடிவதில்லை. ஏனென்றால், நீங்கள் சார்ந்திருப்பதற்கும், அறிவுறுத்தப்படுவதற்கும், என்ன செய்ய வேண்டும் என்று வழி நடத்தப்படவும், எதை நம்ப வேண்டும் என்பதற்கும் வழிவழியாகப் பழக்கப்படுத்தப்பட்டவர்கள். இது உண்மையான ஒரு விஷயம், இல்லையா?

தனக்குத்தானே ஒளியாய் இருப்பதும், எந்த ஒருவரையும் சார்ந்திராமல் இருப்பதும் நமக்குச் சாத்தியம் தானா? பால்காரரை, தபால்காரரை, போலீஸ்காரரை நம்பியிருக்கிறோம். அறுவைச்சிகிச்சை நிபுணரை, மருத்துவரை, சிகிச்சைக்காக நம்பியிருக்கிறோம் - சரிதானே? ஆனால், உள்முகத்தில், உளரீதியில், சுயமாக சிந்திக்க வேண்டும். மனதில் எழும் எதிர்வினைகள், பிரதிபலிப்புகள், மற்றும் எண்ணங்கள் ஆகியவற்றை உற்றுநோக்க வேண்டும். சுயசிந்தனையால் தெளிவுபெற்று இருளகன்று பிரகாசிக்கக் கூடுமா என்று கண்டறிய வேண்டும்.

தனக்குத்தானே ஒளியாய் இருப்பது என்பதின் பொருள் உங்களுக்குத் தெரியுமா? அதன் பொருள், தன்னம்பிக்கையோ, தற்சார்போ அல்ல. தன்னம்பிக்கை என்பது, தன்னலத்தின் ஒரு பகுதி, 'தான்' என்ற எண்ணத்தின் ஒரு பகுதி. ஆனால், தனக்கே ஒளியாய்

இருப்பதற்கு, முழுமையான சுதந்திரம் மற்றும் மிகவும் தெளிவான, பாரம்பரியம் மற்றும் பிறவற்றால் தளைபடாத, மூளை அவசியம் தேவை. மேலும், மிகுந்த துடிப்பும், சுறுசுறுப்பும் வேண்டும்.

தன் சொந்தக் கருத்துகளில் துடிப்புடனும், தீவிரத்துடன் இருப்பதையோ, அறிவுத்திறனுடன் வாய்ச்சொல் வீரராய் இருப்பதையோ நான் குறிப்பிட வில்லை. ஐயப்படுவதற்கும், வினா எழுப்புவதற்கும், அறைகூவல் விடுப்பதற்கும், துடிப்புமிக்க மூளையுடன் செயல்படவும், சக்தி அவசியம் தேவை. பிறரை நீங்கள் சார்ந்திருக்கும்போது, சக்தியை இழக்கின்றீர்கள்.

இந்த நாட்டில் நிலவும் குழப்பம், நிச்சயமற்றத் தன்மை, பாதுகாப்பின்மை, பல்வேறு கட்சிகளாக பிளவுபட்டிருக்கும் தன்மை ஆகியவை நாட்டின் சீர்குலைவையும், அலங்கோல நிலையையும் பறைசாற்றுகின்றன. நாட்டின் நிகழ்வுகளுக்கு நாம் ஒவ்வொருவரும் பொறுப்பாவோம். ஆகவேதான், நல்லிணக்கத்துடன் நாம் இவ்விஷயத்தைப் பற்றியும், இக்குழப்பத்தைத் தாண்டிச் செல்ல முடியாதா என்பதைப் பற்றியும் மிகுந்த அக்கறையுடன் ஆய்வு செய்யப்போகிறோம். நீங்கள் இங்கு கூடியிருப்பதின் நோக்கம் அதுதான்.

இங்கு, நாம் என்ன செய்ய வேண்டும், எத்திசையில் செல்ல வேண்டும் என்பது போன்ற அறிவுறுத்தல்கள் எதுவும் அளிக்கப் போவதில்லை. இவ்வகை அறிவுறுத்தல்கள் மற்றும் புத்திமதிகள் ஏராளமாக நமக்குக் கடந்த காலத்தில் வழங்கப்பட்டுள்ளன. சுயேட்சையாக, சுதந்திரமாகச் சிந்தித்து பொறுப்புடன் செயலாற்றுவது

என்பது நம்மிடம் முற்றிலுமாக இல்லாமல் போனதற்கு அந்தப் புத்திமதிகளே கூட காரணமாய் இருக்கலாம்.

ஒன்று நிகழ்வதற்குக் காரணம் என்ற ஒன்று இருந்தால், அக்காரணம் முடிவிற்கு வரும் சாத்தியமும் உள்ளது. என் வலிக்குக் காரணமாய் இருக்கும் புற்றுநோய் பீடித்த பகுதியை அகற்றிவிட்டால், வலி இல்லாமல் போகிறது. ஆக, எந்தப் பிரச்சினைக்காவது காரணம் ஒன்று இருக்குமேயானால், அப்பிரச்சினையை முடிவிற்குக் கொண்டுவர முடியும். ஆனால், குறிப்பிட்ட ஒரு பிரச்சினைக்கோ, அல்லது பிரச்சினைகளுக்கோ, அவற்றிக்கான காரணம் என்ன என்பதைப் பற்றிய தெள்ளிய அறிவு நமக்கு அவசியம் தேவை. பிரச்சினையை வார்த்தைகளால் விவரித்துவிட்டால் மட்டும் போதாது.

உங்கள் மனம் / மூளை தளைபட்ட ஒன்றா? 'தளைபட்ட' (conditioned) என்ற சொல்லின் பொருள் உங்களுக்குப் புரிகிறதா? உங்கள் பாரம்பரியம், சமயம், நீங்கள் படிக்கும் இலக்கியம், செய்தித்தாள், உங்கள் பெற்றோர் ஆகிய காரணிகள், நீங்கள் பிறந்த அக்கணத்திலிருந்தே உங்கள் மூளையை தளைபடுத்த, கட்டுப்படுத்த, பழக்கப்படுத்த முனைகின்றன. உங்கள் மூளை, கோடிக்கணக்கான வருடங்கள் பழமையானது - அதற்குக் கணக்கிலடங்கா அனுபவங்கள் ஏற்பட்டுள்ளன. யுத்தம், துயரம், களிப்பு, வலி, சோகம், பெருத்த கலவரங்கள் ஆகியவற்றை எதிர்கொண்ட அனுபவத்தை உங்கள் மூளை பெற்றிருக்கிறது. தான் ஒரு ஹிந்து என்பதாகவோ, இல்லை, சீக்கியர் / முஸ்லீம் / கிருத்துவர் என்பதாகவோ அது பழக்கப்படுத்தப்பட்டு தளைபட்டிருக்கிறது. ஏன் அது தளைபடுகிறது? தயவு

செய்து, என்னுடன் சேர்ந்து இதைப் பற்றி ஆராய முற்படுங்கள்.

மூளை ஏன் தளைபடுகிறது? அது தளைபட்டிருக்கிறது என்ற விழிப்புணர்வு உங்களுக்கு இருக்கிறதா? நீங்கள் தளைபட்டவர், இல்லையா? நீங்கள் உங்களை ஹிந்து என்று கூறிக்கொள்கிறீர்கள் - நான் என்னை முஸ்லீம் என்று சொல்லிக்கொள்கிறேன் - ஏன்? உங்கள் பெற்றோர் மற்றும் உங்கள் நூல்கள், நீங்கள் ஒரு ஹிந்து என்று உங்களுக்குச் சொல்கிறார்கள் - எனக்கும் நான் ஒரு முஸ்லீம் என்று சொல்லப்படுகிறது. காலங்காலமாய் செய்யப்பட்ட பிரச்சாரமும் திரும்பத் திரும்ப வலியுறுத்தப்படும் குறிப்பிட்ட கொள்கைகள் மற்றும் சடங்குகளும் மூளையைக் கட்டுப்படுத்துகின்றன, தளைபடுத்துகின்றன. ஹிந்துவின் மூளையைப் போலவே, முஸ்லீமின் மூளையும்,அவரது மதச்சடங்குகளாலும், மத அதிகாரத்தாலும் முன்னர் அறிவுறுத்தப்பட்ட கோட்பாடுகளாலும் தளை செய்யப்பட்டுள்ளது.

மூளை, தளை பட்டிருக்கிறதா என்பதைப் பற்றியும், தளைபட்டிருந்தால், அதற்குத் தீர்வுகாண முடியுமா என்பது பற்றியும் நாம் மிகுந்த அக்கறையுடன் விசாரணை செய்துகொண்டிருக்கிறோம். நாம் தளைபட்டிருக்கிறோம் என்பதை உண்மையிலேயே நாம் கண்டுணருகிறோமா? தளைபட்டிருக்கிறோம் என்று ஏற்பதில் மட்டுமாவது நாம் ஒத்திருக்கிறோமா?

நீங்கள் தளைபட்டிருந்தால், நீங்கள் இயந்திரத்தனமாய் வாழ்கிறீர்கள் என்று பொருளாகிறது. நீங்கள் ஒரு ஹிந்து / முஸ்லீம் / மார்க்ஸ்ஸிட் என்று திரும்பத் திரும்பச் சொல்கிறீர்கள். உங்கள் மூளை, ஒன்றையே கிளிப்பிள்ளையாய் சொல்லிக்

கொண்டிருப்பதால், அது இயந்திரத்தன்மை பெற்றுவிடுகிறது. 'போரிடுவது அவசியமே', 'ஆட்சியாளர் அவசியமே', 'சார்ந்திருப்பது தேவையே' போன்ற கருத்துக்களை மீண்டும் மீண்டும் வலியுறுத்துவதால், மனம் தளைபட்டுப் போகிறது.

தளைபடுவதிலிருந்து, மூளை, விடுபட முடியுமா என்பதை முதலில் பார்க்கலாம். முஸ்லீம் என்று நானும், ஹிந்து என்று நீங்களும் தளைபட்டிருக்கும்போது, நமக்கிடையே போர் கட்டாயம் மூளும், நாம் ஒருவரையொருவர் எதிர்ப்போம், கொலை செய்வோம் - அதுதானே நிகழ்ந்து கொண்டிருக்கிறது? ஓயாத போர் என்ற நிலையில்தான் வாழ வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், அது உங்கள் பாடு, நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை. ஆனால், மானுடத்தின் எதிர்காலத்தில், அதன் தொடர்ச்சியில் நீங்கள் அக்கறை கொண்டிருந்தால், மூளையை, தளைபடுவதிலிருந்து தடுக்க முடியுமா என்பதைப் பற்றி நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும்.

'மூளை, தளைபடுவதிலிருந்து தப்பிக்க முடியாது, அது எப்போதும் தளைபட்டுதான் இருக்கும். ஆனால், இப்போதிருக்கும் தளைகளை மாற்றம் செய்ய முடியும்' என்று ஒரு சாரார் கூறுகின்றனர். இக்கருத்து கம்யூனிஸ தத்துவங்களில் ஒன்றாக இருக்கிறது. மூளை, தளைகளிலிருந்து விடுபட முடியாது; ஆகவே, மூளையை, புதிய விதத்தில் தளைபடுத்த வேண்டும், கட்டுப்படுத்த வேண்டும் என்பது கம்யூனிஸ்ட்டுகளின் வாதம்.

முதற்கண், நம் மூளை தளைபட்டிருக்கிறது என்பதை நாம் உணர்ந்துள்ளோமா? அதன் பிறகுதான், மூளையை தளைகளிலிருந்து விடுவிக்க முடியுமா என்ற கேள்வியை

கேட்க முடியும். ஹிந்து, முஸ்லீம், கிருத்துவர், மார்க்ஸிஸ்ட் என்பது போன்ற மூளையில் பதிவாகியுள்ள தளைகளை நீக்க முடியுமா? நாம் எல்லோரும் மனிதர்கள் - அடையாளக் குறியீடுகள் அல்ல. ஆனால், ஹிந்து / முஸ்லீம் போன்ற அடையாளக் குறியீடுகள், மிகவும் முக்கியத்துவம் பெற்றுவிட்டன. முதலில், நம் மூளை தளைபட்டிருக்கிறது என்பதையும், அவ்வாறு இருப்பதின் விளைவுகளையும் நாம் உணர்ந்துகொள்ள வேண்டும்.

கட்டுப்பாடுகள் மற்றும் தளைக்ள் இருக்கும் இடத்தில், சுதந்திரம் இருக்காது; அன்பும் பரிவும் அங்கிருக்க முடியாது. மூளை தளைபட்டிருந்தால் உண்டாகும் ஆபத்தான விளைவுகளை அறிந்த பின்பு, மனித குலத்தின் எதிர்கால நலனுக்காக இவ்விஷயத்தில் நாம் அக்கறை செலுத்த வேண்டியது மிகவும் இன்றியமையாத ஒன்றாகிறது. இந்த விழிப்புணர்வு வந்தால்தான் மூளையை தளைகளிலிருந்து விடுவிக்க முடியுமா என்று கண்டுபிடிக்க முன்னேறிச் செல்ல முடியும். மூளைக்கும் மனதிற்கும் உள்ள தொடர்பை, மூளை முழுவதுமாக சுதந்திரமாக இருந்தால்தான், நம்மால் உணர்ந்துகொள்ள முடியும். அவ்வாறு உணரும்பட்சத்தில் மூளை என்பது மனம் என்பதும் புலனாகும்.

ஆக, நாம் தளைபட்டிருக்கிறோம், தளைகளிலிருந்து விடுபட்டு, சுதந்திரமாக இருக்க முடியுமா என்று வினவுகிறோம். முடியும் என்றோ, முடியாது என்றோ அபத்தமாக பதிலளிக்காதீர்கள். ஒன்றைப் பற்றி நீங்கள் ஆராயும்போது, நீங்கள் அதைப்பற்றித் தெரிந்து கொள்கிறீர்கள். அறிவுறுத்தல்கள் ஏதும் அங்கில்லை. விசாரணையின் மூலம், ஆய்வின் மூலம், நீங்களே சுயமாக

அதைப்பற்றி கற்றுக்கொள்கிறீர்கள். எனவே, நாம் இப்போது ஆராயத் தொடங்கலாம். மூளையை, அதன் தளைகளிலிருந்து விடுபட வைப்பது சாத்தியம்தானா என்பதை ஆராய, எதிலிருந்து தொடங்குவீர்கள்? நீங்கள் ஒரு ஹிந்து அல்லது முஸ்லீம் அல்லது சீக்கியர் என்பது போன்ற ஒரு அடையாளத்துடன் இல்லாமல், ஒரு மனிதன் என்பதாக மட்டுமே இருப்பது சாத்தியம் தானா என்ற கேள்வியிலிருந்து தொடங்கலாம்.

ஆய்வை, எங்கிருந்து துவங்கப் போகிறீர்கள்? வெளியிலிருந்து துவங்கப் போகிறீர்களா? அல்லது உள்முகமாகத் துவங்கப் போகிறீர்களா? 'வெளியிலிருந்து' என்று குறிப்பிடும்போது, ஸ்தூலமாயிருக்கும் இப்பூமிக் கோளத்தையோ, இயற்கையையோ குறிப்பிடவில்லை. ஆனால், மனிதனால் உருவாக்கப்பட்ட சமுதாயம், அறநெறிகள் மற்றும் வழிமுறைகளைக் கொண்ட இந்த வெளி உலகம், உங்களிலிருந்து வேறுபட்டதா? இல்லை, நீங்கள்தான் அதை உருவாக்கினீர்களா? பாதுகாப்பை வேண்டும் நீங்கள், உயர்ந்த அந்தஸ்தைக் கோரும் நீங்கள்தான் வெளி உலகை உருவாக்கினீர்கள். அதிகாரம் மிக்கவர் / அதிகாரம் இல்லாதவர் / மிகுந்த பேராசைக் காரர் / சற்றே பேராசைக்காரர், புனிதமான மதகுரு / சாமானியன் என்பது போன்ற நீங்கள் வகுத்த நெறிகள் தாம் உலகம். ஆக, உலகமும் நீங்களும் வேறுவேறு அல்ல. உலகம்தான் நீங்கள் - நீங்கள்தான் உலகம். இந்த வாசகத்தை, நீங்கள் ஒரு உண்மையாக உணருகிறீர்களா, இல்லை, ஒரு கருத்தாக மட்டுமே ஏற்றுக்கொள்கிறீர்களா? இவ்வுண்மையை உணர்ந்தறிதல் மிகவும் முக்கியம்.

நாம் மிகவும் குழப்பத்தில் இருக்கிறோம். நம்முள் முரண்பாடுகள் மிக அதிகம். நம் குழப்பத்திலிருந்தும்,

ஒழுங்கின்மையிலிருந்தும், பாதுகாப்பைக் கோரும் நம் விருப்பத்திலிருந்தும், நமக்கு வெளியே, நாம் ஒரு உலகைப் படைத்துவிட்டோம். நம் குழப்பத்திலிருந்தும், முரண்பாடுகளிலிருந்தும் உருவான காரணத்தால், இந்தச் சமுதாயம், களங்கப்பட்டுப் போனதாகவும், கறைபடிந்ததாகவும், கண்ணியமற்றதாகவும், ஓயாமல் போரிட்டுக் கொண்டிருப்பதாகவும் இருக்கிறது. ஹிந்து என்ற நம் அடையாளத்தைப் பாதுகாத்துக்கொள்ள, நம் கோபத்தையும், வன்முறையையும், எதிரிகளாக நாம் கருதுபவர்கள் மீது காட்டி, அவர்களைக் கொல்ல நினைக்கிறோம். முஸ்லீம் என்ற தன் அடையாளத்தை அவரும், கிருத்துவர் என்ற அடையாளத்தை கிருத்துவரும் பாதுகாத்துக்கொள்ள எண்ணி, அவர்களும் வன்முறையில் ஈடுபடுகின்றனர். ஓயாமல் 'பிரிட்டீஷ்', 'பிரிட்டீஷ்', 'பிரிட்டீஷ்' என்று ஒரு நாடும், 'பிரெஞ்ச்', 'பிரெஞ்ச்', 'பிரெஞ்ச்' என்று இன்னொரு நாடும் சொல்லிக் கொள்கின்றன. அவர்கள் தங்களை ஒருபோதும் மனிதர்களாக நினைத்துப் பார்ப்பதில்லை. மாறாக, தனிப்பட்ட வர்க்கமாக, தனிப்பட்ட குழுவாக தங்களை எண்ணிக்கொள்கிறார்கள் - தளைபடுதலின் ஒரு அங்கமாக, அவ்வெண்ணம் அவர்களிடம் இருக்கிறது.

'இவ்வுலகை நீங்கள்தான் உருவாக்கினீர்கள்' என்ற புரிதலுக்குப் பிறகு, இப்போது, இந்த ஆய்வை எங்கிருந்து துவங்குவீர்கள் என்று இப்பேச்சாளர் உங்களை வினவுகிறார். உங்களிடமிருந்துதான் துவங்க வேண்டும். சமுதாய அமைப்பை மாற்றியமைப்பது, புதிய தலைவருக்கான தேடுதல், புதிய சித்தாந்தத்தைத் தோற்றுவித்தல், புதிய குருவை நாடுதல் போன்ற விஷயங்களிலிருந்து துவங்குவது சரியான முறையல்ல. உள்ளபடியே உங்களைப் பார்த்தறிதல்தான் துவக்கமாக

இருக்கவேண்டும். நிலைக்கண்ணாடியில் உங்கள் முகத்தைப் பார்ப்பதுபோல, உங்களை நீங்கள் கவனித்தறிய முடியுமா? ஒன்றின் தொடர்பாக உங்களுக்குத் தோன்றும் எதிர்வினைகள், உங்கள் மறுமொழிகள் ஆகியவைகளாகவே நீங்கள் இருக்கிறீர்கள். உங்களின் எதிர்வினைகளைப் (reactions) பார்த்தறிதலே, உங்களை நீங்கள் உள்ளபடி அறிய உதவும். ஆகவே, எதிர்வினைகளைப் பார்த்தறிதலிலிருந்தே ஆய்வைத் தொடங்கலாம்.

உறவின் இயக்கமாக, வாழ்க்கை இருக்கிறது. உறவுகள் இல்லாத வாழ்க்கை என்று ஏதுமில்லை. நீங்கள் ஒரு துறவியாக இருக்கலாம், சமுதாயத்திலிருந்து முற்றிலுமாக விலகி இருக்கலாம் - அப்படி இருப்பினும், நீங்களும் தொடர்புடையவரே. மனிதராய் இருந்து கொண்டு, தொடர்புகளிலிருந்து தப்பித்துச் செல்ல முடியாது. உங்கள் வாழ்க்கைத்துணை மற்றும் உங்கள் குழந்தைகளுடன் உறவு கொண்டிருக்கிறீர்கள். உங்கள் அரசாங்கத்துடன் தொடர்பு கொண்டிருக்கிறீர்கள். சமுதாயத்திலிருந்து விலகியிருக்கும் துறவியோடும் உறவு கொண்டிருக்கிறீர்கள். துறவியோ, தன் சொந்தக் கருத்துக்களுடன் உறவு கொண்டுள்ளார். ஆக, தொடர்புடைமை என்பது மனித வாழ்வின் அடிப்படை யாக அமைந்துள்ளது.

உறவு இல்லாமல், வாழ்க்கை இல்லை. சம்பிரதாயங் களாகவும், மனப்பதிவுகளாகவும் இருக்கும் உங்களது கடந்தகாலத்துடனோ, எதிர்காலத்தைப் பற்றிய கருத்து கோட்பாடுகளுடனோ, நீங்கள் தொடர்புகொண்டு இருக்கிறீர்கள். ஆக, தொடர்புடைமை என்பது வாழ்க்கையின் மிக முக்கியமான ஒன்றாக இருக்கிறது.

இந்த உண்மையை உங்களால் பார்க்க முடிகிறதா? வார்த்தையளவிலோ அல்லது அறிவுபூர்வமாகவோ மட்டும் பார்க்காமல், மனப்பூர்வமாக, மெய்யாக அந்த உண்மையை நீங்கள் பார்க்கிறீர்களா?

மற்றவருடனான உங்கள் தொடர்பு எவ்வாறிருக்கிறது என்பதைப் பற்றி ஆராயலாம். அந்த உறவு, மிகவும் நெருக்கமானதோ அல்லது மேம்போக்கானதோ, எவ்வகைப்பட்டதாயினும் அத்தொடர்பைப் பற்றி பார்க்கலாம். உங்கள் தொடர்பு எப்படிப்பட்டது? குழந்தைப்பிராயத்திலிருந்தே, உளரீதியாக, நீங்கள் காயப்பட்டு, புண்பட்டுப் போயிருக்கிறீர்கள் - அந்தக் காயத்திலிருந்து, நீங்கள் வன்முறையை வெளிக்கொணருகிறீர்களா? மேலும் காயப்படாமல் இருக்க வேண்டும் என்பதற்காக, நீங்கள் உங்களை மேலும் மேலும் கூண்டுக்குள் அடைத்துக் கொள்கிறீர்கள் - உளரீதியாக காயப்பட்டுப் போனதின் விளைவாக இது நிகழ்கிறது. பிறகு, மற்றவருடனான உங்கள் தொடர்பு மிகவும் குறுகியதாக, வரையறுக்கப்பட்டதாக அமைகிறது. எனவே, ஒருபோதும் காயப்படாமல் நீங்கள் இருக்க முடியுமா என்பதைப் பற்றி முதலில் கண்டுபிடிக்க வேண்டும்.

காயப்பட்டு போவதற்கான மூலகாரணம் என்ன? 'நான் காயப்பட்டுப் போனேன்' என்னும்போது, என் தற்பெருமை காயப்பட்டது என்றாகிறது. அதன் பொருள் என்ன? 'என் ஆசிரியர் என்னைப் புண்படுத்தினார், என் பெற்றோர், என் நெஞ்சை ரணப்படுத்தினார்கள்' - நாம் அனைவருமே புண்பட்டுப் போயிருக்கிறோம், காயப்பட்டுப் போயிருக்கிறோம் - ஒரு வார்த்தை, ஒரு பார்வை, ஒரு சைகை புண்படுத்துகிறது. எது

ரணப்படுகிறது? 'நான் புண்பட்டுப் போனேன்' என்று சொல்கிறீர்கள் - இதில் காயப்பட்டுப் போன அந்த 'நான்' என்பது எது? உங்களைப் பற்றி நீங்கள் கொண்டுள்ள கருத்துரு (image) தானே அந்த 'நான்'? உங்களைப் பற்றி நீங்கள் கருத்துரு கொண்டிருக்கவில்லையா?

கருத்துருக்களை உருவாக்கும் ஆற்றல், மூளைக்கு இருக்கிறது. கருத்துருக்கள், நம்மால் ஏற்றுக்கொள்ளப் பட்ட மாயைகள். உதாரணத்திற்கு, யுத்தம் பற்றிய நம் கருத்து, நாம் கொண்டிருக்கும் மாயை; நாம் யுத்தத்தை ஏற்றுக்கொள்கிறோம்; மற்றவரை, மற்ற உயிரை, போரில் கொல்வதை நாம் ஏற்றுக்கொள்கிறோம். காரணம், யுத்தத்தைப் பற்றிய நம் கருத்துரு, அச்செயலை நியாயப்படுத்துகிறது. நமக்குக் கணக்கிலடங்கா கருத்துருக்கள் உள்ளன. அவற்றில் ஒன்று, நாம் புண்பட்டுப் போயிருக்கிறோம் என்பது. எது காயப்பட்டுப் போனது என்பதை நாம் ஆராயலாம்.

என்னைப் பற்றி நான் நிர்மாணித்திருக்கும் கருத்துரு ஒன்றுதான் ரணமாகிவிட்டது. நான் ரொம்ப கெட்டிக்காரன், பெரிய ஆள் என்றெல்லாம் என்னைப் பற்றி நான் நினைத்துக் கொண்டிருக்கும்போது, நீங்கள் எங்கிருந்தோ வந்து, 'முட்டாள்தனமாக நடந்து கொள்ளாதே' என்று என்னைச் சொன்னால், நான் காயப்பட்டுப் போகிறேன். எங்கெல்லாம் ஒப்பீடு செய்யப்படுகிறதோ, அங்கெல்லாம் புண்ணாகுதல் இருக்கும். என்னைவிட புத்திசாலியான, என்னைவிட திறமைமிக்க ஒருவருடன் என்னை ஒப்பிட்டுக்கொள்ளும் போது, அதாவது தராதரம் எடைபோடப்படும்போது, மனம் காயப்படுதல் கட்டாயம் இருக்கும். எனவே, ஒப்பீடு செய்யாமல், தரத்தை அளவைகளால்

நிர்ணயிக்காமல் வாழ நமக்குச் சாத்தியம்தானா என்பது பற்றி விசாரணை செய்யலாம்.

சதா சர்வகாலமும் நம்மை நாம் மற்றவர்களோடு ஒப்பிட்டுக்கொண்டேதான் இருக்கிறோம். இந்த ஒப்பிடுதல், பள்ளி நாட்களிலிருந்தே துவங்கி விடுகிறது. 'நீ உன் அண்ணனைப் போல் அவ்வளவு நன்றாக எதையும் செய்ய வேண்டும்' என்று அறிவுறுத்தப்படும் போதே, ஒப்பீடு ஆரம்பித்துவிடுகிறது. மேலும் அது வாழ்நாள் முழுமைக்கும் தொடருகிறது.

ஒப்பீடு இல்லாமல், அளவைகள் இல்லாமல் வாழ்வது சாத்தியம்தானா? - இது மிகவும் சிக்கலான கேள்வி. ஏனென்றால், 'மேலும் தரமான' (better) என்ற சொல்லே, ஒரு அளவீடுதான். 'மேலும் கூடுதலாக' (more) என்ற சொல்லே, ஒரு அளவீடுதான். சுயமுன்னேற்றம் குறித்தவையும் அளவீடுகள்தாம். அளவீடுகள் செய்யாமல் வாழ முடியுமா? - ஒப்பிட்டுக் கொள்ளாமல் இருக்க முடியுமா என்று இக்கேள்வி பொருள்படுகிறது. ஏதுமாக 'ஆகாதிருத்தல்' என்பது பற்றிய விசாரணை, தியானத்தின் ஒரு பகுதியாய் இருக்கிறது என்பதை நீங்கள் அறிவீர்களா? 'ஆதல்' (becoming) என்பது ஒரு அளவீடு.

மிக நெருக்கமான உறவாக இருந்தாலும்கூட, நமக்கிடையே இருக்கும் உறவில், அளவீடுகள் இல்லாமலிருப்பது சாத்தியம்தானா? - இக்கேள்வியின் சாரம் என்னவென்றால் அளவீடுகள் இல்லாமலிருப்பதற்கு, இயந்திரம் போல் இயங்காமல், உங்கள் மூளை, மிகவும் துடிப்புடன், உறவுடன், தொடர்போடு இருக்க வேண்டும் என்பதாகும். உறவில், மனக்காயங்கள் ஏற்பட்டுள்ளனவா என்பதைப் பற்றியும் ஆராய வேண்டும். அந்தக் காயம்,

ஒருவருக்குப் பெரும் பயத்தைக் கொணர்கிறது. தன்னைச் சுற்றி தடுப்புச் சுவர் எழுப்பிக்கொண்டு உள்ளுக்குள் அவரை ஒதுங்க வைக்கிறது. அதன் காரணமாய், தனித்து விடப்படுதல் ஏற்படுகிறது.

ஒவ்வொரு நாடும் தன்னை தனிமைப்படுத்திக் கொள்கிறது. பிரிட்டன் ஒதுங்கி உள்ளது, பிரான்ஸ் தனியே நிற்கிறது, அமெரிக்காவும் அப்படியே - வாழ்க்கையை நோக்கும் பார்வையில் அவை அனைத்தும் தனித்தனியாய் உள்ளது. தனிமைப்படும் இடத்தி லெல்லாம், முரண்பாடுகள் இருக்கும். நான் ஒரு யூதன் என்றும், நீங்கள் ஒரு அரேபியர் என்றும் இருக்கும்போது, அதாவது, நீங்கள் 'அரேபியர்' என தனித்து நிற்க, நான் 'யூதர்' என்று ஒதுங்கி நிற்க - நாம் ஒருவரை ஒருவர் எதிர்த்து சண்டையிடப் போகிறோம். ஆக, வெளிமுக மாகவோ அல்லது உள்முகமாகவோ, தனிமைப்பட்டு இருக்கும்வரை, முரண்பாடுகள் கட்டாயம் தோன்றும். 'ஹிந்து', 'பௌத்தர்' என்பது போலெல்லாம் பிரிந்து, தங்களை தனிப்பட்ட ஒன்று என்பதாக மூளையில் பதியப்பட்டுள்ளது. இவ்விதத்தில் மூளை தளைபட் டுள்ளது. தளை பட்டிருக்கும் தன் நிலைக்குத் தீர்வுகாண மூளையால் முடியுமா என்ற ஆராய்ச்சிக்கு, நாம் உறவுகளைப் பற்றி அறிந்திருக்க வேண்டும்.

உங்கள் வாழ்க்கைத்துணையுடன், உங்கள் குழந்தைகளுடன், மற்றவருடன், நீங்கள் கொண்டிருக்கும் உறவு எத்தகையது? இந்த ஆய்வை, தொலைவிலிருந்து துவங்க வேண்டாம் - அருகிலிருக்கும் வீட்டிலிருந்தே ஆரம்பிப்போம். தொலைதூரம் செல்ல, நீங்கள் மிகமிக அருகிலிருந்துதான் ஆரம்பிக்க வேண்டும், சரிதானே? வெகுதூரம் பயணிக்க வேண்டுமென்றால், முதலில் நம்

வீட்டில் ஒழுங்கைக் கொண்டுவர வேண்டும். உங்கள் தொடர்புடைமையை விழிப்புடன் கவனியுங்கள். அவ்வாறு கவனிப்பதால், நீங்கள் எவ்வாறு ஒன்றை எதிர்கொள்கிறீர்கள், உங்கள் எதிர்வினை எத்தகையது என்பதையெல்லாம் நீங்கள் அறிந்துகொள்கிறீர்கள். உங்களால் விழிப்புடன், கவனத்துடன் உங்கள் எதிர்வினையை கவனிக்க முடியுமா? இதற்கு, நீங்கள் தரும் ஒவ்வொரு எதிர்வினையையும், உங்களுக்குத் தோன்றும் ஒவ்வொரு எண்ணத்தையும் தொடர்ந்து கவனிக்கும் ஆற்றல் தேவை. ஆனால், நம்மில் பலரும் சோம்பேறிகள் - பிறரைச் சார்ந்திருப்பதால் நாம் சோம்பேறிகளாகி விட்டோம்.

இரு நண்பர்களாக, தொடர்புடைமை என்ற விஷயத்தை நாம் பார்த்தோம். தொடர்புடைமையின் இயல்பைப் பற்றி மேலும் காணலாம். மூளையானது, உங்களின் சொந்த மூளையாக இருக்கிறதா அல்லது மனித இனத்தின் மூளையாக இருக்கிறதா? இந்தக் கேள்வி, உண்மையிலேயே மிகவும் முக்கியமான ஒன்றாகும். உங்கள் மூளை, தனிநபர் மூளையா அல்லது மனிதகுல மூளையா? 'என் மூளை', 'என் பிரக்ஞை' என்று நீங்கள் சொல்லும்போது, அது என்ன உங்களின் தனிப்பட்ட பிரக்ஞையா? அல்லது, மானுடத்தின் பிரக்ஞையா? நீங்கள் கஷ்டப்படுகிறீர்கள், நீங்கள் நிச்சயமற்று கலக்கமுற்று இருக்கிறீர்கள், நீங்கள் பலவற்றின் மீது நம்பிக்கை வைக்கிறீர்கள். நீங்கள் பதற்றத்துடன் வாழ்கிறீர்கள். உங்கள் விஷயஅறிவு மற்றும் உங்கள் நடத்தை என்பதாகவே நீங்கள் இருக்கிறீர்கள். உங்களைப் போலவே, துளிகூட பிசகாமல், உங்கள் அண்டை வீட்டுக்காரரும் இருக்கிறார். அவரும் கஷ்டப்படுகிறார், வலி, துயரம், வேதனை, தொல்லைகள் என்று அவரும்

படாதபாடு படுகிறார். எனவே, உலகின் ஏனைய மாந்தர்களின் பிரக்ஞையிலிருந்து உங்கள் பிரக்ஞை வேறுபட்டது என்றா நினைக்கிறீர்கள்? இல்லவே இல்லை.

இவ்விளக்கத்திலிருக்கும் உண்மையை நீங்கள் பார்த்தறிந்து ஏற்றுக்கொண்ட பின், இன்னமும், நீங்கள் ஒரு தனிநபரா? நீங்கள் உங்களைத் தனிப்பட்ட ஒருவராக நினைத்துக் கொள்ளலாம். நீங்கள் கறுத்த நிறமுடையவராய் இருக்கிறீர்கள், குள்ளமாய் இருக் கிறீர்கள், மற்றும் உங்கள் சொந்த நடவடிக்கைகள் என்று பல இருக்கிறது - இந்த வெளிப்புற தனித்தனிமைகளால் நீங்கள் தனிநபர், தனிப்பட்டவர் என்று எண்ணுகிறீர்கள். ஆனால், ஆழமாக கூர்ந்து உள்முகமாகப் பார்க்கும் போது, நீங்களும் ஏனைய மாந்தரைப் போன்றவராகவே இருக்கிறீர்கள், அல்லவா? இந்த உண்மையை நீங்கள் உணரும்போது, நீங்கள் ஒருபோதும் மற்றவரைக் கொல்ல மாட்டீர்கள் - அவ்வாறு கொல்வது, உங்களையே கொல்வது போலாகிறது, அல்லவா? இந்தப் புரிதல் வரும்போது, மிகுந்த கருணையும், அன்பும் மலர்கிறது.

நண்பர் : சுயமற்ற (impersonal) பொதுவான செயல் எது?

கிருஷ்ணமூர்த்தி : முதலில் செயல் என்றால் என்ன? 'செயல்' என்ற சொல்லிற்கு என்ன அர்த்தம் கொள்கிறீர்கள்? ஒரு மாதிரிவழிமுறையின்படியோ, ஒரு கருத்தின்படியோ, கடந்த கால அனுபவங்களின்படியோ, எதிர்கால இலக்குகள், இலட்சியங்களின்படியோ, அல்லது, உங்கள் சௌகரியப்படியோ, நீங்கள் செயல்படுகிறீர்கள் என்பதால், 'செயல்' என்ற சொல்லிற்கு நீங்கள் தரும் பொருள் என்ன? 'செயல்' என்ற சொல், செயல்படுவதைக் குறிக்கிறது; செயல்பட்டதையோ, செயல்படப்

போவதையோ குறிக்கவில்லை. 'செயல்' எனப்படுவது இக்கணத்தில், நிகழ்காலத்தில் செயல்படுவதாகும். அந்தச் செயல், சரியானதா, உண்மையானதா என்பதெல்லாம் உங்கள் சிந்தனையின் தன்மையை, மற்றும், உங்கள் உணர்வுகளின் தன்மையைப் பொறுத்து இருக்குமே தவிர, ஒரு சூத்திரத்தைப் பொறுத்து இருக்காது. எனவே, செயல் என்றால் என்ன என்பதை முதலில் விசாரணை செய்யுங்கள். காலையிலிருந்து இரவு வரை, நாம் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம். இங்கு அமர்ந்து கொண்டு, பேச்சாளர் பேசுகிறார் - நீங்கள் அங்கிருந்து கொண்டு கேட்கிறீர்கள் - இதுவும் செயல்தான். நீங்கள் கவனமாகக் கேட்பது, ஒரு செயல் - அப்படி கவனிக்காவிட்டாலும், அதுவும் ஒரு செயலே. உண்மையிலேயே பேச்சாளரின் பேச்சைக் கவனித்து கேட்பதும், அவ்வாறில்லாமல், கேட்பதாக நினைத்துக் கொண்டு கேட்காமல் இருந்தாலும், பேச்சை செவிமடுப்பது என்பது ஒரு செயல்.

'சுயமற்ற' (impersonal) என்று எந்த அர்த்தத்தில் சொல்கிறீர்கள்? 'தான்' என்பதற்கு என்ன அர்த்தம்? 'தான்' என்ன பெயரா, வடிவமைப்பா? 'தான்' என்று அழைத்துக்கொள்வதற்கு, நீங்கள் என்ன தனிநபரா? உங்களைத் தனிநபராகக் கருதிக்கொள்வதால், பொதுவான செயலைப்பற்றி வினவுகிறீர்களா? நீங்கள் அனைவருமே உங்களைத் தனிநபராகத்தான் எண்ணிக் கொள்கிறீர்கள் என்று நான் அறிவேன். உங்கள் பாரம்பரியம் மற்றும் சமயம், உங்களைத் தனிநபர் என்றே சொல்கிறது.

நீங்கள் என்ன தனிநபரா? பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தொடரும் மனிதகுலத்தின் பெருமுயற்சியின் விளைவாக அல்லவா நீங்கள்

இருக்கிறீர்கள்? இம்மாதிரியான கேள்விகளை எழுப்ப நீங்கள் விரும்புவதில்லை. இம்மாதிரியான கேள்விகளைக் கண்டு நீங்கள் பயப்படுகிறீர்கள். நீங்கள் தனிநபர் என்றில்லாவிட்டால், உங்களுக்கு என்ன நேரிடும்? தனித்தன்மை என்பது மற்றதிலிருந்து ஒதுங்கி தனித்து இருப்பதாகும். தனிநபராக எண்ணிக்கொள்வதால் தான், மற்றவரின் கழுத்தை நெரிப்பதையே வாழ்நாள் முழுதும் செய்துகொண்டிருக்கிறோம். மற்றவர் மீது நமக்கு அன்பு இல்லை.

கடவுளின் கருணை பற்றி பேசுகிறோம். ஆனால், நாம் ஒருவரையொருவர் நேசிப்பதில்லை. மற்றும், மனிதனின் கண்டுபிடிப்புதான் கடவுள். நீங்கள் எல்லோரும் கடவுள் நம்பிக்கை உடையவர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால், அந்தக் கடவுளைப் படைத்தவர்கள் நீங்கள்தான். கடவுள் என்றொருவர் இருந்து, அவர்தான் பரிதாபகரமான நம்மை படைத்தார் என்றால், என்ன பரிதாபகரமான கடவுளாக அவர் இருக்க வேண்டும்! அவ்வகையில் எண்ணிப்பார்க்க நீங்கள் விரும்பவில்லை. ஒரு மாயத் தோற்றத்தை வழிபடுகிறீர்கள் - அந்த மாயத்தோற்றம் உங்களுக்கு விருப்பமானதாக இருக்கிறது, அதில் பாதுகாப்பு இருப்பதாகக் கருதுகிறீர்கள். மாயத்தோற்றம், பாதுகாப்பு அளிப்பதில்லை என்று பின்பு கண்டுகொள்கிறீர்கள். உங்கள் கடவுள் உங்களை வஞ்சித்துவிட்டார். இருப்பினும், அவரை நீங்கள் வழிபடுகிறீர்கள். கிருத்துவ கடவுள், ஹிந்து கடவுள், முஸ்லீம் கடவுள் - இவையெல்லாம் அர்த்தமற்ற சிறுபிள்ளைத்தனமாக இருக்கிறது.

எனவே, நம் இருளைப் போக்கும் ஒளியாக, நமக்கு நாமே ஒளிர முடியுமா என்பதை ஆராயலாம். உள்முகமாக, உளரீதியாக, யாரையும் சார்ந்திராமல் - வாழ்க்கைத்துணைவரையோ, குருவையோ, புனித நூலையோ - எதையும் சார்ந்திராமல் நம்மால் வாழ முடியுமா என்று விசாரணை செய்யலாம். சுதந்திரமான, திறமிக்க, துடிப்பான வாழ்க்கை வாழுதல் சாத்தியம்தானா என்று பார்க்கலாம். துடிப்பான வாழ்க்கையில் மூளை, இயந்திரத்தனமாக இயங்குவதில்லை. பழகிப்போன இந்த வாழ்க்கைமுறையிலிருந்து விடுபட்டு, முற்றிலும் வேறுபட்ட முறையில் வாழ்வது கூடுமா என்று ஆய்வு செய்வோம்.

*புது தில்லி, 30.10.1982*

■■

# 2

# முரண்பாடு, இருமைநிலை மற்றும் கண்டுணர்தல்

இன்று இந்த மாலைப்பொழுதில், நாம் ஒன்றுகூடி பல விஷயங்களைப் பற்றி கலந்துரையாடப் போகிறோம். நம்மிடையே தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள வார்த்தைகளை உபயோகித்தாக வேண்டும். வார்த்தைகளின்றி மனதினால் தொடர்புகொள்ளும் அசாத்திய ஆற்றல் பெற்ற 'டெலிபதிக்'- (telepathic)குகளாக நாம் இருந்தாலொழிய, நம்மால் வார்த்தைகளின்றி மற்றவருடன் தொடர்புகொள்ள இயலாது. மொழி அவசியம் தேவைப்படுகிறது.

வார்த்தைகளின் தன்மையை வெளிப்படுத்தும் முறையிலோ, அவற்றிற்கான ஏற்றம் / இறக்கம் கொடுத்து பேசும் முறையிலோ நாம் சிறிதும் கவ்னம் செலுத்தாமல், மேம்போக்காகப் பேசுகிறோம். பிறர் பேசுவதை உண்மையிலேயே நாம் கேட்பதும் இல்லை. அப்படியே கேட்டாலும் உடனே ஒரு மறுப்பு, அல்லது, தற்காப்பு, எதிர்வினையாகத் தோன்றுகிறது. முற்றிலும் புதிய கோணத்தில் ஒன்றையோ, அல்லது, நீங்கள் என்றுமே எண்ணிப் பார்க்காத ஒரு விஷயத்தையோ ஒருவர் கூறினால், அதை உடனே எதிர்க்கத் துவங்குகிறீர்கள்,

அல்லது, அந்தப் பேச்சால் நீங்கள் குழம்பிப் போகக்கூடும் என்பதால், அதைக் கேட்க மறுக்கிறீர்கள்.

கேட்கும் கலை என்று ஒன்றிருக்கிறது. சொல்லப் படுவதைக் கேட்பதும், உங்கள் சௌகரியப்படியும் உங்கள் சம்பிரதாயமுறைப்படியும் கேட்டதை வியாக்யானம் செய்யாமல் இருப்பதும், அக்கலையில் அடங்கும். சொல்வதைக் கேட்பதற்கு, கவனிக்கும் தன்மை மட்டும் போதாது. தோழமையுணர்வோடு, பேசுபவர் சொல்வதைப் புரிந்துகொள்ள வேண்டும் என்ற முயற்சியும், கேட்பவருக்கு இருக்க வேண்டும்.

நம் இருவரின் அக்கறையும் பிரச்சினை ஒன்றின் மீதோ, கருத்து ஒன்றின் மீதோ அல்லது பொருள் ஒன்றின் மீதோ இருக்கும்போது, மேலோட்டமாகவோ, ஆழமாகவோ நமக்கிடையே தொடர்பு ஏற்படுத்திக் கொள்வது சாத்தியம்தான். ஆனால், இந்தப் பேச்சாளர் சொல்லப்போவதை நீங்கள் பெருமளவில் எதிர்க்கக்கூடும்; அந்நிலையில் நமக்குள் தொடர்பு இருக்கப்போவதில்லை. எனவே, கேட்கும் கலையை நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். உங்களுக்குப் பிடித்த இசையைக் கேட்கும் போது, உங்களுக்குள் எதிர்ப்பு ஏதும் இருப்பதில்லை. இசையின் தன்மையை ரசிப்பதின் அடையாளமாகவும், அதைப் புரிந்துகொண்டதின் அடையாளமாகவும் தலையை ஆட்டி, தாளம் போட்டு, இசையுடன் லயித்துப் போகிறீர்கள். தயவுசெய்து உங்களுக்குப் பிடித்த இசையைக் கேட்பதுபோலவே, இப்போது சொல்லப் படுவதைக் கேளுங்கள்.

இப்பேச்சில் என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்யவேண்டும் போன்ற அறிவுறுத்தல்கள் இருக்கப் போவதில்லை. பேச்சாளரை நீங்கள் புரிந்துகொள்ள

வேண்டிய அவசியம் இல்லை – பேசப்படுவதைப் புரிந்துகொள்ளுங்கள். பேச்சாளரின் மீது மட்டும் கவனம் செலுத்தினால், நீங்கள் அவருடன் தொடர்பில் இல்லை என்றாகிறது. பேச்சாளரை கவனத்தில் எடுத்துக்கொள்ளாதீர்கள். அவர் ஒரு தொலைபேசியாய் செயல்பட்டு, உங்களுக்குச் சொல்கிறார். சொல்லப்பட்டதைப் புரிந்துகொண்டு, உண்மையை நீங்களே கண்டு கொள்ளுங்கள்.

சொல்லப்பட்டதை எதிர்க்கவோ, உங்கள் கருத்தை வற்புறுத்தவோ நீங்கள் முயன்றால், ஏன் அவ்வாறு செய்கிறீர்கள் என்பதையும் பாருங்கள். இப்போதிருக்கும் உங்கள் நிலைக்கு எந்தவித தொந்தரவும் ஏற்படக் கூடாது என்ற உங்கள் விருப்பமோ, புதியதாக எதுவும் தேவையில்லை என்ற உங்கள் எண்ணமோ, அல்லது, சொல்லப்பட்ட விஷயத்தை நீங்கள் கொஞ்சமும் மதிக்கவில்லை என்பதோ, உங்கள் எதிர்ப்புணர்விற்குக் காரணமாய் இருக்கலாம்.

தயவுசெய்து, கவனமாய் கேளுங்கள். கேட்கும் கலையை கற்றுக்கொள்ளுங்கள். பேச்சாளரின் பேச்சைக் கேட்க மட்டுமில்லாமல், உங்கள் குடும்பத்தினரின் பேச்சை, பறவைகளின் கரைதலை, காற்றின் இரைச்சலை, தென்றலின் அசைவைக் கேட்க கற்றுக்கொள்ளுங்கள். அவ்வாறு செவிமடுப்பதால், நீங்கள் மென்னயமிக்கவராகிறீர்கள். கவனத்துடன் கேட்கும்போது, கேட்பதை விரைவாக கிரகித்துக்கொள்ள முடிகிறது. அந்நிலையில், பெரிய பெரிய விளக்கங்களோ, வர்ணனைகளோ, பகுத்தாய்வுகளோ உங்களுக்குத் தேவைப்படுவதில்லை. கேட்கும் விஷயத்துடன் லயப்படுகிறீர்கள்.

அடர்த்தியாக மரங்கள் - பறவைகள் எழுப்பும் இனிமையான ஒலி - இலைகளின் ஊடே உள்ளே நுழைந்து தரையில் நிழலாடும் ஒளி என்பதாக இருக்கும் சூழலில் அமர்ந்துகொண்டு பேசும் இரு நண்பர்களைப் போல் நாம் இங்கு கலந்துரையாடிக் கொண்டிருக்கிறோம். எதிர்ப்புணர்வு ஏதுமின்றி, கவனமாய் ஒன்றைக் கேட்கும்போது, அங்கு அதிசயம் நிகழ்கிறது. கேட்பது என்பது விதை நடுதல் போன்ற செயல். விதை, வீரியமானதாகவும், சக்தியும், ஆரோக்கியமும் கூடியதாகவும் இருக்கும்போது, நிலம் சரிவர பண்படுத்தப்பட்டிருந்தால், அந்த விதை முளைத்து துளிர்ப்பது கட்டாயம் நிகழும். கேட்கும் கலையை தெரிந்துவைத்துக்கொண்டு, மிகமிக கவனத்துடன் நீங்கள் மற்றவர் பேசுவதைக் கேட்டால், அவருடைய பேச்சின் பொருளை உங்களால் அதிவிரைவில் அறிந்துகொள்ள முடியும்.

பல வருடங்களாக இப்பேச்சாளரின் சொற்பொழிவு களை நீங்கள் கேட்டு வந்திருக்கலாம், துரதிர்ஷ்டவசமாக! தொடர்ந்து கேட்டு வருவதால், அவருடைய பேச்சுநடை, பாணி, சமிக்ஞை, தோற்றம் ஆகியவை உங்களுக்குப் பழக்கமான ஒன்றாய் ஆகிவிடுவதால், மெதுமெதுவே உங்கள் கவனம் நழுவ ஆரம்பிக்கிறது. 'பல வருடங்களாய் இவர் கூறுவதைக் கேட்ட பிறகும், நான் ஏன் மாற்றமடையவில்லை?' என்று நீங்கள் எண்ணலாம். ஆழமாக, உங்கள் முழு மனத்துடன், சக்தியுடன் நீங்கள் கேட்காததே இதற்குக் காரணம் - பேச்சாளரை குறை சொல்லாதீர்கள். சரியாகக் கேட்கும் முறையை கற்றுக் கொள்ளுங்கள் என்று பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன். பறவையின் கீதத்தை, இலைகளிடையே

சலசலத்துச் செல்லும் காற்றின் ஒலியை, அர்த்தமும் உத்வேகமும் ஆழமும் கொண்ட பேச்சை - இவற்றையெல்லாம் கேட்பதில் பேரழகு உள்ளது.

தனித்தனியாக, நாடு என்றும், மதம் என்றும், இனம் என்றும், தனிநபர் என்றும், தனிநபர் பிரக்ஞை என்றும் பிளவுபட்டிருக்கும் இம்மனித சமுதாயத்தின் எதிர்காலம் இருண்ட, ஆபத்தான நிலையில் இருக்கிறது என்பதுபற்றி நேற்று பேசினோம். மனிதன், தனித்து வாழ முடியாது என்பதையும் பார்த்தோம். பெரும்பாலும் நாம் அனைவரும், சிந்திப்பதை, தனிநபர்க்குரியதாக கருதுகிறோம். என் சிந்தனைக்கும், உங்கள்_ சிந்தனைக்கும் வேறுபாடு இருக்கிறது, பிரிவு இருக்கிறது - என் கருத்துக்கு மாறான உங்கள் கருத்து, கணவனின் எண்ணத்திற்கு எதிரான மனைவியின் எண்ணம் என்பதாக உள்ளது. ஆனால், எண்ணம் வேறானாலும், எண்ணுவது என்ற செயல்பாடு தனிநபர்பாற்பட்டதன்று.

சிந்தித்தல் என்பது சாதாரண செயல் - ஏழை எளிய மனிதனும் சிந்திக்கிறார், நோபல் பரிசு பெற்ற விஞ்ஞானியும் சிந்திக்கிறார். அவர்கள் இருவருமே சிந்திக்கிறார்கள், எண்ணமிடுகிறார்கள். எண்ணுவது மனிதனின் இயல்பு. நீங்கள் சிந்திக்கும்போது, அது உங்களின் தனிப்பட்ட எண்ணுதல் அல்ல; விழிப்புடன் வார்த்தைகளாலும், எண்ணங்களாலும் மறுமொழி அளிப்பதும், எண்ணுவதும் மூளையின் ஆற்றலாக உள்ளது. எண்ணுவது, மனிதனின் இயல்பு. ஆனால், நாம், 'நான் எண்ணுவதற்கு எதிராக உள்ளது நீ எண்ணுவது' என்பதாக அதைக் குறைத்துவிட்டோம்.

தீவிரமான மற்றும் உறுதியான அபிப்பிராயங்கள், பாரபட்சங்கள், தீர்மானங்கள் , ஆகியவற்றை

கொண்டவர்களாக நாம் இருக்கிறோம். மிக அதிகமாகவே அனுபவங்களைப் பெற்றிருக்கும் நாம், அவற்றை நம் சொந்த அனுபவங்களாகவும், தீர்மானங் களாகவும் நினைத்துக்கொள்கிறோம். இவ்வாறிருப்பதால், புதிய கோணத்தில், புதிய பார்வையில் ஒன்றை அறிமுகப்படுத்தினால், அதைப் பார்க்கக் கூட மறுக்கிறோம்.

சிந்திப்பது என்பது மனிதனின் இயல்பு; என் சொந்த சிந்தனை அல்லது உங்கள் சிந்தனை என்று எதுவும் இல்லை. இதைத் தெளிவாகப் பார்க்க வேண்டும். படிக்காத ஏழை பாமரனும் தன் விஷயஅறிவிற்கேற்ப, தன் பார்வைக்கேற்ப சிந்திக்கிறார்; சிறந்த விஞ்ஞானியும் சிந்திக்கிறார். விஞ்ஞானி, அவருடைய அனுபவம் மற்றும் விஷயஅறிவிற்கேற்ப சிந்தித்து, புதிய ஒன்றைக் கண்டுபிடிக்கிறார். சிந்திப்பது என்பது மனிதகுலத்தின் பொதுவான விஷயமாக இருக்கிறது. எண்ணுவது, உங்களுடையதோ என்னுடையதோ அல்ல; அது எண்ணுவது, அவ்வளவே. இந்தப் புரிதலோடு நம் ஆய்வில் நாம் முன்னேறிச் செல்வோமா? வார்த்தை யளவிலாவது, அறிவுபூர்வமாக மட்டுமாவது, நாம் ஒருவரையொருவர் புரிந்துகொள்கிறோமா?

முஸ்லீம், ஹிந்து, பௌத்தர், திபெத்தியர், ரஷ்யர், அமெரிக்கர், சீனத்தவர் என்பதுபோலெல்லாம் நாடுகளாகவும், இனங்களாகவும் பிரிந்து தனித்து ஒதுங்கி இருப்பதை உலகமெங்கும் காண்கிறீர்கள். ஒருவர், தனக்கென ஒரு குருவை ஏற்றுக்கொண்டு, அவரைப் பின்பற்றுகிறார் - மற்றவர், வேறொரு குருவை ஏற்றுக்கொள்கிறார். முடிவே இல்லாமல் எல்லாவற்றிலும் தனித்து ஒதுங்கியிருத்தல் தொடர்கிறது. மனிதகுலமே

பிரிந்து பிளவுபட்டு கிடக்கிறது. வெளிஉலகத்தின் உண்மை நிலவரம் இதுதான்.

உள்முகமாக, நம்மைப் பார்த்தாலோ, நாம் ஒவ்வொருவரும் தன்னை தனிப்பட்டவராகவே கருதிக் கொள்கிறோம். சமயம் மற்றும் சம்பிரதாயம், நாம் நம்மை தனிப்பட்டவராக, மற்றவர்களிலிருந்து வேறாக எண்ணும்படி செய்துவிட்டது. நான் ஆண், நீங்கள் பெண். நீங்கள் உயரமானவர், நான் குள்ளம். நீங்கள் நல்ல சிவப்பு நிறம், நான் கறுப்பு - ஆமாம், இதுபோன்ற விஷயங்களிலெல்லாம் நீங்களும் நானும் வேறுவேறான வர்களே. ஆனால், நாம் பேசிக்கொண்டிருப்பது ஆழமான விசாரணை. மானுடப் பிரக்ஞை என்பது பொதுவானது. அதனை, நாம் அனைவருமே பகிர்ந்துகொள்கிறோம். மக்கள் அனைவரும் அவர் தம் வாழ்க்கையில் துன்பப் படுகிறார்கள், மிகுந்த வேதனையை அனுபவிக்கிறார்கள், கண்ணீர் சிந்துகிறார்கள், தனிமை, கலக்கம், மனச்சோர்வு, வலி, நிச்சயமற்றத்தன்மை போன்ற உணர்ச்சிகளில் சிக்கித் தவிக்கிறார்கள். ஏழை, பணக்காரர் என்ற வித்தியாசம் இல்லாமல் அனைத்துத் தரப்பினரும் இவ்வுணர்ச்சிகளை அனுபவிக்கிறார்கள். இதுதான் உண்மை.

ஆக, பிரக்ஞை என்பது என் தனிப்பட்ட பிரக்ஞையோ, அல்லது, உங்களுடையதோ அல்ல; அது மானுடத்தின் பிரக்ஞை. நாம் தளைபட்டவர்களாக இருப்பதால், இந்த உண்மையைப் பார்ப்பது நம்மில் பலருக்கு மிகவும் சிரமமாக இருக்கிறது. கிருத்துவ சமயப்படி, நீங்கள் ஒரு தனிப்பட்ட ஆன்மா. ஹிந்து மதப்படி, திரும்பத் திரும்பப் பிறவி எடுத்து 'அதை' அடையும்வரை - எதை? கடவுளுக்குத்தான் வெளிச்சம்! - பிறவி எடுக்கும் ஆத்மன் நீங்கள். நீங்கள் தனிப்பட்டவர்,

தனிநபர் என்பதை மதங்கள் வலியுறுத்திக் கூறுகின்றன. இக்கூற்றினை எதிர்த்து நாம் வினா எழுப்புகிறோம்.

நீங்கள் தனிநபரா என்பதைக் கண்டறிய, நாம் அதன் தொடர்பாகக் கேள்விகள் எழுப்ப வேண்டும், ஐயம் கொள்ளவேண்டும், கண்டுபிடிக்க வேண்டும். ஆகவே, நீங்கள் தனிநபர் இல்லை என்ற உண்மையை, மனதில் எந்தவித எதிர்ப்புணர்வும் இல்லாமல், தற்காப்புணர்வும் இல்லாமல், ஊன்றிக் கவனித்து கேட்க வேண்டும். 'உண்மை' என்ற சொல்லால் அதைக் குறிப்பிட்டது மிகவும் சரியே. உங்களுக்கென்று குறிப்பிட்ட பழக்கம், பாணி, இயல்பு, திறமை ஆகியவை இருக்கலாம் - இவையெல்லாம் மேற்புறத்தில் காணப்படுபவை. ஆனால், உள்முகமாக நோக்கும்போது, நாம் அனைவருமே பொதுவான பிரச்சினைகளையே எதிர்கொள்கிறோம்.

வார்த்தையளவில் மட்டுமோ, அறிவுபூர்வமாக மட்டுமோ புரிந்துகொள்வதாக இல்லாமல், முழுமனதாக, இதயப்பூர்வமாக, நம் இரத்தத்தில் ஊறிப்போனதாக, நாம் தனிநபர் இல்லை என்ற விஷயத்தை நாம் புரிந்துகொள்ளாவிட்டால், நாம் ஒருவரையொருவர் அழிக்கப்போவது நிச்சயம் - இதுதான் நடந்து கொண்டிருக்கிறது. எனவே, இவ்வுண்மையைக் கேட்கும் திறனுடையவராக நீங்கள் இருக்கிறீர்களா? இதைப்பற்றிய உங்கள் கருத்தைக் கேட்கவில்லை - அந்த உண்மையை உள்ளபடி கேட்கும் திறன் உள்ளதா? நமது பிரக்ஞையானது, அதன் உட்பொதிவால் ஆனது என்ற உண்மையைப் பார்க்கிறீர்களா?

பிரக்ஞையைப் பற்றி மிகப் பெரிய நூல்கள் அதிக எண்ணிக்கையில் வெளிவந்துள்ளன. பிரக்ஞையியல்

நிபுணர்கள் உள்ளனர். பிரக்ஞை பற்றி விவாதிக்க உலகெங்கிலும் மாநாடுகள் நடக்கின்றன. அம்மாநாடு களில் பண்டிதர்களும், நிபுணர்களும் கலந்துகொண்டு விவாதிக்கின்றனர். அந்நிபுணர்கள், தங்களைப் பற்றி ஆராய்ந்து அறிந்துகொண்டதில்லை - அவர்களிடம் வரும் அப்பாவி நோயாளிகளைப் பற்றி மட்டும்தான் அவர்களுக்குத் தெரியும்! இங்கிருக்கும் நாம் அவர்களைப் போன்ற துறை வல்லுநர்கள் அல்ல - உங்களில் யாராவது இருக்கலாம், நான் வல்லுநர் அல்ல! ஆனால், என்னைப் பற்றியும், மற்றும், என் எண்ண இயக்கத்தையும் உள்ளவாறு பார்த்து, பிரக்ஞையின் உட்பொதிவையும் பார்த்தறிந்திருக்கிறேன். ஒருவருடைய நம்பிக்கைகள், இயல்பு, இரகசிய விருப்பங்கள், பதற்றம், தனிமை போன்றவற்றால் ஆனது பிரக்ஞை. உங்கள் பயங்கள், உங்கள் விருப்பங்கள், உங்கள் களிப்பு, உங்கள் தனிமை, மனச்சோர்வு, கலக்கம் இன்ன பிறவற்றால் ஆன உங்கள் பிரக்ஞையாகவே நீங்கள் இருக்கிறீர்கள். உட்பொதிவு இல்லாமல், பிரக்ஞை இல்லை.

ஆக, உட்பொதிவாக இருப்பவை, பிரக்ஞையாகிறது. பிரக்ஞை, தளைபட்டிருக்கிறது. தளைபட்டிருக்கும் காரணத்தால், பிரக்ஞை, முரண்பாடு கொண்டதாய் உள்ளது. முரண்பாடு என்பது இரண்டு நபர்களிடையே தோன்றும் கருத்து வேற்றுமையாகவோ, ஒருவருக்குள் தோன்றும் முரண்பாடுகளாகவோ, 'உள்ளதிற்கும்', எப்படி இருக்க வேண்டும் என்று விரும்புகிறோமோ அப்படிப்பட்ட இலட்சிய நிலைக்கும் இடையே உள்ள இடைவெளியாகவோ இருக்கிறது. ஏதோ ஒரு வகை முரண்பாட்டுடன் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம், அல்லவா?

மனிதர்கள் அனைவருமே முரட்டுத்தனம் மிக்கவர்கள் என்பது வெளிப்படையாகவே தெரிகிறது. முரட்டுத்தனம் என்பது பிரக்ஞையின் உட்பொதிவுகளில் ஒன்றாக இருக்கிறது. 'நான் முரடனாக இருக்கிறேன். ஆனால், நான் அப்படி இருக்கக் கூடாது' என்ற விருப்பம் வரும்போது, அங்கு 'உள்ளதாக' ஒன்றும், அடைய வேண்டும் என்ற 'ஆதல்' மற்றொன்றுமாக இருவேறு நிலை, இருமை நிலை உண்டாகிறது. இருமைநிலை, முரண்பாட்டை, சச்சரவைத் தோற்றுவிக்கும். நான் அஹிம்சை கோட்பாடுடையவராக, அஹிம்சை நெறியை கடைப்பிடிக்க வேண்டும் என்ற கருத்து கொண்டவராய் இருப்பின் - இந்த நாடு, அஹிம்சை நெறியை பெரிதும் போற்றுகிறது - 'உள்ளதாய்' எனக்கிருக்கும் வன்முறைக்கும் என் அஹிம்சை நெறி விருப்பத்திற்கும் இடையே முரண்பாடு தோன்றுகிறது. ஆனால், நான் வன்முறையாளன் என்பதுதான் நிஜம்; மற்றது, நிஜமல்ல. நிஜத்தில் அது அங்கில்லை.

நிரந்தரமாக, முரண்பாட்டிலும், சச்சரவுகளிலுமே மனிதன் ஏன் வாழ்ந்து கொண்டிருக்கிறான் என்பதைப் புரிந்துகொள்ள, நாம் இவ்விஷயத்திற்குள் மிகவும் கவனமாகச் செல்ல வேண்டும். 'நான் வன்முறையாளனாக இருக்கிறேன். ஆனால், நான் அஹிம்சா மூர்த்தியாக ஆகவேண்டும்' என்ற என் விருப்பத்தில், நான் வன்முறையாளனாக இருப்பதால், என் வரையில் அஹிம்சை என்பது ஒரு கருத்து, ஒரு கோட்பாடு, நிஜத்தில் இல்லாதது. இங்கு, வன்முறை என்பது நிஜம், அஹிம்சை நிஜமில்லை. ஆனால், அஹிம்சையை கடைப்பிடிப்பதின் மூலம், வன்முறையிலிருந்து விடுபட்டு விடலாம், அஹிம்சாவாதியாகி விடலாம் என்று நாம் எண்ணுகிறோம்.

இவ்விஷயம் முக்கியமானவொன்றாக இருப்பதால், நம் ஆய்வை நிதானமாக எடுத்துச் செல்லலாம் என்று நினைக்கிறேன். வன்முறை என்றால் என்ன? உடல்ரீதியான வன்முறை உள்ளது. என் மீது குண்டு வீசுகிறீர்கள், என்னை அடிக்கிறீர்கள், என்னைக் காயப்படுத்துகிறீர்கள், என்னைச் சுடுகிறீர்கள் - இவையெல்லாம் உடலுக்கு இழைக்கப்படும் வன்முறை. மனோரீதியான வன்முறை என்றால் என்ன? உள்ளத்தில் கோபம், வெறுப்பு, பிறர் மீது அதிகாரம் செலுத்தவேண்டும் என்ற ஆணவவெறி போன்றவை மனோரீதியான வன்முறை. 'எனக்குத் தெரியும் - ஆனால், உனக்குத் தெரியாது' என்பது ஒருவகை கருத்து அதிகாரம். 'நான் சொல்வதை, நீ கீழ்ப்படிந்து கேட்க வேண்டும்'. - என்பது அதிகாரம். குருமார்கள் எல்லோரும் வன்முறையாகச் செயல்படுகிறார்கள் - அவர்களுடைய கருத்துகளை, அவர்களின் தியான முறைகளை, மற்றும் பலவற்றை, அவர்கள், மக்கள் மீது திணிக்கிறார்கள். தயவுசெய்து இதைப் புரிந்துகொள்ளுங்கள். நான் குருமார்களை நிந்திக்கவில்லை. வன்முறை என்றால் என்ன என்பதைச் சுட்டிக்காட்டுகிறேன், அவ்வளவே. மனோரீதியாக சார்ந்திருத்தல், போலித்தனம், இணங்கிப்போதல் மற்றும் அதிகாரம் செலுத்துதல் - இவையெல்லாம் உள்முக வன்முறையாகும் - இது ஒரு உண்மை. 'ஆதல்' வேண்டி நாம் பெற விரும்பும் எதிர்மறை நிலை, ஒரு கருத்தாக மட்டுமே இருப்பதால், அதனை விடுத்து உண்மையைப் பற்றி மட்டுமே கவனிப்போமா? இருட்டு - வெளிச்சம், ஆண் - பெண், உயரம் - குள்ளம், கருப்பு - வெண்மை என்பன போன்ற எதிர்மறைகள் பல உள்ளன; அவைகளிடையே வேறுபாடுகள் உண்டு. ஆனால், மனதிற்குள் இருமை நிலை இருக்குமா என்ன?

மனிதர்கள் ஏன் முரண்பாட்டில் வாழ்கிறார்கள், முழுவதுமாக முரண்பாடுகளிலிருந்து விடுதலை பெற்று வாழ்வதென்பது சாத்தியமா என்பன போன்ற விஷயங்களைப் புரிந்துகொள்ள முயற்சி செய்துகொண் டிருக்கிறோம். முரண்பாடுகள் அகன்றுவிட்டால், மூளை அற்புதமாக வேலை செய்யும். மேலும், சக்தி, உத்வேகம், உயிர்ப்பு ஆகியவை அபரிமிதமாகப் பெருகும். அதுவே, மனம், ஓயாமல் முரண்பாட்டில் போராடுவதால், ஒருவரின் உடல் ஆரோக்கியமும் கெட்டு பலவீனப்பட்டுபோய், மனமும் சோர்ந்து போகிறது. முரண்பாடு என்பது அரேபியர் மற்றும் யூதர்களுக் கிடையேயும், முஸ்லீம் மற்றும் ஹிந்துக்களிடையேயும் ஒரு இனத்திற்கு எதிராக மற்றது என்பதாகவும் மட்டும் இல்லை; அவர்களுக்குள், அதாவது, ஒரே இனத்திற் குள்ளும் தனிநபர் தொடர்பில் முரண்பாடு உள்ளது.

நாம் வினவுகிறோம் : 'உள்ளது' மட்டும்தான் இருக்கிறதா அல்லது இருமைநிலை இருக்கக்கூடுமா? என்று. 'உள்ளது' மட்டும்தான் இருக்கிறது. நான் வன்முறையாளனாக இருக்கிறேன் என்பது 'உள்ளது.' வன்முறையிலிருந்து விடுபட முடியுமா என்று கவனித்தறிய வேண்டுமே தவிர, நான் அஹிம்சாவாதியாக ஆக வேண்டும் என்ற எண்ணம் இருமைநிலையைத் தோற்றுவிக்கிறது. அஹிம்சை என்ற கொள்கையை இந்த நாடு, மற்ற நாடுகளுக்குப் பரப்பியது. வன்முறைத் தன்மையுடன் கூடியவர்களாக இருந்துகொண்டு, தாங்களே கடைப்பிடிக்காத ஒன்றாக இருக்கும் அஹிம்சைநெறியை மற்றவர்களுக்குப் பிரச்சாரம் செய்கிறார்கள். இதைப்பற்றி அவர்களைக் கேள்வி கேட்டால், 'நான் அஹிம்சைநெறியை பயிற்சி செய்கிறேன்' என்று பதிலளிப்பார்கள். அதன் பொருள்

என்னவென்றால், 'நான் மெதுமெதுவாய் நாளடைவில் அஹிம்சாவாதியாக ஆகிவிட பயிற்சி செய்கிறேன் - வன்முறையைப் புரிந்துகொள்ள முயற்சிக்கவில்லை. ஆனால், 'அஹிம்சை' என்ற பெயரில் அழைக்கப்படும் ஒன்றாக நான் ஆகப்போகிறேன்' என்பதாகும். இதிலிருக்கும் வித்தியாசம் உங்களுக்குப் புரிகிறதா? முரண்பாட்டிற்கு இதுதான் காரணம்.

என்னிடம் இருக்கும் வன்முறை என்ற நிஜத்தை, நான் கவனித்தறிந்து அதைப் பற்றி புரிந்துகொள்ளும் போது, அங்கே முரண்பாடு ஏதுமில்லை. ஆனால், என் மனம் 'அஹிம்சைத் தன்மையை நான் பெற்றே தீரவேண்டும்' என்று ஓயாமல் சொல்லும்போது, அங்கு முரண்பாடு எழுகிறது. ஆனால், 'நான் வன்முறையாள னாக இருக்கிறேன். என் வன்முறை இயல்புக்கு மூல காரணம் எது? என் வன்முறையின் தன்மை என்ன?' என்று ஆராய்ந்தீர்களானால், அங்கு வன்முறை கண்டனம் செய்யப்படவில்லை, உள்ளபடி கவனித்தறியப்படுகிறது.

கவனித்தல் என்று எந்த அர்த்தத்தில் சொல்கிறோம் என்று புரிந்துகொள்வது மிகமிக அவசியம். வானத்தில் முழு நிலவைப் பார்க்கிறீர்கள். நிலவின் குளுமையான ஒளியின் அற்புதத்தை, அழகை, பொலிவைக் கவனித்தீர்களா? இல்லை, 'இது பௌர்ணமி நிலவு' என்று சொல்லிவிட்டு வேறு எதையோ செய்யத் தொடங்கி விட்டீர்களா? மலையை, அதன் கம்பீரம், பொலிவு, பனிபடர்ந்த அதன் உச்சி, கருத்த நிழல்கள் ஆடும் அதன் ஆழமான பள்ளத்தாக்குகள் போன்ற அதன் அனைத்து பரிமாணங்களிலும் எப்போதாவது மலையைக் கவனித்திருக்கிறீர்களா? அவ்வாறு கவனிக்கும்போது, உங்கள் பிரச்சினைகள் அனைத்தும் காணாமல்

போகின்றன. மலையின் கம்பீரம், உங்கள் பிரச்சினைகளை ஒரு கணத்திற்கு இல்லாமல் செய்துவிட்டது. ஆனால், சீக்கிரமே பிரச்சினைகள் திரும்ப வந்துவிடும். ஆக, கவனித்தல் என்பதின் அர்த்தம் என்ன என்பதைப் பார்க்கலாம்.

நான் முரடன் என்று வைத்துக்கொள்வோம். என்னிடமிருக்கும் முரட்டுத்தனத்தை எவ்வாறு கவனிப்பது? என் முரட்டுத்தனத்தின் இயல்பைப் பற்றி புரிந்துகொள்ள விரும்புகிறேன். ஆய்வுசெய்து, ஆழமாகப் பார்த்து, என் வன்முறைக்குக் காரணியாய் இருப்பவை எவை என்று கண்டறிய விழைகிறேன். எப்படிக் கண்டுபிடிப்பது? முதலில், வன்முறை என்னிலிருந்து வேறுபட்டதா? நான் முரடன் என்று சொல்லும்போது, என்னிடமிருந்து என் முரட்டுத்தனம் வேறுபட்டதா? இல்லை, நானே அந்த முரட்டுத்தனமா? நீங்கள் கோபப்படும்போது, நீங்களே கோபமாக இருக்கிறீர்கள்; கோபத்திலிருந்து நீங்கள் வேறுபட்டு இல்லை. கோபத்தை அடக்க வேண்டும் என்று விரும்பும்போதுதான் நீங்கள் கோபத்திலிருந்து வேறுபட்டு இருக்கிறீர்கள். ஆனால், உண்மையில் நீங்கள் கோபத்திலிருந்து வேறுபட்டவரா? இந்த விசாரணைக்குள் நாம் மிகுந்த எச்சரிக்கை உணர்வோடு செல்ல வேண்டும். நம்மில் பலரும், வன்முறை என்று நம்மால் அழைக்கப்படுவதிலிருந்து, நாம் வேறுபட்டவர்கள் என்று சொல்கிறோம். அப்படி இருக்கக் கூடுமா? 'வன்முறை' என்ற சொல், அதற்கும் அதை உடையவருக்கும் இடையே பிரிவைத் தோற்றுவிக்கிறதா? 'வன்முறையை ஒழிக்க வேண்டும்' என்ற இடைவிடாத பிரசாரங்கள், பேச்சுகள், சம்பிரதாயக்கொள்கைகள் ஆகியவற்றின் மூலமாக, 'வன்முறை' என்ற சொல்லே, பிரிவை உண்டாக்குகிறதா?

மேலோட்டமாக தன்னைக் காண்பவர் கூறுகிறார் 'நான் வன்முறையிலிருந்து வேறுபட்டவன்' என்று. இந்தக் காண்பவர் யார் என்பதை நாம் பார்க்க வேண்டும். வன்முறை என்றால் என்ன என்பதைப் பற்றி அறிந்திருக்கும் கடந்த காலமாக, காண்பவர் இருக்கிறார். காண்பவர், கடந்த காலமாகவும், தகவல் அறிவாகவும், அனுபவங்களாகவும், சேகரித்து வைக்கப்பட்ட மனப்பதிவுகளாகவும் இருக்கிறார். ஞாபகங்கள் மற்றும் பலதரப்பட்ட தகவலறிவின் இயக்கம் ஆகியவை கடந்த காலமாய் உள்ளது. கடந்த காலம், நிகழ்காலம் மற்றும் எதிர்காலம் என்று எண்ணம் தன்னை பிரித்துக்கொள்கிறது. மேலும், காண்போன் மற்றும் காட்சிப்பொருளாகவும், எண்ணம், தன்னை பிரித்துக்கொள்கிறது. எண்ணம் சொல்கிறது: 'நான் முரடனல்ல. முரட்டுத்தனம், என்னில் ஒரு பகுதி அல்ல' என்று. ஆனால், கூர்ந்து கவனிக்கும்போது, வன்முறை, பேராசை, பொறாமை, போட்டி மனப்பான்மை மற்றும் மனச்சோர்வு கொண்டவராக நீங்கள் இருக்கிறீர்கள்; அத்தனையும் நீங்கள்தான். நீங்கள், அவற்றைக் காணும் காண்போன் அல்ல. காட்சிப்பொருளிலிருந்து காண்போன் வேறுபட்டவரல்ல. தயவுசெய்து இதைப் புரிந்துகொள்ளுங்கள். இப்புரிதல் மிகவும் அவசியம். ஏனென்றால், நீங்கள் இதை முழுமையாக உங்கள் இதயபூர்வமாக, உங்கள் மொத்த இருப்புடன், மனதார உண்மையிலேயே புரிந்துகொண்டால், இருமைநிலை அறவே நீங்குகிறது; அதன் பயனாய், முரண்பாடுகள் முற்றிலுமாக முடிவுறுகிறது. உங்கள் சமய நூல்களை, வேதாந்தங்களை, அவற்றைச் சார்ந்தவற்றையெல்லாம் மறந்துவிடுங்கள், நினைவிலிருந்து அகற்றிவிடுங்கள். பௌதிக ரீதியில் மட்டுமே, எதிர்மறைகள் உள்ளது. உளரீதியில், உள்நிலையில் நிஜம் மட்டுமே இருக்கும்.

ஒருவர், வன்முறையாளராக, கோபக்காரராக, பொறாமைக்காரராக இருக்கிறார் என்பதுதான் நிஜம்.

எண்ணத்தால் கண்டுபிடிக்கப்பட்டதாயிருக்கும் நிஜத்தின் எதிர்மறைகள் எதையும் சேர்த்துக்கொள்ளாமல், நிஜத்தை மட்டும் உங்களால் கவனித்தறிய முடியுமா? அதாவது, 'உள்ளதை' மட்டும் கவனிக்க உங்களுக்கு இயலுமா? அக்கவனிப்பில், காண்பவரே காட்சிப்பொருள், எண்ணுபவரே எண்ணம், அனுபவிப்பவரே அனுபவம் என்ற நிலை உள்ளது. 'நான் ஞானத்தெளிவு பெற்று, அதை அனுபவிக்க வேண்டும்' என்றோ, மற்ற அனுபவங் களைப் பெற வேண்டும் என்றோ சொல்லும்போது, நீங்கள், அனுபவத்தையும் அனுபவிப்பவரையும் பிரித்துப் பார்க்கிறீர்கள். எண்ணுபவரே, எண்ணம். எண்ணங்கள் இல்லாத எண்ணுபவர் இல்லை. காண்பவரே, காட்சிப்பொருள், பகுத்தாய்பவரே, அவர் பகுத்தாயும் விஷயம் என்பதுபோல் இவ்வுண்மையை பத்து விதங்களில் என்னால் சொல்ல முடியும் - உண்மை என்னவோ ஒன்றுதான். ஆக, உள்முகத்தில், இருமை நிலை உணர்வை நீங்கள் முற்றிலுமாக அகற்றி விடுகிறீர்கள். பிறகு, அடக்கிவைத்தல், தப்பியோடுதல், பகுத்தாய்தல் போன்ற விஷயங்களுக்கு அங்கு இடமில்லை. இருப்பது நிஜமாக இருக்கும் 'உள்ளது' மட்டுமே, கண்டுபிடிக்கப்பட்ட கட்டுக்கதைகளாய் இருக்கும் எதிர்மறைகள் அல்ல என்ற உண்மை புரிந்தபின், என்ன நிகழ்கிறது? அங்குக் காண்பவர் - காட்சிப்பொருள் என்ற பிரிவு இல்லை. இந்தப் பரிசோதனையை நீங்கள் எப்பொழுதாவது செய்து பார்த்திருக்கிறீர்களா? இல்லை, இப்போது நாம் பேசிய விஷயம், உங்களுக்கு வெறும் கோட்பாடாகத் தோன்றுகின்றதா?

தீர்மானங்கள், அரசியல் கருத்துக்கள், மதக் கருத்துக்கள் போன்றவை உள்ளன, இல்லையா? பேச்சாளர் சொல்வதை மட்டும் வெறுமனே கேட்டுக்கொண்டிராமல், தயவுசெய்து, இதுபற்றி சிந்தியுங்கள். ஏன் கருத்துக்களைக் கொண்டிருக்கிறீர்கள்? - அது ஒரு சுமை. 'நான் ஒரு அந்தணன். நீங்கள் அந்தணன் இல்லை', 'நான் ஒரு சீக்கியன். நீங்கள் சீக்கியரில்லை', 'நான் ஒரு முஸ்லீம். நீங்கள் இல்லை' - இம்மாதிரியான எண்ணம் ஏன் உங்களுக்கு வருகிறது? எண்ணக் குவியல்களால் உங்கள் மனம் நிரம்பி வழிவதை இந்நிலை எடுத்துக்காட்டுகிறது. இந்நிலையால், உங்கள் மனம் மற்றும் மூளை, அற்பமானதாகவும், குறுகியதாகவும் தாழ்ச்சியுறுகிறது; அதற்கு, ஆய்வு செய்வதற்கோ, கண்டுணர்வதற்கோ தேவைப்படும் சுதந்திரம் இருப்பதில்லை. இப்பிரச்சினையைப் பற்றி இப்போது சிந்திக்கலாம்.

மனிதமனம், மனிதமூளை ஏன் சதா ஏதோவொன்றில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறது? அமைதியுடனும், சுதந்திரத்துடனும் ஒருபோதும் அவை இருப்பதில்லையே, ஏன்? அமைதியாக இருக்கப் பயிற்சி மேற்கொள்கிறீர்கள் - அது உங்கள் தியானம். உங்கள் பயிற்சி எப்படி இருக்கிறது தெரியுமா? - அபஸ்வரத்தை விடாமல் பயிற்சி செய்யும் ப்யோனோ வாசிப்பவரைப் போல இருக்கிறது. உலகம், பெரும் நெருக்கடியில் இருப்பதால், நம் பிரக்ஞையும் நெருக்கடியில் தவிப்பதால், இப்பிரச்சினைகள் அனைத்தைப் பற்றியும் தீர விசாரிக்க வேண்டியிருக்கிறது.

உறவுகள் குறித்தும் நாம் கலந்துரையாட வேண்டும். எவ்வளவுதான் நெருக்கமானதாக இருப்பினும், நமக்கிடையே இருக்கும் உறவில், ஏன் சச்சரவுகள்

உண்டாகின்றன? இரண்டு பேர் ஏன் நிம்மதியாக அமைதியுடன் வாழக்கூடாது? எப்போதாவது இக்கேள்விகளை நீங்கள் வினவியதுண்டா? என் வாழ்க்கைத்துணையுடன், என் காதலருடன் நிம்மதியாக வாழ எனக்குத் தெரியாதென்றால், இவ்வுலகில் அமைதியாக வாழ என்னால் முடியாது. நான் அமைதியைப் பற்றி உலகெங்கும் பிரசங்கம் செய்யலாம். அமைதியைப் பற்றி நான் பக்கம்பக்கமாய் எழுதித் தள்ளலாம். ஆனால், என் வாழ்க்கைத் துணையுடன் நான் சண்டை போடுகிறேன். எங்கள் உறவில் சச்சரவு இருக்கிறது. ஏன்? தயவுசெய்து, எண்ணிப் பாருங்கள்.

இதைப் பற்றி நான் உங்களுக்குச் சொல்ல வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்களா? இல்லை, என்னுடன் சேர்ந்து ஆய்வு செய்யப் போகிறீர்களா? - இந்த இரண்டிற்கும் உள்ள வித்தியாசத்தைப் பாருங்கள். உண்மையில், உங்களுக்கு நான் சொல்லவேண்டும் என்று காத்திருக்கிறீர்கள். ஆனால், என்னுடன் சேர்ந்து நீங்களும் ஆய்வு செய்தால், அது ஒருமித்த பயணமாயிருக்கும், பகிர்ந்தளிப்பாய் அமையும். நாம் ஒருமித்து சிந்திக்கிறோம், ஆனால், அதில் இணங்கிப்போவது என்ற நிபந்தனை இல்லை. கையோடு கைகோர்த்து, அடிமேல் அடிவைத்து சேர்ந்தே நாம் இந்தப் பாதையில் செல்கிறோம். கொள்ளை அழகும், அன்பும், கனிவும் நிறைந்தது இந்தப் பாதை.

உறவுகளுக்கிடையே ஏன் இந்த அபிப்பிராய பேதம்? நம் உறவில் ஏன் இந்தப் பிரிவினை? நீங்கள், உங்கள் வாழ்க்கைத்துணையுடன் படுக்கையில் உறவாடலாம்; ஆனால், ஒருபோதும் சந்தித்துக்கொள்ளாத இணை நிலையான நேர்க்கோடுகள் போன்றே, உங்கள் உறவு

இருக்கிறது. மனித உறவுகளில் ஏன் இந்த வெறித்தனம், விகாரம், போராட்டம் ஆக்கிரமித்திருக்கிறது என்பதை நாம் சேர்ந்தே கண்டுபிடிக்கப் பார்ப்போம்.

நான் மணமானவன் என்று வைத்துக்கொள்வோம். எனக்கு என் விருப்பங்கள், என் குறிக்கோள், என் பிரச்சினைகள் என்று ஏராளமாய் இருக்கிறது. என் அலுவலகத்தில், நான் முன்னேற போட்டியிடுகிறேன், தன்முனைப்புடன் செயல்படுகிறேன். ஆக, நான் என் திசையில் சென்று கொண்டிருக்கிறேன். என் மனைவியும் அவள் வழியில், முன்னேறும் துடிப்புடனோ, இல்லை, சாதுவாகவோ, சென்று கொண்டிருக்கிறாள். நான் அவள் மீது அதிகாரம் செலுத்துகிறேன் - அவள் அதை எதிர்க்கிறாள். இந்த முழு விளையாட்டும் நீங்கள் அறிந்ததுதானே! இருவரும் சேர்ந்திருக்க வேண்டி யிருப்பதால், 'ஏன் இந்தப் போராட்டம்?' என்று நாம் கேட்கிறோம்.

நாங்கள் உடலுறவு கொள்கிறோம், எங்களுக்கு குழந்தைகள் இருக்கிறார்கள் - இருப்பினும், நாங்கள் தனிமைப்பட்டு இருக்கிறோம். இதுதானே உண்மை? நான் அவள் மீது அதிகாரம் செலுத்துகிறேன், இல்லை, அவள் அதிகாரம் செலுத்துகிறாள். நான் அவளைத் திட்டுகிறேன், இல்லை, அவள் என்னைத் திட்டுகிறாள். நான் அவளை அடிக்கவில்லை, ஆனால், அவள் மீது கோபமாய் இருக்கிறேன். அவளை அடிக்கவேண்டும் என்ற வெறிதான், ஆனால், என்னை கொஞ்சம் அடக்கிக் கொள்கிறேன். இதைக் கேட்டு, நீங்கள் சிரிக்கிறீர்கள், ஆனால், இவையெல்லாம் உண்மை நடப்புகள். நான் தனிப்பட்டவன், அவளும் அப்படியே. பழக்கங்களிலும், விருப்பங்களிலும் எனக்கென்றும் அவளுக்கென்றும்

தனிப்பட்ட வழிகள் உண்டு. நிலைமை இப்படி இருக்க, நாங்கள் எவ்வாறு சேர்ந்து வாழ்வது? - இதில் தொக்கி நிற்கும் உண்மை, உங்களுக்கிடையே நேசம் இல்லை என்பதே.

பிறரிடம் அன்பு காட்டுவது என்பதின் பொருள் உங்களுக்குத் தெரியுமா? நீங்கள் எவர் மீதாவது அன்பு காட்டியிருக்கிறீர்களா? அன்பு என்பது சார்ந்திருத்தலா? அன்பு என்பது விருப்பமா? அன்பு என்பது களிப்பா? என் மனைவியிடம் எனக்கு அன்பு இல்லை. அவளுக்கும் என் மீது அன்பு இல்லை. நாங்கள் தனிப்பட்டு இருப்பவர்கள். படுக்கையில் இணைந்தாலும், எங்கள் குறிப்பிட்ட வழியில் நாங்கள் தனித்தனியே சென்று கொண்டிருக்கிறோம். அன்பு இந்த நாட்டில் இருக்கிறதா? ஐரோப்பாவில் அன்பு இருக்கிறதா என்று கேட்காதீர்கள். ஐரோப்பாவில் பேசும்போது, இக்கேள்வியை அவர்களையும் நான் கேட்பேன். இந்த நாட்டில் அன்பு உள்ளதா? நீங்கள் யாரையாவது நேசித்ததுண்டா? ஒவ்வொருவரும் 'இதுவாக வேண்டும்', 'அதுவாக வேண்டும்' என்று பரபரத்துக் கொண்டிருக்கையில், பயந்துபோய் இருக்கையில், அங்கு அன்பு நிலவுமா? நான் யோகியாகப் போகிறேன், ஆனால், என் மனைவி யோகி ஆகப்போவதில்லை. இல்லை, அவள் ஆகப்போகிறாள் - நான் ஆகப்போவதில்லை. ஒவ்வொருவரும் தன்முனைப்புடன் செயல்பட்டுக் கொண்டிருக்கும்போது, அன்பு எங்கே வரும்? எவ்வாறு இப்பிரச்சினைக்குத் தீர்வு காண்பது? என் கேள்வி உங்களுக்குப் புரிகிறதா?

இங்கு என் பேச்சைக் கேட்டுவிட்டு, வீட்டிற்குப் போய் அதை மறந்துவிடுவீர்களா? அப்படியில்லாமல், உணர்வுரீதியாகவோ, உடல்ரீதியாகவோ வேறு எந்த

வழியிலோ, எந்தவொரு பயனையும் எதிர்பார்க்காமல், பிறரிடம் அன்பு காட்ட முடியுமா? என் மனைவியிடம் உளரீதியாக எதையும் வேண்டாமலிருக்க என்னால் முடியுமா? அவள் எனக்குச் சமைத்துப் போடலாம், நான் அவளுக்கு சம்பாதித்துக் கொடுக்கலாம் - அதைப் பற்றி சொல்லவில்லை. உள்முகமாக எதையும் அவளிடம் வேண்டாமலிருக்க என்னால் முடியுமா? பற்றுதல் இருக்கும் இடத்தில், அன்பு துளிர்க்க முடியாது. நீங்கள் உங்கள் குருவிடம் பற்று வைத்தால், அவரிடம் உங்களுக்கு அன்பு இல்லை என்று பொருள்.

அன்பு இல்லாதபட்சத்தில், சரியான செயல் இருக்காது. அன்பு இருக்கும்பட்சத்தில், நீங்கள் எது செய்தாலும் அது சரியான செயலே. நீங்கள் செயல்கள் பற்றி சொற்பொழிவாற்றலாம், சமூக சேவை செய்யலாம். ஆனால், அன்பு, உங்கள் இதயத்தில், கண்களில், இரத்தத்தில், உங்கள் முகத்தில் தோய்ந்திருக்கும்போது, நீங்கள் முற்றிலும் வேறுபட்ட மனிதராய் விளங்கு கிறீர்கள். அந்நிலையில், உங்கள் செயல் அனைத்திலும் அழகும், நேர்த்தியும் இருக்கும். மேலும், அவை சரியானவையாகவும் இருக்கும்.

இவையெல்லாம் கேட்பதற்கு மிகவும் இனிமை யானவை. ஆனால், அத்தன்மையை நீங்கள் பெற்றிருக்க முடியுமா? அன்பு கொண்ட மனதை வளர்த்துக்கொள்ள முடியாது, பயிற்சி செய்து பெற்றுவிட முடியாது, உங்கள் குருவிடமிருந்தோ அல்லது பிறரிடமிருந்தோ வாங்கிவர முடியாது. ஆனால், அன்பு இல்லாவிட்டாலோ, நீங்கள் உயிரற்ற உடலுக்குச் சமம். எனவே, நீங்கள் செய்யக்கூடியது என்ன? தயவுசெய்து இந்தக் கேள்வியை உங்களையே நீங்கள் கேட்டுக்கொள்ளுங்கள்.

அன்பு எனும் ஒளிச்சுடர் உங்களிடம் ஒளிராதது ஏன் என்பதைக் கண்டுபிடியுங்கள். நீங்கள் ஏன் இப்படி அன்பற்ற பரமஏழையாகிப் போனீர்கள்? உங்கள் வீட்டை ஒழுங்காக வைக்கவில்லையென்றால், அதாவது உங்களை ஒழுங்காக்கிக் கொள்ளவில்லையென்றால், இந்த உலகத்தில் ஒழுங்கு இருக்காது. வாழ்நாள் முழுவதும் நீங்கள் தியானம் செய்யலாம், ஆனால், அன்பு இல்லையென்றால், உங்கள் தியானத்திற்கு பொருளேது மில்லை. மிகுந்த பணிவன்புடன் உங்களைக் கேட்கிறேன்: இவ்விளக்கங்களைக் கேட்டதற்குப்பின், இதற்கான உங்கள் பதில், எதிர்வினை என்ன?

நண்பர் : கடந்த ஐம்பது வருடங்களாக பரிபூரண மாற்றம் பற்றி நீங்கள் சொற்பொழிவாற்றி வருகிறீர்கள். உலகில் மாற்றம் ஏதும் ஏற்படவில்லையே. என் கேள்வி என்னவென்றால்...

கிருஷ்ணமூர்த்தி : 'பிறகு, நீங்கள் ஏன் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?' என்பதுதானே உங்கள் கேள்வி?

நண்பர் : மிகவும் சரியாகச் சொன்னீர்கள்.

கிருஷ்ணமூர்த்தி : இந்தக் கேள்வியில் ஆர்வம் கொண்டிருக்கிறீர்களா? என்ன, எல்லோரும் திடீரென்று மிகவும் சுறுசுறுப்புடன் துடிப்பாய் இருக்கிறீர்கள்! அந்த நண்பர் கேட்கிறார் : 'மனிதப் பிரக்ஞையில் ஏற்பட வேண்டிய அடிப்படை மாற்றத்தைக் குறித்து ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாகப் பேசிவருகிறீர்கள். ஆனால், ஒரு மாற்றமும் ஏற்படவில்லை. பிறகு, நீங்கள் ஏன் தொடர்ந்து பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?' என்று.

தன்னுடைய மகிழ்ச்சிக்காகவோ, மனநிறைவிற் காகவோ அல்லது தன்னை உற்சாகப்படுத்திக்கொள்வதற் காகவோ, பேச்சாளர் சொற்பொழிவாற்றவில்லை. பேசவில்லையென்றால், அவருக்கு மனச்சோர்வு வந்துவிடாது; எதையோ இழந்துவிட்டதுபோல் அவர் உணரப்போவதுமில்லை. சொற்பொழிவுகள் செய்யாமல் இருக்க ஓராண்டு காலம் முயற்சி செய்திருக்கிறார். நான் ஏன் பேசுகிறேன்? 'தாமரையே, நீ ஏன் மலர்கிறாய்?' என்று எப்போதாவது தாமரையை நீங்கள் கேட்டிருக் கிறீர்களா? ஒரு மலரை நோக்கி, 'ஏன் வளர்ந்தாய்? இத்தனை அழகும் நிறமும், மணமும், பெருமையும் உனக்கேன்?' என்று எப்பொழுதாவது கேட்டிருக்கிறீர் களா? காருண்யத்தின் காரணமாக இப்பேச்சாளர் பேசிக்கொண்டிருக்கக் கூடும். நிச்சயம் அவர் தன் சுய நிறைவிற்காகப் பேசவில்லை.

*புது தில்லி, 31.10.1982*

■■

# 3

# ஒழுங்கின்மையின் காரணிகள்

நாம் ஒருங்கிணைந்து மானுடப் பிரச்சினைகளைப் பற்றி துருவித்துருவி ஆராய்ந்து, கேள்விகள் கேட்டு, சந்தேகங்களை எழுப்பி ஆராயப்போகிறோம் என்பதைக் குறிப்பிட விழைகிறேன். இது ஒரு பிரசங்கம் அல்ல. வாழ்வியலின் முழு பரிமாணத்தையும் நாம் சேர்ந்தே விசாரணை செய்யப்போகிறோம். வாழ்க்கையில் தோன்றும் குறிப்பிட்ட ஒரு பிரச்சினையை மட்டும் எடுத்துக்கொள்ளாமல், மானுடப் பிரச்சினைகளைப் பற்றி ஆராயப்போகிறோம்.

ஒழுங்கீனத்தில் வாழ்க்கை நடத்துவது என்பது வாழ்தலின் ஓர் அங்கமாய் நமக்கு இருக்கிறது. இப்புவியில் நாற்பதாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகவும் மனிதன் வாழ்ந்து வந்தபோதிலும், முழுமையான ஒழுங்கில் எப்படி வாழ்வது என்பதை இன்னும் அறியாதவனாகவே அவன் இருக்கிறான். அண்டவெளி, முழுமையான, நிறைவான ஒழுங்கில் இயங்கிக் கொண்டிருக்கிறது. மற்றொன்றிற்கு இணையான ஒழுங்கு என்பதாக இல்லாமல் முழுமையான ஒழுங்காக, எங்கு வாழ்ந்தாலும், எந்த சூழ்நிலையில் வாழ்ந்தாலும் இருக்கக்கூடிய நிறைவான ஒழுங்கை மனிதன் இன்னமும்

பெறவில்லை. சமூகத்திலும், அரசியலிலும் மற்றும் ஒருவரின் உள்முகத்திலும் ஒழுங்கு இருக்க வேண்டும்.

'பேச்சாளர் எந்த வகையிலும் முக்கியமல்ல' என்று நான் வலியுறுத்தி வருவதை தயவுசெய்து கருத்தில் கொள்ளவும். பேச்சாளரின் ஆளுமைக்கு எந்தவொரு முக்கியத்துவமும் இல்லை. எது முக்கியம் என்றால், ஒழுங்கீனத்திற்கான காரணங்கள் எவை என்பதை நாம் வெளிக்கொணர்வதே ஆகும். பேச்சாளர் அளிக்கும் விளக்கங்களைக் கேட்பதோடு நின்றுவிடாதீர்கள். நீங்களும் உள்முகமாகச் சிந்தித்துப் பார்த்துணருங்கள்.

வாழ்க்கையை நோக்கும் நம் பார்வை, சுயநலத்தோடோ, தன்முனைப்போடோ இருக்கக்கூடாது. இந்த உலகை எப்படிச் சீரழித்துவிட்டோம் என்பதையும், மனிதன் ஏன் அகத்திலும், புறத்திலும் இடைவிடாமல் ஒழுங்கீனத்தில் வாழ்கிறான் என்பதையும் நாம் பார்க்க வேண்டும். ஒழுங்கீனத்தில் வாழ விருப்பம் என்றால் அதைப்பற்றி சொல்வதற்கு ஒன்றுமில்லை. உள்முகத்தில் ஒழுங்குமுறையில் வாழக்கூடுமா என்பதை முதலில் பார்க்க வேண்டும்; பிறகு புறத்தில் ஒழுங்கைக் கொண்டு வரவேண்டும். மாறாக, முதலில் புறத்தில் ஒழுங்கு, பிறகு அகத்தில் என்பதாக இருக்க முடியாது. அகத்தில், நமக்குள் ஆழத்தில், முற்றிலுமான ஒழுங்குடன் வாழ்வதென்பது சாத்தியம்தானா?'

அழகுதான் முழுமையான ஒழுங்கு. நம்மில் பலரிடம் அந்த அழகுணர்ச்சியே இல்லை. நாம் பெயர்பெற்ற கலைஞராக இருக்கலாம், புகழ்பெற்ற ஓவியராக இருக்கலாம், மற்றும் வேறு பல துறைகளில் நிபுணர்களாக இருக்கலாம். ஆனால், துரதிர்ஷ்டவசமாக, நம் அன்றாட

வாழ்க்கையில், கலக்கங்களுடனும், பதற்றங்களுடனும், துன்பங்களுடனும் பெரும் ஒழுங்கீனத்தில் வாழ்கிறோம் - இது ஒரு உண்மை. உயர்ந்த விஞ்ஞானிக்குக்கூட, அவர் அவருடைய துறையில் சிறந்த நிபுணராய் இருந்தாலும், நம்மைப் போலவே, அவருக்கும் அவருடைய சொந்தப் பிரச்சினைகள், வேதனைகள், கலக்கங்கள் இருக்கத்தான் செய்கிறது. ஆகவே நாம் கேட்கிறோம், 'உள்முகத்தில் பரிபூரண ஒழுங்குடன் வாழ்வது சாத்தியம்தானா?' என்று.

ஒழுங்கைக் கொண்டுவர கட்டுத்திட்டங்களையும், வரைமுறைகளையும் மனத்தின் மீது திணிக்காதீர்கள். ஒழுங்கீனத்தின் இயல்பையும் அது தோன்றுவதற்கான காரணங்களையும் சிந்தித்துப்பார்த்து, காரணங்களை அகற்றிவிடுங்கள், அவற்றிலிருந்து விலகிப்போய்விடுங்கள். பிறகு, பிரபஞ்சத்தின் ஒழுங்குபோல், நம் வாழ்விலும் ஒழுங்கு நிலவும்.

ஒழுங்கு என்பது ஒரு திட்ட விவரணை அல்ல. குறிப்பிட்டவொரு வாழ்க்கைமுறை முன்மாதிரியையோ அல்லது குறிப்பிட்ட வரைமுறையையோ, கண்மூடித் தனமாகவோ, அல்லது வெளிப்படையாகவோ பின்பற்றுவதால் பெறுவதாகவும், ஒழுங்கு இல்லை. நம் அகத்தின் ஒழுங்கீனத்திற்கான உண்மைக் காரணத்தைக் கண்டறிய, உள்முக நோக்குதல் செய்து, நாமே கண்டறிய வேண்டும். பிறர் கூறக் கேட்டோ, பிறரால் வழிநடத்தப்பட்டோ, ஒழுங்கீனத்திற்கான காரணத்தை அறிய நாம் முற்படக் கூடாது.

இங்குப் பேச்சாளருக்கும், அவையினருக்கும் இடையே சிந்தனைப் பரிமாற்றம் நடந்துகொண்டிருக்கிறது. இங்கு ஒவ்வொருவருடனும் தனித்தனியே வார்த்தைகளால்

பரிமாறிக்கொள்வது சாத்தியப்படாது. ஆனால், நாம் ஒன்றாகச் சிந்திக்க முடியும். என் வழியில் நானும், உங்கள் வழியில் நீங்களும் சிந்திப்பதாக இல்லாமல், தெளிவுடனும், சுய உணர்ச்சிகளின் தலையீடற்றும், நன்முனைப்பில்லாமலும் சிந்திப்பதற்கான ஆற்றல் நமக்கு வேண்டும். அவ்வாறு நாம் ஒருங்கிணைந்து சிந்திக்கும்போது, நாம், மகிழ்ச்சியோடு, பரிவும் அழகும் கொண்ட உளப்பாங்குடன் நமக்குள் பகிர்ந்துகொள்ள முடியும். ஆக, புறத்தே இவ்வுலகில் நிலவும் குழப்பங்களுக்கான காரணங்களை மட்டுமல்லாமல், அகத்தே நம்முள் நிலவும் மனோரீதியான குழப்பங்களுக்கும், ஒழுங்கீனத்திற்கும் என்ன காரணம் என்பதை நாம் ஆய்வு செய்யலாம். உள்முகக் குழப்பங்களே, வெளியுலகக் குழப்பங்களைத் தோற்று விக்கிறது. இதற்கான காரணங்கள் யாவை?

ஆசை, ஒரு காரணியாய் இருக்கலாம் என்று கருதுகிறீர்களா? விருப்பம், பயம், களிப்பு மற்றும் எண்ணம் ஆகியவைப் பற்றி ஆராய்ந்து பார்க்கலாம். மெதுமெதுவாய், அடிமேல் அடி வைத்து இவ்வாராய்ச்சியில் செல்லலாம். இதற்கு நீண்ட நேரம் தேவைப்படலாம். மிகவும் நுணுக்கமாகவும், அதே நேரம் மிகுந்த தயக்கத்துடனும் நாம் அவற்றைப் பற்றி எண்ணிப் பார்க்கலாம்.

விருப்பம் என்பது ஒழுங்கீனத்திற்கான காரணிகளில் ஒன்றா? இதன் தொடர்பாக, 'விருப்பம்' என்றால் என்ன என்ற கேள்வி எழுகிறது. நம்மில் பலருக்கு, விருப்பம் என்பது மிகவும் பலமிக்க உணர்வு. விருப்பம் நம்மை ஊக்குவிக்கிறது. விருப்பவுணர்வு, சில நேரங்களில் மகிழ்ச்சியையும், சில நேரங்களில் துக்கத்தையும்

தோற்றுவிக்கிறது. விருப்பம், அதன் தேடுதலில் பலவிதங்களில் மாறுபட்டிருக்கிறது. விரும்பப்படும் பொருளுக்கேற்ப, விருப்பம், மாறுதல் அடைகிறது.

மதங்கள் ஏன் ஆசைப்படுவதை எதிர்க்கின்றன? மதப்பற்றுள்ளவர்கள் என்று கூறிக்கொள்பவர்கள் ஏன் ஆசையை அடக்குகிறார்கள்? உலகமெங்கிலும் உள்ள துறவிகள், சந்நியாசிகள், உள்ளுக்குள் ஆசைத்தீயில் வெந்துகொண்டிருந்தாலும், ஆசையை மறுதலித்து, அடக்கி வைக்கிறார்களே, ஏன்? அவர்களுக்குள் ஆசைத்தீ கொழுந்துவிட்டு எரிகிறது. ஆனால் அவர்கள் ஆசையை அடக்கி, ஒன்று, அதை மறுதலிக்கிறார்கள், இல்லையென்றால், ஒரு சின்னத்துடனோ, ஒரு உருவத்துடனோ அந்த ஆசையை அடையாளப்படுத்தி, அவற்றிடமே அதை அர்ப்பணித்தும் விடுகிறார்கள். அவர்கள் எப்படிச் செயல்பட்டாலும், இருப்பது என்னவோ விருப்பம்தான்.

நமக்குள்ள ஆசைகளைப் பற்றிய விழிப்புணர்வு நமக்கு வரும்போது, ஒன்று, அவற்றை அடக்கிக்கொள்ளப் பார்க்கிறோம், இல்லையென்றால், அதிலேயே திளைத்துப் போகிறோம், அதுவும் இல்லையென்றால், முரண்பாட்டில் சிக்கிக்கொள்கிறோம். ஏதோ ஒன்று வேண்டும் என்ற ஆசையும் பிறிதொன்று வேண்டாம் என்ற ஆசையும் நமக்குள் ஓடிக்கொண்டே இருக்கிறது - இந்த யுத்தம் நம் அனைவருக்குள்ளும் ஆசையின் வேகம் இருக்கும்வரை தொடர்ந்துகொண்டே இருக்கிறது.

எனவே, விருப்பத்தின் இயல்பைப்பற்றி நாம் ஒருங்கிணைந்து ஆய்வு செய்யலாம். ஆசையை அடக்கிக்கொள்ளுங்கள் என்றோ, கட்டுப்படுத்துங்கள் என்றோ, அர்ப்பணித்துவிடுங்கள் என்றோ நாம் பரிந்துரைக்கவில்லை. உலகம் பூராவும் ஒவ்வொரு சமயப்

பற்றுள்ளவர்களும் ஆசையை அடக்கிவைக்க உபதேசித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், இங்கு, ஆசை எவ்வாறு எழுகிறது மற்றும் அதன் இயல்பு என்ன என்பதை மிகவும் நுணுக்கமாக நீங்கள் ஆராய்ந்து, அதைப்பற்றி புரிந்து கொள்கிறீர்கள். சுயமாகக் கண்டுணர்ந்து நீங்கள் அதைப்பற்றிய விழிப்புணர்வுடன் கூடிய புரிதலைப் பெற்றதால், நுண்ணறிவு பெறுகிறீர்கள். அதன்பிறகு, நுண்ணறிவே செயலாற்ற துவங்குகிறது - அது ஆசையின் செயல்பாடு அல்ல.

விருப்பத்தின் அசாதாரணமான சக்தியைப் பற்றிய விழிப்புணர்வு நமக்கு இருக்கிறதா? அதிகார பலம் பெறுவதற்கான விருப்பம், நிச்சயத்தன்மைக்கான விருப்பம், கடவுளைக் காண விருப்பம், குறிப்பிட்ட சித்தாந்தத்தைக் கடைப்பிடிக்க விருப்பம் என்பதுபோல் விருப்பங்கள் பலவிதம். விருப்பத்தின் அம்சங்களும் பலவாக உள்ளன. கைதேர்ந்த நெசவாளரின் நுணுக்கமாக வேலைப்பாடுடன் கூடிய ஆடையில் தெரியும் கைவண்ணம்போல், விருப்பம், பல்வகை அம்சங்களால் பின்னப்பட்ட ஒன்றாய் இருக்கிறது. எனவே, அதை மிகமிக எளிமையாகப் பார்க்க ஆரம்பியுங்கள். பிறகு, அதன் சிக்கலான பன்முகத் தன்மை வெளிப்படத் துவங்கும். சிக்கலான பாகத்திலிருந்து பார்க்கத் துவங்கினால், உங்களால் முன்னேறிச் செல்ல முடியாது. ஆனால், எளிமையாகத் துவங்கினால், உங்களால் வெகுதூரம் செல்ல முடியும் என்பதனால், விருப்பத்தின் ஆணிவேரையும் அதன் தோற்றுவாயையும் எளிமையாகப் பார்க்கத் துவங்குவோம்.

ஐம்புலன்களின் செயல்பாட்டினை நீங்கள் எப்போதாவது எண்ணிப் பார்த்ததுண்டா? குறிப்பிட்ட

ஒரு புலனைப் பற்றிய விழிப்புணர்வு என்றில்லாமல், ருசித்தல், கேட்டல், தொடுவுணர்வு என்பதாக செயல்படும் புலன்கள் அனைத்தையும் பற்றிய முழுமையான விழிப்புணர்வை பெறக்கூடுமா? புலன்களின் செயல்பாடு நிறைவானதாய், முழுத் திறனுடன் கூடியதாய் உள்ளதா? உங்கள் புலன்கள் அனைத்தும் துடிப்புடன் செயல்பட்டுக் கொண்டிருக்கும்போது, ஒரு மரத்தை நீங்கள் என்றாவது பார்த்ததுண்டா? ஒரு நதியை, மலையை, குன்றினை, பள்ளத்தாக்கினை, புலன்கள் அனைத்தும் துடிப்புடன் இயங்க, நீங்கள் பார்த்ததுண்டா? அவ்வாறு பார்க்கும் போது, குறிப்பிட்ட ஒரு மையத்திலிருந்து நீங்கள் பார்க்கவில்லை. முழுமையான விழிப்புடன் கூடிய நோக்குதல் தரும் உணர்வு, பரிபூரணமான ஒன்றாய் இருக்கும். கட்டுத்திட்டங்களால் நெறிப்படுத்தப்பட்டோ, வடிவமைக்கப்பட்டோ, அடக்கிவைக்கப்பட்டோ அப்புலனுணர்வு இருப்பதில்லை.

நாம் இப்போது வாழ்ந்து கொண்டிருக்கும் நிலையில், நம் புலன்கள் அனைத்துமே வரையறைக் குட்பட்டுள்ளன, அவற்றின் செயல்பாடுகள் முழுமை யற்றதாய் உள்ளது. ஆடைகளை தேர்ந்தெடுப்பதில் நல்ல ரசனையுடன் செயல்படுவோம் - ஆனால், வீட்டு உபயோகப் பொருட்கள் வாங்குவதில் கொஞ்சம்கூட கலைநயம் இல்லாமல் வாங்கிக் குவித்துவிடுவோம் - இவையெல்லாம் நீங்கள் அறிந்ததுதானே! இன்றைய நிலையில், நம் புலன்களின் செயல்பாடு வரையறைக்குள் குறுகிப்போயிருக்கிறது. 'உங்கள் புலனுணர்வுகளை மலர அனுமதியுங்கள். இத்தகைய உணர்வு மலர்ச்சியுடன், இப்புவியின் அழகைக் கண்டுணருங்கள்' என்று

எவரொருவரும், எந்த மதமும், எந்த தத்துவஞானியும் சொல்வதில்லை.

ஆசை என்றால் என்ன? அது தோன்றுவதற்கான காரணம் என்ன? ஆசை எப்படித் தோன்றுகிறது? ஆசை, தானே தோன்றுவதில்லை. தொடுவுணர்ச்சி, தொடர்பு, பார்த்தல் போன்ற காரணங்களால் தோன்றுகிறது. ஒரு ஆணையோ, பெண்ணையோ பார்த்ததும், துணிக்கடையின் அலங்கார ஜன்னலில் தொங்கவிடப் பட்டிருக்கும் ஆடையைப் பார்த்ததும், அழகான பூங்காவைப் பார்த்ததும், ஓங்கி உயர்ந்திருக்கும் மலையைப் பார்த்ததும், நம் உணர்ச்சிகள் கிளர்ந் தெழுகின்றன. பார்க்கும் தருணத்திலேயே தோன்றும் இந்த உடனடி ஆர்வம், இயல்பானது. அத்தகைய ஆர்வத்தையும், உணர்வையும் கொண்டிருப்பது மிகவும் ஆரோக்கியமானதாகும். பிறகு, என்ன நடக்கிறது?

நான் ஒரு அழகான பெண் / ஆண், ஒரு அழகான வீடு, ஒரு அழகான ஆடை ஆகியவற்றைப் பார்க்கிறேன். மிகவும் அழகாக, நேர்த்தியாக வடிவமைக்கப்பட்டிருக்கும் சட்டையைப் பார்க்கிறேன். அதைத் தொட்டுப் பார்க்கிறேன். முதலில், பார்க்கிறேன், பிறகு தொடு கிறேன், அந்தத் தொட்டுணர்வு, எனக்குள் கிளர்ச்சியை ஏற்படுத்துகிறது. பிறகு என்ன நேர்கிறது? சட்டையின் நிறம் மற்றும் தரத்தைப் பற்றிய உணர்ச்சிக்கிளர்ச்சி ஏற்படுகிறது. இதுவரைக்கும் ஆசை வரவில்லை; ஆர்வம் மட்டும்தான் மேலிட்டிருக்கிறது. பிறகு என்ன நடக்கிறது?

என்ன நடக்கிறது என்பதை நான் உங்களுக்குச் சொல்லவேண்டும் என்று இப்போது காத்திருக்கிறீர்கள். தயவுசெய்து மிகுந்த கவனத்துடன் அவ்விஷயத்தைப் பாருங்கள்; பதிலளிக்க வேண்டுமென்பதில்லை.

தயவுசெய்து, ஆர்வமேலீட்டிற்குப் பின் என்ன நடக்கிறது என்பதை நீங்களே கண்டுணருங்கள். ஏனென்றால், நீங்களே கண்டுணர்ந்தால்தான், அது உங்கள் கண்டுபிடிப்பாயிருக்கும்; அவ்வாறிருக்காவிட்டால், வேறு எவரோ சொன்னதை நீங்கள் வெறுமனே திரும்பச் சொல்வதாய் இருக்கும். மற்றவர் சொன்னதை, திரும்பச் சொல்லும் செயல்தான், இந்த நாட்டை அழிக்கிறது. பகவத் கீதையிலிருந்தோ, உபநிடதங்களிலிருந்தோ மற்றும் ஏதோவொரு உபயோகமற்ற புத்தகத்திலிருந்தோ, நீங்கள் மேற்கோள் காட்டுகிறீர்கள். நீங்கள் ஒருபோதும் நீங்களாகவே கண்டுபிடிப்பதில்லை. நீங்கள் அறிந்தவை அனைத்தும் யாரோ சொன்னவை - இதன் காரணமாக, நீங்கள் இரண்டாம் தரத்தவராய் இருக்கிறீர்கள். நீங்களே சுயமாகக் கண்டுணர்ந்திருந்தால், அசாதாரணமான சுதந்திரம் உங்களுக்குக் கிட்டியிருக்கும்.

ஒரு நேர்த்தியான உடை அல்லது அழகான கார் ஒன்றைப் பார்க்கும்போது, நமக்குள் என்ன ஏற்படுகிறது? அந்த உடையைத் தொட்டுப் பார்க்கிறீர்கள். அந்த உடையை நீங்கள் அணிந்திருப்பதாக, அந்தக் காரில் நீங்கள் பயணிப்பதாக, ஒரு உருவகத்தை எண்ணம் உண்டாக்குகிறது. எண்ணம் உருவாக்கும் அக்கணமே, மோகம் பிறந்துவிடுகிறது. அழகான ஒரு வயலின் இசைக்கருவியைப் பார்க்கிறேன். அதிலிருந்து பிறக்கும் நாதம் மிகவும் பிரமாதம். எனக்கு அந்த வயலின் வேண்டும். வயலினை தொட்டுப் பார்க்கிறேன், அதன் வடிவமைப்பைப் பற்றி அறிந்துகொள்கிறேன், அதை அடைந்துவிட வேண்டும் என்று விழைகிறேன். அதாவது, ஆர்வக் கிளர்ச்சியின் வட்டத்திற்குள் எண்ணம் நுழைந்து, உருவகிக்கத் தொடங்கிய அந்தக் கணத்திலேயே, ஆசை பிறந்துவிடுகிறது.

ஆர்வக்கிளர்ச்சி மேலிட்டாலும், எண்ணத்தை அங்கே நுழையவிடாமல் தடுக்க முடியுமா? உருவகங்களை உருவாக்கி ஆசையின்மீது அதிகாரம் செலுத்த வரும் எண்ணத்தை, அக்கணத்தில், அருகில் நெருங்கவிடாமல் தடுக்க முடியுமா? - இதுதான் பிரச்சினையாக உள்ளது. ஆசையை அடக்குவது உண்மையில் பிரச்சினையாக இல்லை. ஏன் எண்ணம், கற்பனையைத் தோற்றுவித்து, ஆசையை இறுகப் பிடித்துக்கொள்ள வைக்கிறது? உடையைப் பார்க்கிறோம், அதைத் தொடுகிறோம், அதன் மேல் ஆர்வம் ஏற்படுகிறது, ஆனால், எண்ணத்தை உள்ளே நுழைய விடுவதில்லை - அவ்வளவே, முடிந்தது! இவ்வாறு செயல்பட நீங்கள் எப்பொழுதாவது முயற்சித்ததுண்டா? - இல்லை, நீங்கள் முயற்சித்திருக்க மாட்டீர்கள்.

எண்ணம்கூட ஒரு உணர்வுதான். ஆர்வத்தின் வட்டத்திற்குள் எண்ணம் நுழைந்து, அதிகாரத்தை அதன் கையில் எடுத்துக்கொள்ளும்போது, மோகம் பிறக்கிறது. பார்த்தல், தொடர்புகொள்ளல் மற்றும் ஆர்வம் கொள்ளல் என்பதோடு மட்டும் இருக்க முடியுமா? இவ்விஷயத்தில் ஒழுங்கு, கட்டுப்பாடு என்பதற்கெல்லாம் இடமில்லை. ஏனென்றால், கட்டுப்பாட்டிற்கு காரணமே, எதையோ ஒன்றை அடைந்துவிட வேண்டும் என்ற அவாவின் தூண்டுதல்தான். ஆர்வத்தைத் தூண்டிய அந்த உடையை உடனே வாங்கிவிடாதீர்கள். வாங்காததால் ஏற்படும் உணர்வலைகளைப் பாருங்கள். ஆனால், ஏதோ ஒன்றை - ஒரு சட்டையை, ஒரு ஆணை, ஒரு பெண்ணை, ஒரு அந்தஸ்தைப் பெற்றுவிட வேண்டும், தனதாக்கிக் கொள்ளவேண்டும் என்ற ஆர்வம் மேலோங்கி இருப்பதால், உங்களுக்கு ஆர்வத்தின் செயல்பாட்டு

முறையை கவனிப்பதற்கான கால அவகாசமோ, மன அமைதியோ இருப்பதில்லை.

ஒழுங்கீனத்திற்கான காரணிகளில் ஒன்றாக ஆசை இருக்கிறது. ஆசையை அடக்கவும், கட்டுப்படுத்தவும், அல்லது ஆசைப்படும் பொருள்களுக்குப் பதிலாக வேறொன்றை வைக்கவும் நாம் பயிற்றுவிக்கப் பட்டுள்ளோம். ஆனால், ஆசையின் இயக்கத்தையோ, அது எப்படி மலர்கிறது என்பதைப் பற்றியோ நாம் என்றுமே நினைத்துப் பார்த்ததில்லை. இதுவும் நம் வாழ்க்கையின் ஒழுங்கீனத்திற்கான காரணங்களில் ஒன்று.

இப்போது இங்கு நாம் ஆசையை அடக்க முயற்சி எடுப்பதுபற்றி உரையாடவில்லை என்பதை தயவுசெய்து நினைவில்கொள்ளவும். சமூகத்தால் தவயோகியர் என்று கருதப்படுபவர்கள் அனைவரும், ஆசையை அடக்க முயற்சி செய்கிறார்கள், அல்லது, ஆசையில் மூழ்கிப் போகிறார்கள். ஆனால், நாம் அதைப் புரிந்துகொள்ளப் பார்க்கிறோம். மலர் எப்படித் தோன்றுகிறது, எப்படி மொட்டவிழ்கிறது என்பதைப் புரிந்துகொள்வதைப் போல, ஆசையைப் பற்றி புரிந்துகொள்ள முயல்கிறோம்.

பயம், ஒழுங்கீனத்திற்கான காரணங்களில் ஒன்றாக உள்ளதா? ஆம், பயம் ஒரு காரணமாக உள்ளது. தோல்வியைப் பற்றிய பயம், சாதிக்க முடியாமல் போய்விடுமோ என்ற பயம், இழப்பைப் பற்றிய பயம், கிட்டாமல் போகுமோ என்ற பயம் என்று உங்களுக்கு எல்லா வகையான பயங்களும் உள்ளன - உங்கள் குருவிடம் உங்களுக்கிருக்கும் பயத்தையும் சேர்த்தே சொல்கிறேன். உங்கள் குருவின் முன்னால் நீங்கள் எப்படி குனிந்து, வளைந்து, குழைந்து துவண்டு போகிறீர்கள்

என்பதைக் கவனித்ததுண்டா? குருவிடமிருந்து எதையோ எதிர்பார்க்கிறீர்கள். அதனால்தான் அவரை வழிபடுகிறீர்கள். அதன் காரணமாய் பயம் தோன்றுகிறது. ஆக, பலவிதப்பட்ட வகைகளில் பயம் உள்ளது.

குறிப்பிட்ட ஒரு வகை பயத்தைப் பற்றி நாம் இங்கு பேசுவதாக இல்லை. 'பயத்தின் ஆணிவேராக இருப்பது எது?' என்று வினா எழுப்புகிறோம். அதன் வேரை மட்டும் நாம் கண்டுபிடித்து எடுத்துவிட்டால், பயம் என்ற அந்த மரமே விழுந்துவிடும். ஆனால், இருட்டைப் பார்த்து பயம், வாழ்க்கைத்துணையைப் பார்த்து பயம் என்பதுபோல் குறிப்பிட்டவொரு சிறுபயத்தைப் பற்றி புரிந்துகொள்ள மட்டும் நாம் அக்கறை காட்டினால், பயத்தைப் பற்றி வேரோடு அறிந்துகொள்வதற்கு நம் மூளை ஈடுபடவில்லை என்றாகிறது.

பயத்தின் வேராக இருப்பது எது? பயம் எப்படித் தோன்றுகிறது? பயம் எனும் பிரச்சினை மிகவும் சிக்கலான ஒன்று. எந்தவொரு சிக்கலான பிரச்சினையையும் நாம் மிகவும் எளிதான முறையில் அணுக வேண்டும். 'பயத்தின் வேரைப் பற்றி நான் அறியேன்' என்ற மனப்பாங்குடன் ஆய்வைத் துவங்குவதே எளிதான முறையாகும். உங்களுக்குத் தெரியாது, அதனால் அதைக் கண்டுபிடிக்கப் போகிறீர்கள். ஆனால், பயத்தின் வேரைப் பற்றி ஏற்கனவே ஒரு தீர்மானத்தைக் கொண்டிருந்தீர்கள் என்றால், உங்களால் ஒருபோதும் அதைக் கண்டுபிடிக்க முடியாது. எனவே, நீங்கள் மிகவும் எளிமையாக இந்த ஆய்வைத் துவங்க வேண்டும். பயம் எனும் மரத்தின் கிளைகளை மட்டும் பார்ப்பதாக இல்லாமல், பயத்தை முழுமையாக, அதன் வேர், அடிமரம் என்று முழுமையாக

பார்க்க வேண்டும். எனவே, நாம் வினவுகிறோம்: பயம் தோன்றக் காரணம் என்ன? பயத்திற்கான காரண காரியம் என்ன?

காலம், பயத்தின் ஒரு அங்கமாக இருக்கிறது என்று நினைக்கிறீர்களா? நான் இன்று உயிரோடு இருக்கிறேன், நாளை இறந்துபோகலாம் - இது காலம், அல்லவா? இங்கிருந்து உங்கள் வீட்டைச் சென்றடைவதற்கு நேரம் ஆகும். இரண்டுவிதமான காலவகைகள் உள்ளன. பெளதீக காலம் என்று சூரியன் உதிக்கும் நேரம், சூரியன் மறையும் நேரம், கடிகாரம் காட்டும் நேரம், ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்வதற்கு எடுத்துக்கொள்ளும் நேரம் ஆகியவை உள்ளது. மற்றோர் வகை காலம் உள்ளது - அது மனோரீதியான காலம்.

'நான் இன்று இப்பதவியில் இருக்கிறேன். நாளை அப்பதவியில் இருப்பேன்', 'நான் மூர்க்கத்தனத்துடன் இருக்கிறேன். கொஞ்சம் கால அவகாசம் கொடுங்கள். நான் மாறிவிடுவேன்' என்றெல்லாம் பேசும்போது, அங்கு மனோரீதியான காலம் பேசப்படுகிறது. 'நாளை என் நண்பனை சந்திப்பேன் என்று நம்புகிறேன்' எனும்போது, 'நம்புகிறேன்' என்பது காலத்தைக் குறிப்பதாக இருக்கிறது. ஒரு இலட்சியத்தை உருவாக்கிக்கொண்டு, அந்த இலட்சியத்தை எட்டிவிட முயற்சிக்கிறோம். இலட்சியம் எனும் ஏணியில் படிப்படியாக ஏறி, எண்ணியவாறு 'ஆதல்' என்ற முயற்சியில் ஈடுபடுகிறோம். 'இன்று நான் இந்நிலையில் இருக்கிறேன் - நாளை நான் வேறு நிலையில் இருப்பேன்', 'நான் இன்னும் அதிகாரத்தைப் பிடிக்கவில்லை, ஆனால், கொஞ்சம் அவகாசம் கொடுங்கள், அதிகாரத்தைப் பிடித்துவிடுவேன்' என்ற கூற்றுகள், மனோரீதியான காலத்தை அடிநாதமாகக்

கொண்டிருக்கின்றன. ஆக, பயத்தின் ஒரு அங்கமாக, காலம் உள்ளது: 'நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன், ஆனால், ஒரு வாரத்தில் இறந்துப்போனாலும் போவேன்' என்பதில் காலம், பயத்தின் அங்கமாய் உள்ளது.

இப்போது, 'காலம்' என்றால் என்ன என்பதைப் பார்க்கலாம். அளவீடுகளாய் இருக்கும் 'நான் நம்புகிறேன்', 'நான் செய்வேன்' போன்ற வாசகங்கள் குறிக்கும் 'காலம்' எது? உங்கள் 'நம்பிக்கை' குறிப்பிடுவது ஒரு கால அளவை. காலம் என்பது ஒரு இயக்கம், இல்லையா? உள்முகத்தில், பயத்தை முழுவதுமாக முடிவிற்குக் கொண்டு வருவதென்பது சாத்தியமே என்ற புரிதலைப் பெறுவதற்கான கட்டத்திற்கு இப்போது நாம் வந்துவிட்டோம். எப்பொழுதுமே, தேடலை, வெளியிலிருந்து துவங்காமல், உள்முகத்திலிருந்து துவங்குங்கள். எதையும் கண்டுணர, ஆழமான விசாரணை செய்ய வேண்டும்.

பயம், காலமாக இருக்கிறது, சரிதானே? பௌதீக ரீதியிலும், மனோரீதியிலும், ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு நகரும் இயக்கமாக காலம் உள்ளது. ஒரு மொழியைக் கற்றுக்கொள்ள, எனக்கு கால அவகாசம் வேண்டும். அம்மொழியைக் கற்றுக்கொள்ள ஒரு மாதமோ, இரண்டு மாதமோ, மூன்று மாதமோ கூட ஆகலாம். இங்கிருந்து இலண்டன் செல்ல நேரம் பிடிக்கும். கார் ஓட்ட கற்றுக்கொள்ள, எனக்கு நேரம் தேவை.

எப்படி மொழியைப் பயில காலம் தேவைப் பட்டதோ, அதைப்போலவே, நான் உயர்நிலை அடைய, காலம் தேவைப்படுகிறது என்று சொல்கிறேன். என்

மூர்க்கத்தனம் அடங்க, கொஞ்சகாலம் ஆகும் என்கிறேன். மொழியைக் கற்றுக்கொள்ள காலம் அவசியம் தேவை. ஆனால், நான் நல்லவனாக பரிணமிக்கவும், உலகில் அமைதியை கொண்டு வரவும், காலம் தேவை என்று ஏன் சொல்கிறேன்? ஏனென்றால், வெளிப்புற நடவடிக்கை களை அளவுகோலாகக் கொண்டு மனோரீதியான விஷயங்களையும் அளவிட்டுப் பார்ப்பதால் அவ்வாறு சொல்கிறேன். இவ்வித செயல்பாடு, அளவிடுதலின் இயக்கமாக உள்ளது. இங்கு எது இயங்குகிறது? எண்ணம்தான் இயக்கம்.

எண்ணம்தான் பௌதீகரீதியான காலம் என்பதோடு, 'காலம்' என்பதை மனோரீதியில் உருவாக்கி, அமைதியை கொண்டுவர காலம் தேவை என்றும் இன்னும் பலவாறாகவும் சொல்கிறது. அதாவது, தற்சமயம் உண்மையில் இருப்பதை, 'உள்ளது' என்பதாக இருப்பதை, நான் மாற்ற விரும்புகிறேன் - அவ்வாறு மாற்றம் பெறுவதற்கு, மொழியைப் பயில காலம் எடுத்துக்கொண்டது போலவே, இதற்கும் காலம் தேவை என்று எண்ணுகிறேன்.

ஆக, ஆசை, காலம் மற்றும் எண்ணம் ஆகியவை பயத்தைத் தோற்றுவிக்கின்றன. 'இரண்டு வருடங்களுக்கு முன்பு நான் ஓர் தவறிழைத்தேன்; அச்செயல், எனக்கு மனவேதனை அளித்தது. திரும்பவும் அத்தவற்றை செய்யமாட்டேன் என்று நம்புகிறேன்' என்று சொல்கையில், அங்கு விருப்பம், காலம் மற்றும் எண்ணம் இயங்குகிறது.

அடுத்து, எண்ணம் என்றால் என்ன என்று பார்ப்போம். உலகம் முழுமையும் எண்ண மண்டலத்

திற்குள்தான் இயங்கிக் கொண்டிருக்கிறது. பல்வகைப் பட்ட விஷயங்களின் அசாதாரண கூட்டுத் தொகுதியாய் இருக்கும் தொழில்நுட்ப உலகம், எண்ணத்தால் தோன்றியதுதான். ஜெட் விமானம், கணினி போன்ற திறன்மிக்க சாதனங்களை வடிவமைப்பதில் எண்ணத்தின் பங்கு மிகவும் குறிப்பிடத்தக்கது. கலைநயம்மிக்க மேன்மையான தேவாலயங்களை உருவாக்கிக் கொடுத்தது எண்ணமே. கோயில்களை, கோயில்களில் உள்ள பொருட்களை, சடங்குகளை உருவாக்கிக் கொடுத்தது எண்ணமே. எண்ணத்தால் கண்டுபிடிக்கப்பட்டவர்தான் குருமகான். 'நான் ஒரு சீக்கியன்' என்று நீங்கள் சொல்லும்போது, 'சீக்கியர்' என்ற தளையை உங்களுக்குள் உருவாக்கி, அதிலிருந்து செயல்பட வைத்ததும் எண்ணம்தான். ஆக, எண்ணம், நம் வாழ்க்கையில் மிக முக்கியப் பங்கினை வகிக்கிறது.

நம் உறவுமுறை விஷயத்திலும், எண்ணம் அதிகாரம் செலுத்துகிறது. எண்ணம்தான் நாடுகளுக்கிடையே போர் மூளக் காரணமாய் இருக்கிறது. ஆனால், 'அமைதி நிலவ வேண்டும்' என்று எண்ணமே முரண்பாடாகச் சிந்திக்கிறது. உலகில், எண்ணம் ஏன் இத்தகைய அதீத முக்கியத்துவம் பெற்றிருக்கிறது என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். நாம் பெற்றிருக்கும் ஒரே ஒரு கருவியாக, எண்ணத்தை நாம் கருதுகிறோம்.

எண்ணம் என்றால் என்ன? எண்ணத்தின் தோற்றுவாய் எது? மனிதன் ஏன் எண்ணத்தை சார்ந்திருக்கிறான்? எழுதப்பட்ட அனைத்து நூல்களும், அது பைபிளாக இருக்கட்டும், இல்லை, குரானாக இருக்கட்டும், இல்லையென்றால் உபநிடதமாக இருக்கட்டும், எல்லா நூல்களுமே எண்ணத்தை

அடிப்படையாகக் கொண்டவைதாம். எண்ணத்தின் ஆதரவோடு வாழ்கிறோமே, அந்த எண்ணம் என்றால் என்ன? நான் இதற்கான பதிலை சொல்லப்போகிறேன் என்று தயவுசெய்து காத்திருக்காதீர்கள். நீங்களே கண்டுபிடிக்க வேண்டும். பிறரிடமிருந்து பதிலை எதிர்பார்த்து காத்திருந்தீர்களென்றால், நீங்கள் ஒரு பயனற்ற நபர் என்றாகிவிடும்.

விஷயஅறிவு இல்லாத எண்ணம் என்று ஏதேனும் உண்டா? விஷயஅறிவு என்றால் என்ன? உண்மையில் பலவகைப்பட்ட விஷயஅறிவு உள்ளன. அவற்றில் இரண்டை மட்டும் இப்போது நாம் பார்க்கலாம். பள்ளி மற்றும் கல்லூரிகளில் சென்று படிப்பதால் கிடைக்கும் விஷயஅறிவு, மற்றும், வேலை தெரிந்தவரிடம் உதவியாளராகச் சேர்ந்து அவரிடம் கற்றுக்கொண்டு வளர்த்துகொள்ளும் திறமை என்று விஷயஅறிவை நாளடைவில் நாம் சேகரித்துக்கொள்கிறோம். நான் தச்சராக விரும்பினால், மரத்தின் தர நிர்ணயம் மற்றும் உபயோகப்படுத்த வேண்டிய உபகரணங்கள் ஆகியவற்றைப் பற்றியெல்லாம் நான் கற்றுக்கொள்ள வேண்டும், பல நுணுக்கங்களை கற்றுத்தெரிந்து, விஷய அறிவைப் பெருக்கிக்கொண்டும், சேகரித்துக்கொண்டும் இருக்கவேண்டும். நான் விஞ்ஞானியாக வேண்டுமென்றால், மிக அதிக அளவில் அறிவியல் ஞானம் பெற்றிருக்க வேண்டும். விஷயஅறிவு, அனுபவத்தின் மூலம் கிடைக்கிறது. விஞ்ஞானி ஒருவரின் கண்டுபிடிப்பை, மற்றொரு விஞ்ஞானி சோதித்து, அதை மேலும் மெருகூட்டுகிறார் அல்லது அதிலிருந்து சிலவற்றை நீக்கிவிடுகிறார். ஆக, விஷயஅறிவு, காலப்போக்கில் படிப்படியாக கூடிக்கொண்டே போகிறது.

இப்போது நாம் வினவுவது: விஷயஅறிவு, முழுமையானதா, இல்லை, அது எப்போதுமே வரையறைக்குட்பட்டதா? இந்தக் கேள்வியை உங்களையே கேட்டுக்கொள்ளுங்கள். விஷயஅறிவிலிருந்து பிறந்த மானுடச் சிந்தனை, பூரணத்துவம் கொண்டதாக, முழுமையானதாக இருப்பது சாத்தியமாகுமா? கட்டாயம் சாத்தியமாகாது. எதைப் பற்றிய விஷயஅறிவும் முழுமையானதல்ல. எனவே, விஷயஅறிவு எப்பொழுதுமே வரையறைக்குட்பட்டதே. பகவத்கீதை, உபநிடதங்கள், பைபிள் ஆகியவையெல்லாமே விஷயஅறிவுதான், எழுதப்பட்ட சிந்தனைகள்தாம். புனிதத் துறவியிடமிருந்து பெற்றதோ, தத்துவஞானியிடமிருந்து பெற்றதோ, அரசியல்வாதியிடமிருந்து பெற்றதோ எதுவாயினும், விஷயஅறிவு வரம்பிற்குட்பட்டதே. எனவே, விஷய அறிவைப் போற்றித் துதிக்காதீர்கள். வரம்பிற்குட்பட்ட விஷயஅறிவு எப்போதுமே அறியாமையுடன் கூடி வாழ்கிறது.

விஷயஅறிவிலிருந்து பிறந்தது எண்ணம். உதாரணத்திற்கு, நான் ஒரு விபத்தில் சிக்கி, வேதனையை அனுபவித்தேன். இந்த அனுபவம், என் மூளையில் பதிவாகிறது. ஞாபகம் என்பதாக பதிவாகியுள்ள அந்த அனுபவம், பின்னணியில் இருந்துகொண்டு, அடுத்த முறை நான் காரோட்டும்போது, கவனத்துடன் இருக்க வைக்கிறது. அதாவது, அனுபவம் ஏற்படுகிறது. அந்த அனுபவத்திலிருந்து கிடைத்த விஷயஅறிவு, ஞாபகம் என்பதாக மூளையில் சேமிக்கப்படுகிறது. ஞாபகங் களிலிருந்து எண்ணம் பிறக்கிறது. மனப்பதிவுகளே உங்களுக்கு இல்லையென்றால், என்ன நேரிடும்? நினைவுத்திறன் இழந்த நிலையில் இருப்பீர்கள். மிக உயர்ந்த உன்னதமான எண்ணம் என்றோ, இழிவான

எண்ணம் என்றோ ஏதும் இல்லை. எண்ணம் வரையறுக்கப்பட்டதாய் இருப்பதால், அதன் செயல்பாடுகளால், மனித உறவில் முரண்பாடுகள் கட்டாயம் உண்டாகும்.

எண்ணத்தின் சிக்கலான கூறுகளைப் பற்றிய புரிதல் உங்களுக்கு இருக்கிறதா? அதன் எளிதில் வயப்படும் தன்மை பற்றி நீங்கள் அறிவீர்களா? எண்ணத்தின் அசாதாரணமான ஆற்றலைப் பற்றியும் குறிப்பிட்ட ஒரு வழியில் பயணிக்கக்கூடிய அதன் வேகத்தைப் பற்றியும் உங்களுக்குத் தெரியுமா? தொழில்நுட்பத் துறையில் எண்ணத்தின் சாதனைகளைப் பாருங்கள் - இயக்கவிசையை மின்சாரமாக மாற்றும் டைனமோ, இயந்திரத்தின் பாகங்களை இயக்கும் பிஸ்டன், ஜெட் விமானம் என்று பிரமிக்க வைக்கும் எண்ணிலடங்கா கண்டுபிடிப்புகளை உருவாக்கி, மின்னல் வேகத்தில் தொழில்நுட்பத் துறையில் முன்னேற்றம் கண்டு வருகிறோம். இம்முன்னேற்றத்திற்கு ஒரு காரணியாக, நம் அதிகார வெறி, ஒருவரையொருவர் வெல்ல விரும்பும் நம் கொலைவெறியாக இருக்கலாம். எனவே, எண்ணம், யுத்தங்களை மூட்டிவிட்டது, போர்த்தளவாடங்களை உருவமைத்தது. சுகாதாரம், ஆரோக்கியம், மருத்துவம், தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு துறைகளில் அருமையான கண்டுபிடிப்புகளை உருவாக்கி நம் வாழ்வில் வளம் கூட்டியதும் எண்ணம்தான். ஆனால், எண்ணம் நமக்குப் பல பிரச்சினைகளையும் அளித்திருக்கிறது.

நாம் செயல்பட, நம்மிடம் இருக்கும் ஒரே கருவியாக, எண்ணம் மட்டும்தான் உள்ளதா? எண்ணம் எனும் அக்கருவி, மழுங்கிப் போய், பிரச்சினைகளை

உருவாக்குகிறது. எண்ணம் தோற்றுவித்தப் பிரச்சினைகளை, எண்ணத்தைக் கொண்டே தீர்க்கப் பார்ப்பதால், மேலும் மேலும் பிரச்சினைகள் எழுகின்றன. ஆகவே, நாம் கேட்கிறோம்: எண்ணமாக இல்லாத, வேறு வகைப்பட்ட கருவி ஏதேனும் உள்ளதா?

எண்ணம், வரையறைக்குட்பட்டது, முழுமையற்றது. என்னுடைய எண்ணம் என்றோ, உங்கள் எண்ணம் என்றோ ஏதுமில்லை; அது எண்ணம், அவ்வளவே. எண்ணுதல் என்பது தனிநபர் எண்ணுதல் அல்ல; நீங்கள் பெரும் பணக்காரரோ, இல்லை, புலமைமிக்கவரோ அல்லது எழுதப்படிக்கத் தெரியாத ஏழை கிராமவாசியோ, எவராயிருப்பினும், எண்ணமிடுகிறீர்கள், எண்ணுகிறீர்கள். உங்கள் வாழ்க்கைநிலை எதுவாயிருப்பினும், உங்கள் வாழ்க்கை சீர்கெட்டிருப்பதை உங்களால் பார்க்க முடிகிறது. அரசியல் தலைவராகவோ அல்லது ஆன்மிகத் தலைவராகவோ, உலகின் மிகப்பெரிய அதிகாரத்தைப் பெற்றவராகவோ நீங்கள் இருக்கலாம், ஆனால், உள்முகத்தில், நீங்கள் ஒழுங்கற்று இருக்கிறீர்கள்.

உள்முக ஒழுங்கின்மையின் காரணமாக, வெளியில் உங்கள் ஸ்பரிசம் படும் இடமெல்லாம், ஒழுங்கீனம் பரவுகிறது. நாடு முழுவதும் சீர்கெட்டிருப்பதைப் பார்க்கிறீர்கள். ஆசை, எண்ணம் மற்றும் காலம் ஆகியவை, சீர்கேட்டின் காரணிகளாக உள்ளன. ஒழுங்கைக் கொண்டுவர, எண்ணத்தைப் பயன்படுத்தி னீர்கள் என்றால், நீங்கள் திரும்பவும் ஒழுங்கீனத்தைத் தான் கொண்டு வருவீர்கள். இந்த உண்மை புரிகிறதா?

நம் ஒட்டுமொத்த வாழ்க்கையும் ஒழுங்குமுறை கட்டுப்பாட்டின் அடிப்படையில்தான் உள்ளது. ராணுவ

வீரர்களை நாள்தோறும் கடுமையான பயிற்சி செய்யவைத்து ஒழுங்குமுறைக்குட்படுத்துவது போலவே, நாமும் நம்மை ஒன்றைச் செய்வதற்கும், மற்றொன்றை செய்யாமலிருப்பதற்கும் கட்டுப்பாடு செய்துகொள்கிறோம்.

'ஒழுங்கு' என்று பொருள்படும் ஆங்கிலச் சொல் 'Discipline' என்பதின் மூலச்சொல்லாக இருப்பது 'To Learn' என்பதாகும். அதாவது, 'கற்றுக்கொள்ளல்' என்பதே 'ஒழுங்கு' என்பதின் மூலச்சொல். கற்றுக்கொள்ளல் என்று சொல்லும்போது பிறரிடமிருந்து கற்றுக்கொள்வது என்பதாக இல்லை. தன்னிடமிருந்தே, தன் எதிர்வினைகள், தன் செயல்பாடுகள், தன் நடத்தை, தன் அபிப்பிராயங்கள் போன்றவைகளிலிருந்து கற்றுக்கொள்வதையே, கற்றல் என்பது குறிப்பிடுகிறது.

ஒழுங்கு கட்டுப்பாடு ஒருபோதும் நுண்ணறிவைப் பெற்றுத் தருவதில்லை. கவனத்துடன் பார்த்தறிதலும், மற்றும் பயமற்று சுதந்திரமாக இருப்பதும், மேலும், ஆசையின் இயல்பைப் பற்றிய புரிதலுடன் இருப்பதுமே, நுண்ணறிவைக் கொண்டுவரும். ஆசையின் இயல்பை, அதன் கட்டமைப்பை, அதன் சக்தியை நீங்கள் புரிந்துகொண்டு, ஆசை தோற்றுவிக்கும் கிளர்ச்சியைப் பற்றிய விழிப்புணர்வோடு, எப்படி எண்ணம் அங்கு உள்ளே நுழைகிறது என்பதையும் நீங்கள் பார்க்கும்போது, நீங்கள் நுண்ணறிவு பெறுகிறீர்கள். நுண்ணறிவு என்பது உங்கள் நுண்ணறிவோ, அல்லது என் நுண்ணறிவோ அல்ல; அது, நுண்ணறிவு, அவ்வளவே.

பயம், மானுடம் சுமக்கும் மிகப் பெரும் பாரமாக உள்ளது. இவ்வுரையைக் கேட்ட பின்பு, பயத்திலிருந்து

விடுதலை பெற நமக்கு இயலுமா? இவ்வுரையை இப்போது கேட்டீர்கள். பயத்திலிருந்து விடுபட்டீர்களா? நேர்மையாக இக்கேள்விக்குப் பதில் கூறினால், 'இல்லை' என்பதே பதிலாக இருக்கும். ஏன் பயத்திலிருந்து விடுபடவில்லை? ஏன் விடுபடவில்லையென்றால், நீங்கள் உண்மையிலேயே இப்பிரச்சினைக்குள் ஆழமாகச் சென்று, படிப்படியாக ஆய்வு செய்து, 'ஏன் விடுபடவில்லை என்பதைக் கண்டுபிடிக்கப் பார்க்கலாம்' என்று முயற்சிக்கவில்லை.

உங்கள் உத்வேகம், துணிவு மற்றும் ஜீவசக்தியை முழுமையாகப் பயன்படுத்தி பதிலைக் கண்டுபிடிக்கப் பாருங்கள். நீங்கள் இவ்வுரையை மேம்போக்காக கேட்கிறீர்கள். 'என் கணவரைக் கண்டால் எனக்குப் பயமாக இருக்கிறது' என்று நீங்கள் சொல்லும்போது, எதைக் கண்டு பயப்படுகிறீர்கள் என்பதை மட்டுமே பார்க்கிறீர்கள், பயத்தைப் பார்க்கவில்லை. பயத்தை வெளிக்கொணருங்கள், அதைப் பாருங்கள். பயத்தைப் பார்ப்பதற்கு உங்களுக்குப் பயமாக இருப்பதால், பயங்கர வியாதியின் வேதனையைப் பொறுத்துக்கொண்டு வாழ்வதுபோல், பயத்தோடு வாழ்கிறீர்கள். நீங்கள் அவ்வாறு வாழ்வதுதான், வாழ்வில் சீர்கேட்டை கொண்டுவருகிறது. இந்த உண்மையைப் பார்க்க உங்களால் முடிந்தால், நீங்கள் ஏற்கனவே நுண்ணறிவோடு செயல்படுகிறீர்கள் என்பது தெளிவாகிறது.

**நண்பர் :** யோசனையற்ற நிலையை (thought lessness) எவ்வாறு எட்டுவது?

**கிருஷ்ணமூர்த்தி :** யோசனையற்ற நிலையை எப்படி எட்டுவது? நீங்கள் எட்டிவிட்டீர்கள்! (சிரிப்பு)

மிகச் சரியாக அதை எட்டிவிட்டீர்கள்! நீங்கள் இயந்திரங்களாகிவிட்டீர்கள். நீங்கள் சரியான முறையில் சிந்திப்பதில்லை. நீங்கள் கவனமின்மையுடனும், மேலும் கூடுதலான மன உறக்கத்திலும் எப்படி இருப்பது என்று கேட்டறிய விரும்புகிறீர்கள். நீங்கள் கேட்பது ஒரு தவறான கேள்வி.

எண்ணத்தின் இயல்பு, அதன் நுட்பங்கள், அதன் பூடகத்தன்மை, அதன் அழகு ஆகியவற்றை நீங்கள் புரிந்துகொள்ளும்போது, அந்தப் புரிதலின் மூலம், ஒரு மலர் மொட்டவிழ்கிறது. அந்நிலையில், எதுவும் பிரச்சினை ஆகாது. 'அதை எப்படி எட்டுவது? இதை எப்படிப் பெறுவது?' என்றெல்லாம் அப்போது வினவமாட்டீர்கள். புரிதல், மலராக விரிகிறது. அதன் அழகை நீங்கள் பார்க்கிறீர்கள்.

மலரின் அழகு, மலையின் கம்பீரம், இலைமேல் விழுந்திருக்கும் முழுநிலவின் இதமான குளிர்ச்சி, பாறாங்கல்லின் மேல் வெள்ளிபோல் பரவி நிற்கும் வெள்ளி நிலாவின் ஒளி ஆகியவற்றை நீங்கள் ரசித்திருக்கிறீர்களா? அழகு என்றால் என்ன என்று ஆராய வேண்டும். ஓவியத்திலோ, அல்லது வேறொன்றிலோ இருக்கும் அழகைப் பற்றியல்ல; நம் வாழ்வில் உள்ள அழகைப்பற்றி ஆய்வு செய்ய வேண்டும். நாம் கலந்துரையாட நிறைய விஷயங்கள் உள்ளன. நாம் இன்னும் துக்கத்தைப் பற்றியும், துக்கத்தை எப்படி முடிவிற்குக் கொண்டுவருவது என்பது பற்றியும் ஆராயவில்லை.

துக்கத்தை ஒட்டுமொத்தமாக முடிவிற்குக் கொண்டுவந்தால்தான், நமக்குக் கருணைத் தோன்றும். நீங்கள் துன்பத்தில் துவளும்போதும், நீங்கள் வலி,

கலக்கம், பேரவா போன்ற உணர்ச்சிகளால் அலைகழிக்கப்படும்போதும், அன்பு என்றால் என்ன என்று உங்களுக்குத் தெரியாது. அதிகாரம், பதவி, சாதனை, மேலும் அழகான வீடு, மேலும் உயர்ந்த கார் என்பதாக நீங்கள் அடைந்துவிட விரும்பும் பட்டியல் நீண்டுகொண்டே போகிறது. அடைந்துவிட பேரவா கொண்டிருக்கும் மனிதனின் இதயத்தில் அன்பு இருப்பதில்லை என்பதை எப்போதாவது உணர்ந்திருக்கிறீர்களா? பேரவா கொண்டிருக்கும் அவருக்கு எப்படி அன்பு இருக்கும்?

நீங்கள் எல்லோருமே மிகவும் பேரவா கொண்டவர்கள்தான். ஆன்மிகத்தில் மோக்ஷம் பெற்றுவிடவோ அல்லது லௌகிகத்தில் வங்கி அதிகாரி ஆகிவிடவோ, பேரவா கொண்டுள்ளீர்கள் - இரண்டும் ஒரே மாதிரியானவைதான். மோக்ஷம் பெற அவாவுறுவது, வங்கி அதிகாரி ஆக விரும்புவதைப் போன்றதே - ஏனெனில், இருவரும் இலக்கை அடைய பேரவா கொண்டவர்களே. ஆக, நுண்ணறிவுடன் வாழ்தல் என்றால், அடைந்துவிட வேண்டும் என்ற பேரவா, மற்றும், ஆசை இல்லாமல், ஆனால், அதே நேரத்தில் அதீத துடிப்புடன் வாழ்வது என்று பொருளாகிறது. இதுபற்றியெல்லாம் உங்களுக்கு ஒன்றும் தெரியாது.

துக்கத்தை முடிவிற்குக் கொண்டுவருதல், மரணத்தின் தாத்பரியம் மற்றும் சமயம் என்றால் என்ன என்பது போன்ற விஷயங்களைப் பற்றி நாம் கலந்துரையாட வேண்டும். ஒரு புதிய அமைப்பை, ஒரு நவீன சமுதாயத்தை, சமயத்தின் துணை இல்லாமல் நம்மால் கொண்டுவர முடியாது. ஆனால், தற்சமயம் சமயம் என்பதாக இருப்பது, அர்த்தமற்ற ஒன்றாய் உள்ளது.

ஸ்லோகத்தையோ, ஜபத்தையோ திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பதல்ல ஆன்மிகம். சாகும்வரை, தினமும் பகவத்கீதையை படிப்பதல்ல சமயநெறி. குரு ஒருவரைப் பின்பற்றுவதும், தினம்தினம் மத சடங்குகள் செய்துக் கொண்டிருப்பதும் புனித நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டுவதும் சமயம் அல்ல. சமயம் என்ற சொல்லின் ஆழத்தை நீங்கள் உணர வேண்டும். ஒரு புதிய கலாச்சாரம், ஒரு நவீன சமுதாயம் என்பது உண்மையான சமயத்திலிருந்துதான் தோன்ற முடியும். சமயம் என்ற பெயரில் இப்போது நடைபெற்று கொண்டிருக்கும் நடவடிக்கைகள், உண்மையான சமயத்தில் இடம்பெறாது. உண்மையான சமயத்தையும், புதிய கலாச்சாரத்தையும் எப்பொழுது கொண்டு வரப்போகிறீர்கள் என்று எனக்குத் தெரியவில்லை.

நண்பர் : வாழ்க்கையின் உண்மையான அர்த்தம் என்ன?

கிருஷ்ணமூர்த்தி : தயவுசெய்து கவனமாய் கேளுங்கள். உள்ளதைச் சொன்னால், உங்களுக்கு எவ்வளவு கோபம் வருகிறது பாருங்கள்! உங்கள் செயல்பாட்டை எவ்வளவு தீவிரமாக தற்காத்துக் கொள்கிறீர்கள்! நீங்கள் திரும்பத் திரும்பச் சொல் கிறீர்களே அந்த ஜெபம், அதைப்பற்றி எண்ணிப் பார்த்திருக்கிறீர்களா? 'நான் ஏன் ஜெபம் செய்கிறேன்? இதற்கு என்ன காரணம்? இதன் பின்னணியில் இருப்பது என்ன?' என்று உங்களையே வினவமாட்டீர்கள். நீங்கள் சம்பிரதாயத்தைக் கடைப்பிடிப்பதால், அதுவே சமயம் என்று நினைக்கிறீர்கள். மூன்று லட்சம் கடவுளர்கள் இந்தியாவில் பூஜிக்கப்படுவதாக ஒரு கணக்கெடுப்பு சொல்கிறது. ஒரே ஒரு கடவுள் இருப்பதைவிட, இது

மேல்தான்; நீங்கள் உங்களுக்குப் பிடித்த கடவுளைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம்! ஆனால், கடவுளை பூஜிப்பதோ அல்லது 'எனக்கு கடவுள் நம்பிக்கை இருக்கிறது' என்று சொல்லிக்கொள்வதோ, சமயம் அல்ல. இவற்றிலிருந்தெல்லாம் முற்றிலும் வேறுபட்டது சமயம்.

சமயநெறியில் வாழ்வது என்பது கருணையும், அன்பும் கொண்டிருத்தலாகும்; மேலும், துக்கத்தை முடிவிற்குக் கொண்டு வருதலும், மற்றவர்களுடன் உண்மையான தொடர்பைக் கொண்டிருத்தலும் சமயநெறியாகும். ஆனால், இதைப்பற்றியெல்லாம் உங்களுக்கு அக்கறை இல்லை. இவற்றைப்பற்றியெல்லாம் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆழமான, முழுமையான, தீவிரமான ஆர்வம் உங்களுக்கில்லை.

குறிப்பிட்ட வழிமுறையில் வகுக்கப்பட்டுள்ள வாழ்வுமுறைக்கு எவ்வித தொந்தரவு ஏற்படுவதையும் நம்மில் பலரும் விரும்புவதில்லை. 'நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்பதைச் சற்றே பாருங்கள்' என்று நாம் சொன்னால், உங்களுக்கு உடனே கோபம் வந்துவிடுகிறது. சர்வாதிகார ஆட்சி நடைபெறும் நாடுகளில் என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதைக் கவனித்திருக்கிறீர்களா? ஆட்சிக்கு எதிராக கருத்துகளை தெரிவித்தாலோ, அல்லது, சட்டத்திற்கு இணங்க மறுத்தாலோ, அதற்குத் தண்டனையாக எதிர்த்தவரை கண்காணாத இடத்திற்கு அனுப்பிவிடுவார்கள், இல்லை, வேறு நடவடிக்கைகள் எடுப்பார்கள். உங்கள் செயல்பாடுகள் பற்றி வினவும்போது, நீங்களும் அதைப்போலவே நடந்துகொள்கிறீர்கள், கோபத்துடன் எதிர்க்கிறீர்கள். தயவுசெய்து, இப்புவியில் வாழ,

வித்தியாசமான வாழ்வுமுறை இருக்கிறதா என்பதைக் காண உங்கள் சக்தியை, ஆற்றலை செலவிடுங்கள்.

**நண்பர் :** மனிதன், சிலை அல்ல. அவன் மாமிசத்தாலும், இரத்தத்தாலும் ஆனவன். அதனால், விருப்பம் மற்றும் பயம் இல்லாமல் வாழ்வதற்கு மனிதனுக்கு இயலும் என்று எனக்குத் தோன்றவில்லை.

**கிருஷ்ணமூர்த்தி :** உங்கள் விருப்பப்படி இருந்து கொள்ளுங்கள் ஐயா! 'விருப்ப உணர்வு இல்லாமல் வாழ வேண்டும்' என்று நான் எப்போதுமே சொன்னதில்லை. 'விருப்ப உணர்வைப் புரிந்துகொள்ளுங்கள். விருப்பத்தின் இயல்பை கவனியுங்கள். விருப்பத்தின் தூண்டுதலை ஆழமாக விசாரணை செய்யுங்கள்' என்றுதான் சொல்கிறேன். 'ஆசையில்லாமல் வாழ வேண்டும்' என்று நீங்கள் அதை மொழிபெயர்க்கிறீர்கள். நான் ஒருபோதும் அவ்வாறு சொல்லவில்லை.

**நண்பர் :** சிறந்த ஞானிகளால் கண்டுணரப்பட்ட உண்மையாக, உபநிடதங்கள் உள்ளன. அவற்றை ஏன் படிக்கக் கூடாது? அவற்றைப் படிக்க வேண்டும், அவற்றை சிந்தனை செய்ய வேண்டும், தியானம் செய்ய வேண்டும் என்றெல்லாம் கட்டாயம் ஏதுமில்லை. படிக்கப்பட வேண்டிய மிக உயர்ந்த நூல்களில் பகவத்கீதையும் ஒன்றாகும். உபநிடதங்களையும் கீதையையும் படிப்பதை ஏன் தடுக்க வேண்டும்?

**கிருஷ்ணமூர்த்தி :** அவற்றையெல்லாம் உண்மை என்று ஏன் நினைத்துக்கொள்கிறீர்கள்? ஒரு புத்தகம் அச்சிடப்பட்டுவிட்டால், அது ஏதோ பெரிய தீர்க்கமான ஒன்றாக ஏன் எடுத்துக்கொள்கிறீர்கள்? இந்தக் கேள்வியை

நீங்கள் எழுப்புங்கள். குரான், பைபிள் அல்லது ஞானிகள் எழுதிய நூல்களையெல்லாம் ஏன் அத்தனை தீவிரத்துடன் ஏற்றுக்கொள்கிறீர்கள்? அவை, உங்கள் வாழ்வில் தாக்கத்தை ஏற்படுத்தி உள்ளனவா?

**நண்பர் :** பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாகவே அவற்றின் தாக்கத்தை இந்தியா பெற்றுவருகிறது.

**கிருஷ்ணமூர்த்தி :** இல்லையில்லை. இந்த நாட்டில் தலைவிரித்தாடும் இடர்ப்பாடுகளைப் பாருங்கள், எவ்வளவு சிந்தனையற்றவராய் செயல்படுகிறீர்கள் என்பதைப் பாருங்கள். இந்த நாட்டில் கொடிய வறுமை நிலவுகிறது. எதிலும் சீர்குலைவு என்றிருக்கிறது. உங்கள் சொந்த வாழ்க்கையிலேயே ஒழுங்கு இல்லை. ஆனால், நீங்கள் ஏதோவொரு புத்தகத்தைப் பற்றி பேசுகிறீர்கள். உங்கள் வாழ்க்கையில் அந்தப் புத்தகங்கள் ஒரு துளி தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை. நீங்கள் அன்பான வர்களா?

**நண்பர் :** நாங்கள் அன்பு கொண்டிருக்கிறோம்.

**கிருஷ்ணமூர்த்தி :** நீங்கள் அன்பு கொண்டவர் களாய் இருந்திருந்தால், இவ்வளவு மோசமான குழப்பத்தில் இந்த நாடு இருக்காது. மனிதர்கள் ஒருவரையொருவர் நேசித்திருந்தால், யுத்தங்கள் நடந்திருக்காது. பொறாமையோ தன்னுரிமை கொண் டாடுதலோ இல்லாமல், அன்புள்ளம் கொண்டிருத்தல் என்ற வாழ்வின் மிக அருமையான பண்புநலனை இழந்துவிட்டீர்கள். அத்தகைய பண்பை நீங்கள் என்றுமே கொண்டிருக்கவில்லையோ என்றுகூட தோன்றுகிறது. ஆக, உங்கள் புனித நூல்கள், உங்கள் ஜபதபங்கள்,

உங்கள் சடங்குகள் ஆகியவற்றிற்கு பொருள் ஏதுமில்லை - அவை உங்களை அன்புடையவராக்கவில்லை.

அன்பு, ஒன்றுடன் கூட வரும் இலவச இணைப்பு அல்ல. இம்மண்டபத்தில் கூடியிருக்கும் நாமனைவரும் அன்பு பாராட்டினால், நாளையதினம் வித்தியாசமான இந்தியாவாக இந்நாடு உருப்பெறும். தயவுசெய்து செவிமடுத்துக் கேளுங்கள் - நீங்கள் இவ்வுரையை கேட்பதுகூட இல்லை. நீங்கள் வார்த்தையளவில்தான் எதையும் எடுத்துக்கொள்கிறீர்கள்; வெறுமனே சொற்களை உபயோகிக்கிறீர்கள். உங்கள் வாழ்க்கை ஏன் இவ்வாறு மேம்போக்காக, ஆழமற்றதாய் இருக்கிறது என்பதைக் கண்டறியுங்கள். உங்களிடம் ஏன் அன்பு இல்லை, உங்களுக்கு ஏன் கருணை இல்லை, நீங்கள் ஏன் உங்களை ஹிந்து / சீக்கியர் / முஸ்லீமாக அடையாளப்படுத்திக் கொள்கிறீர்கள் என்று கண்டறியுங்கள். இந்தக் கேள்விகளை நீங்கள் எழுப்புவதே இல்லை.

தியானம் என்பது இத்தகைய வினாக்களைத் தொடுப்பதாகும். இக்கேள்விகளின் யதார்த்தத்தையும், இவற்றின் பின்னால் சாரமாயிருக்கும் உண்மையையும் கண்டுகொள்வதே தியானமாகும்.

*புது தில்லி, 06.11.1982*

■■

# 4

# முடிவில் மலரும் துவக்கம்

கடந்த மூன்று கலந்துரையாடல்களில், தனித்தனி நாடுகளாக உலகம் பிரிக்கப்பட்டு பிரிவினைப்பட்டிருப் பதைப் பற்றியும், இத்தகைய பிரிவினை, யுத்தங் களுக்கான காரணங்களில் ஒன்றாய் இருப்பது பற்றியும், ஏனையோரிடமிருந்து ஒதுங்கி, தன்னை தனிநபராக தனிமைப்படுத்திக்கொள்ளும் மக்களின் இயல்பைப் பற்றியும் உரையாடினோம்.

மேலும், உலகெங்கும், குறிப்பாக இந்த நாட்டில், வெறுப்பும் குரோதமும் மேலும் மேலும் பெருகி பரவி வருகிறது என்பது பற்றியும், எப்படி மாந்தர்கள் மற்றவரின் பேச்சால், செயலால் மனம் புண்பட்டுப்போய், ஆறாத வடுக்களுடன் வாழ்நாள் முழுவதும் வாழ்கிறார்கள் என்பது பற்றியும் அப்படி வாழ்வதின் விளைவுகளைப் பற்றியும் பேசினோம். மேலும், வாழ்க்கையின் மிக முக்கியமான விஷயமான உறவுகள் பற்றியும், உறவுகளில் ஏன் எப்போதுமே உரசல்கள் ஏற்படுகிறது என்பது பற்றியும்கூட உரையாடினோம்.

தொடர்புகள் இல்லாவிட்டால், வாழ்க்கையே இல்லை. தொடர்புகளின் இயக்கமாகவே, வாழ்க்கை

உள்ளது. தேசியம் என்ற மாயை, நாம் வழிபடும் சிறப்பு கடவுளர்கள் பற்றிய மாயை, மற்றும், நமக்கு புத்திமதி சொல்லிச் சென்றவர்களைப் பற்றிய மாயை என்று நாம் தோற்றுவித்த பல்வேறு மாயைகள் மற்றும் உருவகங்கள் பற்றியும், எவ்வாறு அவை மனிதகுலத்தையே அழிவிற்கு இட்டுச் செல்கிறது என்பது பற்றியும் பார்த்தோம்.

மேலும், பயத்தைப் பற்றியும், பயத்திலிருந்து முழுவதுமாக விடுதலைபெற மனிதகுலத்திற்கு சாத்தியமா என்றும் சிந்தித்தோம். பல்வேறு சிற்றாறுகள் போலிருக்கும் பயத்திற்கான பல காரணங்கள் சங்கமித்து, எவ்வாறு பயமெனும் பெருநதி பிரவாகிக்கிறது என்பதையும் கவனித்தோம். பல கோடி ஆண்டுகளாக இப்புவியில் வாழ்ந்துகொண்டிருக்கும் மனிதகுலம் எப்பொழுதுமே பயத்தின் பிடியிலிருந்து விடுபட்டதில்லை. அது, காம இன்பத்தில் மட்டுமின்றி, சொத்து சேர்ப்பதில், அதிகாரம் செலுத்துவதில், பற்றுகொள்வதில், பதவி வகிப்பதில் தீவிர நாட்டம் கொண்டு ஓயாமல் இன்பத்தை நாடிச் செல்கிறது.

நம் துயரங்களுக்கு முடிவு உண்டா, இல்லை, நீங்களும் நானுமாய் இருக்கிற இந்த மனித சமுதாயம், துயரங்களை ஏற்றுக்கொண்டு, அதைப் போஷிக்க வேண்டுமா என்பது பற்றி இம்மாலைப் பொழுதில் நாம் கலந்துரையாடுவது அவசியம் என்று எண்ணுகிறேன். மேலும், நம் வாழ்வின் அங்கமாய் இருக்கும் மரணத்தின் தாத்பரியம் பற்றியும் நாம் பேச வேண்டும். சமயம் என்றால் என்ன, சமயத்தின் உட்பொருள் எது, சமய உணர்வுள்ள மனம் என்றால் என்ன மற்றும் தியானம் என்றால் என்ன என்பது போன்ற விஷயங்களையும் நாம் விவாதிக்க வேண்டும்.

நன்கு பரிச்சயமான, பரஸ்பர அன்புடைய நண்பர்கள், ஒரு விஷயத்தை ஆய்வு செய்யும்போது, ஒருவரையொருவர் எதிர்க்காமலும், தங்கள் கருத்துக்களை பாதுகாத்துக்கொள்ளவோ, அல்லது, பிறர் கருத்துக்களை பழிக்கவோ செய்யாமல், மிகவும் நிதானத்துடன், ஆழமாக ஆய்வு செய்வதுபோல், நாமும் செய்யலாம்.

ஒன்றைப்பற்றிய தீர்க்கமான முடிவை ஏற்கனவே கொண்டிருக்காமல் இருந்தால்தான், அதைப்பற்றிய உண்மையை நம்மால் கண்டுபிடிக்க முடியும் என்பதால் நாம் தீர்மானங்கள் ஏதுமின்றி ஆய்வைத் தொடங்கலாம். ஒன்றைப்பற்றிய நிச்சயமான தீர்மானத்தோடு தொடங்குபவர்கள், இறுதியில் தீர்மானிக்க முடியாமல் போகிறார்கள். மாறாக, ஐயப்பாட்டுடனும், கேள்வி களுடனும், ஆராயும் மனப்பாங்கோடும், ஒன்றைப் பற்றி அறியத் தொடங்குபவர்கள், தீர்க்கமான முடிவை எட்டுகிறார்கள். அந்த முடிவு, வேறொன்றிற்கு இணையானது என்பதாக இல்லாமல், தனித்த, பரிபூரணமான முடிவாக இருக்கிறது. ஆகவே, தயவு செய்து, முன்தீர்மானங்கள் ஏதுமின்றி ஆய்வைத் தொடங்குங்கள்.

கடவுள் இருக்கிறார், குறிப்பிட்ட உங்கள் சமயம்தான் சரியானது, புனித நூல்கள் அனைத்தும் உண்மையை போதிக்கின்றன என்பது போன்ற முன்முடிவுகளில் பெரிதும் நம்பிக்கை வைத்து அவற்றையே விடாப்பிடியாய் பிடித்துக்கொண்டிருக் காதீர்கள். அவற்றிற்கெல்லாம் நம் அன்றாட வாழ்வில் அர்த்தம் ஏதுமில்லை. அத்தீர்மானங்கள் குறித்து ஐயம் கொள்ளுங்கள், கேள்வி எழுப்புங்கள்.

துயரம் என்றால் என்ன, அது முடிவுறுமா, துயரம் இருக்கும் இடத்தில் அன்பு இருக்குமா போன்ற விஷயங்களையெல்லாம் நாம் ஆராயப்போகிறோம். உலகெங்கும் தாங்கொணாத் துயரில் மக்கள் வாடுகின்றனர். கடந்த ஐந்தாயிரம் வருடங்களில், அநேகமாக ஒவ்வொரு வருடமும், உலகின் எங்காவது ஒரு பகுதியில் யுத்தம் நடந்துகொண்டுதான் இருந்திருக்கிறது, மக்களின் கண்ணீர் ஆறாகப் பெருகியிருக்கிறது. இது ஏதோ உணர்ச்சிவசப்பட்டு சொன்னதோ, அல்லது கற்பனையான வாசகமோ அல்ல - இதுதான் உண்மையான நடப்பு. மனிதனின் துயரம் தொடர்ந்துகொண்டே இருக்கிறது.

வியாதிகள், ஏராளமான வலிகள், உயிர் வாழ்தலில் அனுபவிக்கும் வேதனைகள் என்பதாக இந்த நாட்டில் துயரம் மலிந்திருக்கிறது. வாழ்க்கையில் மகிழ்ச்சி இல்லை. பெரும் குழப்பமாகவும், துன்பச் சுமையாகவும் இருக்கும் வாழ்க்கையின் நிலை பற்றிய விழிப்புணர்வைப் பெற்ற ஒருவர், மக்கள் அனைவருமே ஒரே மாதிரியான துயரச் சுமையை சுமக்கின்றனர் என்பதை மிகத் தெளிவாகப் பார்க்கிறார். தன் மகனையோ, சகோதரனையோ இழந்ததால் ஒருவர் அனுபவிக்கும் குறிப்பிட்ட துயரம் என்பதாகவோ வாழ்க்கைத்துணை ஓடிவிட்டதால் அடைந்த துயரம் என்பதாகவோ, குறிப்பிட்டவொரு துயரமாக மானுடத்துயர் இல்லை.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் சேகரித்து குவித்து வைக்கப்பட்டிருக்கும் துயரத்தை மனிதகுலம் முழுமையும் சுமக்கிறது, பகிர்ந்துகொள்கிறது. ஆகவே, அத்தகைய மனிதகுலத் துயரத்தை புரிந்துகொள்வதில் நாம் அக்கறை கொண்டுள்ளோம். தயவுசெய்து, தனிநபர் துயரத்தை நாம்

ஆராயப்போவதாக, மொழிபெயர்ப்பு செய்து விடாதீர்கள். உங்கள் துயரம், மனிதகுலத் துயரமாக இருக்கிறது. ரஷ்யா, அமெரிக்கா, இந்தியா என்று மனிதன் எங்கு வாழ்ந்தாலும், அவன் அனுபவிக்கும் துயரம், ஒட்டுமொத்த மனிதகுலத் துயரமே.

துயரத்தின் காரணங்கள், துயரத்தின் வலி, சோகம், துயரத்துடன் சேர்ந்தே வரும் பதற்றம், தன்னந்தனியாக விடப்பட்ட உணர்வு போன்றவைகளைப் பற்றி விசாரணை செய்யப்போகிறோம். இன்பத்தைப் போன்றே, துயரமும் 'என்னுடைய துயரம்' என்ற அளவிற்கு சுருக்கப்படுகிறது. நம்முடைய சொந்த துயரத்தைப் பற்றி நாம் அக்கறை கொண்டிருக்கையில் மனிதகுலத் துயரத்தை நாம் மறந்துவிடுகிறோம், அலட்சியப்படுத்துகிறோம். ஆனால், மானுடத்தின் பிரக்ஞையாகவே, நம் பிரக்ஞை உள்ளது என்பதை நாம் நன்கு புரிந்துகொள்ள வேண்டும்.

நம் பிரக்ஞையை, அதாவது, நம்மை நாம் புரிந்துகொள்ளும்போது, நம் தனிமை, நம் வேதனைகள், நம் மனச்சோர்வு, நம் மகிழ்ச்சிகள், நம் நம்பிக்கைகள் ஆகிய அனைத்தும் ஏனைய மக்களாலும் பகிர்ந்து கொள்ளப்படுகிறது என்பதை நாம் பார்க்கிறோம். ஒரு கடவுள் மீது ஒருவர் நம்பிக்கை வைக்கலாம், மற்றவர் வேறொரு கடவுள் மீது நம்பிக்கை வைக்கலாம் - இதில் கடவுள் மாறுபட்டாலும், நம்பிக்கை என்பது பொதுவாக உள்ளது - இப்படித்தான் நம் பிரக்ஞையும். பேசும் மொழி, உண்ணும் உணவு, வாழும் தட்பவெப்ப நிலை, ஆடைகள், கல்வி, ஜபதபங்கள், தனிமை, மரணபயம் என்பன போன்ற பொதுவான அடித்தளத்தின் மீது ஒட்டுமொத்த மனிதகுலமும் நிற்கிறது. நீங்கள், அந்த

மனிதகுலத்தவர். என் நண்பரிடம் இதுகுறித்து பேசிக்கொண்டிருந்தேன். பிரக்ஞை என்பது தனிநபர் சார்ந்ததல்ல என்று அவருக்குச் சொன்னேன்.

மனிதகுலத்தின் மூடநம்பிக்கைகள், கற்பிதங்கள், அச்சங்கள் மற்றும் இன்ன பிறவற்றால் ஆனது பிரக்ஞை. இந்த உண்மையை, வார்த்தையளவிலோ அறிவுபூர்வ மாகவோ புரிந்துகொண்டால் போதாது - நீங்கள் அதை உங்கள் இதயத்தால், மனத்தால் புரிந்துகொள்ள வேண்டும். மரணத்தைப் பற்றி விசாரணை செய்வதற்கு முன், நம் பிரக்ஞையின் இயல்பைப் பற்றியும், உள்ளபடி நாம் யார் என்பதுபற்றியும் அன்றாட வாழ்வில் நாம் எப்படி இருக்கிறோம் என்பதைப் பற்றியெல்லாம் நாம் புரிந்துகொள்ள வேண்டும். எப்படியிருக்க வேண்டும் என்பதல்ல விசாரணை. உள்ளபடி நிஜத்திலிருப்பதாகிய உணர்வுகள், எல்லோராலும், ஒவ்வொரு மனிதனாலும் பகிர்ந்துகொள்ளப்படுகிறது.

துயரத்தை குறுகிய வட்டத்துக்குள், அதாவது குறிப்பிட்ட உங்கள் சிறுதுயரத்தைப் பற்றியோ, வேதனையைப் பற்றியோ நாம் விவாதிக்கப்போவதில்லை. நீங்களும் ஒரு அங்கமாயிருக்கும் மனிதகுலத் துயரத்தைப் பற்றியே கலந்துரையாடப்போகிறோம். ஆகவே, இவ்விவாதம், சுயநலநோக்குடையதல்ல. இந்த ஆய்வு, பலவற்றை புரிந்துகொள்வதற்கான அதீதமான வாய்ப்பை நமக்கு நல்க வல்லது.

துயரத்தின் இயல்பு பற்றியும் உலகெங்கும் உள்ள மக்கள் ஏன் துயரத்தின் பிடியில் அவதியுறுகிறார்கள் என்பது பற்றியும் நீங்களே கண்டுபிடியுங்கள். துயரம் என்றால் என்ன? மானுடம், துயரத்தை ஏன் தூக்கியெறியவில்லை? தனிமை, சோகம், வேதனை

என்றெல்லாம் ஏன் அவதியுறுகிறீர்கள்? தயவுசெய்து, இந்தக் கேள்விகளை உங்களையே கேட்டுக்கொள்ளுங்கள். திருமணமாகி, குழந்தைகளையும் பெற்றவராக நீங்கள் இருப்பினும், நீங்களும் தனிமையுணர்வில் தவிப்பவரே. நீங்கள் உங்களை மிகப் பெரிய அளவில் மனிதகுல பிரக்ஞையிலிருந்து பிரித்து தனிமைப்படுத்திக்கொண்டு விட்டீர்கள். மிகப் பெரிய துன்பம் நேரிடுகையில், நீங்கள் எவ்வளவு தூரம் தனிமையில் இருக்கிறீர்கள் என்பதை உணர்கிறீர்கள்.

ஆகவே, தனிமையுணர்வு என்பது துயரத்திற்கான காரணிகளில் ஒன்றா என்று வினவுகிறோம். நம் அன்றாட வாழ்வின் விளைவாக நாம் அடைவது தனிமையுணர்வு. தான் ஒரு தனிப்பட்ட ஆன்மா, தனிப்பட்ட ஒருவர் என்பதை நாம் ஒவ்வொருவரும் முழுவதுமாக, உறுதியாக நம்புகிறோம். உயர்ந்த நிலையில் இருந்தாலும் சரி, தாழ்ந்த நிலையில் இருந்தாலும் சரி, ஒவ்வொருவரும் சுயநலத்துடன், தன்முனைப்புடன் செயல்படுகிறோம். இத்தகைய செயல்பாட்டுமுறையானது, தனிமை, பிரிவினை, பாகுபாடு போன்ற விளைவுகளை அன்றாட வாழ்வில் கொண்டுவருவது தவிர்க்க முடியாத விஷயமாகும். எனவே, 'சிந்தனையிலும், வாழ்வு முறையிலும் இருக்கும் பிரிந்து தனித்திருக்கும் இந்த இயல்பு, துயரத்திற்கான காரணங்களில் ஒன்றா?' என்ற கேள்வி எழுகிறது.

ஒன்றின் மீது பற்று வைப்பது துயரத்திற்கான காரணமாய் இருக்குமா? என் மனைவி, என் மக்கள், என் ஞாபகங்கள், என் நம்பிக்கைகள் மற்றும் என் அனுபவங்கள் மீதும் நான் பற்றுதல் கொண்டிருக்கிறேன். நான், என் மனைவி மக்களைச் சார்ந்திருக்கிறேன். என்

நம்பிக்கைகளைச் சார்ந்திருக்கிறேன். நான் ஒன்றை நம்புகிறேன், அந்த நம்பிக்கையைச் சார்ந்திருக்கிறேன். அந்த நம்பிக்கை, சந்தேகிக்கப்படும்போது, அதன் மேன்மை குறித்த கேள்விகள் எழும்போது, அதன் உயர்வு ஆட்டம் காணும்போது, நான் கலங்கிப் போகிறேன், வேதனையடைகிறேன். நம்பிக்கைகள், விமர்சனத்திற் குள்ளாவது துயரத்திற்கான ஒரு காரணமாய் இருக்குமா?

குறிப்பிட்ட ஒரு நம்பிக்கை அல்லது குறிப்பிட்ட ஒரு இலட்சியத்திலிருந்து விடுதலை என்றில்லாமல், அனைத்து நம்பிக்கைகளிலிருந்தும், அனைத்து இலட்சியங்களிலிருந்தும் முற்றிலுமாக விடுதலை பெறுவது என்பது சாத்தியம்தானா? நம்பிக்கைகளையும், கொள்கை களையும் கொண்டிருக்காமல் நம்மால் இருக்க முடியுமா? 'நம்பிக்கைகளையும், கொள்கைகளையும் அகற்றி விட்டபின், அவற்றிற்கு மாற்றாக எதைக் கொண்டிருப்பது?' என்று தயவுசெய்து கேட்காதீர்கள். அது ஒரு தவறான கேள்வி.

நம்பிக்கை எதுவானாலும் இலட்சியம் எதுவானாலும் அவை மக்களைப் பிரிவினைப்படுத்துகிறது என்ற உண்மையைப் பாருங்கள். நம்பிக்கை என்பது நடைமுறை உண்மை அல்ல. சூரியன் உதிப்பதையும், மறைவதையும் பற்றிய புரிதல், ஒரு 'நம்பிக்கை' அல்ல; சூரியன் உதிக்கிறது, மறைகிறது, அது ஒரு உண்மை. ஆனால், நான் கடவுள் இருக்கிறார் என்று 'நம்பிக்கை' வைக்கிறேன். அல்லது, கடவுள் இல்லை என்று 'நம்பிக்கை' வைக்கிறேன். கம்யூனிஸம், சோஷயலிஸம், முதலாளித்துவம் போன்ற கொள்கைகளில் 'நம்பிக்கை' வைக்கிறேன் - கொள்கைகளுக்காக போரிடவும், கொல்லவும் தயாராய் இருக்கிறேன். ஆக, எல்லாவித

நம்பிக்கைகளிலிருந்தும் முற்றிலுமாக விடுபட வேண்டும் - அவ்விடுதலைதான் சுதந்திரம்.

ஒருவிதமான பாதுகாப்பு உணர்வை நம்பிக்கை அளிப்பதால், நீங்கள் நம்பிக்கை கொள்கிறீர்கள். ரக்ஷித்தல், ஆதரவு, பாதுகாப்பு, வழிகாட்டுதல் போன்ற உணர்வுகளை கடவுள் நம்பிக்கை உங்களுக்கு அளிப்பதால், நீங்கள் கடவுளை நம்புகிறீர்கள். தேசியம், மதத்தலைவர்கள், புனித நூல்கள் போன்ற பல்வேறு வகைப்பட்ட பாதுகாப்பு கவசங்களை மனம் கண்டு பிடித்திருக்கிறது. ஒருவித பாதுகாப்பான உணர்வை அவை உங்களுக்கு அளிக்கிறது. ஆனால், உண்மையில், அவற்றில் பாதுகாப்பு இருப்பதாகக் கருதுவது வெறும் கானல்நீர் காட்சிதான், அவற்றில் பாதுகாப்பு ஏதுமில்லை. ஆக, நம்பிக்கை மற்றும் லட்சியம் போன்றவை மிகமிக அழிவுத்திறம் கொண்டவை என்பதையும், அவை மக்களிடையே பிரிவினையைத் தோற்றுவிக்கிறது என்பதையும் அறிவது, நுண்ணறிவைப் பெறுவதாகும்.

நுண்ணறிவில்தான் முழுமையான பாதுகாப்பு உள்ளது. உங்கள் நம்பிக்கைகளிலோ, கற்பிதங்களிலோ, லட்சியங்களிலோ, பாதுகாப்பு இல்லை. நுண்ணறிவு, உங்கள் நுண்ணறிவோ, இல்லை, என் நுண்ணறிவோ அல்ல; பொய்ம்மையை பொய் என்று கண்டுணர்ந்து அதை முடிவுறச் செய்வதே நுண்ணறிவு. 'உள்ளதை' உள்ளவாறு, கற்பனைகள் ஏதுமின்றி பார்த்து, உள்ளதிலிருந்து தப்பியோடாமல், உண்மையில் நாம் யார், எப்படிப்பட்டவர் என்பதை உணர்ந்து, அதன் தொடர்பாய் விசாரணை செய்ய வேண்டும். அந்த விசாரணையில், நுண்ணறிவு விழித்தெழுகிறது.

மனதில், சிந்தனையில், செயலில் தனித்துப் பிரிந்திருக்கும் நம் இயல்பு, துயரத்தையும், கலக்கத்தையும் கொணர்கிறதா? நாம் பிறருடன் கொண்டிருக்கும் பற்றுதல் நம் துயரத்திற்குக் காரணமா? தயவுசெய்து, விழித்தெழுங்கள், பற்றுகொண்டிருப்பதின் தன்மையை பரிசீலனை செய்யுங்கள்.

ஒன்றின் மீது நீங்கள் கொண்டிருக்கும் தீவிர ஈடுபாடு மற்றும் பற்றுதலின் காரணமாக, கலக்கம், பயம், வேதனை, பொறாமை, வெறுப்பு போன்ற உணர்வு களுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். நீங்கள் உங்கள் வாழ்க்கைத்துணையின் மேல் தீவிர பற்றுதலுடன் இணைந்திருக்கிறீர்கள் - அதன் விளைவுகளை நோக்குங்கள் - நீங்கள் ஒருவரையொருவர் சார்ந்திருக் கிறீர்கள். சார்ந்திருத்தல், உங்களுக்கு ஒரு பாதுகாப்புணர்வைத் தருகிறது. ஆனால், உங்களை விட்டு உங்கள் மனைவி ஓடிப்போய்விட்டால், நீங்கள் வேதனையில், சந்தேகத்தில், வெறுப்பில், துயரத்தில் மூழ்கிப்போகிறீர்கள். இவையெல்லாம் உங்களுக்குத் தெரியாததா என்ன? அன்றாட வாழ்வின் யதார்த்தங்களாக இவை உள்ளது. இவையெல்லாம் தெரிந்த விஷயங்கள்தான். இந்தக் கஷ்டங்கள் உங்கள் வாழ்வில் ஏற்படாமல் இருந்திருக்கலாம். ஆனால், கோடிக்கணக்கானவர்கள் இம்மாதிரியான துயரங்களை அனுபவிக்கிறார்கள்; அவர்களின் உறவுமுறையில், துயரம், பயம், வேதனை குடிகொண்டிருக்கிறது.

ஒன்றின்மேல் / ஒருவர் மீது பற்றுதல் கொண்டிருப்பது, துயரப்படுவதற்கான காரணங்களில் ஒன்றா என்று நாம் வினவுகிறோம். நான் என் மகன் மீது மிகுந்த வாஞ்சையும், அபிமானமும் கொண்டிருந்தேன்.

அவன் இறந்துவிட்டான். அந்தத் துயரத்திலிருந்து தப்பிக்க, நான் ஆறுதல் அளிக்கும் பல்வேறு வகைப்பட்ட சுகங்களை நாடுகிறேன். என் துயரத்தோடு ஒன்றி நான் ஒருபோதும் இருப்பதில்லை.

துயரத்துடன் ஒன்றி இருந்து, அதிலிருந்து தப்பிக்காமல், சுகமளிக்கும் ஆறுதல்களைத் தேடிச் செல்லாமல், சமயம் சார்ந்ததோ அல்லது வேறுவகைப் பட்டதோ, எதுவாயிருப்பினும், எந்தவித கேளிக்கை களிலும் மூழ்கிவிடாமல், துயரத்தின் இயல்பைப் புரிந்துகொண்டு அதனைக் கண்டுணர்ந்து அதனோடு சேர்ந்து வாழும்போது, துயரமானது, உணர்வெழுச்சிக் கான (passion) கதவுகளைத் திறந்துவிடுகிறது. எழுச்சிபெறும் உணர்வு, காமவுணர்வு அல்ல. நீங்கள் ஒருபோதும் துயரத்தின் தன்மையை புரிந்துகொண்ட தில்லை; துயரத்தை முடிவிற்குக் கொண்டு வந்ததும் இல்லை. அதன் விளைவாய், நீங்கள் ஊக்கமற்றவராய், எழுச்சியற்றவராய் இருக்கிறீர்கள்.

நீங்கள் எதையும் ஏற்றுக்கொள்கிறீர்கள். துயரத்தை, பயத்தை, அரசியல்வாதிகளின், குருமார்களின், புனித நூல்களின் மற்றும் சம்பிரதாயங்களின் அதிகாரத்தை ஏற்றுக்கொள்கிறீர்கள். இதிலிருந்தே, நீங்கள் சுதந்திரமாக இருக்க ஒருநாளும் விரும்புவதில்லை என்பதும், சுதந்திரமாய் இருப்பதற்குப் பயப்படுகிறீர்கள் என்பதும் அறிந்திராததைப் பற்றிய பயம் உங்களுக்கு இருக்கிறது என்பதும் நன்கு புரிகிறது. பயத்தின் காரணமாய், நீங்கள் பல்வேறு வகைப்பட்ட ஆறுதல்முறைகளையும், பொய்யான பிரதிமைகளையும், நம்பிக்கைகளையும் உருவாக்குகிறீர்கள்.

துயரத்தைப் பற்றிய புரிதலோடு என் மகனின் மரணத்தை எண்ணிப்பார்க்கையில், நான், அவன் மீது எத்தனை பாசம் வைத்திருந்தேன், இப்போது அவனை எப்படி நிரந்தரமாய் இழந்துவிட்டேன் என்பதை யெல்லாம் நினைந்து மிகவும் துயரப்படுகிறேன் - அத்துயரத்துடன் வாழ்கிறேன். துயரம் ஒரு மலர் போன்றது. அது மொட்டவிழ்ந்து மலர்கிறது, பிறகு வாடிப்போகிறது. காலையில் மலர்ந்து, மாலையில் வாடிவதங்கும் மலர்களும் உண்டு - ஒரு வாரம் மலர்ச்சியுடன் இருந்துவிட்டு வாரக்கடைசியில் வாடிப்போகும் மலர்களும் உண்டு. துயரம் மலர்வதற்கு நீங்கள் அதற்குச் சந்தர்ப்பம் அளிக்க வேண்டும் - மலர்ந்த துயரம், வாடிவதங்கி முடிவுறும். துயரம் முடிவுற்ற பிறகு, உங்களிடம் எழுச்சி தோன்றுகிறது; ஜீவசக்தியும் ஆற்றலும் உத்வேகமும் கொண்டவராகிறீர்கள்.

துயரம் இருக்கும் இடத்தில், அன்பு இருக்காது. பகவத்கீதை போன்ற உங்கள் நூல்கள் இவ்விஷயங்களைப் பற்றி பேசலாம். ஆனால், நான் கேட்கிறேன், அவை அன்பைப் பற்றி பேசுகின்றனவா? 'ஆம், அன்பைப் பற்றி அவை பேசுகின்றன' என்று உடனே பதிலளிக்காதீர்கள். அப்பதிலுக்குப் பொருளேது மில்லை. அதைப்பற்றி விசாரணை செய்யுங்கள். வேதனையில், தனிமையில் வாடிக்கொண்டு, தன்னில் மையம் கொண்ட ஒரு மனம், எப்படி அன்புகாட்ட முடியும்?

அன்பு என்பது ஒரு உணர்வு அல்ல; அது ஒரு உணர்வுபூர்வமானதோ, கிளர்ச்சியூட்டுவதோ, கற்பனையானதோ, ஆறுதல் அளிக்கும் விஷயமோ அல்ல. அன்பு என்பது அதீதமான ஜீவசக்தி; மரணத்தைப்

போன்றே அவ்வளவு வலிமையானதும்கூட. துயரம் உள்ள இடத்தில் அன்பு இருக்காது. உலகில் பலரும் துயரப்பட்டுக்கொண்டு அதிலிருந்து மீள வழிதெரியாமல் அல்லல்படுவதால், அவர்களுக்கு அன்பு செய்தல் என்றால் என்னவென்றே தெரியாமல் இருக்கின்றனர்.

இன்பக்களிப்பு என்பதாகவும், பாலுறவு, பற்றுதல் என்பதாகவும் பொருள்பட வைத்து, அன்பினைத் தரங்குறைத்து கொச்சைப்படுத்திவிட்டோம். எனவே, 'அன்பு, இன்பக்களிப்பா?' என்ற கேள்வியை நாம் எழுப்பவேண்டும். அன்பு என்பது ஆசையா? அன்பு என்பது எண்ணமா? அன்பை வளர்த்துக்கொள்ள முடியுமா? கட்டாயம் அன்பை வளர்த்துக்கொள்ள முடியாது.

அன்பு இல்லாமல், காருண்யவுணர்வு இல்லாமல், அன்பின் ஜோதி இல்லாமல், அன்பின் நயம் இல்லாமல் வாழும் வாழ்க்கையில், அர்த்தம் ஏதுமில்லை. வாழ்க்கைக்கு ஒரு குறிக்கோளை நீங்கள் கண்டு பிடிக்கலாம்; எந்தக் குற்றங்குறையும் இல்லாத மேன்மையை அடைவது என்பது போன்ற குறிக்கோள்களை நீங்கள் கண்டுபிடிக்கலாம். ஆனால், அடிப்படை ஆதாரமாக இருக்கும் அன்பின் அழகை நீங்கள் கொண்டிருக்காவிட்டால், வாழ்க்கைக்குப் பொருளேதுமில்லை.

நீங்கள் உற்றுநோக்கும்போது, உண்மையில் உங்கள் வாழ்க்கை என்பது என்னவாக இருக்கிறது? அடுத்த ஐம்பது வருடங்களுக்கு நாள்தோறும் அலுவலகத்திற்குச் செல்வது, ஏதோ கொஞ்சம் பணம் சம்பாதிப்பது, கொஞ்சம் அதிகாரப்பலம் பெறுவது, குழந்தைகளைப்

பெற்று வளர்ப்பது, இப்புவியில் தாங்கொணா வன்முறையை நிலைபெறச் செய்யும் தவறான முறை கல்வியை அவர்களுக்குப் பெற்றுத் தருவது என்பதாக உங்கள் வாழ்க்கை இருக்கிறது. உலகிலுள்ள நூல்கள் அனைத்தையும் நீங்கள் படித்திருக்கலாம், அருங்காட்சியகங்கள் எல்லாவற்றிற்கும் போய்ப் பார்த்திருக்கலாம், இந்த உரையைக் கேட்பதுபோல வேறு பல பேச்சாளர்களின் பேச்சையும் கேட்டிருக்கலாம். ஆனால், அதீத மென்னயவுணர்வுடன் கூடிய அழகுணர்வான அன்பு உங்களிடம் இல்லையென்றால், உங்கள் வாழ்க்கைக்குப் பொருளேதும் இல்லை. இது பெரிய அந்தஸ்திலிருப்பவர்களும், இளவரசர்களுக்கும், அதிகாரத்தின் உச்சியிலிருப்பவர்களுக்கும்கூட பொருந்தும் - அன்பு இல்லாத நிலையில், அவர்கள் மேலும் மேலும் தீங்கிழைப்பவர்களாகவும், ஒழுங்கற்றவர்களாகவும் ஆகின்றனர்.

நீங்கள் எவரிடமேனும் அன்பு வைத்திருக்கிறீர்களா? பொறாமை, உரிமை கொண்டாடுதல், ஆதிக்கம் செலுத்துதல், பற்று வைத்தல் ஆகியவைகளோடு கூடியதா நீங்கள் காட்டும் அன்பு? அப்படிப்பட்ட அன்பாய் அது இருந்தால், அது அன்பே அல்ல; அது வெறும் ஒரு வகைக் களிப்பு, கேளிக்கை. ஆக, துயரம் இருக்கும் இடத்தில், அன்பு இருக்க முடியாது; அதன் காரணமாய் நுண்ணறிவும் இருக்காது.

அன்பு, அதற்கே உரித்தான நுண்ணறிவைக் கொண்டுள்ளது. தூய, களங்கப்படாத நுண்ணறிவை, காருண்யம் தனதியல்பாய் கொண்டிருக்கிறது. அத்தகைய நுண்ணறிவு இருங்குங்கால், அதுவே உலகை நடத்திச் செல்லும். எண்ணத்தின் விளைவாய் எழுந்ததல்ல அந்த

நுண்ணறிவு. எண்ணம் என்பது அற்ப விஷயம். மேற்கூறிய விளக்கங்களைக் கேட்ட பிறகு, அதில் பொதிந்திருக்கும் உண்மையை நீங்கள் காணும்போது, பரிபூரணமாக, முழு மனதுடன் அன்பு பாராட்டும் பாங்கின் மணத்தை அனுபவிக்கிறீர்களா? அல்லது, பழைய பாதையிலேயே பயணிப்பீர்களா?

மேலும், மரணம் பற்றியும் நாம் கலந்துரையாட வேண்டும். மரணம் பற்றிய சிந்தனை, விரும்பத்தகாத ஒன்றல்ல. அன்பு, வேதனை, துயரம் மற்றும் பயம் போன்றே, மரணமும் நம் வாழ்க்கையின் ஒரு அங்கமாக இருக்கிறது. மரணத்தை நீங்கள் தள்ளிப்போடலாம். 'நான் இன்னும் பத்து வருஷம் உயிர் வாழ்வேன்' என்று நீங்கள் சொல்லலாம் - ஆனால், முடிவில் மரணம் காத்திருக்கிறது. மனிதகுலம், மரணத்தைக் கண்டு அஞ்சுகிறது, அல்லது, 'மரணம் தவிர்க்க முடியாதது', 'பூமியில் தோன்றியவை எல்லாம், பூமியிலேயே மறைய வேண்டும்' என்பன போன்ற வசனங்களைப் பேசி, அதை அறிவுபூர்வமாக்கப் பார்க்கிறது.

இப்போது நாம் இறப்பதைப் பற்றியும், அதன் பொருள் பற்றியும், நாம் ஏன் அது குறித்து பயப்படுகிறோம் என்பது குறித்தும் கலந்துரையாடப் போகிறோம். மரணம் என்று உங்களால் அழைக்கப்படும் அந்த அசாதாரண நிகழ்வின் ஆழத்தையும் முழுமையான தாத்பரியத்தையும் நீங்கள் புரிந்துகொள்வதற்கு, நீங்கள் சுயவிசாரணை செய்து, உங்கள் பிரக்ஞையின் இயல்பு பற்றியும், உங்களைப் பற்றியும் முதலில் அறிந்துகொள்ள வேண்டும். ஒரு விளக்கம் என்பதாக இல்லாமல், நீங்கள் யார் என்பதைப் பற்றிய உண்மையான புரிதல் உங்களுக்கு இல்லையென்றால், அஞ்சத்தக்கவொன்றாக

மரணம் மாறிவிடுகிறது. அதனால், சிலர் செய்வதைப் போல, மரணத்தை பல்வேறு விதங்களில் நீங்கள் வழிபடத் தொடங்கிவிடுகிறீர்கள்.

மரணம் பற்றி ஆராய்வதற்கு முன், உங்களைப் பற்றி நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். நீங்கள் யார்? ஒரு பெயர், ஒரு வடிவம், குறிப்பிட்ட பண்புகள், இயல்புகள், விநோதமான சுபாவங்கள், விருப்பங்கள், வேதனைகள், கலக்கங்கள், குழப்பங்கள் கொண்ட ஆண் அல்லது பெண் என்பதாக நீங்கள் இருக்கிறீர்கள். உங்களின் இக்குழப்ப நிலையிலிருந்து பரிபூரணன் / பிரம்மம் / கடவுள் என்று, நிலைத்திருக்கும் ஒன்றாக அவற்றை நீங்கள் கண்டுபிடிக்கிறீர்கள். எண்ணங்களின் இயக்கமாக நீங்கள் திகழ்கிறீர்கள். தெய்வீகத்தின் பொறி உங்களுக்குள் இருக்கிறது என்ற கருத்தை எண்ணம் கண்டுபிடிக்கலாம். அக்கருத்து உங்களுக்கு மகிழ்ச்சி அளிப்பினும், அது வெறும் எண்ணத்தின் இயக்கமாகவே உள்ளது.

நீங்கள் ஏழையோ அல்லது பணக்காரரோ, படித்தவரோ அல்லது படிக்காதவரோ, ஆணோ அல்லது பெண்ணோ, இவ்வித்தியாசங்களுக்கு அப்பாற்பட்டு, நீங்கள் உண்மையில் யார்? உங்களை நீங்கள் பார்த்தறியும்போது, உண்மையில் நீங்கள் காண்பது என்ன? உங்களிடம் ஏதோ மேன்மையான தெய்வீகம் கொஞ்சம் இருப்பதாகச் சொல்லாதீர்கள். அக்கருத்து உங்கள் கண்டுபிடிப்பு; அது கொஞ்சமும் நிஜமல்ல. உங்களிடமே சாஸ்வதமான ஒன்று இருக்கிறதென்றால், நீங்கள் ஏன் சாஸ்வதத்தை எங்கெல்லாமோ தேடுகிறீர்கள்?

மரணத்தைப் பற்றிய ஆய்வை, அதைப் பற்றிய முன்தீர்மானங்களோ விஷய அறிவோ கொண்டிராமல் தொடங்கவேண்டும். உங்கள் முகத்தை நிலைக்

கண்ணாடியில் காண்கிறீர்கள் - அதுபோல உள்முகத்தை பார்க்கும்போது, போராட்டம், வேதனை, முரண்பாடு, குழப்பம், துயரம் போன்றவற்றால் அவதியுறுபவராக இருக்கிறீர்கள். உங்களுடைய உண்மை நிலை இதுதான். அனைத்து மாந்தர்களின் நிலையும் இதுவாகவே உள்ளது. ஆக, உங்கள் பிரக்ஞையாக இருப்பது உங்களின் பிரத்யேகமான பிரக்ஞை அல்ல.

பிரக்ஞை, மனிதகுலத்திற்கான பொதுவான அடித்தளமாக அமைந்து, மனிதகுலமே அதிலிருந்துகொண்டும் பகிர்ந்துகொண்டும் வாழ்கிறது. நாம் அனைவரும் பொதுவான பிரக்ஞையைப் பகிர்ந்துகொள்பவர்களே என்ற உண்மையை நம்மால் தெளிவாகப் பார்க்க முடிந்தால், பிறகு, மரணம் என்றால் என்ன என்ற கேள்விக்கு, நம் பதில் என்னவாயிருக்கும்?

உங்கள் களிப்பு, மனப்பதிவுகள், அனுபவங்கள், பற்றுதல்கள், இலட்சியங்கள், நம்பிக்கைகள் போன்ற அனைத்தின் முடிவாகவும் மரணம் இருக்கிறது. எல்லாம் முடிவுறுகிறது - நீங்களும் அவ்வகைப்பட்டவரே, நீங்களும் முடிவுறுகிறீர்கள். ஆனால், அம்மாதிரியான முடிவை நீங்கள் விரும்பவில்லை. முடிவுறுதல் என்பது உங்களுக்கு வேதனையாக இருக்கிறது. அதனால், நீங்கள் ஆறுதல் பெற, மறுபிறவி என்ற கருத்தைக் கண்டுபிடிக்கிறீர்கள், தேடுதலில் ஈடுபடுகிறீர்கள். அடுத்த பிறவியில் இப்பிறவியிலிருந்த எது புதியதாய் அவதரிக்கிறது என்ற கேள்வியை நீங்கள் கேட்பதே இல்லை. எது மறுபிறவி எடுக்கிறது? - உங்கள் மனப்பதிவுகளா? உங்கள் அனுபவங்களா? இப்போதிருப்பதைவிட நல்ல வாழ்க்கை, நல்ல வீடு கிடைக்கும் என்ற உங்கள் நம்பிக்கையா?

எது மீண்டும் பிறக்கிறது? மஹாராஜாவாகப் போகும் உங்கள் கனவா? உங்கள் கனவுகளோடும், அனுபவங்களோடும் இன்றைய நிலையில் நீங்கள் இப்படி இருக்கிறீர்கள் - நீங்களே மறுபிறவி எடுக்கப்போகிறீர்கள். உண்மையிலேயே, நீங்கள் மறுபிறவி எடுப்பீர்கள் என்று ஆழமாக நம்பினால், இந்தப் பிறவியில் எப்படி நடந்துகொள்கிறீர்கள் என்பது மிகவும் முக்கியத்துவம் பெற்றுவிடுகிறது. இன்று, எப்படிச் சிந்திக்கிறீர்கள், எத்தகைய உணர்வுடன் இருக்கிறீர்கள், உங்கள் எண்ணப் பிரதிபலிப்பு எப்படிப்பட்டது என்பதெல்லாம் முக்கியத்துவம் பெறுகிறது. காரணம், மறுபிறவி உண்டென்றால், அவையெல்லாம் மறுபிறவியில் தொடரப்போகிறது. மறுபிறவி என்பது வெறும் நம்பிக்கை மட்டுமே; அது நிஜத்தில் இல்லை.

நிஜமாக இருப்பது உங்களின் இன்றைய வாழ்க்கைதான். நீங்கள் அந்த நிஜத்தை எதிர்கொள்ளத் தயங்குகிறீர்கள். அதன் காரணமாக, மரணம், தவிர்க்கப்பட வேண்டிய ஒன்றாகிவிடுகிறது. 'மரணத்திற்கு பின், என்ன நேரிடுகிறது' என்ற கேள்வியைதான் நீங்கள் எப்போதும் கேட்கிறீர்களே தவிர 'மரணத்திற்கு முன்னால், வாழ்க்கை எப்படி இருக்கிறது?' என்ற கேள்வியை கேட்பதே இல்லை. உங்கள் வாழ்க்கை தற்சமயம் எவ்வாறுள்ளது? வேலை, வேலை, வேலை, அலுவலகம், பணம், வேதனை, முயற்சி, வெற்றி எனும் ஏணிப்படிகளில் ஏறுதல் என்பதாகத்தானே உங்கள் வாழ்க்கை இருக்கிறது? மரணம் இவை அனைத்திற்கும் முற்றுப்புள்ளி வைத்துவிடுகிறது.

வாழ்ந்துகொண்டிருக்கும்போதே உங்கள் பற்றுதல் களையும், உங்கள் நம்பிக்கைகளையும் முடிவிற்குக்

கொண்டுவர முடியுமா, அவற்றிற்கு முற்றுப்புள்ளி வைக்க முடியுமா? உங்களுக்கு வங்கியில் கணக்கிருந்தால், அதை முடிவிற்குக் கொண்டுவருவது சாத்தியப்படாது என்பது எனக்குத் தெரியும்! தன்னார்வத்துடன், எவ்வித உள்நோக்கமும் இல்லாமல், எவ்வித பலவந்தமும் இல்லாமல், ஒன்றை முடிவிற்குக் கொண்டுவருவதில் உள்ள அழகை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். முடிவிற்கு வருதலில், புதிய துவக்கம் உள்ளது.

ஒன்றை நீங்கள் முடிவிற்குக் கொண்டுவந்தால், ஏதோவொன்று நிகழ்கிறது; கதவுகள் திறக்கின்றன. ஒன்றை முடிவிற்குக் கொண்டுவருவதற்கு முன்பே, கட்டாயம் கதவுகள் திறக்கும் என்ற உத்தரவாதத்தைப் பெற நீங்கள் விரும்புவதால், நீங்கள் எதையும் முடிவுறச் செய்வதில்லை, உங்கள் உள்நோக்கங்களும் தொடர்கின்றன. உள்முகமாக, மனோரீதியில் பற்றுதல்கள் மற்றும் நம்பிக்கைகள் போன்றவற்றை முடிவுறச் செய்து வாழ்தல் என்பது, மரணத்தைப் பற்றிய புரிதலோடு கூடிய வாழ்தலாகும்.

மதம் மற்றும் தியானம் பற்றியும் நாம் அவசியம் கலந்துரையாட வேண்டும். மதம் என்றால் என்ன? நான் பல அகராதிகளில் 'மதம்' என்ற சொல்லின் மூலவார்த்தையையும் அர்த்தத்தையும் தேடியிருக்கிறேன். அச்சொல்லின் சந்தேகத்திற்கு இடமற்ற நிச்சயமான மூலவார்த்தையை கண்டுபிடிக்க முடியவில்லை. உங்களைப் பொறுத்தவரை, 'மதம்' என்றால் என்ன? - நம்பிக்கை மற்றும் சடங்குகள், அவ்வளவே.

நீங்கள் ஒரு கிருத்துவர் என்றால், மதம் என்றால் உங்களுக்கு குறிப்பிட்டவொரு இரட்சகர் மீது நம்பிக்கை வைத்தல், அனைத்துவித சடங்குகளையும் செய்தல்,

அழகான கலைநயம் கொண்ட கட்டுமானமாயிருக்கும் பிரதான திருக்கோயிலோடு தொடர்புடனிருத்தல் என்பதாக உள்ளது. நீங்கள் தேவாலயங்களில் கார்டினல் நடத்தும் பிரார்த்தனைக் கூட்டங்களைப் பார்த்திருக்கிறீர்களா என்று எனக்குத் தெரியாது. அந்தச் சடங்கு உண்மையிலேயே மிகவும் அற்புதமான ஒன்று. பேரழகுடன் மிகச் சரியாக நியமம் தவறாமல் செய்யப்படும் அச்சமயச் சடங்கு, பாமர மக்களை மிகவும் கவர்ந்திழுக்கிறது. நம்பிக்கை, கொள்கை, சடங்குகள், உங்கள் தினசரி பூஜை (நீங்கள் தினமும் பூஜை செய்தால்) மற்றும், அனைத்திற்கும் மேலாக, உங்கள் கடவுள் நம்பிக்கை ஆகியவற்றையே நீங்கள் மதம் என்று அழைக்கிறீர்கள்.

மதத்திற்கும் உங்கள் அன்றாட வாழ்க்கைக்கும் சிறிதளவும் சம்பந்தம் இல்லை. நிறுவப்பட்டதோ நிறுவப்படாததோ, எவ்வகைத்தாயினும், மதங்கள் அனைத்துமே, கொல்லாமை பற்றியும், அன்புடைமை பற்றியும் போதிக்கின்றன. ஆனால், நீங்களோ கொலை செய்துகொண்டேதான் இருக்கிறீர்கள். பொய்யான கடவுளரை ஓரினமாய் நீங்கள் பூஜித்துக் கொண்டிருப்பது ஒருவகையான பண்டைய பழங்குடி மக்கள் மனப்பான்மையே. சீக்கியர், முஸ்லீம், ஹிந்து என்று பிரிந்து, தனித்தனி இனமாய் இருப்பது இனவழி மனப்பான்மையே. நீங்கள் ஒருவரையொருவர் கொலை செய்கிறீர்கள் - அதை 'மதம்' என்றும் அழைக்கிறீர்கள்.

சமயவுணர்வுள்ள மனதின் இயல்பை அறிந்துகொள்ள மேற்கண்ட சிறுபிள்ளைத்தனமான செயல்களை தூர எறிய வேண்டும். அப்படி எறிவீர்களா? கட்டாயம் இல்லை. உங்கள் பூஜைகளை, உங்கள் சடங்குகளை

நீங்கள் தொடர்ந்து செய்துகொண்டுதானிருப்பீர்கள். குருமார்களுக்கு அடிமையாக தொடர்ந்து இருப்பீர்கள். மதம் என்பது ஒருவிதமான கேளிக்கையாக இப்போது ஆகிவிட்டது. அக்கேளிக்கையை, நீங்கள் மிகவும் புனிதமானவொன்றாக கருதலாம். இருப்பினும், உங்கள் அன்றாட வாழ்க்கையில் ஒரு விதத்திலும் தாக்கம் ஏற்படுத்தாத அந்த மதம், வெறும் கேளிக்கையே.

ஒரு கிருத்துவராகவோ, ஒரு ஹிந்துவாகவோ, ஒரு பௌத்தராகவோ உங்களைக் கருதிக்கொள்ளாமல், எந்த மதத்தையும் சேர்ந்தவராக இல்லாமல், பூஜை புனஸ்காரங்களை தூக்கி எறிந்துவிட்டு வாழ உங்களால் முடியுமா? அவற்றையெல்லாம் விட்டுவிடுங்கள்; அவை அனைத்தும் பன்னெடுங்காலமாய் செய்யப்பட்டுவரும் பிரசாரங்கள். கணினி செயல்பட எவ்வாறு செயல்திட்ட வரைவு உள்ளதோ, அவ்வாறே நீங்களும் செயல்திட்ட வரைவிற்கு (programme) உட்படுத்தப்பட்டுள்ளீர்கள். 'நான் ஒரு ஹிந்து' என்று நீங்கள் சொல்லும்போது, நீங்கள் கடந்த ஐந்தாயிரம் ஆண்டுகளாக இயங்கிவரும் செயல்திட்ட வரைவின்படி சொல்கிறீர்கள். மதத்தின் தன்மையைப் பற்றி ஆய்வு செய்யும்போது, நீங்கள், 'ஹிந்து', 'முஸ்லீம்' போன்ற இனவழி மனப்பான்மை யிலிருந்து விடுபட்டு இருக்க வேண்டும். அப்படி இருப்பீர்களா?

பொய்மைகளிலிருந்தும், கற்பனைகளிலிருந்தும் விடுதலை பெற்ற பின்பே, தியானம் என்றால் என்ன என்பதைப் பற்றி உங்களால் ஆராய முடியும். முரண்பாடுகளில் சிக்கித் தவிக்கும் மனதாலும் மற்றும் போராட்டத்தில் உழலும் மூளையாலும், தியானம் செய்ய இயலாது. ஒவ்வொரு நாளும், காலையிலோ,

மாலையிலோ, இரவிலோ, இருபது நிமிஷம் மௌனமாக அமர்ந்து தியானிக்கிறீர்கள். ஆனால், முரண்பாட்டிலும், வேதனையிலும், பதற்றத்திலும், தனிமையிலும், சோகத்திலும் உங்கள் மூளை இருக்குமேயானால், உங்கள் தியானத்திற்கு மதிப்பு ஏதும் உண்டா?

எப்படித் தியானம் செய்யவேண்டும் என்பதைப் பற்றி நாம் பேசப்போவதில்லை. ஆனால், தியானம் என்றால் என்ன என்பதைப் பற்றி விசாரணை செய்யலாம். 'தியானம் எப்படிச் செய்வது?' என்ற உங்கள் கேள்வியில், நீங்கள் வேண்டுவது, ஒரு வழிமுறை, விதிமுறை, பயிற்சி முறை. பயிற்சி, அதாவது தினசரி தவறாமல் திரும்பத் திரும்பச் செய்வது, உங்கள் மூளையை எவ்வாறு பாதிக்கிறது என்று உங்களுக்குத் தெரியுமா?

தினசரி பயிற்சியால், உங்கள் மூளை, மந்தமாகிப்போய், இயந்திரத்தனமாய் இயங்க ஆரம்பிக்கும். ஒன்றை ஓயாமல் பயிற்சி செய்வதின் விளைவாக, மூளை, ஜீவனற்றதாகி, துடிப்புடன் இயங்காமல் மந்தகதியை அடைகிறது. மௌனநிலையை, அனுபூதி நிலையை எட்டிவிட வேண்டும் என்ற மூளையின் முயற்சி, அதற்கு சித்ரவதையாகிப் போகிறது. அனுபவத்தைப் பெற்றுவிடுவதற்காக தியானம் செய்தால், அது தியானம் அல்ல. உதாரணத்திற்கு, அரசியல்வாதி பெரும் முயற்சி செய்து அமைச்சராகிவிடுகிறார் - நீங்கள் அனுபவம் பெறுவதும் அதுபோன்ற ஒருவகை சாதனையே. ஞானவொளி மற்றும் மௌனநிலையை உங்கள் தியானத்தில் சாதித்துவிட வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள். நீங்களும் அரசியல்வாதியும் ஒரே மாதிரியான செயல்முறையைதான், முயற்சி என்ற செயல்முறையை, பின்பற்றுகிறீர்கள். ஆனால்,

அச்செயல்முறையை, நீங்கள் ஆன்மீகம் என்றழைக்கிறீர்கள், அவர் அதை அரசியல் சாதனை என்கிறார் - இரண்டிற்கும் பெரிய வித்தியாசமில்லை.

தியானம் என்றால் என்ன? தியானம் என்ற வார்த்தையின் பொருள் என்ன? அகராதிகளில், 'ஒன்றைப் பற்றி எண்ணிப் பார்ப்பது, அக்கறை கொள்வது, தீர ஆராய்வது, பார்ப்பது' போன்ற அர்த்தங்கள் 'தியானம்' என்ற சொல்லிற்கு அளிக்கப்பட்டுள்ளது. ஆக, தியானம் என்பது தீர ஆராய்வதாகும். 'தியானம்' என்ற சொல், ஒன்றை அளவிடுதலையும் குறிப்பாக உணர்த்துகிறது. குழப்பமில்லாமல், விருப்புவெறுப்பின் அடிப்படையில் இல்லாமல், தெளிவாக சிந்திக்கும் திறனையும் 'தியானம்' சுட்டிக்காட்டுகிறது. மேலும் தியானம், அளவீடு (measurement) என்பதாகவும் பொருள்படுகிறது.

நாம் சதா அளவீடு செய்துகொண்டு இருக்கிறோம், சதா ஒப்பீடு செய்துகொண்டிருக்கிறோம். 'நான் இன்று இப்படி இருக்கிறேன், நாளை அப்படி ஆவேன்' என்பது ஒருவகை அளவீடு. 'மேலும் சிறப்புடன் இருப்பேன்' - இதில் 'மேலும்' என்பது அளவீடு. உங்களை மற்றவருடன் ஒப்பிட்டுப்பார்ப்பது, ஒரு அளவிடுதல் ஆகும். உங்கள் மகனிடம், 'நீ உன் அண்ணனைப்போல் இருக்கவேண்டும்' என்று நீங்கள் சொல்வது, அளவீடு செய்யும் முறையாக உள்ளது. நாம் எப்பொழுதுமே ஒப்பீடு செய்கிறோம், அளவீட்டில் வாழ்கிறோம் - இது உண்மை, இல்லையா? நம் மூளை அளவிட்டுப்பார்க்கும் விதத்திற்கு பழக்கப்பட்டிருக்கிறது, தளைப்பட்டிருக்கிறது. 'இன்று நான் இவ்வாறிருக்கிறேன். அடுத்த ஆண்டு நான் வித்தியாசமாக இருப்பேன் என்று நம்புகிறேன்' என்று நீங்கள் சொல்லும்போது, அங்கு அளவீடு இடம் பெறுகிறது.

முழுவதுமாக, முற்றிலுமாக அளவீடுகளிலிருந்து விடுதலை பெற்று வாழ்வது என்பது தியானத்தின் ஓர் அங்கமாய் உள்ளது. 'நான் அவ்வாறிருக்க பயிற்சி செய்வேன். இன்னும் ஓராண்டு கால அவகாசத்தில் அதைச் சாதிப்பேன்' என்பதல்ல தியானம். அளவீடு செய்தல், ஒருவரின் இயல்பாகவே இருக்கிறது; ஒருவரின் தன்முனைப்பு செயல்பாடாகவே அது இருக்கிறது. பள்ளிகளிலும், மாணவர்களின் திறன், ஒப்பீடு செய்யப்படுகிறது, பல்கலைக்கழகங்களிலும் அது தொடர்கிறது. நம்மைவிட அறிவில் மேம்பட்டவர்களுடனும், உடலழகில் சிறந்தவர்களுடனும் நம்மை நாம் ஒப்பிட்டுக்கொள்கிறோம். இந்த ஒப்பிடும் செயல்பாடு ஓயாமல் நடந்துகொண்டேயிருக்கிறது. நீங்கள் அறிந்தோ அறியாமலோ இந்த இயக்கம் தொடருகிறது. தியானம் என்பது அளவீடுகளையும், ஒப்பீடுகளையும் முடிவிற்குக் கொண்டுவருதலாகும். இவ்வாறு சொல்வது எதைக் குறிக்கிறது என்பதைப் பாருங்கள்: உளரீதியான நாளை என்பது இல்லை என்பதையே குறிக்கிறது. நாளை என்பது 'உள்ளதை' காலஅளவையின்படி அளவீடு செய்வதாகும். ஆக, அளவீடு, ஒப்பீடு மற்றும் தீர்மானங்கள் ஆகியவை முற்றிலுமாக முடிவுறவேண்டும்.

விதிமுறைகளின்படி செய்யப்படும் தியானவகைகள் அனைத்துமே மனவுறுதியின் நடவடிக்கைகளாகவே உள்ளது. 'நான் தியானம் செய்வேன், அமைதியாக அமர்ந்திருப்பேன், என்னைக் கட்டுக்குள் வைத்திருப்பேன், என் எண்ணங்களைக் குறுக்கி மையப்படுத்துவேன், நான் தீவிரப் பயிற்சி செய்வேன்' - என்று எண்ணமிடுகையில் அங்குச் செயல்படுவது மனவுறுதியின் சாரமாய் இருக்கும் விருப்பவுணர்வே. மனவுறுதி மற்றும் தீர்மானத்தின் செயல்பாட்டிற்கு தியானத்தில் இடம் இல்லை.

மேற்கூறப்பட்ட உண்மையின் அழகை உங்களால் காண முடிகிறதா? அளவீடுகள், ஒப்பீடுகள், சாதித்தல் மற்றும் உளரீதியான 'ஆதல்' இல்லாத இடத்தில், 'தான்' என்ற அகந்தையிலிருந்து விடுபட்ட நிலையின் அமைதி குடிகொள்கிறது. தியானத்தில் 'தான்' என்ற உணர்வுக்கு இடமில்லை. 'தியானம் செய்வது எப்படி என்று எனக்குச் சொல்லுங்கள். ஜென்முறை, திபெத்திய முறை, பௌத்த முறை மற்றும் ஹிந்து முறை போன்ற தியான முறை களை நான் பயிற்சி செய்திருக்கிறேன்' என்று நீங்கள் சொல்லும்போது, நீங்கள் குறிப்பிடும் தியானம், தியானமே அல்ல. ஒருவகை விருப்பவுணர்வாக இருக்கும் மனவுறுதி யின் செயல்பாடாகவே அத்தியானமுறைகள் உள்ளன.

ஆக, மாதிரிவழிமுறைகளின்படி, பயிற்சி செய்கை யில், குறிப்பிட்ட அந்த நேரத்தில் மனம் / மூளை 'தியான'த்திலிருக்கிறது - அவ்வளவே, ஒட்டுமொத்த தியானமும் அவ்வளவே. ஆனால், வாழ்க்கை முழுவதும் தியானமாக இருத்தல் வேண்டும். நீங்கள் 'தியானம்' செய்யும் குறிப்பிட்ட அந்த நேரத்தில் மட்டும் தியானம் என்பதாக 'தியானம்' இல்லை. வாழ்க்கையின் பரிபூரண இயக்கமாக தியானம் இருக்கிறது. ஆனால், நீங்களோ, உங்கள் வாழ்க்கையிலிருந்து தியானத்தை வேறுபடுத்தி பிரித்து வைத்துவிட்டீர்கள். போதை மருந்துகளுக்கு இணையாக, களைப்பு நீங்கி ஓய்வெடுக்கும் வழியாக, தியானத்தை ஆக்கிவிட்டீர்கள். திரும்பத்திரும்ப, தியானத்தில் நீங்கள் உச்சரிக்கும் மந்திரச் சொல்லிற்குப் பதிலாக, 'கோகோ கோலா' என்று நீங்கள் உச்சாடனம் செய்தாலும், விளைவு என்னவோ ஒன்றுதான் - மனம் மந்தமாகிப் போகும்.

அளவீடுகள் அகன்று, விருப்பம் மற்றும் தீர்மானங்கள் ஏதுமின்றி, அனைத்து மாதிரிவழிமுறை

களிலிருந்தும் முற்றிலுமாக விலகி இருக்கும்போது, தியானத்தில் சுதந்திரவுணர்வு பெரிதும் மேலோங்கி இருக்கும். அத்தகைய சுதந்திரத்தில், பரிபூரண ஒழுங்கு நிலவும். உங்கள் வாழ்வில் நீங்கள் அந்த பரிபூரண ஒழுங்கினை கொண்டிருக்க வேண்டும். அப்படிப்பட்ட வாழ்வில், மனம் அமைதியில் இருக்கும். அந்த அமைதி, உருவாக்கப்பட்டதோ, தேடப்பட்டதோ, அமைதியான மனம் வேண்டும் என்று கோரப்பட்டதோ அல்ல. அமைதியை உருவாக்குவதும், தேடுவதும் சிறுபிள்ளைத் தனமானது. மேன்மையான ஒன்றாக 'ஆதல் வேண்டும்' என்ற தன்முனைப்பின் செயல்பாடாக இருக்கும் அளவீடுகளிலிருந்து விடுதலை பெறுவதால் கிடைக்கும் பரிபூரண ஒழுங்கில், அமைதி பரிமளிக்கிறது.

எண்ணங்களால் உருவாக்கப்படாத புனிதம் இருக்கிறதா? கோயில்களிலோ, மசூதிகளிலோ, மாதாகோயில்களிலோ, புனிதம் ஏதுமில்லை. அவைகள் எல்லாம் எண்ணங்களின் கண்டுபிடிப்பு. அவற்றை யெல்லாம் ஒதுக்கித்தள்ளிய பிறகு, புனிதம் என்று ஏதும் உள்ளதா? அப்புனிதம் பெயரிடப்படாத, காலத்தைக் கடந்த, எதன் விளைவாய் நம் வாழ்வில் பேரழகும் ஒழுங்கும் இருக்கிறதோ, அதுவாக உள்ளது. ஆகவேதான், உண்மையான தியானம், வாழ்வின் இயக்கமாக அமைகிறது.

உங்கள் வாழ்க்கை, உங்கள் எண்ணப் பிரதிபலிப்புகள், நீங்கள் நடந்துகொள்ளும் விதம் போன்றவற்றிற்கு அடிப்படையாக இருப்பதைப் பற்றிய புரிதல் உங்களுக்கு இல்லையென்றால், நீங்கள் செய்யும் தியானத்திற்கு அர்த்தம் ஏதுமில்லை. நீங்கள் கங்கைக் கரையிலோ அல்லது வேறெங்கோ அமர்ந்துகொண்டு

அனைத்துவித யுக்திகளையும் உங்கள்மேல் கையாளலாம். ஆனால், அது அல்ல தியானம். அன்றாட வாழ்வின் அங்கமாக தியானம் உள்ளது. நம் வாழ்க்கையில் சுதந்திரத்தோடும், ஒழுங்கோடும் இயங்கும் இயக்கமாக தியானம் இருக்கும்போது அதிலிருந்து பேரமைதி மலர்கிறது. அந்த உன்னத நிலையை நீங்கள் அடையும்போதுதான், பரிபூரணமான புனிதத்தை உங்களால் கண்டுகொள்ள முடியும்.

*புது தில்லி, 07.11.1982*

■ ■

## கல்கத்தா உரையாடல்கள்

1. 20.11.1982
2. 21.11.1982
3. 27.11.1982
4. 28.11.1982

# 5

# மனிதனின் நிலைமை

இவ்வுரையாடலின் தொடக்கத்திலேயே, நமக்கிடையே தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். வழக்கமாக 'சொற்பொழிவு' என்று கருதப்படும் ஒன்றாக, இந்நிகழ்வு இருக்கப்போவதில்லை. குறிப்பிட்டதொரு தலைப்பின்கீழ், விளக்கங்களையும், வழிகாட்டுதல்களையும் அளிக்கும் பிரசங்கமாக இருப்பது 'சொற்பொழிவு.' ஆனால், இங்கு, நீங்கள் பேச்சாளருடன் கலந்துரையாடப் போகிறீர்கள்.

நீங்கள் என்ன செய்ய வேண்டும், எதைச் சிந்திக்க வேண்டும், எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதையெல்லாம் பேச்சாளர் உங்களுக்குச் சொல்லப் போவதில்லை. மேடை மீது அவர் அமர்ந்திருப்பது, பார்வையாளர்கள் அனைவரும் அவருடன் தொடர்பு கொள்ள வசதியாக இருக்கும் என்பதற்காக மட்டுமே - மேடையில் அமர்ந்திருப்பதால், அவருக்கு அதிகாரம் ஏதும் வந்துவிடவில்லை.

உலக நடவடிக்கைகளில் அக்கறை உடைய இருவர் உரையாடுவதாகவே இந்நிகழ்வு இருக்கும். குறிப்பிட்ட நபரைப் பற்றியதாக இல்லாமல், உலகில் வாழும்

அனைவரின் நிலைமையும் எவ்வாறிருக்கிறது, அவர் களுக்கு என்ன நேரிடுகிறது என்பதைப் பற்றியெல்லாம் சுமுகமாக, உணர்ச்சிவயப்படாமல், விருப்புவெறுப்பு களுக்கு இடம் அளிக்காமல், நாம் கலந்துரையாடப் போகிறோம்.

முக்கியமான விஷயத்தைப் பற்றிப் பேச, இங்கு நாம் மேற்கொள்ளும் நட்புடன் கூடிய தொடர்புக்கு, எவ்வாறு மற்றவர் சொல்வதை கவனத்துடன் கேட்பது என்ற கலையை நாம் முதலில் கற்றுக்கொள்ள வேண்டும். பிறர் பேசுவதை நாம் ஊன்றிக் கேட்பதே இல்லை. அவர் பேசிக்கொண்டிருக்கும்போது, நாம் நம் பிரச்சினைகள் பற்றிய எண்ணங்களிலும், நம் தனிப்பட்ட கருத்து களிலும், தீர்மானங்களிலும் மூழ்கிவிடுகிறோம். அதன் விளைவாக, எதிராளி என்ன சொல்கிறார் என்பதைக் கேட்பது நமக்கு மிகவும் சிரமமாகி விடுகிறது. ஊன்றிக் கேளுங்கள் என்று நான் சொல்கிறேன். உற்றுக்கேட்கும் கலையை அறிந்துகொள்ளுங்கள்.

போர், பல்வேறு நாடுகளாக சிதறுண்டிருக்கும் உலகம், பல்வேறு சித்தாந்தங்கள் மூலம் பிளவு பட்டிருக்கும் மக்கள் கூட்டம் மற்றும் மனிதஉறவுகளின் நிலைமை என்பன பற்றியெல்லாம் நாம் கலந்துரையாடப் போகிறோம். மேலும், பயம் மற்றும் களிப்பினால் தோன்றும் பிரச்சினைகள், மானுடச் சிந்தனையிலிருக்கும் சிக்கல்கள், துயரம் முடிவுறுமா என்ற கேள்வி, மரணம் குறித்த தாக்கங்கள் ஆகியவைப் பற்றியும் கலந்துரையாடப் போகிறோம். சமயம் என்றால் என்ன, தியானம் எத்தகையது, பரிபூரணமானதும் நிலைப்பேறுடையதுமான புனிதம் ஒன்றுண்டா என்பதைப் பற்றியும் பேசப்போகிறோம். எனவே, பேசப்படுவதை

நல்லமுறையில் கேட்க, உற்றுக்கேட்கும் கலை உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

உங்கள் சொந்த கருத்துக்களுடனும், உங்களின் சம்பிரதாயங்களின்படியும், உங்களின் விஷயஅறிவைச் சார்ந்தும் கேட்காமல், சொல்லப்படும் விஷயத்தை கவனமாகக் கேட்கும்போது, நம்மிடையே உள்ள தொடர்பு இயல்பானதாகவும், இலகுவானதாகவும் நெருக்கம் பெறுகிறது. ஆனால், நாம் ஒருமித்து சிந்திக்கவில்லை யென்றால் - அவ்விதத்தில் சிந்திப்பது மிகவும் சிரமமான காரியம் என்றாலும் - அவ்வாறு சிந்திக்கவில்லை யென்றால், இருவேறு திசைகளில் நீங்களும் பேச்சாளரும் சிந்தித்துக் கொண்டிருப்பீர்கள். எனவே, கேட்கும் கலை மூலம் கவனியுங்கள். உற்றுக்கேட்கும் கலை என்பது பேச்சாளர் கூறுவதை உங்கள் எண்ணத்திற்கு ஒத்தவாறு மொழிபெயர்த்தல் அல்ல. வார்த்தையையும், வார்த்தையின் உட்பொதிவை யும், அதன் ஆழத்தையும், முக்கியத்துவத்தையும் ஒருசேர கேட்பதுவே உற்றுக் கேட்கும் கலை.

பேச்சாளர், இப்பிரச்சினைகளை நிதானமாக, தெளிவாக, படிப்படியாக, உணர்ச்சிகளின் தலையீடின்றி, உங்களுடன் சேர்ந்து ஆராயப்போகிறார். பேச்சுவழக்கில் உள்ள எளிமையான மொழிநடையில் பேசப்போகிறோம். எளிதில் புரியாத சொற்களோ அல்லது குறிப்பிட்டதொரு சிறப்புத்துறை பற்றிய விளக்கமோ இவ்வுரையாடலில் இருக்கப்போவதில்லை. ஆங்கிலத்தில் பேசப்போகிறோம். எளிதில் புரியாத சொற்களை உபயோகிக்கப்போவதில்லை. நம்மிடையே சரியான தொடர்பை ஏற்படுத்திக்கொள்வது மிகவும் அவசியமாகும்.

பேச்சாளர், யாருக்கும் குருவாக இல்லை. எப்படிச் சிந்திக்க வேண்டும், எதைச் சிந்திக்க வேண்டும் என்றெல்லாம் அவர் எடுத்துச் சொல்லப்போவதில்லை. உலகம் முழுவதிலும் உள்ள மனிதர்களின் செயல்பாடுகளை நாம் ஒன்றுசேர்ந்து கவனமாகப் பார்க்கப் போகிறோம். நாற்பதாயிரம் ஆண்டு பரிணாம வளர்ச்சிக்குப் பின்னரும் மனிதன் ஏன் இவ்வாறிருக்கிறான், மனிதர்கள் ஏன் ஒருவரையொருவர் கொல்கிறார்கள், அழிக்கிறார்கள், சுரண்டுகிறார்கள், மற்றும் யூதர்கள், அரேபியர்கள், ஹிந்துக்கள், முகமதியர்கள் என்று ஏன் உலகை பல்வேறு பிரிவினைக்கு உட்படுத்தினார்கள் என்பது பற்றியெல்லாம் கலந்துரையாடப் போகிறோம்.

மேற்கூறப்பட்டவைகளைப் பற்றியெல்லாம் நாம் பார்த்தறிய போகிறோம். பார்த்தறிதல் மிக முக்கியம். ஆனால், கண்ணோட்டத்தில் வங்காளி / இந்தியன் / ரஷ்யன் / சீனன் / அமெரிக்கன் என்பதுபோல் குறிப்பிட்டதொரு கண்ணோட்டத்தில் இல்லாமல், உள்ளவாறு பார்த்தறிதல் அவசியம்.

மனிதன் கொடூரமானவனாக, அழிவு சக்தியாக, வன்முறையாளனாக, இலட்சியவாதியாக ஏன் ஆனான் என்பதையும், நம்மில் பலருக்குத் தெரியாத தொழில்நுட்ப உலகின் பிரமிக்க வைக்கும் சாதனைகளை மனிதன் சாதித்து வருகிறான் என்பதையும் பல்லாயிரம் ஆண்டுகளாக பல்வேறு யுத்தங்களின் துயரத்தை அனுபவித்து கண்ணீர் சிந்தியப் பிறகும் திருந்தாமல் மனிதன் ஏன் இவ்வாறு நடந்துகொள்கிறான் என்பதையும் பற்றி நாம் காண்பதாக உள்ளோம்.

ஆக, நாம் சேர்ந்து சிந்திக்கிறோம் - ஏற்றுக் கொள்வதாகவோ, மறுப்பதாகவோ இல்லாமல், என்ன நடக்கிறது என்பதை இம்மியும் பிசகாமல், ஒரு வரைபடத்தைப் பார்ப்பதுபோல், இவ்விஷயங்களை நாம் பார்க்கப் போகிறோம். கத்தோலிக்கர், ஹிந்து, முஸ்லீம் என்று பல்வேறு மதத்தவராய் உலகம் பிரிந்து கிடக்கிறது. எங்கெல்லாம் பாகப்பிரிவினை இருக்கிறதோ, அங்கெல்லாம் சச்சரவுகள் கட்டாயம் இருக்கும் - இது இயற்கையின் நியதி. ஏன் இந்தப் பிரிவினை? யார் இதைக் கொண்டுவந்தார்கள்?

பேச்சாளரும் நீங்களும், அதாவது, நாம் ஒருங்கிணைந்து சிந்திக்கிறோம் என்று நம்புகிறேன். பேச்சாளர் சொல்வதை வெறுமனே ஏற்றுக்கொண்டோ, அல்லது மறுத்துக்கொண்டோ நீங்கள் கேட்பதாய் இருப்பின், அது உண்மையில் கேட்பதே இல்லை. பேசப்படும் விஷயம், உங்களைப் பற்றியது, மனிதகுலத்தைப் பற்றியது. மனிதர்களாகிய நாம் இப்பிரச்சினைகளைப் பற்றி எண்ணிப் பார்க்க வேண்டும்.

அதிகாரத்தில் உள்ளவர்கள் சொல்வதை, குருமார்கள் உபதேசிப்பதை, புனித நூல்கள் போதிப்பவற்றை, இந்தப் பேச்சாளர் உரைப்பதை, அப்படியே ஏற்றுக்கொள்ளக் கூடாது, பரிசீலிக்க வேண்டும், ஐயுற வேண்டும், கேள்வி எழுப்ப வேண்டும். வெறுமனே ஏற்றுக்கொண்டோ அல்லது மறுதலித்துக்கொண்டோ மட்டும் இருந்தீர்களே யானால், நீங்கள் மாற்றம் ஏதும் பெறாமல், இருக்கும் இடத்திலேயே நின்றுவிடுவீர்கள்; உங்கள் மனப் போக்கிலோ பிரக்ஞையின் உட்பொதிவிலோ எந்தவித புரட்சிகரமான மாற்றத்தையும் பெற முடியாமல் போய்விடும். சேர்ந்து சிந்திக்கலாம் வாருங்கள் என்று மிக்க மரியாதையுடன் உங்களை அழைக்கிறேன்.

கல்கத்தா குறுஞ்சாலையைப் போன்றில்லாத அமைதியானதும், காற்று வீசும் மரங்கள் நிறைந்ததுமான சுத்தமான ஒரு தெருவில் மனிதகுலத்தின் பிரச்சினைகளைப் பற்றி கலந்துரையாடிக் கொண்டு செல்லும் இரண்டு நண்பர்களைப் போல் நாம் செல்கிறோம். உங்களுக்கும் பேச்சாளருக்கும் இடையே நடைபெறும் உரையாடல் இது. நாம் பரஸ்பரம் பேசுகிறோம், கேட்கிறோம். உரையாடல் என்பது இருவருக்குமிடையே நிகழும் சம்பாஷணை. இந்த மாபெரும் கூட்டத்தில் உரையாடல் செய்வது சாத்தியமல்ல. ஆனால், ஆயிரக்கணக்கில் மக்கள் இங்குக் கூடி இருந்தாலும், நாம் ஒருவரோடு ஒருவர் பேச முடியும்.

ஏன் மனிதன் இன்றைய நிலைக்கு ஆளானான்? மிகப் பெரிய அளவில் தொழில்நுட்ப வளர்ச்சி, விஷய அறிவு மேம்பாடு, அனுபவ அறிவுத்திறம் என்ற இவையனைத்தையும் பெற்றிருந்தும், நாற்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தது போலவே இருக்கிறோமே, ஏன்? நம் மனம் மற்றும் மூளை, கணினியைப் போல, செயல்திட்ட வரைவு (programme) செய்யப்பட்டு விட்டதா, என்ன? கணினிப் பொறியாளர்கள், செயல்திட்ட வரைவுகளைத் தயாரித்து, கணினியில் பொருத்திவிடுகிறார்கள். செயல்திட்ட வரைவைக் கொண்டிருக்கும் கணினி, கணக்கிலடங்காத விவரங்களை நாம் வேண்டும்போதெல்லாம் திரும்பத் திரும்ப நமக்கு அளிக்கிறது - மேலும், நம்மைவிட வேகமாய் செயல்படுகிறது!

நான் திரும்பத் திரும்ப என்னை வங்காளி என்றோ முஸ்லீம் என்றோ ஹிந்து என்றோ கூறிக்கொள்வது, என்

மூளையிலிருக்கும் செயல்திட்டவரைவின் காரணமாகவா? சம்பிரதாய முறைப்படியும் குறுகிய, வரையறுக்கப்பட்ட வழியிலும் சிந்திக்க, நம் மூளை செயல்திட்ட வரைவு செய்யப்பட்டுள்ளதா? மண்டையோட்டுக்குள்ளிருக்கும் உங்கள் மூளை வரையறுக்கப்பட்ட ஒன்றா? பிரமிக்க வைக்கத்தக்க கண்டுபிடிப்புகளையும், அசாதாரணமான தொழில்நுட்ப வளர்ச்சியையும் பெற்றுத்தரும் ஆற்றல் பெற்றது மூளை. அன்றாட வாழ்க்கைப்பிரச்சினை களிலும், நம் சாதனைகளிலும் நாம் மூழ்கிப் போயிருப்பதால், உயிரியலில், தொழில்நுட்ப உலகில், போர்த்தளவாடங்கள் உற்பத்தியில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பது நம்மில் பலருக்குத் தெரியாது. உளவியல், உணர்வு மனம் மற்றும் ஒழுக்கம் பற்றிய விஷயங்களை முற்றிலுமாகப் புறந்தள்ளிவிட்டு, தனியொரு திசையில், தொழில்நுட்ப உலகில் மட்டுமே மிகப் பெரிய அளவில் மனிதகுலம் முன்னேறி வருவதை நாம் பெரும்பாலும் மறந்துவிடுகிறோம். இவ்வாறிருப்பதற்கான காரணங்களை நாம் இங்குக் காணப்போகிறோம்.

கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாக, இரட்சகர் என்ற ஒருவர் மட்டுமே இருப்பதாக பறைசாற்றிக் கொண்டு, குறிப்பிட்ட போதனைகளில் நம்பிக்கை வைத்திருக்கும் கிருத்துவர்கள் ஏன் அவ்வாறு சிந்திக்க செயல்திட்ட வரைவு செய்யப்பட்டுள்ளார்கள்? ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக குறிப்பிட்டவொரு கோட்பாட்டில் நம்பிக்கை வைத்திருக்கும் முஸ்லீம்களும், கடந்த ஐயாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக, தாங்கள் ஹிந்துக்கள் என்று நம்பும் இம்மக்கள், ஏன் அவ்வாறு செயல்திட்ட வரைவு செய்யப்பட்டுள்ளார்கள்?

இதிலிருந்து நாம் தெரிந்துகொள்வது என்னவெனில் நம் மூளை தளைபட்டிருக்கிறது. பழக்கப்படுத்தப்

பட்டுள்ளது என்பதே. நம் மூளை எவ்வாறு செயல்படுகிறது, எவ்வாறு சிந்திக்கிறது, எவ்வாறு உணர்ந்தறிகிறது என்பதைப்பற்றியெல்லாம் நாம் எப்பொழுதாவது தெளிவாக அறிந்துகொண்டிருக் கிறோமா? ஒரு குறிப்பிட்ட வழியில் செயல்படவும், சுகிக்கவும், துன்பப்படவும், பயமெனும் பெரும்பாரத்தைச் சுமக்கவும், நிச்சயமின்மை, குழப்பம், மரணபயம் போன்ற சுமைகளால் வாடவும் 'இது'வாகவோ அல்லது 'அது'வாகவோ செயல்படவே, நம் மூளை, பழக்கப்படுத்தப்பட்டு கட்டுண்டிருக்கிறது. ஆக, நாம் தளைபட்டவர்கள்.

மெத்தப் படித்தவர்கள், பேராசிரியர்கள், எழுத்தாளர்கள் மற்றும் மார்க்ஸ்ஸை குருவாக ஏற்றுக்கொண்டிருக்கும் கம்யூனிஸ்ட்டுகள் போன்ற பலர், மனித மூளை, தளைபட்டதாகவே என்றும் இருக்கும் என்றும் அது சுதந்திரமாக இருக்க இயலாது என்றும் கூறுகிறார்கள். சுற்றுச்சூழலை மாற்றி, மூளையின் தளைபட்ட நிலையில் சிறிதே மாற்றம் ஏற்படுத்தலா மென்றும் புதிய சட்டங்கள் மூலமாக இங்கொன்றும் அங்கொன்றுமாக மாற்றம் ஏற்படுத்த முடியுமே தவிர, மூளையின் தளைபட்ட நிலை நீங்காது, அது என்றும் சுதந்திரத்தோடு செயல்படாது என்பது அவர்களின் கருத்து. தயவுசெய்து, அக்கருத்தின் விளைவுகளைப் புரிந்துகொள்ளுங்கள்.

சர்வாதிகார ஆட்சி நடக்கும் நாடுகளில், மக்களை சுதந்திரமாகச் சிந்திக்க அனுமதிக்காமல், அரசாங்கம் அவர்கள் சிந்தனையை கட்டுப்படுத்துகிறது; கட்டுப்பாட்டிற்கு அடங்காமல் சுதந்திரமாக சிந்தித்தால், அவர்களை மனநோய் மருத்துவமனைக்கோ அல்லது

தீவாந்தர சிட்சை அளித்து வன்சிறைக்கோ அனுப்பிவிடும். அனுபவங்களாலும் விஷயஅறிவாலும் பழக்கப் படுத்தப்பட்டு தளைபட்டு கட்டுண்டிருக்கும் மனித மூளை, என்றாவது பயமில்லாமல், தளைகள் இல்லாமல், சுதந்திரமாக இருக்கக் கூடுமா என்பதை எண்ணிப் பார்ப்பது, மிகவும் அவசியமான ஒன்றாக இருக்கிறது. தளைகள் இருக்கும் இடத்திலெல்லாம் மோதல்கள் இருக்கும், முரண்பாடுகள் இருக்கும்.

உங்கள் வாழ்க்கையைப் பற்றியதாக இருக்கும் இவ்வுரையாடலை கவனமாகக் கேளுங்கள். முரண்பாடு களும் சோகம், துக்கம், வலிகள் நிறைந்த குழப்பமான உங்கள் அன்றாட வாழ்க்கையைப் பற்றிய உரையாடல் இது. இவ்வாறு கலந்துரையாடுவதால், உங்கள் சிந்தனை யைப்பற்றி, எதிர்வினையாக எழும் உங்கள் எண்ண பிரதிபலிப்புகளைப் பற்றி, நீங்கள் விழிப்புணர்வு பெறுகிறீர்கள். சவாலை நீங்கள் எதிர்கொள்ளும் முறையானது எப்படிக் குறுகியதாக, வரையறைக்குட் பட்டதாக இருக்கிறது என்பதைப் பற்றிய விழிப் புணர்வையும் பெறுகிறீர்கள். கடந்த கால அனுபவத்தால் பெற்ற அறிவைச் சார்ந்து நீங்கள் செயல்படுவதால், உங்கள் வாழ்க்கை, குழப்பமானதாகவும், குறுகிய வட்டத்திற்குள் உழல்வதாகவும், ஒழுங்கற்றதாகவும் இருப்பதையும் இவ்வுரையாடலின் மூலம் நீங்கள் உணர முடியும்.

பாதுகாப்பின்மையைப் பற்றிய உங்கள் பயத்தைப் பற்றியும் இங்கு நீங்கள் அறிந்துகொள்வீர்கள். உங்கள் எண்ணம், உணர்வுகள் மற்றும் எதிர்வினைகள் பற்றிய புரிதல் உங்களுக்கு இருக்கும்பட்சத்தில், எந்த அளவிற்கு உங்கள் வாழ்க்கை தளைபட்டதாகவும், வரையறுக்கப்

பட்டதாகவும் இருக்கிறது என்பது உங்களுக்கே நன்கு புரியும். அந்த உண்மையை நீங்கள் உணரும்போது, தளைபடுதலின் விளைவுகளையும் நீங்கள் காண்கிறீர்கள். ஹிந்து என்றும் முஸ்லீம் என்றும் பிரிந்து வரையறுக்கப்படும்போது, அங்கு மோதல்கள் கட்டாயம் தோன்றும். நீண்டகால பரிணாமவளர்ச்சிக்குப் பின்னரும், மனிதர்களுக்கிடையே போராட்டமும் மோதல்களும் தொடர்ந்து கொண்டிருக்கிறது.

வாழ்க்கையைப் பற்றிய அக்கறை உங்களுக்கு இருப்பதால், மேற்கூறப்பட்ட விஷயங்களை பரிசீலியுங்கள். நம் அன்றாட வாழ்க்கை, மிகவும் சிக்கலானதாகவும், ஆபத்தானதாகவும், நிச்சயமற்றதாகவும் ஆகிவிட்டது. மனிதனின் எதிர்காலமே கேள்விக்குறியாகி விட்டது. இவ்வாறு சொல்வது ஏதோ மிரட்டலோ அல்லது எதிர்மறை சிந்தனையோ அல்ல. நெருக்கடி வெளியுலகில் மட்டுமில்லை; நம் இருப்பில், நம் பிரக்ஞையில் இருப்பதும் நெருக்கடி நிலைமைதான்.

இக்கலந்துரையாடலின் மூலம், இவ்விஷயங்களைப் பற்றிய விழிப்புணர்வைப் பெறுங்கள். விழிப்புணர்வு பெறுவதால், வேதனை, கலக்கம், எதிலும் நிச்சயமற்றத் தன்மை என்று உங்கள் வாழ்க்கை இருப்பதை நீங்களே கண்டுகொள்வீர்கள். விழிப்புணர்வுடன் இருப்பதால், வாழ்க்கையைப் பற்றி மேலும் ஆழமாகப் பார்த்து, அதைப்பற்றிய புரிதலில் முன்னேறுவீர்கள். ஆனால், இங்கு, வெறுமனே பேச்சை மட்டும் கேட்டீர் களென்றால், பலனேதுமில்லை.

சொற்களுக்கு குறிப்பிட்ட முக்கியத்துவம் இருக்கிறது. ஆனால், சொற்களுக்கு, சின்னங்களுக்கு,

கற்பிதங்களுக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுத்து வாழும் பலரைப் போல் நீங்களும் வாழ்ந்தால், வாழ்க்கையை மேலும் மேலும் கடினமானதாகவும், மேலும் மேலும் ஆபத்தானதாகவும் ஆக்கிவிடுவீர்கள். எனவே, உங்கள் மூளை, தன்னைப் பற்றிய விழிப்புணர்வைப் பெற இவ்வுரையாடலை கவனத்துடன் கேளுங்கள், கண்டுபிடியுங்கள், கேள்வி எழுப்புங்கள், ஐயப்படுங்கள்.

சுலபமாக, துரிதமாகச் செயல்படும் தொலைத் தொடர்பு வசதிகள், மின்சாரம், சுகாதார வசதிகள் போன்ற பல்வேறு முன்னேற்றங்களை தொழில்நுட்ப வளர்ச்சியால் உலகிற்கு அளித்த மனிதன், உளரீதியாக எவ்வித மாற்றமும் பெறாமல் கடந்த நாற்பதாயிரம் ஆண்டுகளாக இருந்த இடத்திலேயே தேங்கிப் போனது ஏன் என்ற கேள்வி எழுகிறது. இந்நிலையை நாம் உணருகிறோமா? நம்மிடம் ஒழுங்குமுறை அமைப்புகள், இலட்சியங்கள், புனித நூல்கள் ஆகியவையெல்லாம் இருக்கின்றன. இருப்பினும், அவைகள் நம் உள்மனப் புரட்சியை ஏன் கொண்டுவரவில்லை? - நாம் இதைப் பற்றியும், மூளையின் உயிரணுக்களை முழுவதுமாக அடிப்படை மரபணுமாற்றம் (mutation) செய்வது சாத்தியமாகுமா என்பது பற்றியும் ஆராயப் போகிறோம்.

மனிதனின் நிலைமை பற்றியும் அந்நிலையை முற்றிலுமாக மாற்ற முடியுமா என்பது பற்றியும் நாம் பேசிக் கொண்டிருக்கிறோம் என்பது தெளிவாகப் புரியும் என நம்புகிறேன். நாம் இங்கு செய்ய நினைப்பது, ஒன்றை, அதன் சுயவகையிலிருந்து மற்றொரு வகைக்கு மாற்றும் மேற்பூச்சான மாறுதல் அல்ல. நாம் கோருவது மனிதனின் நடத்தையில் முற்றிலுமான அடிப்படை மாற்றம் ஏற்படுத்துவது பற்றியே. உலகில் மிகப்பெரிய

அளவில் அழிவைக் கொண்டுவருவதற்குக் காரணமாயிருக்கும், தன்னை மையமாகக் கொண்டு மிகுந்த சுயநலத்தோடு செயல்படும் மனிதனின் நடத்தையில், புரட்சிகரமான மாற்றம் ஏற்பட்டால்தான், அழிவைத் தடுக்க இயலும்.

நீங்கள் தளைபட்ட நிலையில் இருப்பதைப் பற்றிய விழிப்புணர்வு உங்களுக்கு இருக்கும் என நம்புகிறேன். அடுத்தபடியாக, கட்டுப்படுத்தும் அத்தளையை முற்றிலுமாக அகற்ற முடியுமா, பூரணமான சுதந்திரம் பெற முடியுமா என்ற கேள்வி எழுகிறது. விரும்பியதைச் செய்ய, தனக்கு சுதந்திரம் இருப்பதாக ஒவ்வொருவரும் நினைக்கிறார்கள். அவர்களின் சுதந்திரம், தெரிவை (choice) அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. எங்கு வாழ்வது, என்ன வேலை செய்வது என்பதையெல்லாம் தெரிவு செய்ய சுதந்திரம் உள்ளது. இரு கருத்துகளில் எந்தக் கருத்தைத் தேர்ந்தெடுப்பது, இந்த இலட்சியமா அல்லது அந்த இலட்சியமா, இந்தக் கடவுளை விட்டுவிட்டு அந்தக் கடவுள், இந்தக் குருவிலிருந்து அந்தக் குருவிற்கு தாவுதல், இந்தத் தத்துவகோட்பாடுகளிலிருந்து அந்தத் தத்துவகோட்பாடுகள் - என்பதுபோல் தெரிவு செய்ய ஏகப்பட்ட விஷயங்கள்.

தேர்ந்தெடுக்கும் ஆற்றல் என்ற ஒன்று, சுதந்திரம் என்ற கருத்தைத் தோற்றுவிக்கிறது. சர்வாதிகார நாடுகளில், சுதந்திரம் இல்லை; அனைத்தும் அங்கு முற்றிலுமாக கட்டுப்படுத்தப்பட்டிருப்பதால், நீங்கள் விரும்பியதை அங்குச் செய்ய முடியாது. தெரிவு செய்வது என்பது சுதந்திரம் அல்ல. நமக்கிருக்கும் களம் ஒன்றுதான் - அதில் இந்த மூலையிலிருந்து அந்த மூலைக்கு நகர்வதாக தெரிவு இருக்கிறது. வரையறைப்படுத்தப்

பட்டிருக்கும் நம் மூளையால், தன்னை முற்றிலுமாக விடுவித்துக்கொள்ள முடியுமா என்று நாம் கேட்கிறோம். அப்படி விடுவித்துக்கொள்ள முடிந்தால், பயம் என்பது முழுவதுமாக நம்மை விட்டு விலகும்; அதன் காரணமாய், சக மனிதர்களுடனும், அண்டை நாடுகளுடனும் சரியான முறையில் சமூக உறவு கொண்டாட நம்மால் முடியும்.

உணர்ச்சிகளின் திரளாக இருக்கும் நம் பிரக்ஞையின் இயல்பைப் பற்றி ஆராய்ந்து பார்க்கலாம். நீங்கள்தான் உங்கள் பிரக்ஞை - உங்கள் நம்பிக்கைகள், உங்கள் இலட்சியங்கள், உங்கள் கடவுளர்கள், உங்கள் ரம்மியமான கருத்துகள், கற்பிதங்கள், உங்கள் வெறித்தனம், பயம், களிப்பு, சோகம், மரணபயம், காலங்காலமாய் கேட்கப்படும் நிரந்தரமான கேள்வியான 'அனைத்திற்கும் அப்பாற்பட்டதான புனிதம் என்று ஏதாவது உண்டா?' என்ற கேள்வி - இவை எல்லாமே உங்கள் பிரக்ஞையாக இருக்கிறது; அது நீங்களாக இருக்கிறது. உங்கள் பிரக்ஞையிலிருந்து நீங்கள் வேறுபட்டவர் இல்லை. எனவே நாம் கேட்கிறோம்: உங்கள் பிரக்ஞையின் உட்பொதிவாக இருப்பவற்றை முழுவதுமாக மாற்றம் அடையச் செய்ய முடியுமா?

உங்கள் பிரக்ஞை, உங்களுக்கு மட்டுமே உரிய ஒன்றல்ல; மானுடத்தின் பிரக்ஞையாக அது இருக்கிறது. உங்கள் சிந்தனைகள், நம்பிக்கைகள், கடவுளர்கள், உணர்வுக்கிளர்ச்சிகள், எண்ணப் பிரதிபலிப்பாய் வெளிப்படும் எதிர்வினைகள், வேதனைகள், சோகங்கள், பாதுகாப்பின்மையுணர்வு போன்ற பலவும் மனித குலத்தோர் அனைவருக்கும் இருப்பதால், அனைவரும் பகிர்ந்துகொள்வதாய் இருப்பதால், தனிநபர் பிரக்ஞை என்று எதுவும் இல்லாமல், அனைத்தும் மானுடப் பிரக்ஞையாகவே உள்ளது.

அமெரிக்கா, இங்கிலாந்து, ஐரோப்பா, ரஷ்யா, சீனா என்று எந்த நாட்டிற்கு வேண்டுமானாலும் போய்ப் பாருங்கள் - அங்கெல்லாமும் மனிதர்கள் துன்பப் படுவதைக் காண்பீர்கள். அவர்களும் மரணத்தைக் கண்டு அஞ்சுகிறார்கள், அவர்களுக்கும் நம்பிக்கைகள் மற்றும் இலட்சியங்கள் உள்ளன. அவர்கள் பேசும் மொழி, குறிப்பிட்ட ஒன்றாக இருக்கலாம். ஆனால், அவர்களின் சிந்தனை, உணர்ச்சிகள், பதில்கள், எதிர்வினைகள் எல்லாம், மனிதர்கள் அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்படுகிறது - இது ஒரு உண்மை. இது பேச்சாளரின் கண்டுபிடிப்போ அல்லது யூகமோ அல்ல.

நீங்களும் கஷ்டப்படுகிறீர்கள், உங்கள் அண்டை வீட்டுக்காரரும் கஷ்டப்படுகிறார் என்பது ஒரு உண்மை. அடுத்தவர், ஆயிரம் மைல்களுக்கு அப்பால் வாழலாம். ஆனால், அவரும் உங்களைப்போலவே கஷ்டப்படுகிறார், நம்பிக்கை இழந்த நிலையில் சஞ்சலத்தோடு இருக்கிறார். அவரிடம் பணம் அதிக் அளவில் இருக்கலாம். ஆனால், அவருக்கும் மனதிற்குள் பாதுகாப்பு பற்றிய கவலை இருக்கும். அமெரிக்காவில் வாழும் கோடீஸ்வரராய் இருந்தாலும் அல்லது பதவி அதிகாரம் பெற்றவராய் இருந்தாலும், அனைவருமே, வேதனை, தனிமை, பதற்றம், கலக்கம் என்பதுபோன்ற உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டவராகவே உள்ளனர். ஆக, உங்கள் பிரக்ஞையோ அல்லது சிந்தனையோ உங்களின் தனிப்பட்ட ஒன்றாக இல்லை.

சிந்தனை என்பது மனிதகுலத்திற்கு பொதுவான ஒன்று. குக்கிராமத்தில் வசிக்கும் படிப்பறிவற்ற ஏழையும் சிந்திக்கிறார்; அதேபோல், மேதாவியாய் இருக்கும் பெரிய விஞ்ஞானியும் சிந்திக்கிறார். விஞ்ஞானியின் சிந்தனை,

பட்டிருக்கும் நம் மூளையால், தன்னை முற்றிலுமாக விடுவித்துக்கொள்ள முடியுமா என்று நாம் கேட்கிறோம். அப்படி விடுவித்துக்கொள்ள முடிந்தால், பயம் என்பது முழுவதுமாக நம்மை விட்டு விலகும்; அதன் காரணமாய், சக மனிதர்களுடனும், அண்டை நாடுகளுடனும் சரியான முறையில் சமூக உறவு கொண்டாட நம்மால் முடியும்.

உணர்ச்சிகளின் திரளாக இருக்கும் நம் பிரக்ஞையின் இயல்பைப் பற்றி ஆராய்ந்து பார்க்கலாம். நீங்கள்தான் உங்கள் பிரக்ஞை - உங்கள் நம்பிக்கைகள், உங்கள் இலட்சியங்கள், உங்கள் கடவுளர்கள், உங்கள் ரம்மியமான கருத்துகள், கற்பிதங்கள், உங்கள் வெறித்தனம், பயம், களிப்பு, சோகம், மரணபயம், காலங்காலமாய் கேட்கப்படும் நிரந்தரமான கேள்வியான 'அனைத்திற்கும் அப்பாற்பட்டதான புனிதம் என்று ஏதாவது உண்டா?' என்ற கேள்வி - இவை எல்லாமே உங்கள் பிரக்ஞையாக இருக்கிறது; அது நீங்களாக இருக்கிறது. உங்கள் பிரக்ஞையிலிருந்து நீங்கள் வேறுபட்டவர் இல்லை. எனவே நாம் கேட்கிறோம்: உங்கள் பிரக்ஞையின் உட்பொதிவாக இருப்பவற்றை முழுவதுமாக மாற்றம் அடையச் செய்ய முடியுமா?

உங்கள் பிரக்ஞை, உங்களுக்கு மட்டுமே உரிய ஒன்றல்ல; மானுடத்தின் பிரக்ஞையாக அது இருக்கிறது. உங்கள் சிந்தனைகள், நம்பிக்கைகள், கடவுளர்கள், உணர்வுக்கிளர்ச்சிகள், எண்ணப் பிரதிபலிப்பாய் வெளிப்படும் எதிர்வினைகள், வேதனைகள், சோகங்கள், பாதுகாப்பின்மையுணர்வு போன்ற பலவும் மனித குலத்தோர் அனைவருக்கும் இருப்பதால், அனைவரும் பகிர்ந்துகொள்வதாய் இருப்பதால், தனிநபர் பிரக்ஞை என்று எதுவும் இல்லாமல், அனைத்தும் மானுடப் பிரக்ஞையாகவே உள்ளது.

அமெரிக்கா, இங்கிலாந்து, ஐரோப்பா, ரஷ்யா, சீனா என்று எந்த நாட்டிற்கு வேண்டுமானாலும் போய்ப் பாருங்கள் - அங்கெல்லாமும் மனிதர்கள் துன்பப் படுவதைக் காண்பீர்கள். அவர்களும் மரணத்தைக் கண்டு அஞ்சுகிறார்கள், அவர்களுக்கும் நம்பிக்கைகள் மற்றும் இலட்சியங்கள் உள்ளன. அவர்கள் பேசும் மொழி, குறிப்பிட்ட ஒன்றாக இருக்கலாம். ஆனால், அவர்களின் சிந்தனை, உணர்ச்சிகள், பதில்கள், எதிர்வினைகள் எல்லாம், மனிதர்கள் அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்படுகிறது - இது ஒரு உண்மை. இது பேச்சாளரின் கண்டுபிடிப்போ அல்லது யூகமோ அல்ல.

நீங்களும் கஷ்டப்படுகிறீர்கள், உங்கள் அண்டை வீட்டுக்காரரும் கஷ்டப்படுகிறார் என்பது ஒரு உண்மை. அடுத்தவர், ஆயிரம் மைல்களுக்கு அப்பால் வாழலாம். ஆனால், அவரும் உங்களைப்போலவே கஷ்டப்படுகிறார், நம்பிக்கை இழந்த நிலையில் சஞ்சலத்தோடு இருக்கிறார். அவரிடம் பணம் அதிக அளவில் இருக்கலாம். ஆனால், அவருக்கும் மனதிற்குள் பாதுகாப்பு பற்றிய கவலை இருக்கும். அமெரிக்காவில் வாழும் கோடீஸ்வரராய் இருந்தாலும் அல்லது பதவி அதிகாரம் பெற்றவராய் இருந்தாலும், அனைவருமே, வேதனை, தனிமை, பதற்றம், கலக்கம் என்பதுபோன்ற உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டவராகவே உள்ளனர். ஆக, உங்கள் பிரக்ஞையோ அல்லது சிந்தனையோ உங்களின் தனிப்பட்ட ஒன்றாக இல்லை.

சிந்தனை என்பது மனிதகுலத்திற்கு பொதுவான ஒன்று. குக்கிராமத்தில் வசிக்கும் படிப்பறிவற்ற ஏழையும் சிந்திக்கிறார்; அதேபோல், மேதாவியாய் இருக்கும் பெரிய விஞ்ஞானியும் சிந்திக்கிறார். விஞ்ஞானியின் சிந்தனை,

பல்வேறு பரிமாணங்களைக் கொண்டிருக்கலாம். ஆனால், சிந்தனை என்பது அனைவருக்கும் பொதுவானது, எல்லோரும் அதில் பங்கேற்கிறார்கள். ஆக, உங்களின் தனிப்பட்ட சிந்தனை என்று ஏதுமில்லை.

தனிநபர் என்று தன்னைக் கருதிக்கொள்ளும் விதத்தில் நீங்கள் பழக்கப்படுத்தப்பட்டு தளைபட்டிருப் பதால், பிரக்ஞையும், சிந்தனையும் மனிதகுலத்திற்குப் பொதுவானவை என்ற உண்மையை உணர்ந்தறிவது உங்களுக்குச் சிரமமான ஒன்றாகிவிடுகிறது. மதநூல்கள் அனைத்துமே தனிநபர் பிரக்ஞை என்ற கருத்தை நிலைநிறுத்தி வலுவூட்டுவதாகவே உள்ளன. மதநூல்களில் கூறப்பட்டிருப்பதை விவாதித்து, கேள்விகள் எழுப்பி, உண்மையைக் கண்டுணர வேண்டும். சமுதாயத்தின் கடைக்கோடியில் பரிதாபகரமான வாழ்க்கை நடத்தும் ஒருவரும் சிந்திக்கிறார், உயர்ந்த தத்துவஞானிகளும் சிந்திக்கிறார்கள், விஞ்ஞானிகளும் சிந்திக்கிறார்கள் - அனைவரும் சிந்திக்கிறார்கள்.

மனித பிரக்ஞையும், சிந்தனை போன்றே அனைவருக்கும் பொதுவான ஒன்றாக இருக்கிறது. இதன் காரணமாய், எவரும் தனிநபர் அல்ல. படிப்பில் ஒருவர் கூடுதலாக பட்டங்கள் வாங்கியிருக்கலாம், உயரமான வராய் இருக்கலாம் - இப்படி வெளியில் அவர், உங்களைப் போலில்லாமல், வேறுபட்டிருக்கலாம். ஆனால், உள்முகத்தில், மனிதகுலப் பிரக்ஞையின் அங்கமாகவே அவரும் இருக்கிறார். மிக நெருக்கமாக ஆராய்ந்தால், உங்களால் இந்த உண்மையைக் காண முடியும். ஆனால், தனிநபர் என்ற கருத்தில் சிக்கிக்கொண்டவராய், மாற்றுச் சிந்தனையை ஏற்க பயப்படுபவராய் நீங்கள் தளைபட்டுப் போயிருந்தால்,

நீங்களே மனிதகுலம் என்ற பிரமிப்பூட்டும் உண்மையை யும் அதன் பிரம்மாண்டத்தையும் உங்களால் என்றுமே புரிந்துகொள்ள முடியாது.

நீங்களே மனிதகுலம் என்ற புரிதலிலிருந்து பிறப்பது கருணை, அன்பு மற்றும் நுண்ணறிவு. ஆனால், நீங்கள் தனிப்பட்ட ஒருவர் என்ற கருத்திற்குத் தளைபட்டுப் போயிருந்தால், உங்கள் வாழ்வில் முடிவற்ற சிக்கல்கள் தொடரும். உங்களின் அந்தத் தளைபடுத்தும் தனிநபர் என்ற கருத்து, மெய்யானதல்ல, அது ஒரு மாயை. ஆயிரமாயிரம் ஆண்டுகளாய் தொடர்ந்துவரும் ஒன்றாய் அது இருப்பதால் மட்டுமே, அக்கருத்து மாயை இல்லை என்றாகிவிடாது, அது மாயையே.

நீங்கள் வாழும் சுற்றுச்சூழல், சீதோஷ்ணநிலை, நீங்கள் பேசும் மொழி, உண்ணும் உணவு, உடுத்தும் உடை, தலைமுறை தலைமுறையாய் தொடரும் மரபுகள் ஆகியவற்றின் விளைவாய் உங்கள் இருப்பு இருக்கிறது. நீங்கள் உருவாக்கிய சமூகத்தின் விளைபொருளாய் நீங்கள் இருக்கிறீர்கள். சமூகம், உங்களிலிருந்து வேறுபட்டதல்ல. பேராசை, பொறாமை, வெறுப்புணர்வு, மிருகத்தனம், வன்முறை, போர் போன்றவற்றின் களமாக இருக்கும் சமூகத்தை மனிதன் உருவாக்கினான் - கூடவே, பிரமிப்பூட்டும் தொழில்நுட்ப உலகையும் படைத்தான். ஆக, நீங்கள்தான் உலகம், உலகம் என்பது நீங்கள். எல்லா மக்களும் பகிர்ந்துகொள்ளும் மனிதகுலப் பிரக்ஞையை நீங்களும் பகிர்ந்துகொள்வதால், உங்கள் பிரக்ஞை, தனிப்பட்டதல்ல, நீங்கள் தனிநபரல்ல என்ற உண்மையை நீங்கள் உணர்ந்தறிய வேண்டும். பேச்சாளர் சொல்வதை ஏற்றுக்கொள்ளாதீர்கள் - வினா எழுப்புங்கள்.

தனிநபர் என்றால் தனித்து பிரிந்து இருப்பவர் என்றாகிறது. மக்கள் தனிப்பட்டு மற்றவரிலிருந்து பிரிந்து தனித்தனி தீவாக இருக்கிறார்கள். நாடுகளும் இந்தியா, ரஷ்யா என்பதுபோல் பிரிந்து இருக்கின்றன. தனித்திருப்பதால் பாதுகாப்பு கிடைக்கும் என்று எண்ணுகிறார்கள். ஆனால், தனிப்பட்டு நிற்பதில் பாதுகாப்பு இல்லை. மக்களின் பிரதிநிதிகளாக செயல்படும் அந்தந்த நாடுகளின் அரசாங்கமும், பிரிந்து நிற்கும் நிலையைப் பேணிப் பாதுகாக்கின்றன; அவ்வாறு செயல்படுவதால், அவ்வரசாங்கங்களும், யுத்தங்கள் நீடித்திருப்பதற்குத் துணைபோகின்றன.

நீங்கள் தனிப்பட்டவர் இல்லை என்பதும் உள்முகத்தில் தனிநபர் மற்றும் உலகம் என்ற பிரிவினை இல்லை என்பதும் அனைவரும் ஒரே ரீதியான பிரச்சினைகளை எதிர்கொள்கிறார்கள் என்பதும் உங்களுக்குப் புரிந்திருக்கும் நிலையில், அடுத்து எழும் பிரச்சினையாக இருப்பது மனிதகுலத்தின் பிரதிநிதியாக இருக்கும் உங்களால் உளரீதியான அடிப்படை மாற்றத்தை, புரட்சியை கொணர முடியுமா என்பதேயாகும்.

'நான் ஒருவன் மாறினால், அது எந்தவிதத்திலாவது உலக மாந்தர்களிடம் தாக்கத்தை ஏற்படுத்தக் கூடுமா?' என்று நீங்கள் கேட்கலாம். 'நான் மாற்றம் பெறலாம். மரபணுக்களே மாற்றம் அடையும்வண்ணம் பரிபூரண அடிப்படை மாற்றத்தை என் மூளையில் ஏற்படுத்தலாம். குறிப்பிட்ட ஒருவனாய் இருக்கும் என்னில் ஏற்படும் இந்த மாற்றம், எந்த வகையில் மனிதகுலத்தின் ஒட்டுமொத்த பிரக்ஞையில் தாக்கத்தை ஏற்படுத்தும்?' என்பது வழக்கமாகக் கேட்கப்படும் ஒரு கேள்வி. நீங்கள்

தனிப்பட்டவரல்ல, இருந்தாலும், தனிமனிதனாக நீங்கள் உங்களை நினைத்துக்கொண்டு 'எனக்கு ஏற்பட்ட மாற்றம், எவ்விதத் தாக்கத்தை உலகிற்கு ஏற்படுத்திவிடப் போகிறது?' என்று கேட்கிறீர்கள்.

விஞ்ஞானத்துறையில் நடைபெற்றுக்கொண்டிருக்கும் ஆராய்ச்சிகளைப் பற்றி உங்களில் சிலர் கேள்விப் பட்டிருக்கலாம். லண்டனில், எலிகளின் மேல் நடத்தப்படும் ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள ஒருவரோடு அண்மையில் பேசிக்கொண்டிருந்தோம். குறிப்பிட்ட ஒரு செயலைக் கற்றுக்கொள்ள ஒரு தலைமுறையைச் சேர்ந்த எலிகள் அதிக நேரம் எடுத்துக்கொண்டன, மிக நிதானமாய் கற்றுக்கொண்டன. ஆனால், அச்செயலை அடுத்த தலைமுறை எலிகள் விரைவாகக் கற்றுக் கொண்டுவிட்டன. இது ஏதோ மரபுவழி மாற்றம் அல்ல. புதிய இளைய தலைமுறை எலிகள் மிகவும் விரைவாகக் கற்றுக்கொண்டு விட்டன. இந்த ஆராய்ச்சியை ஆஸ்திரேலியா, அமெரிக்கா போன்ற மேலும் பல நாடுகளும் செய்து வருகின்றன.

லண்டனில் மிக வேகமாகக் கற்றுக்கொண்ட எலிகளின் செயலால், உணர்வு அதிர்வுகளால், ஒட்டுமொத்த எலிகளின் உணர்வுகளில் தாக்கம் ஏற்பட்டது. முதல் தலைமுறை எலிகள் வாரக்கணக்கில் மெதுவாகக் கற்றுக்கொண்ட ஒன்றை, இருபத்தைந்தாவது தலைமுறை எலிகள் சில மணி நேரத்தில் கற்றுக்கொண்டுவிட்டன. அவைகள் கற்றது, சில மணி நேரத்திற்குள் உலகெங்கிலும் உள்ள எலிகள் அனைத்திற்கும் பரவியது. இது மரபுவழி மாற்றம் அல்ல. கூட்டுப்பிரக்ஞையில் ஏற்பட்ட தாக்கமாக இது இருக்கிறது.

ஆக, பூரண அடிப்படை மாற்றத்தை நீங்கள் அடைந்தால், ஒட்டுமொத்த மானுட உணர்வுகளில் நீங்கள் தாக்கத்தை ஏற்படுத்துவீர்கள். ஐரோப்பாவின் உணர்வுகளில் நெப்போலியன் தாக்கத்தை ஏற்படுத்தினார். ஸ்டாலின், ரஷ்யாவில் தாக்கத்தை ஏற்படுத்தினார். கிருத்துவர்களின் இரட்சகர், உலகின் உணர்வுத்திறளாய் இருக்கும் பிரக்ஞையில் தாக்கத்தை ஏற்படுத்தினார். ஹிந்துக்களும் அவர்களின் விசித்திரமான கடவுளர்கள் மூலம் தாக்கத்தை உண்டாக்கியுள்ளனர். எனவே, உளரீதியாக நீங்கள் அடிப்படையில் புரட்சிகரமான மாற்றத்தை அடையும்போது, ஒட்டுமொத்த மானுடப் பிரக்ஞையில் நீங்கள் அதிர்வை, தாக்கத்தை ஏற்படுத்துகிறீர்கள்.

உளரீதியாக அடிப்படையில் புரட்சிகரமான மாற்றம் பெறுவது என்றால், பயத்திலிருந்து விடுதலை பெற்ற நிலையையும், சக மனிதருடன் ஆதர்ச நட்புடன் இருக்கும் நிலையையும், மற்றும் துன்பத்தை முடிவிற்குக் கொண்டுவந்த நிலையையும் பெறுவதாகும். ஆக, இந்த மாற்றம், சுயநலம் சார்ந்த விஷயமல்ல. இது ஏதோ தனிநபர் விமோசனம் அல்ல - இது மானுடத்தின் விமோசனம்.

மனித உறவுகளைப் பற்றி நாம் ஆராய வேண்டும். உறவுகளில் ஏன் இந்த அளவிற்கு சச்சரவுகளும், அவதிகளும் தீவிரமான தனிமைப்படுத்தப்பட்ட உணர்வுகளும் இருக்கிறது என்பதைப் பற்றி விசாரணை செய்ய வேண்டும். விசாரணை செய்வது என்றால் அவ்விஷயத்தைப் பற்றி தீர ஆராய்தல், ஐயுற்று வினா எழுப்புதல் என்று பொருள். ஆணிற்கும் பெண்ணிற்கும் இடையே உள்ள உறவு, பக்கத்து வீட்டுக்காரர் மற்றும்

அண்டை அயலாருடன் நமக்குள்ள உறவு ஆகியவற்றை யெல்லாம் விசாரணை செய்யவேண்டும். உறவு களுக்கிடையே ஏன் இத்தனை போராட்டம்? மனித வரலாற்றில், மனிதர்கள் ஒருவரோடொருவர் மோதிக்கொண்டு போராட்டத்தில் வாழ்வது தொடர்ந்து வருகிறது. ஆனால், உறவுகள்தான், வாழ்வதின் அர்த்தமாக உள்ளது. உறவுகளின்றி, நீங்கள் வாழ முடியாது. ஆனால், உறவுகளோடு கூடி வாழ்தலில், போராட்டமும் உள்ளது.

உறவுகள், இன்றியமையாத தேவையாக உள்ளது. வாழ்க்கை என்பதே உறவு என்பதாக உள்ளது. அவ்விதமே, செயலும், உறவு என்பதாக இருக்கிறது. உங்கள் சிந்தனையானது, ஒன்று, உறவை உருவாக்குகிறது, இல்லையென்றால், உறவை அழிக்கிறது. சன்னியாசி, தன்னை, பந்தங்களை அறுத்துக்கொண்ட தனிப்பட்ட வராய் எண்ணிக் கொள்ளலாம். ஆனால், அவரும் தொடர்புடையவராகவே இருக்கிறார். அவர், கடந்த காலத்துடனும், சுற்றுச்சூழலுடனும், தனக்கு உணவு மற்றும் உடைகளைப் பெற்றுத்தரும் அன்பருடனும் தொடர்புகொண்டவராய் இருக்கிறார். ஆக, வாழ்க்கையே உறவுகளால் ஆனது. உறவுகளுக்கிடையே பரஸ்பரத் தொடர்பு இல்லாவிட்டால், வாழ்க்கையே இல்லை.

கணவன் - மனைவிக்கிடையே உள்ள உறவில் போராட்டம், சக மனிதர்களுடனான உறவில் சச்சரவு என்று ஏன் இப்படி இருக்கிறது என்பதைப் பற்றி விசாரணை செய்யலாம். ஏன் என்ற இந்தக் கேள்வியை இங்குப் பேச்சாளர் கேட்டாலும், உண்மையில் கேள்வி உங்களுடையதுதான். பதிலைக் கண்டுபிடியுங்கள். கொண்டிருக்கும் உறவில் எங்குப் போராட்டம் இருக்கிறதோ, அங்கு, அன்பு இருக்காது, கருணை

இருக்காது, நுண்ணறிவு இருக்காது. நுண்ணறிவு, கருணை மற்றும் அன்பு என்ற சொற்களைப் பற்றி இப்போது பார்க்கப்போகிறோம். ஏனைய நாடுகளைப் போன்றே, இந்த நாட்டிலும், அன்பு என்ற ஒன்று இருக்கிறதா என்று வியக்கிறேன்.

உண்மையிலேயே நீங்கள் பிறருடன் உறவு பூண்டிருக்கிறீர்களா? உறவுமுறை சொந்தக்காரர்கள் போன்ற உறவுகள் இருப்பது தெரிந்தவிஷயம். ஆண் - பெண் உடலுறவு என்பதைத் தவிர, மேற்கொண்டு, யாருடனாவது உங்களுக்கு உறவு உண்டா? உறவு என்பது தனிமையின் எதிர்மறை. அதாவது, ஒருவர் வாழ்நாள் பூராவும் உழைக்கிறார். அலுவலகத்திற்கோ தொழிற்சாலைக்கோ அல்லது வேறு வேலையாகவோ, நாள்தோறும் வீட்டிலிருந்து காலை ஆறு மணிக்கோ ஒன்பது மணிக்கோ கிளம்பிப்போய், நாள் பூராவும் உழைத்து, உழைத்து, ஐம்பது வருடத்திற்கு, அறுபது வருடத்திற்கு இதேபோல் உழைத்து, பின்பு இறக்கிறார்.

வேலை செய்யும் இடத்தில், அவர், தன்முனைப் போடும், பேராசையுடனும், பொறாமையுடனும் பிறருடன் போராடுகிறார், போட்டியிடுகிறார். அவர் மனைவியும், தன் வழியில், தன்முனைப்புடனும், போட்டி மனப்பான்மையுடனும், பதற்றம் மற்றும் பொறாமையோடு வாழ்க்கை நடத்துகிறார். அவர்கள் இருவரும் சம்பாஷிக்கலாம், உடலுறவு கொள்ளலாம், அவர்களின் குழந்தைகளைப் பராமரிக்கலாம். ஆனால், நேர்க்கோட்டில் செல்லும் என்றுமே இணையாத ரயில் தண்டவாளங்களைப்போல் அவர்கள் வாழ்கிறார்கள். இவ்விதமாக வாழ்வதைகூட, நாம், 'உறவு' என்றழைக் கிறோம். இத்தகைய நிலைமை, ஒரு நடைமுறை

உண்மை. விவரிக்கப்பட்டது, பேச்சாளரின் கண்டு பிடிப்போ அல்லது அவருடைய கருத்தோ, தீர்மானமோ அல்ல. அது, ஒவ்வொருவருடைய வாழ்விலும் நிஜத்தில் நடக்கும் ஒன்றாக உள்ளது.

தத்தம் கருத்துகளை, முடிவான தீர்மானங்களை கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருக்கும் இரண்டு மனிதர்களுக்கிடையே நிரந்தரமாகத் தொடரும் கருத்து வேறுபாடுகள் என்பதாக வாழ்க்கை இருக்கிறது. 'முடிவான தீர்மானம்' என்றால் விவாதத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது என்று அர்த்தம். கடவுள் இருக்கிறார் என்று நான் முடிவெடுக்கிறேன் - கடவுள் இருக்கிறாரா இல்லையா என்ற விவாதம் என் வரைக்கும் இனி இல்லை, விவாதம் முற்றுபெற்றது, நான் தீர்மானித்துவிட்டேன். தயவு செய்து 'இப்படித்தான்' என்று தீர்மானித்து விடாதீர்கள் - தீர்மானிப்பது விவாதத்தை முடிவிற்குக் கொண்டுவந்துவிடும். இங்கு நாம் முடிவெடுக்கவில்லை, உள்ளதை உன்னிப்பாய் பார்க்கிறோம்.

எவ்வளவுதான் நெருக்கமான தொடர்பாய் இருந்தாலும், அவ்வுறவில் எப்பொழுதுமே சச்சரவுகள் தோன்றுகிறது என்ற உண்மையைப் பார்க்கிறோம். ஒருவர் மேல் மற்றவர் ஆதிக்கம் செலுத்துவதும், உரிமை கொண்டாடுவதும், பொறாமைப் படுவதும் உறவில் என்றுமே தொடர்கிறது. இவ்வகைத்தாயிருக்கும் நம் உறவை முற்றிலுமாக மாற்ற முடியுமா? இக்கேள்வியை உங்களையே கேட்டுக் கொள்ளுங்கள்.

படித்தவரோ படிக்காதவரோ, எவராயிருக்கட்டும், மனிதர்களுக்கிடையே ஏன் சச்சரவுகள், முரண்பாடுகள்

தோன்றுகின்றன? சிறந்த விஞ்ஞானிகளாய் அவர்கள் இருக்கலாம். ஆனால், அவர்களும், உங்களையும் மற்றவரையும் போலவே, பேராசை மிக்கவராகவும் சண்டை போடுபவராகவும் இருக்கிறார்கள். ஏன் இந்த அவலநிலை? சுயநலத்தில் பெரும் அக்கறை கொண்டவராய் ஒவ்வொருவரும் இருப்பதின் காரணமாய் இந்த நிலை ஏற்படுகிறதா? சுயநலத்தின் காரணமாய், தன்னை மற்றவர்களிடமிருந்து பிரித்து, மனிதன் தனிமைப்படுத்திக் கொள்கிறானா?

நீங்கள் உங்களை தனிமைப்படுத்திக் கொள்ளும் போது, உங்களின் உறவு, சிறப்பானதாய் இருக்க முடியாது என்பது தெள்ளத் தெளிவு. இவ்வுண்மையை கேட்கும் நீங்கள், இதைப்பற்றி எந்தவொரு நடவடிக்கையும் எடுக்கப்போவதில்லை. ஏனென்றால், நீங்கள், பழகிப்போன பாதையில் செக்குமாடாய் சுற்றிவரும் சின்னத்தனமான வாழ்க்கையை நடத்திக் கொண்டிருக்கிறீர்கள். எவ்வளவுதான் துயரமிக்கதாகவும், மகிழ்ச்சியற்றதாகவும், விகாரமானதாகவும், போராட்ட மானதாகவும் உங்கள் வாழ்க்கை இருந்தாலும், நீங்கள் அதைச் சகித்துக்கொள்கிறீர்கள். கருத்து வேறுபாடில்லா மல், பாகுபாடில்லாமல் முழுமையான லயத்துடன் மற்றவருடன் ஒற்றுமையாக வாழ்வதென்பது சாத்தியம் தானா என்ற விசாரணையை தயவுசெய்து மேற்கொள்ளுங்கள்.

உண்மையில், உள்முகமாக ஆழமாக விசாரணை செய்தால், நீங்கள் உங்கள் மனைவியைப் பற்றியும், உங்கள் மனைவி உங்களைப் பற்றியும் கருத்துரு உருவாக்கியிருப்பதை உங்களால் பார்க்க முடியும். இருபது ஆண்டுகள் கூடி வாழ்ந்த வாழ்க்கையில்

பரிமாறிக்கொண்ட கொடூரமான வார்த்தைகள், நச்சரிப்புகள், செய்த அலட்சியங்கள், கனிவற்ற செயல்கள் போன்ற இன்ன பிறவற்றின் நிழற்படமாக, கருத்துரு உள்ளது. மற்றவரைப் பற்றி இவரும், இவரைப் பற்றி மற்றவரும் கருத்துருவை உருவாக்கிக் கொள்கின்றனர். இக்கருத்துருக்கள், நிழற்படங்கள், வார்த்தைகள் ஒன்றோடொன்று உறவாடுகின்றன. ஆக, எங்கெல்லாம் மற்றவரைப் பற்றிய கருத்துரு குடிகொண்டிருக்கிறதோ, அங்கெல்லாம் சச்சரவுகள் கட்டாயம் இருக்கும்.

இப்பேச்சாளரைப் பற்றிய கருத்துரு கட்டாயம் உங்களிடம் இருக்கும் - என்ன காரணம்? இப்பேச்சாளரைப் பற்றி உங்களுக்குத் தெரியாது. உங்கள் வாழ்க்கைத் துணையைப் பற்றியே தெரியாத உங்களுக்கு பேச்சாளரை எப்படித் தெரியப்போகிறது! ஆனாலும், அவரைப் பற்றிய கருத்துருவை நீங்கள் உருவாக்கிக்கொள்கிறீர்கள். அவர் ஆன்மிகவாதி என்றோ, இல்லை, நாஸ்தீகர் என்றோ, அவர் மிகுந்த அறிவாளி என்றோ, இல்லை, மடையர் என்றோ, அவர் அழகர் என்றோ இவர் இப்படிப்பட்டவர் என்றோ, இல்லை அப்படிப்பட்டவர் என்றோ அவரைப் பற்றிய உங்கள் அபிப்பிராயத்திற்கு உருக்கொடுத்து, ஒரு கருத்துருவை உருவாக்கிவிடுகிறீர்கள். மனதில் அக்கருத்துருவோடு, அவரைப் பார்க்கிறீர்கள். ஆனால், கருத்துரு உண்மையில் அவரல்ல.

கருத்துரு, ஒருவரைப் பற்றிய பொது மதிப்பீடு. மதிப்பீடுகள், மிகச் சுலபமாக உருவாக்கப்படுகின்றன. ஒருவரைப் பற்றிய மதிப்பீடு, நல்லதாகவும் இருக்கலாம், மோசமானதாகவும் இருக்கலாம். மனிதமூளை, தன் எண்ணங்களால் கருத்துருக்களை உருவாக்குகிறது.

கருத்துருக்கள் தீர்மானங்களாகவும், முடிந்த முடிவாகவும் நமக்கு உள்ளது. நாம் கருத்துருக்களில் வாழ்கிறோம்.

அன்பு என்ற மேன்மையில், கருத்துருக்களுக்கு இடமேதுமில்லை. நாம் ஒருவரையொருவர் நேசிப்பதில்லை. நாம் கைகோர்த்து நடக்கலாம், சேர்ந்து உறங்கலாம். ஆயிரத்தெட்டு விஷயங்கள் சேர்ந்து செய்யலாம் - ஆனால், நமக்கிடையே அன்பு இல்லை. அன்பின் மணம்,நேசத்தின் அந்தத் தன்மை நமக்கிருந்தால், போர் மூளாது, ஹிந்து, முஸ்லீம், யூதர், அரேபியர் என்றெல்லாம் பிரிவினை இருக்காது. நீங்கள் இவ்வுரையைக் கேட்பீர்கள். ஆனாலும், உங்கள் கருத்துருக்களுடன் தொடர்ந்து இருப்பீர்கள்; ஒருவரோடு ஒருவர் சண்டை போடுவீர்கள், மோதிக்கொள்வீர்கள். உங்கள் வாழ்க்கை, அர்த்தமற்ற ஒன்றாக ஆகிப்போனது. உங்களில் எத்தனை பேர் இதை உணருகிறீர்கள் என்று நான் வியக்கிறேன்.

எண்ணங்களின் கோர்வை நீங்கள். நீங்கள் தொழும் தெய்வங்களும் எண்ணங்களால் ஏற்பட்டவையே. அனைத்து சடங்குகளும், அனைத்து கோட்பாடுகளும், தத்துவங்களும் எண்ணங்களால் தோற்றுவிக்கப் பட்டவையே. எண்ணம் ஏதோ புனிதமான ஒன்றல்ல. எண்ணம் எப்பொழுதுமே ஒரு வரையறைக்குட்பட்டது. நீங்கள் உங்களை ஒரு இந்தியன் என்றோ அல்லது அமெரிக்கன் என்றோ எண்ண வைப்பது, எண்ணத்தால் உருவாக்கப்பட்ட கருத்துருவின் செயல். பொய்யான இக்கருத்துருக்கள், மனிதகுலத்திற்குள் பிரிவினையை உண்டாக்குகின்றன.

நாம் அனைவரும் மனிதர்கள் என்பதால், 'இந்தியன்' என்று நீங்கள் ஒருபோதும் உங்களைக்

கருதிக்கொள்ளாவிட்டால், நான், என்னை 'ரஷ்யன்' அல்லது 'அமெரிக்கன்' என்று சொல்லிக்கொள்ளா விட்டால், உலகில் யுத்தங்கள் இருக்காது, நாம் போரிட்டுக்கொள்ள மாட்டோம். அந்நிலையில் உலகம் முழுமைக்குமான உலக அரசாங்கம் செயல்படும், உலக உறவு நிலவும். ஆனால், உங்களுக்கு இதிலெல்லாம் ஆர்வம் இல்லை. நீங்கள் ஒரு 'அறைகுறை'யாக (mediocre) இருக்கிறீர்கள் - இவ்வார்த்தையை உபயோகித்தற்கு மன்னிக்கவும் - மலையேற்றத்தின்போது, பாதி வழிவரை சென்று அரைகுறையாக மலை ஏறுகிறீர்கள், மலையின் உச்சியை எப்போதுமே நீங்கள் எட்டுவதில்லை என்பதே 'அரைகுறை' என்ற சொல்லின் பொருள். வர்த்தக உலகையோ, தொழில்நுட்பத் துறையையோ இங்குக் குறிப்பிடவில்லை - உளரீதியில் காணப்படும் இந்த அரைகுறைத்தனத்தையே இங்குக் குறிப்பிட்டோம்.

இங்குத் தரப்பட்ட விளக்கங்களையெல்லாம் கேட்டீர்கள். கேட்ட பின்னரும், நீங்கள் பரிபூரண அடிப்படை மாற்றத்தைப் பெறத் தவறினால், எதிர்கால சந்ததியினருக்கு நீங்கள் அழிவைப் பெற்றுத் தருகிறீர்கள். எனவே, செவிமடுத்துக் கேளுங்கள், சிந்தித்துப் பாருங்கள், வெளியுலக நடவடிக்கைகளை கவனியுங்கள், அதைவிட முக்கியம், உங்கள் உள்முக இயக்கத்தை ஊன்றிக் கவனியுங்கள்.

ரஷ்யாவில் காணப்படுவது போல் வெளிப்புற நடவடிக்கைகளுக்கு நாம் மிகுந்த முக்கியத்துவம் அளிக்கிறோம். சட்டங்கள், சமுதாய நெறிகள் ஆகியவை ஒழுங்காக இருக்க வேண்டும் என்றும் ஏழைகளுக்கு உணவு அளிக்கப்பட வேண்டும், அவர்கள் நலன்

பேணப்பட வேண்டும் என்றெல்லாம் சொல்கிறோம். அவ்வாறு சிந்திப்பது தவறு என்று சொல்லவில்லை. ஆனால், உள்முக இயக்கத்தில் தன்னை தனிநபராக பிரித்து எண்ணும் எண்ணமும், உணர்வும் மனிதர்களுக்கிடையே பிரிவினையைத் தோற்றுவிக்கிறது என்பதை இங்கு வலியுறுத்துகிறோம். மனப்பாங்கு, வெளிச்சூழலை வெற்றிகொள்கிறது.

உலகின் இன்றைய நிலைக்கு, நீங்கள் பொறுப்பு, நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பு. உளரீதியாக நீங்கள் பரிபூரண மாற்றம் அடையவில்லையென்றால், எதிர்காலம் ஆபத்தானதாய் இருக்கும். நாடுகள் அணுஆயுதப் போருக்கு தயாராகிக் கொண்டிருக்கின்றன. நியூட்ரான் குண்டு ஒன்று நியூயார்க் மேல் விழுந்தால், பத்து மில்லியன் மக்கள் மாண்டுபோவார்கள். சாகாமல் தப்பித்தவர்கள், காயமடைவார்கள், கண் பார்வை இழப்பார்கள், பத்தாயிரம் பேருக்கு சிகிச்சை செய்ய ஒரு மருத்துவர் மட்டுமே இருப்பார். இந்த நாடும் கூடத்தான் போருக்கு ஆயத்தமாகிக் கொண்டு இருக்கிறது. இதற்கு நீங்கள் பொறுப்பாகிறீர்கள். பேராசையும், தன்முனைப்பும் இல்லாமலும், கருத்துருக்களின் தலையீடற்ற உறவை பிறருடன் வளர்த்துக்கொண்டும், சரியான முறையில் வாழ்வதற்கான அடிப்படை மாற்றங்களை உங்கள் அன்றாட வாழ்க்கையில் கொண்டு வந்தால்தான், மனிதர்களுக்கிடையே உள்ள சச்சரவுகளை முடிவிற்குக் கொண்டுவருவதற்கான வாய்ப்புகள் உள்ளன.

*கல்கத்தா, 20.11.1982*

■■

# 6

## 'ஆதல்' என்ற இயக்கம்

ஏற்கனவே தெரிவித்ததுபோல், இந்த நிகழ்ச்சி ஒரு பிரசங்கமல்ல. இது நமக்கிடையே நடைபெறும் கலந்துரையாடல். குறிப்பிட்டதொரு துறையைப் பற்றிய விவரங்களை உங்களுக்கு அளிப்பதாக பிரசங்கங்கள் இருக்கும். ஆனால், இந்நிகழ்ச்சி அதைப் போன்றதல்ல. நம்மைச் சுற்றி வெளியுலகில் என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதைப் பற்றி மட்டுமல்லாமல், மனிதனின் மனோரீதியான இயக்கத்தையும் நாம் சிநேக பாவத்துடன் கலந்துரையாட இருக்கிறோம்.

அநேகமாக உலகத்திலுள்ள அனைத்து நாடுகளிலும் குழப்பமான சூழ்நிலையே நிலவுகிறது. இந்நாட்டில், குழப்பநிலையானது மிகவும் வெட்டவெளிச்சமாக, அனைவராலும் உணரப்படுவதாக கொடிகட்டி பறக்கிறது. நாட்டில், நிச்சயமற்றத்தன்மை, பதற்றம், அரசியல் கண்ணியம் இல்லாத நிலை போன்றவை நிலவுகின்றன. உலகம் முழுவதும், அரசியல்வாதிகள், நிலைமையை மேலும் மேலும் மோசமாக்குகிறார்கள். சமயங்கள் அனைத்தும் பொருளற்று போயின. இதையெல்லாம் கண்ணுறும் ஒரு சாரார், தங்களை அடிப்படைவாதிகள் என்று சொல்லிக்கொள்ளும் அவர்கள், பிரச்சினைக்குத்

தீர்வுகாண பைபிள் அல்லது குரான் அல்லது பல்வேறு வேதநூல்களை நாடிச் செல்கின்றனர். வேதநூல்களின்படி நடந்தால், குழப்பம் குறைந்துவிடும் என்று அடிப்படைவாதிகள் எண்ணுகின்றனர். உலகெங்கும் இப்படித்தான் நடந்துகொண்டிருக்கிறது.

கடந்த காலத்தை அடித்தளமாக ஏற்றுக்கொண்டு, ஒருசில நம்பிக்கைகளையும், சம்பிரதாயங்களையும் இறுகப் பற்றிக்கொண்டு, 'வேதநூல்கள் எல்லாம் மேன்மையானவை, அவை சத்தியத்தைப் பேசுகின்றன' என்று உறுதியாக நம்பிக்கொண்டு அடிப்படைவாதிகள் செயல்படுகிறார்கள். நம்மில் பெரும்பாலோரும் ஏதோ ஒரு வகையில் கடந்த காலத்தையே அடித்தளமாகக் கொண்டுள்ளோம். மிகுந்த குழப்பத்திலும், பதற்றத்திலும், ஆபத்திலும் இருக்கும் உலக நாடுகள், போரிடுவதற்கான ஆயுதங்களைச் செய்துகொண்டிருக்கின்றன. இந்நிலையில் ஒருவிதமான பாதுகாப்பை, அகத்திலும், புறத்திலும் நாம் வேண்டுவது இயற்கையே.

நாம் வாழும் சுற்றுச்சூழலில் பாதுகாப்பு அதிகமில்லை. நீங்கள் பெரும் பணக்காரராய் இருக்கலாம், அரசியல் உலகில் மிகுந்த அதிகாரம் பெற்றவராய் இருக்கலாம், இல்லை, கோடிக்கணக்காய் பணம் திரட்டும் குருமார்களில் ஒருவராய் நீங்கள் இருக்கலாம். ஏதோ ஒரு கோட்பாட்டில், நீங்கள் வைத்துள்ள நம்பிக்கையில், நீங்கள் பாதுகாப்பை உணரலாம். ஆனால், இவை எவற்றிலுமே பூரண பாதுகாப்பு என்பது இல்லை. மனிதன் பாதுகாப்பை வேண்டுகிறான். எல்லோருக்குமே உணவு, உடை, உறைவிடம் போன்ற அடிப்படைத் தேவைகளுக்கான பாதுகாப்பு அவசியம் தேவை. ஆனால், நாம், உள்முகத்திலும் பாதுகாப்பைக் கோருகிறோம்.

நம் பாதுகாப்பிற்கு உறுதிமொழி அளிப்பதாகவும், நம் வாழ்க்கைக்கு உறுதிநிலை அளிப்பதாகவும் மற்றும் நாம் மற்றவரைவிட திறமைசாலி என்ற உயர்வு மனப்பான்மையைத் தருவதாகவும் உள்ள ஒன்றை, உள்முகப் பாதுகாப்பிற்காக நாம் கோருகிறோம். எந்த நம்பிக்கையிலும், எந்த கோட்பாட்டிலும், எந்த லட்சியத்திலும், பாதுகாப்பைப் பெற முடியாது. இவை எதிலும் பாதுகாப்பைப் பெற முடியாமல் போனதால், நாம் கடந்த காலத்திற்குள் நுழைகிறோம். பாதுகாப்பு பெற ஏதுவாக, அங்கு ஏதாவது சொற்றொடர்கள் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் அம்முயற்சியில் இறங்குகிறோம்.

ஒரு வகைப்பட்ட முடிவான தீர்மானங்களை நாம் பற்றிக்கொண்டிருக்கிறோம். அம்முடிவுகள், அறிவு பூர்வமானதோ, தர்க்கரீதியானதோ, இல்லை, அதிகாரத்திலிருப்பவர்கள் எடுத்த முடிவோ, எதுவானாலும், முடிவுகள் இருக்கும் இடத்தில், சக்தி குறைபாடு இருக்கும். ஒரு விஷயத்தைப் பற்றி தீவிரமாக விவாதம் செய்தபின், நீங்கள் சரி என்று ஒன்றை முடிவாக தேர்ந்தெடுத்தபின், மேற்கொண்டு விசாரணை செய்ய அங்கு இடமில்லை, விவாதத்தைத் தொடர முடியாமல், நீங்கள் கதவை அடைத்துவிட்டீர்கள் - இப்போது உலகில் இதுதான் நடந்துகொண்டிருக்கிறது.

நாம் எல்லோரும் வேண்டுவது முடிவான தீர்மானங்களையே. கடவுள் இருக்கிறாரா இல்லையா, உலகில் அமைதி ஏற்படுமா ஏற்படாதா போன்ற பல கேள்விகளுக்கு முடிவான தீர்மானங்களைக் கொண்டிருக் கிறோம். அதன் விளைவாக, அக்கேள்விகளின் தொடர்பான பல்வேறு வாதங்களுக்கும், கருத்துகளுக்கும்,

யோசனைகளுக்கும் முற்றுப்புள்ளி வைத்துவிடுகிறோம். விசாரணையை மேற்கொண்டு ஆழமாக செய்வதற்கான வழி இல்லாமல், கதவு அடைக்கப்படுவதால், உங்கள் முடிவான தீர்மானங்களின் விளைவாக, உண்மையைக் கண்டறிவதற்கான சக்தி உங்களுக்கு இல்லாமல் போகிறது. முழுவதுமாக அதைச் சார்ந்திருந்து, நம்பியிருந்து அதனால் சுகமும் நல்வாழ்வும் பெறக்கூடும் என்றால், அந்த ஒன்றைப் பாதுகாப்பு என்று கருதுகிறோம். உள்முகத்திலும், வெளிப்புறத்திலும் பாதுகாப்பின்மையை உணருவதால், பாரம்பரியமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட முடிவுகளை நாம் பற்றிக் கொள்கிறோம். அதன் காரணமாய், விசாரணையின் படைப்பாற்றலுடன் கூடிய சக்தியை இழந்துவிடுகிறோம்.

விசாரணை என்பது மிக ஆழமாகச் சென்று ஆய்வு செய்வது, பல்வேறு கோணங்களில் விசாரிப்பது, புதிய பாதையில் சிந்திப்பது, மனக்கதவுகளைத் திறந்து வைப்பது, மேன்மேலும் கண்டுபிடிப்பது என்பதாக உள்ளது. விசாரணை செய்வதற்கான உத்வேகமோ, சக்தியோ நம்மிடம் இல்லை. அதன் காரணமாய், பாரம்பரியம் அல்லது வேத நூல்கள் போன்றவைகளின் துணைகொண்டு வாழ்கிறோம்.

இப்பேச்சுத்தொடரில், உங்களுக்கு எந்தவொரு சஞ்சீவியையோ, சூத்திரத்தையோ, வாக்குறுதியையோ தரப்போவதில்லை. ஆனால், நீங்களும் பேச்சாளரும் நட்பு முறையில் செய்யும் இக்கலந்துரையாடலில் பிரச்சினையை புதிய கோணத்தில் விரிவாக எண்ணிப்பார்க்கிறோம். அவ்வாறு செயல்படுவதின் மூலம், வேறு எவரையும், எந்தச் சாஸ்திரத்தையும், எந்தக் கருத்தையும், எந்தக் கோட்பாட்டையும் நம்பியிராமல், நம் சுய ஆற்றலை

வெளிப்படுத்த முயற்சிக்கிறோம். புதியதோர் பண்பாட்டினை மற்றும் வாழ்க்கை முறையை கொணர்வதற்கான, படைப்பாற்றலுடன் கூடிய சக்தியை நாம் இன்னும் வெளிப்படுத்தவில்லை என்று நினைக்கிறேன்.

ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கு இந்த நாட்டில் நிலவிவந்த ஆரிய கலாச்சாரம், அடியோடு மறைந்து விட்டது. ஆரிய பண்பாட்டை மேன்மையானதென்றோ, மேன்மையற்றதென்றோ கூறவரவில்லை. நெடுங்காலத்திற்கு மக்களால் பின்பற்றப்பட்ட குறிப்பிட்டதொரு பண்பாடு ஏன் மறைந்துபோனது என்றே வினவுகிறோம். ஒருவேளை, அது, வெறும் வார்த்தைகளாகவும் ஜீவனற்ற சம்பிரதாயங்களாகவும் இருந்திருக்கலாம்; கலாச்சாரம் என்று கருதத் தகுந்ததாய் இல்லாதிருந்திருக்கலாம்.

நமது மூளையானது, நம் செயல்கள் அனைத்திற்கும், நம் உணர்வுகள் அனைத்திற்கும், நம் எண்ணங்கள் அனைத்திற்கும் மையக் கருவாக உள்ளது. அத்தகைய மூளையின் இயல்பைப் பற்றியும் நம் மனம் மற்றும் நெஞ்சத்தின் நிலை பற்றியும் ஆய்வு செய்து, குழப்பம், ஆபத்து மற்றும் நிச்சயமற்றத்தன்மை ஆகியவைகளால் சூழப்பட்டுள்ள நம்மால், படைப்பாற்றலுடன் கூடிய அத்தகைய சக்தியை வெளிப்படுத்த இயலுமா என்று பார்ப்போம்.

கேட்பது என்பது ஒரு கலையாகவும், கற்பது என்பது ஒரு கலையாகவும் இருக்கிறது. விஷயஅறிவு சேகரிப்பே நம் கற்றலின் பெரும்பகுதியாக உள்ளது. கணிதம், பௌதீகம், உயிரியல் போன்ற பல்வேறு அறிவுசார் துறைகள் உள்ளன. முதலில் அவற்றைப் பற்றி நாம் அறிந்திராவிட்டாலும், படிப்படியாக அவற்றைப் பற்றிய தகவல்களைச் சேகரித்து சேகரித்து, அதை விஷய

அறிவாக நம் மூளையில் சேமித்து வைத்துக் கொள்கிறோம். இவ்வகை செயல்பாட்டை 'கற்றல்' என்று பெயரிட்டு அழைக்கிறோம். பொறியாளர், அவருக்குத் தேவையான தகவல்களைத் திரட்டி மூளையில் சேமித்து வைத்துக்கொள்கிறார். அரசியல்வாதியும், வானசாஸ்திர வல்லுநரும் அவரவர்களுக்குத் தேவைப்படும் விஷயஅறிவை வளர்த்துக் கொள்கிறார்கள். திறமையோடு செயல்புரிய விஷயஅறிவை சேகரிக்கிறோம். ஒரு மருத்துவராகவோ மேஸ்திரியாகவோ தச்சராகவோ திறம்பட வேலை செய்ய நாம் நம் தொழிலைப்பற்றிய விவரங்களை சேகரித்து சேமித்து வைத்துக்கொள்கிறோம். சேமித்து வைக்கப்பட்டிருக்கும் விஷயஅறிவின் துணைகொண்டு, திறம்படவோ அல்லது குறைபாடுடனோ செயலாற்றுகிறோம். விஷயஅறிவைக் குறித்தும், நம் ஒவ்வொருவருக்கிடையே உள்ள உறவில் விஷயஅறிவின் பங்கு குறித்தும், நாம் சிந்திக்க வேண்டும்.

பேச்சாளர் சொல்வதை மேம்போக்காக, அதன் ஆழம் புரியாமல், நீங்கள் கேட்டுக்கொண்டிருந்தால், அப்பேச்சு, உங்களுக்குப் பலனற்றதாகிவிடும். நீங்கள் ஏற்கனவே மற்றவர்களால் சேகரிக்கப்பட்ட அறிவை பெருமளவில் இரவல் வாங்கி வைத்திருப்பவர்கள். நல்ல ஒரு விஞ்ஞானியாகவோ, மருத்துவராகவோ, பொறியாளராகவோ, இல்லை, வேறொரு வேலைக்கோ போவதற்கு விஷயஅறிவு உதவியது என்பதைத் தவிர, வாழ்க்கையில் அதற்கான இடம் என்ன என்பது பற்றி நீங்கள் சிந்தித்ததில்லை. இங்கு நாம் ஒரு முக்கியமான கேள்வியை எழுப்புகிறோம்: மானுட உறவுகளில் விஷய அறிவின் பங்கு என்ன?

விஷயஅறிவு, என்றும் கடந்த காலத்தின்

பார்பட்டதே. எதிர்கால தகவலறிவு என்று ஏதுமில்லை. தகவலறிவு எனும்போது, அது குறிப்பாக உணர்த்துவது கடந்த காலத்தையே. விஞ்ஞான உலகானாலும் சரி, மனித வாழ்க்கையானாலும் சரி, அவற்றின் விஷயஅறிவு, அனுபவத்தை அடித்தளமாகக் கொண்டுள்ளது. மனித வாழ்க்கையில், அனுபவம் என்பது கோடிக்கணக்கான ஆண்டுகளாக சேகரிக்கப்பட்டு வந்துள்ளது. கடந்த முன்னூறு ஆண்டுகளாக சேகரிக்கப்பட்டது விஞ்ஞான உலகின் அனுபவங்கள். ஒரு விஷயத்தைப் பற்றி மேலும் அறிவதற்காக, விஷயஅறிவை மேலும் மேலும் கூட்டிக்கொண்டே போகிறோம். ஆனால், விஷயஅறிவு என்பது கடந்த காலத்தைச் சேர்ந்தது என்பதில் ஐயம் ஏதுமில்லை. எந்த ஒன்றைப் பற்றியும் முழுமையான விஷயஅறிவு இருப்பதில்லை - இது ஒரு உண்மை.

மனப்பதிவுகளாக, மூளையில் விஷயஅறிவானது சேமித்து வைக்கப்படுகிறது. அத்தகைய மனப்பதிவுகளின் மறுமொழியாகத் தோன்றுவது, எண்ணங்கள். ஆக, அனுபவங்கள், விஷயஅறிவைப் பெற்றுத் தருகின்றன. அனுபவங்கள், வழிவழியாய் வந்தவையாகவும் இருக்கலாம், மற்றும், தற்சமயம் சேகரிக்கப்பட்டதாகவும் இருக்கலாம். அனுபவத்திலிருந்து விஷயஅறிவும், விஷய அறிவிலிருந்து ஞாபகங்களும், ஞாபகங்களின் எதிர்வினையாக, எண்ணங்களும் தோன்றுகின்றன.

மேற்கூறப்பட்ட விளக்கங்களிலிருந்து, எண்ணங்கள் எப்பொழுதுமே வரையறுக்கப்பட்டவை என்பது தெளிவாகிறது. உதாரணத்திற்கு, விஞ்ஞான அறிவை தன்னிடம் ஒருவர் சேகரித்து குவித்து வைத்திருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். மேலும் மேலும் விஞ்ஞான கண்டுபிடிப்புகள் உலகில் வந்துகொண்டே இருப்பதால்,

அப்புதிய அனுபவங்களிலிருந்து, அவருடைய விஷயஅறிவை அவர் மேலும் கூட்டிக்கொண்டே போகிறார். ஆக, விஞ்ஞான விஷயஅறிவு என்பது எந்தவொரு கட்டத்திலும் பூரணமானதல்ல. எனவே, எண்ணங்கள் எதைச் செய்தாலும், அவை முழுமை யற்றவை, வரையறைக்குட்பட்டவையே. உங்களில் சிலர், இக்கருத்தை மறுக்கலாம். ஆனால், தயவுசெய்து, திறந்த மனதுடன் முடிவுகள் ஏதும் எடுக்காமல், எண்ணங்கள் வரையறைக்குட்பட்டவை மற்றும் அவற்றின் செயல்களும் முழுமையற்றவை என்பதை எண்ணிப்பாருங்கள், தீரவிசாரணை செய்யுங்கள்.

விஷயஅறிவு வரம்பிற்குட்பட்டது என்று நான் நிச்சயமாகச் சொல்கிறேன். எதைப்பற்றியும் பூரண அறிவு இல்லாததால், விஷயஅறிவு எப்பொழுதுமே அறியாமையின் நிழலுடன் சேர்ந்தே செல்கிறது. விஷய அறிவிலிருந்து பிறக்கும் எந்தச் சிந்தனையும் முழுமை யற்றதாகவும், வரம்பிற்குட்பட்டதாகவுமே இருப்பதைத் தவிர்க்க முடியாது. அளவிடற்கரிய ஒன்றை, எல்லை களற்றதை, எண்ணம் கண்டுபிடிக்கலாம். இருப்பினும், அக்கண்டுபிடிப்பும் எண்ணத்தின் இயக்கமாக உள்ளது. ஒருவருடைய சுகத்திற்கும், பாதுகாப்பிற்கும் கடவுள் தேவைப்படுவதை அவர் உணர்வதால், அவர் கடவுளைக் கண்டுபிடிக்கலாம். ஆனால், வரம்பிற்குட்பட்ட எண்ணத்தின் விளைபொருளாகவே, அக்கடவுள் உள்ளார்.

பேச்சாளர் சொல்வதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று சொல்லவில்லை. ஆனால், எண்ணம் வரம்பிற் குட்பட்டது என்ற உண்மையை நீங்கள் மிகத் தெளிவாக பார்க்க வேண்டும். எல்லா சந்தர்ப்பங்களிலும், அது விஞ்ஞானிகளின் சிந்தனையோ, இல்லை, சிறந்த தத்துவஞானிகளின் சிந்தனையோ, யாருடைய

சிந்தனையாய் இருந்தாலும், சிந்தனை என்பது கட்டுக்குள் அடங்கி, குறுகி, வரம்பிற்குட்பட்டிருக்கும் ஒன்றாய் இருக்கிறது. எண்ணமானது, நாட்டுரிமை கருத்தைக் கண்டுபிடித்து, உலகை தனித்தனி நாடுகளாக பிரித்து, மக்களிடையே, முஸ்லீம், ஹிந்து, யூதர், அரேபியர், கம்யூனிஸ்ட், சோஷியலிஸ்ட் என்றெல்லாம் பிரிவினையை ஏற்படுத்தியது. இப்பிரிவினைகளையெல்லாம் எண்ணம் தான் கண்டுபிடித்தது.

நம் சமூகம், ஊழல் மலிந்தது. உலகின் பிற நாடுகளில் ஊழல் இல்லை என்று நான் சொல்லவில்லை. ஆனால், இந்த நாட்டில், ஊழல் வெளிப்படையாகவே தலைவிரித்தாடுகிறது. எண்ணத்தின் விளைவாகவே, ஊழல் நடைபெறுகிறது. அனைத்து சடங்குகளும் எண்ணத்தின் விளைவே - இராணுவ சடங்கோ, மதச்சடங்கோ, எதுவாயினும் அது எண்ணத்தின் விளைவே. கேளிக்கைகளின் ஒரு வகையாக, சடங்குகளை எண்ணம் தோற்றுவிக்கிறது. யுத்தம், மோதல், சச்சரவு போன்ற பிரச்சினைகளை உருவாக்குவதும் எண்ணம்தான். பிரச்சினைகளை உருவாக்கிவிட்டு, பிறகு அவற்றைத் தீர்த்து வைக்க முயற்சிப்பதும் எண்ணம்தான்.

இதைப்பற்றியெல்லாம் நீங்கள் நினைத்துக்கூட பார்த்திருக்க மாட்டீர்கள். மனிதனிடமிருக்கும் ஒரே கருவியாக எண்ணத்தை நீங்கள் முழுமனதுடன் ஏற்றுக்கொண்டு விட்டீர்கள். எண்ணமெனும் அக்கருவி, உலகில் பெரும் குழப்பத்தையும், அழிவையும் ஏற்படுத்துகிறது. திறமைமிக்க ஒரு தச்சர், தான் உபயோகிக்கும் கருவி உபயோகமற்றது என்பதைத் தெரிந்துகொண்டவுடனே அதைத் தூக்கி எறிந்து விடுகிறார், நல்லதோர் புதிய கருவியை கண்டுபிடிக்கிறார். ஆனால், நாம் அவ்வாறு செய்வதில்லை.

கணக்கிலடங்கா பிரச்சினைகளை அரசியலிலும், ஆன்மிகத்திலும், மக்களிடையேயும், எண்ணம் கொண்டுவருகிறது என்பதை நாம் காண்கிறோம். உடனே, எண்ணம் குறுக்கிட்டு, 'அதையெல்லாம் தீர்த்து வைக்கிறேன்' என்று சொல்கிறது. அது பெற்றுத்தரும் தீர்வுகள் மூலம், நீங்கள் பிரச்சினைகளை இன்னும் அதிக அளவில் உண்டாக்குகிறீர்கள். இதனால், வாழ்க்கை மேலும்மேலும் சிக்கலாகிறது, பிரச்சினைகள் நிறைந்ததாகிறது. பிரச்சினைகளைத் தீர்க்க எண்ணம் ஒன்று மட்டுமே நம்மிடம் இருக்கும் ஒரே கருவி என்று நீங்கள் எண்ணுவதால், பிரச்சினைகள் பெருகுகின்றன. ஆனால், எண்ணமோ வரம்பிற்குட்பட்டது.

வார்த்தையளவில் இல்லாமல், உண்மையிலேயே எண்ணம் பற்றி புரிந்துகொண்டீர்களா? அடுத்தபடியாக, 'எண்ணத்தைத் தவிர்த்து, பிரச்சினைகளுக்குத் தீர்வு காண உதவும் புதிய கருவி ஏதேனும் நம்மிடம் இருக்கிறதா?' என்ற கேள்வி எழுகிறது. உலகத்தில் சிறந்த அறிவியலாளர்கள் உள்ளிட்ட அனைவருமே எண்ணத்தின் இயல்பைப்பற்றி விமர்சிக்கிறார்கள், கேள்வி எழுப்பு கிறார்கள். எண்ணமானது, மூளையின் உயிரணுக்களுக்குள் நிலைகொள்வதால், மூளையில் இருப்புகொள்வதால், அது மூளையின் செயல்பாடாக, ஒரு பௌதீக செய்முறையாக (material process) உள்ளது. எனவே, எண்ணம், எதைப்பற்றி சிந்தித்தாலும், எதைக் கண்டுபிடித்தாலும், அது மூளையின் செயல்பாட்டு இயக்கத்தின் விளைவாகவே உள்ளது.

எண்ணம், கடவுளைக் கண்டுபிடித்தாலும், அதுவும் பௌதீக செய்முறையின் விளைவேயாகும். வார்த்தை யளவில் இல்லாமல், ஆழமாகவும், முழுமையாகவும், எண்ணம் ஒரு பௌதீக செய்முறை என்ற உண்மையை

மிகத் தெளிவாக உணர்ந்தபின், 'புதிய கருவி ஏதேனும் உளதா?' என்ற கேள்வி எழுகிறது. உயரிய பிரக்ஞை மற்றும் தாழ்ந்த பிரக்ஞை என்பது போலெல்லாம் நான் சொல்ல வரவில்லை - உயரிய பிரக்ஞை / தாழ்ந்த பிரக்ஞை போன்றவையும் எண்ணத்தின் கண்டுபிடிப்புகளே. உயரிய பிரக்ஞையை தாழ்ந்த பிரக்ஞைக்கு கொண்டுவருதல் போன்ற சிறுபிள்ளைத்தனமான விளையாட்டுகளைப் பற்றியெல்லாம் அறிந்தவர்கள் தாம் நீங்கள்.

எண்ணத்தால் தீண்டப்படாத, எண்ணத்திலிருந்து முற்றிலும் வித்தியாசமான புதியதோர் கருவி உள்ளதா என்பதை நாம் ஒருங்கிணைந்து கண்டுபிடிக்கப் போகிறோம். எண்ணங்கள், வரையறைக்குட்பட்டு இருப்பதால், அது சச்சரவுகளையே தோற்றுவிக்கிறது, பிளவுபடுதலையும் உண்டாக்குகிறது. உலகில் காணப்படும் சமயப் பிரிவினைகளையும், அரசியல் பிரிவினைகளையும் தோற்றுவித்தது எண்ணமே ஆகும். இது தெளிவாகப் புரிகிறதா?

இந்த உண்மையை வெறும் வார்த்தையளவில் மட்டும் ஏற்றுக்கொண்டீர்களென்றால், உங்களால் முன்னேற முடியாது. ஆனால், உண்மையிலேயே, இவ்வுலக நடவடிக்கைகளில் ஆழ்ந்த அக்கறை கொண்டிருந்தீர்கள் என்றால், மானுடத்தின் நலனில் தீவிர ஆர்வம் உங்களுக்கு இருந்தால், மனிதனின் எதிர்காலத்தைப் பற்றிய அக்கறை, அதாவது, உங்கள் குழந்தைகள் மற்றும் பேரக்குழந்தைகள் பற்றிய அக்கறை இருந்தால், நீங்கள் தீவிர சிந்தனையாளர் என்றால், மனித குலத்தின் மீது மாறாத அன்பு கொண்டவர் என்றால், 'நமக்கு உதவக்கூடிய புதிய கருவி ஏதேனும் உள்ளதா?' என்ற கேள்வியை நீங்கள் கட்டாயம் கேட்பீர்கள்.

ஆனால், விசாரணை செய்வதற்கான சக்தியோ, உத்வேகமோ, ஆற்றலோ நம்மில் பலருக்கு இல்லை. இக்காரணத்தால், சுயமாகக் கண்டுபிடிக்க இயலாமை யால், நாம் மார்க்ஸ் அல்லது லெனின், பைபிள் அல்லது குரானை நாடி ஓடுகிறோம். ஆனால், புதிய கருவியைக் கண்டுபிடிப்பதற்கான சக்தியை அவைகள் நமக்கு ஒருபோதும் அளிக்கப்போவதில்லை. நாளுக்கு நாள் சீரழிந்து போய்க்கொண்டிருக்கும், தன்னையே அழித்துக்கொள்ளும் இவ்வுலகிற்கு, புதியதோர் கருவி ஒன்று மிகவும் அவசியமான ஒன்றாகும்.

எண்ணத்தின் இயல்பினை கேள்விகள் எழுப்பி கவனத்துடன் ஆராயப்போகிறோம். தளம் எதுவாயினும், எண்ணம் என்பது வரையறைக்குட்பட்டது, பிளவுற்றது, அளவிற்குட்பட்டது. எண்ணத்தின் இந்தக் குறைபாடுகள், மூளையை தளைபடுத்துகிறது. மூளைக்கு அசாதாரண மான ஆற்றல் உள்ளது. தொழில்நுட்ப உலகில் ஏற்பட்டுள்ள பிரமிக்கத்தக்க வளர்ச்சி அதற்குச் சான்றாக உள்ளது. சிறந்த மருத்துவர், அறுவைசிகிச்சை நிபுணர், கணிதமேதை, கணினி வல்லுநர் ஆகியோர்போல் நிபுணத்துவம் பெற்றவர்கள் உருவாகிறார்கள். தொழில் நுட்பத்துறையில் அதீத வளர்ச்சி காணும் ஆற்றலைப் பெற்றுள்ள மூளை, அத்துறை ஒன்றில் மட்டும், அத்திசையில் மட்டுமே, பயணிக்கிறது.

தொழில்நுட்பத்துறை, மனிதனின் துயரத்தை, வலியை, சோகத்தை, ஓயாத போராட்டத்தைத் தீர்த்து வைக்காது. மனிதனின் போராட்டத்தை, துயரத்தைப் பற்றி எந்தவொரு அரசியல்வாதியோ, எந்தவொரு வழிமுறையோ, ஒழுங்குமுறையோ அக்கறை காட்ட வில்லை. எனவே, சாமானியர்களாகிய நாம்,

எண்ணத்தால் தீண்டப்படாததும், காலத்தின் பலனாக இல்லாததும், பரிணாம வளர்ச்சியில் சிக்கிக்கொள்ளாதது மாய் இருக்கும் புதிய கருவி ஒன்று உள்ளதா, இல்லை, அவ்வாறு எதுவும் இல்லையா என்பதை நமக்காக நாமே கண்டுபிடிக்கப் போகிறோம்.

நீங்கள் விரும்பினால், நீங்கள் தீவிரமாய் இருந்தால், இந்த ஆய்வினை படிப்படியாக முன்னெடுத்துச் செல்லலாம். நீங்கள் உண்மையைக் கண்டுபிடிக்க தீவிரமாய் இருக்க வேண்டும். இவ்வாறு சொல்வதின் பொருள், சமயங்கள் வலியுறுத்துவதுபோல், நீங்கள் சிரிக்கவே கூடாது, உங்கள் உடலை வருத்திக்கொள்ள வேண்டும் என்பதல்ல. ஆய்வினை முன்னெடுத்துச் செல்ல உங்களுக்கு மிகுந்த கவனம், துடிப்பு, ஆற்றல் மற்றும் மென்னயவுணர்வு இருத்தல் அவசியம். எந்தவொரு கூட்டமைப்பிற்கோ, எந்தவொரு நம்பிக்கைக்கோ, எந்தவொரு கோட்பாட்டிற்கோ கடமைப்பட்டவராக நீங்கள் இருக்கக் கூடாது. உண்மையிலேயே உலகளாவிய பரந்த மனம் உங்களுக்கு வேண்டும்.

தன் அற்ப பிரச்சினைகளை மட்டுமே சதா எண்ணிக்கொண்டிருக்கும் சின்னத்தனமான மனமாக அது இருக்கக்கூடாது. பிரம்மாண்டத்தில் சிறியவை மறைந்துபோகின்றன. ஒட்டுமொத்த மானுடத்தின் அகண்ட பரிமாணத்தில், மனிதனின் சின்னச்சின்ன பிரச்சினைகள் தீர்க்கப்படுகின்றன. ஆனால், மனித மூளை, மனம் மற்றும் இதயத்தின் சிக்கிப்பிணைந்த நிலையைப் பற்றிய புரிதல் இல்லாமல், சிறிய பிரச்சினைகளுக்கு நீங்கள் தீர்வுகாண முயற்சித்தால், உங்கள் முயற்சி தோல்வியில்தான் முடியும், உங்களால் தீர்வு காண முடியாது. எனவே, உங்கள் முழு

கவனத்தையும் செலுத்தி புரிதலைப்பெற்று நீங்களாகவே விடையைக் காணவேண்டும். பேச்சாளர் சொல்வதை திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பதில் பலனேதுமில்லை. பேச்சாளர் சொல்லும் விஷயத்திற்கு முக்கியத்துவம் உள்ளதேயன்றி, அவருக்கு முக்கியத்துவம் ஏதுமில்லை. அவர் தொடர்புகொள்ள உதவும் கருவியாய் இருக்கிறார், அவ்வளவே.

'நான்' என்ற வார்த்தை வராமல், உங்களை நீங்கள் எப்போதாவது பார்த்துணர்ந்ததுண்டா? அதேபோல், வார்த்தை இன்றி, உங்கள் மனைவியை, சாலையில் நிற்கும் அந்த மரத்தை, ஓடிக்கொண்டிருக்கும் அந்த விலங்கினை, நீங்கள் பார்த்ததுண்டா? ஒரு மரத்தை அதன் பெயரைக் குறிப்பிட்டு, கடந்த காலத்தில் அதன் தொடர்பாய் நிகழ்ந்தவைகளை எண்ணிப்பார்த்து, பார்க்காமல், எண்ணங்கள் ஏதுமின்றி அம்மரத்தைப் பார்க்க நீங்கள் எப்பொழுதாவது முயற்சித்ததுண்டா? இல்லை என்பதுதான் பதிலாயிருக்கும். உங்கள் வாழ்க்கைத்துணையை, உங்கள் அரசியல் தலைவரை, அவர்களைப் பற்றிய உங்கள் கருத்துரு இன்றி, அவர்களைக் குறித்த வார்த்தைகளின்றி, சின்னங்களின்றி அவர்களை நீங்கள் எப்பொழுதாவது பார்த்ததுண்டா?

பேச்சாளரை, நீங்கள் அவரைப் பற்றி கணித்து வைத்திருக்கும் கருத்துரு இன்றி, அவர் புகழ், செல்வாக்கு - அருவருக்கத்தக்கவை அவை - பற்றிய எண்ணங்கள் இன்றி, பார்க்க முடியுமா? ஒருவேளை, பேச்சாளரை கருத்துருக்கள் இன்றி நோக்குவது சுலபமானதாக இருக்கலாம். ஏனெனில், உங்களை அவருக்குத் தெரியாது, உங்களுக்கு அவரைத் தெரியாது. ஆனால், உங்கள் வாழ்க்கைத்துணையை, மரத்தை, மிருகத்தை,

வார்த்தைகளின்றி, கருத்துருக்கள் இன்றி பார்க்க இயலுமா?

ஒன்றைப் பற்றிய வார்த்தை ஏதுமின்றி, கற்பனை ஏதுமின்றி, கருத்துரு ஏதுமின்றி அதைப் பார்ப்பது உங்களுக்கு இயலுமா என்பது பற்றிய விழிப்புணர்வை முதலில் நீங்கள் பெற வேண்டும். ஏனெனில், அத்தகைய விழிப்புணர்வைப் பெற்றபின், நீங்கள் உங்கள் மென்னயவுணர்வை விழித்தெழச் செய்கிறீர்கள். நாம் மென்னயவுணர்வற்றவர்கள். அழுக்கு, நாற்றம், துன்பம், வறுமை போன்றவைகளை நாம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம் - இவை நம்மை பாதிப்பதில்லை. இந்த நாட்டில் நிலவும் வறுமையை போக்க முடியாது. தேசியவுணர்வை முழுவதுமாக நீங்கள் இழக்கும்வரை, வறுமைப் பிரச்சினைக்குத் தீர்வுகாண இயலாது. மாந்தர்களுக்கிடையேயான உலகளாவிய தொடர்பினை நீங்கள் புரிந்துகொள்ளும்போதுதான், வறுமைப் பிரச்சினைக்குத் தீர்வுகாண முடியும். உலக நாடுகள் ஒன்றானால், எல்லைகள் மறைந்துபோகும். ஆனால், இதிலெல்லாம் உங்களுக்கு ஆர்வம் இல்லை.

இந்த ஆய்வில், நமக்கு முக்கியமாக இருக்கவேண்டிய ஒன்றாக இருப்பது அசாதாரணமான மென்னயவுணர்வு ஆகும். 'உங்கள் புலன்களை அடக்கி ஆளுங்கள், உங்கள் உணர்வுகளை அடக்கி வையுங்கள்' என்று சமயங்கள் அனைத்தும் போதிக்கின்றன. அதனால் புலன்களின் உணர்வூக்கத்தை சிறிது சிறிதாக நீங்கள் இழந்துவிட்டீர்கள். சமயங்கள் கூறுவதற்கு எதிர்மாறாக இப்பேச்சாளர் கூறுகிறார்.

நாம் புலன்களால் வாழ்கிறோம். குறிப்பிட்ட ஒரு புலனுணர்வை சிறப்புமிக்கதாக ஒருவர் வளர்த்துக்

கொண்டிருக்கலாம். ஆனால், நான் சொல்கிறேன்: 'உங்கள் புலன்கள் அனைத்தையும் அவற்றின் உச்சத்திற்கு விழித்தெழ செய்யுங்கள். உலகை அத்தகைய உணர்வூக்கத்தோடு பாருங்கள்' என்று. அவ்வண்ணம் நோக்கும்போது, ஆற்றலும், அழகும் கொண்டதோர் அசாதாரண உளப்பாங்கு உங்களுக்குள் மலர்கிறது. எண்ணத்தைத் தவிர்த்து, வேறு புதிய உபகரணம் இருக்கிறதா என்ற நம் ஆய்வில், முதலில் நாம் அறிவது, மனிதன், உற்சாகம் இல்லாமல் மந்தமாகிப்போனான் என்பதே ஆகும்.

இயந்திரத்தனமாய் திரும்பத்திரும்ப செய்ததையே செய்துகொண்டிருப்பதாலும், சம்பிரதாயங்களாலும், சுற்றுச்சூழலின் நெருக்குதல்களாலும், மனிதன் மந்தகதியில் இயங்குகிறான். சுற்றுச்சூழல் என்று இங்கு இயற்கைச்சூழலை மட்டும் குறிப்பிடவில்லை. அரசியல்வாதிகள் மற்றும் சமயகுருமார்கள் தரும் நெருக்குதல்களையும் சேர்த்தே சுற்றுச்சூழல் நெருக்குதல் என்று கூறினோம். இத்தகைய நெருக்குதல்களால் நாம் கொஞ்சம் கொஞ்சமாக மென்னயவுணர்வினை இழந்துவிட்டோம், படைப்பாற்றலுக்குத் தேவையான சக்தியையும் இழந்துவிட்டோம்.

'படைப்பாற்றல்' என்ற சொல்லை, ஒரு ஓவியம் தீட்டுவதையோ, கவிதை எழுதுவதையோ, இலக்கியம் படைப்பதையோ குறிப்பிடுவதாக, அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை. முற்றிலும் புதியதான ஒன்றை பரிணமிக்க செய்வதையே 'படைப்பாற்றல்' என்கிறோம். 'படைத்தல்' - அந்த ஆற்றலை, உந்துதலை, அழகைப் பெறுவதற்கு, உங்களுக்கு மிகுந்த மென்னயவுணர்வு இருத்தல் வேண்டும். உங்கள் ஒவ்வொரு புலனும்

விழிப்புடன் முழுமையாக செயல்படாவிட்டால், உங்களுக்கு அந்த அதீத மென்னயவுணர்வு இருக்க முடியாது.

நாம் ஏன் புலன்களை சீரழித்துவிட்டோம்? 'உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்துங்கள், ஆசைகளை அடக்கிவையுங்கள், பெண்களை ஏறெடுத்துப் பார்க்காதீர்கள், உங்களை வருத்திக்கொள்ளுங்கள் - அப்போதுதான், நீங்கள் கடவுளைப் பார்க்க முடியும், முக்தி பெற முடியும், அருட்பிரகாசம் பெற முடியும்' என்றெல்லாம் கிருத்துவர்கள், உங்கள் புனித சாஸ்திரங்கள், சமய குருமார்கள் சொல்கின்றனர் - இது வடிகட்டிய முட்டாள்தனம். புலன்களோடிருக்கும் இந்த மனித உடல், ஒரு பிரமிப்பூட்டும் உபகரணம். உங்களிடமிருக்கும் இந்தக் கருவியை ஏன் சீரழிக்க வேண்டும்? ஆனால், இந்தச் சமயவாதிகள், 'ஆசையை அடக்கு. ஆசைக்கு அடிபணியாதே, அப்படியே ஆசை இருந்தாலும், அதை இரட்சகரின் மீது வை, கிருஷ்ணரின் மீது வை' என்று உபதேசிக்கிறார்கள்.

ஆசையின் இயல்பை நாம் புரிந்துகொள்ள வேண்டும். நம்மிடமிருக்கும் எண்ணம் என்ற பழைய கருவி, மனித இடர்பாடுகளை களைய உதவவில்லை. அதனால், புதிய கருவியை கண்டுபிடிக்க வேண்டி, நாம் செய்யும் இந்த ஆய்வில், ஆசையின் இயல்பை அறிந்துகொள்வது மிகவும் அவசியம். ஆசை என்றால் என்ன? 'ஆசையை அடக்குங்கள். முடியாவிட்டால், அதை மேன்மையானதின் மேல் வையுங்கள்' என்று ஏன் சொல்கிறார்கள்?

ஆசை, வாழ்வில் ஒரு போராட்டமாகவே உள்ளது. ஆசையை அடக்குதல், தவிர்த்தல், தப்பித்தல் போன்ற

வழிகளை இங்கு நாம் பரிந்துரைக்கவில்லை. ஆசையின் இயல்பு, அது எவ்வாறு எழுகிறது, நாம் ஏன் அதில் சிக்கியுள்ளோம், ஆசை ஏன் அசாதாரண வலிமை கொண்டதாகிவிட்டது என்பன போன்ற விஷயங்களை நாம் ஆராயப்போகிறோம்.

ஆசை என்றால் என்ன? நீங்கள் அழகான ஒரு பொருளைப் பார்க்கிறீர்கள். அழகான பெண்ணையோ, ஆணையோ பார்க்கிறீர்கள். அந்தப் பொருள் மீது, அந்த நபர் மீது உங்களுக்கு ஆசை பிறக்கிறது. ஒரு பளபளக்கும் கார் நின்றுகொண்டிருப்பதைப் பார்க்கிறீர்கள். அதனருகில் சென்று அதைத் தொட்டுப் பார்க்கிறீர்கள், உள்ளே சீட்டில் அமர்ந்துகொள்கிறீர்கள், காரைச் சொந்தமாக்கிக்கொள்ளும் ஆனந்தத்தை உணருகிறீர்கள் - அங்கே ஆசை பிறந்துவிட்டது. கார் என்ற அப்பொருளா ஆசையை உருவாக்கியது? இல்லை, பொருளைத் தவிர்த்தும், ஆசையென்ற ஒன்று உள்ளதா? கார் என்ற அப்பொருளால் ஆசை உண்டானதா? இல்லை, ஆசை என்ற ஒன்று ஏற்கனவே இருக்கிறது, ஆசைப்படும் பொருட்கள்தான் வித்தியாசப்படுகின்றனவா? ஆசையை தோற்றுவிக்கும் பொருட்களைப் பற்றி நாம் இங்குப் பேசவில்லை.

அதிகாரம்மிக்க அமைச்சராகவோ, பிரதம மந்திரியாகவோ, கவர்னராகவோ, பெரிய அதிகாரி யாகவோ, பிரசித்தி பெற்ற வயலின் கலைஞராகவோ ஆகிவிட நீங்கள் ஆசைப்படலாம். அவற்றைக் குறித்து நாம் இங்கு ஆராயப்போவதில்லை. ஆசை எனும் உணர்வின் கட்டமைப்பை, அதன் இயல்பைப் பற்றி ஆராயப்போகிறோம். ஆசையின் இயல்பைப் பற்றிய புரிதல், மேலோட்டமாக வார்த்தையளவில் இருந்தால்

போதாது. அதைப்பற்றிய உண்மையை உள்ளபடி புரிந்துகொண்டால், பிறகு, ஆசையை அடக்குதல், அதைக் கட்டுக்குள் வைத்தல் என்ற கேள்விக்கே இடமில்லை.

நாம் ஆசையை கட்டுப்படுத்துகிறோம், காம உணர்வை கட்டுப்படுத்துகிறோம். எதையும் கட்டுப்படுத்துவதாகவே நம் வாழ்க்கைமுறை உள்ளது, அவ்வாறே நாம் வளர்க்கப்பட்டிருக்கிறோம். ஆனால், இங்கு நாம் ஆசையென்ற உணர்வைப் புரிந்துகொள்ள முயற்சிக்கிறோம், ஆழமான விசாரணை செய்கிறோம், கூர்ந்து கவனிக்கிறோம், ஆசையை அடக்குவதற்கான வழியைப் பார்க்கவில்லை. இந்தப் புரிதல் ஏற்பட்டபின், நம் ஆய்வை மேற்கொண்டு எடுத்துச்செல்லலாம். ஆசை, நம் வாழ்வில் வகிக்கும் இடம் எது என்பதைப் பற்றியும், அதற்கு வாழ்வில் இடமே இல்லையா என்பது பற்றியும், ஆசையைப் பற்றிய உண்மைகளையும் நாம் ஆராயப் போகிறோம்.

ஆசையை அடக்கிவைக்க வேண்டும் என்ற தீர்மானத்தோடோ அல்லது கட்டுக்கடங்காமல் அதைத் திரியவிட வேண்டும் என்ற தீர்மானத்தோடோ நாம் நம் ஆய்வைத் துவங்கலாகாது. நம் வாழ்வில் அசாதாரண பங்கு வகிக்கும், அதே சமயம் சித்ரவதையாகவும் இருக்கும், ஆசையைப்பற்றி நாம் ஒன்றுசேர, மெதுவாக, தயக்கத்தோடு, கவனத்துடன், விசாரணை செய்யப் போகிறோம்.

ஆசை என்றால் என்ன? ஆசையின் உற்பத்தி ஸ்தானம் எது? பேச்சாளர் தரப்போகும் விளக்கங்களைக் கேட்பது மட்டும் போதாது, தயவுசெய்து நீங்களும் சிந்தித்துப் பாருங்கள். உணர்ச்சியை தோற்றுவித்த பொருளால் / நபரால் ஆசை வருகிறதா, இல்லை, ஆசை

என்பது முற்றிலுமாக பொருள் / நபர் ஆகியவற்றைச் சாராத தனித்து இயங்கும் உணர்வா என்பதைக் காண்பதற்கான இத்தேடலில் மிகுந்த ஈடுபாட்டுடன் நீங்கள் பங்கேற்க வேண்டும். ஆசையின் இயக்கத்தை முழுமையாகவும், அதன் உந்துதலால் உண்டாகும் பாதிப்புகளையும், ஆசையின் ஆழத்தையும், அதன் மெய்ம்மை நிலையையும் புரிந்துகொள்ள மிகுந்த கவனத்துடன் தீவிரமாக ஆய்வு செய்வது முக்கியமாகும்.

புலன்கள் இல்லாத நிலையில், உங்களுக்கு உணர்ச்சிகள் இருப்பதில்லை. ஒன்றைப் பார்க்கும்போது, உணர்ச்சிகள் தோன்றுகின்றன. கடையில் காட்சிக்காக வைக்கப்பட்டிருக்கும் சட்டையைப் பார்க்கிறீர்கள், இல்லை, அங்கிருக்கும் ரேடியோவைப் பார்க்கிறீர்கள். முதலில் பொருளைத் தொட்டுப் பார்க்கிறீர்கள். ஒரு அழகான காரைத் தொட்டுப் பார்க்கிறீர்கள் - ஒரு கிளர்ச்சி ஏற்படுகிறது. 'அந்தச் சட்டை மட்டும் எனக்கிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!', 'அந்தக் காரில் நான் பயணித்தால் எவ்வளவு ஆனந்தமாய் இருக்கும்!' என்று எண்ணம் உடனே தோன்றுவதை, நீங்கள் கூர்ந்து கவனித்தால், உங்களால் உணர முடியும். ஆக, உங்கள் உணர்வுக்கிளர்ச்சியிலிருந்து ஒரு கருத்துருவை, எண்ணம் தோற்றுவிக்கும் நேரம்தான் ஆசையின் துவக்கமாக அமைகிறது.

அழகான மரத்தைப் பார்க்கிறேன் - அது மனிதனால் உருவாக்கப்பட்டதல்ல. தேவாலயம், மசூதி, கோயில் மற்றும் அவற்றுள் இருக்கும் பொருட்களை மனிதன் படைத்தான். ஆனால், மரத்தை அவன் படைக்கவில்லை, இயற்கையை அவன் படைக்கவில்லை. ஆனால், இயற்கையை அவன் அழிக்கிறான்.

நீங்கள் அழகான மரத்தைப் பார்க்கிறீர்கள். அம்மரத்தின் கம்பீரமான தோற்றம், அம்மரநிழலின் நடனம், அதன் இலைகளின் மீது விளையாடும் ஒளி, சலசலக்கும் இலைகளின் இயக்கம் ஆகியவை உங்களிடம் உணர்வுக் கிளர்ச்சியைத் தோற்றுவிக்கிறது. உடனே எண்ணம் நுழைந்து, 'என் தோட்டத்தில் அந்த மரம் இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!' என்று சொல்கிறது. உங்கள் வீட்டுத்தோட்டத்தில் அந்த மரம் இருப்பது போல் எண்ணம் தோற்றுவித்த கருத்துரு தோன்றிய அக்கணமே, ஆசை பிறக்கிறது. உணர்வுக்கிளர்ச்சிகள் தோன்றிய அக்கணமே, ஆசை பிறக்கிறது. உணர்வுக்கிளர்ச்சிகள் ஏற்படுவது இயல்பான ஒன்று. அவ்வாறு ஏற்படாவிட்டால், நீங்கள் செயலிழந்து முடங்கிப் போய்விட்டீர்கள் என்றாகும்.

உங்களுக்கு மென்னயவுணர்வு இருக்கவேண்டும். கேட்பதில், பார்ப்பதில், உங்கள் கண்களில், உங்கள் விரல்களில் நுண்ணுணர்வு இருத்தல் வேண்டும். அத்தகைய நுண்ணுணர்வோடு நீங்கள் பார்க்க வேண்டும். அப்படி பார்க்கும்போது, உணர்வுக் கிளர்ச்சி ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது. நுண்ணுணர்வு இல்லாவிட்டால், உங்களுக்கு கண்கள் இருந்தும் நீங்கள் குருடர், செவியிருந்தும் நீங்கள் செவிடர். உணர்வுக்கிளர்ச்சி உண்டாகும்போது, எண்ணம் அதற்கான கருத்துருவை உண்டாக்குகிறது. கருத்துரு தோன்றும் அக்கணமே, ஆசை பிறந்துவிடுகிறது. அவ்வாறு நிகழ்வதை உங்களால் பார்க்க முடிகிறதா? இல்லை, பேச்சாளர் சொல்வதை கிளிப்பிள்ளையாய் திரும்பச் சொல்லப்போகிறீர்களா? அதுவும் இல்லையென்றால், திரும்பவும் உங்கள் சம்பிரதாயங்களால் விலங்கிடப்பட்டு, 'ஆசையை அடக்க வேண்டும்' என்று சொல்லப்

போகிறீர்களா? 'நீங்கள் பேசுவதெல்லாம் அபத்தம்' என்று என்னைக் குற்றம் சொல்லப்போகிறீர்களா?

உண்மையிலேயே ஆசை எனும் பிரச்சினையைக் குறித்து ஆழமாக ஆராய்ந்தீர்களேயானால் வாழ்க்கையில் முக்கிய பங்கு வகிக்கும் ஆசையின் தோற்றுவாய் குறித்து நீங்களே கண்டுணர்வீர்கள். அழகான காரை / சட்டையை / மங்கையை / ஓவியத்தைப் பார்க்கிறீர்கள், உணர்வுக்கிளர்ச்சி உண்டாவதை உணருகிறீர்கள். அந்தச் சட்டையை நீங்கள் அணிந்துகொண்டிருப்பது போன்ற கற்பனை கருத்துருவை, அந்தக் காரில் உட்கார்ந்து போவது போன்ற கருத்துருவைத் தோற்றுவிக்காவண்ணம் எண்ணத்தை தற்காலிகமாகச் செயலிழக்கச் செய்ய முடியுமா என்பது கேள்வி.

உணர்வுக்கிளர்ச்சிக்கும், அக்கிளர்ச்சியின் மீது உடனே ஆக்ரமிக்கும் எண்ணத்திற்கும் இடையே, ஒரு இடைவெளி ஏற்படக்கூடுமா? - கண்டுபிடியுங்கள். இக்கேள்விக்கான பதிலைத் தேடும் உங்கள் முயற்சியானது, உங்கள் மனதை, விழிப்போடும், கவனத்துடனும் கூடிய ஒன்றானதாகவும் மாற்றும்.

எண்ணத்தைத் தவிர்த்து, பிரச்சினைகளைத் தீர்க்க மனிதனுக்கு உதவக்கூடிய புதிய உபகரணம் ஏதாவது இருக்கிறதா என்ற ஆய்வில், என்றாவது மனிதனால் பயத்திலிருந்து விடுபட்டு இருக்க முடியுமா என்ற கேள்வி எழுகிறது. ஏதேனும் ஒன்றைப் பற்றிய பயம் நமக்கெல்லாம் இருக்கிறது. இறுதி முடிவாக மரணத்தைப் பற்றிய பயமும் நமக்கிருக்கிறது. கடந்த கால நிகழ்ச்சியோ அல்லது எதிர்காலத்தில் அந்த ஒன்றை எதிர்கொள்ள நேரிடும் என்ற நம் கற்பனையோ நமக்குள்

பயத்தைத் தோற்றுவிக்கிறது. நிச்சயமற்றத் தன்மை கொண்ட நிகழ்கால செயல்பாடுகளும், செய்முறைகளும் நிகழ்காலத்தைப் பற்றிய பயத்தை உண்டாக்குகின்றன. நாம் சதா பயத்தில் வாழ்கிறோம்.

நீங்கள் பயப்படவில்லையா? உங்கள் மனைவியை நீங்கள் அடக்கி ஆள்வதால், அவரைப் பார்த்து நீங்கள் பயப்படாமலிருக்கலாம். ஆனால், நீங்கள் அரசியல் வாதியைக் கண்டு பயப்படலாம். ஆக, எல்லோருமே பயம் எனும் பாரத்தை சுமக்கிறோம். பயம் என்ற பிரச்சினையை மனிதன் என்றுமே முடிவிற்குக் கொண்டு வந்ததில்லை. பயத்திலிருந்து தப்பியோடுவதே அவன் வழக்கம். அவன் வசம், பயத்தை அடக்க, பயத்திலிருந்து தப்பிக்க, பயத்தை மறுதலிக்க, ஏராளமான உத்திகள் உள்ளன. ஆனால், பயத்திற்கான தீர்வை அவன் காணவில்லை.

அச்சம் குடிகொண்டிருக்கையில், பயங்கரமான கொடூர செயல்கள் இழைக்கப்படுகின்றன, எல்லா வகையான தவறான செயல்களும் நடந்தேறுகின்றன. பயம் அச்சுறுத்தும்போது, உங்கள் உடல் மற்றும் மனம் குறுகி சுருங்கிப் போகிறது. பயம் எனும் இப் பிரச்சினைக்கு நாம் தீர்வுகாண வேண்டும். ஏட்டளவில் இல்லாமல், நிஜத்தில், பயத்திலிருந்து முழுமையாக விடுதலைபெறும் வழியை நாம் காண வேண்டும். அது இயலுமா?

இயலும் என்றோ அல்லது இயலாது என்றோ எந்தவொரு முடிவான தீர்மானத்தையும் கொள்ளாமல், நாம் பயத்திலிருந்து விடுதலை பெற முடியுமா என்ற கேள்வியை அணுகப்போகிறோம். பயத்தின் இயல்பு,

பயத்திற்கான காரணம், பயத்தின் தோற்றுவாய், பயத்தின் ஆணிவேர் ஆகியவற்றை நாம் கூர்ந்து கவனிக்கப் போகிறோம். பயத்தின் பலதரப்பட்ட கிளைகளையோ, இல்லை, அதன் ஏராளமான இலைகளையோ நாம் பார்ப்பதாக இல்லை. பயத்தின் ஆணிவேராக இருப்பது எது என்பதைப் பார்க்கிறோம்.

ஆணிவேரை கண்டுபிடித்து வெட்டிவிட்டால், கிளைகளும், இலைகளும் தானாகவே வாடிப்போகும், உதிர்ந்து மறையும். எனவே, பயத்திலிருந்து பூரண விடுதலைபெற இயலுமா என்ற இக்கேள்விக்கு உங்கள் முழு கவனத்தையும் அளியுங்கள். இவ்விசாரணையில் நீங்கள் ஆர்வத்துடன் பங்கேற்றால், இங்கிருந்து வீடு திரும்பும்போது, உண்மையிலேயே பயத்திலிருந்து விடுதலை பெற்றவராக நீங்கள் இருப்பீர்கள்.

பயம் தோன்றுவதற்கான காரணம் எது? ஒன்று தோன்றுவதற்கான காரணம் இருப்பின், அக்காரணத்தை முடிவிற்குக் கொண்டுவர முடியும் என்பது தர்க்கரீதியிலும், இயற்கை நியதியிலும் நிறுவப்பட்டுள்ள உண்மை. நான் வலியில் அவதிப்படுகிறேன். வலிக்கான காரணம், புற்றுநோயாக இருக்கலாம். காரணத்தைக் கண்டுபிடித்து சிகிச்சை செய்துவிட்டால், வலி சரியாகிவிடும். புற்றுநோய் முற்றிய நிலைக்கு போய்விட்டிருந்தால், அது என்னைச் சாகடிக்கலாம். ஆனால், வலிக்கான காரணத்தை நான் கண்டுபிடிக்க வேண்டும். நல்ல மருத்துவர்கள், நோய்க்கான காரணத்தைத் தெரிந்துகொள்ள சோதனைகள் பல செய்வார்கள். நோயின் அறிகுறிகளின் மூலமாகவும் நோய்க்கான காரணத்தை அறிவார்கள்.

` இருட்டைப் பார்த்து பயம், பெற்றோர்களைப் பார்த்து பயம், வாழ்க்கைத்துணையைப் பார்த்து பயம், அரசியல்வாதியைப் பார்த்து பயம் போன்ற பயத்திற்கான அறிகுறிகள், பயப்பட வைக்கும் பொருட்கள். ஆனால், நம் கேள்வி, 'இப்பயங்களின் ஆணிவேராய் இருப்பது எது?' என்பதே.

முதலில், 'காலம், பயத்திற்கான காரணமா?' என்ற கேள்வியை எழுப்புகிறோம். கேள்வியை கவனமாகப் பாருங்கள். பேச்சாளர் சொல்வதை அப்படியே ஏற்றுக் கொள்ளாதீர்கள், கேள்வி கேளுங்கள், சந்தேகப்படுங்கள். காலம், பயத்திற்கான முக்கிய காரணமாக இருக்கிறதா? நாளை என்ன நேருமோ, நேற்று அல்லது பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன் அப்படி நடந்ததே, இப்பொழுது என்ன நடக்குமோ என்றெல்லாம் தோன்றும் பயங்களில், காலம் செயல்படுகிறது. போனவாரம், நான் ஒரு தவறிழைத்தேன். அச்செயலால் கஷ்டப்பட்டேன். அத்தவறு திரும்பவும் நேராது என்று நம்புகிறேன். இதில் 'நம்புகிறேன்' என்ற சொல் குறிப்பாக எதிர்காலத்தை உணர்த்துகிறது.

கடிகாரத்தின்படி நேரம், கதிரவன் உதிப்பதும் மறைவதும் தோற்றுவிக்கும் காலம், நேற்று - இன்று - நாளை என்பதாக இருக்கும் காலம், மற்றும் நேற்றைய ஞாபகங்கள் மற்றும் அனுபவங்கள், இன்று சிறிதே மாற்றியமைக்கப்பட்டு, அவை நாளைக்கும் தொடரும் இயக்கம் என்பவைகளாக பௌதீக காலம் இருக்கிறது. இங்கிருந்து உங்கள் இல்லத்தைச் சென்றடைய நேரம் பிடிக்கும். ஆக, பௌதீக காலம் என்றும், உளரீதியான காலம் என்றும் அழைக்கப்படும் உள்முக காலமும் உள்ளன. 'இந்த ஆண்டின் இறுதிக்குள் நல்ல

உத்தியோகம் கிடைக்கும் என்று நம்புகிறேன்', 'சில காலம் கழித்து, நான் பெருந்தன்மை உடையவராக மேன்மையுறுவேன் என்று நம்புகிறேன்', 'நான் நாளை ஒரு நல்லவரை சந்திப்பேன் என்று நம்புகிறேன்' என்றெல்லாம் கூறும்போது உளரீதியான காலம் செயல்படுகிறது.

'நம்புகிறேன்' என்ற சொல், காலத்தைக் குறிப்பதாக உள்ளது. 'இன்று இப்படி இருக்கிறேன், ஆனால், நான் இதைவிட நன்றாக இருப்பேன்', 'நான் முரடனாக இருக்கிறேன். ஆனால், நான் அஹிம்சாவாதியாக ஆகிவிடுவேன்' என்று நீங்கள் சொல்லும்போது, 'உள்ளதிலிருந்து' மேன்மையுறுதல் என்ற கருத்து புலப்படுகிறது. 'உள்ளதை' வேறொன்றாக மாற்றம் அடையச் செய்வது, காலத்தின் செய்முறையாக உள்ளது.

ஆக, பயத்தின் காரணியாக, காலம் இருக்கிறது. மிகுந்த ஆற்றலோடு, சக்தியோடு இப்போது நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். ஆனால், ஒரு விபத்து, என்னைச் சாகடிக்கலாம். மரணம் என்பது நிச்சயம். வாழ்விற்கும், மரணத்திற்கும் இடைப்பட்ட இந்த இடைவெளி, 'இன்னும் கூடுதலாக', 'நம்பிக்கை' மற்றும் 'சுயமுன்னேற்றம்' என்பவைகளாக நிலைமாற்றம் செய்யப்படுகிறது. 'நான் அதை நிறைவேற்ற விரும்பு கிறேன். ஆனால், நிறைவேற்ற முடியாமல் போகலாம்', 'அந்த வேலைக்கு நான் விண்ணப்பித்திருக்கிறேன். ஆனால், அவ்வேலைக்கான திறமை எனக்கில்லா திருக்கலாம்' என்றெல்லாம் பயப்படுவதில், காலம் ஒரு காரணியாகச் செயல்படுகிறது. காலத்தை எப்படி துடைத்தெறிவது என்று நாம் கேட்கவில்லை. பயத்தின் இயல்பைப் பற்றியே விசாரணை செய்து கொண்டிருக் கிறோம்.

எண்ணம், பயத்திற்கான மற்றொரு காரணியாக செயல்படுகிறதல்லவா? நான் கடவுள் இருக்கிறார் என்று நம்புகிறேன். என் நம்பிக்கையை நீங்கள் குலைக்கப் பார்க்கிறீர்கள். உங்கள் கூற்று, என்னை பயத்திலாழ்த்துகிறது. கடந்த காலத்தில் அனுபவித்த வேதனையை எண்ணிப்பார்த்து, அது மறுபடியும் வராது என்ற நம்பிக்கையோடும் அது திரும்பவும் நேர்ந்துவிடக் கூடாது என்ற விருப்பத்தோடும், எண்ணவோட்டம் செயல்படுகிறது. இது எண்ணத்தின் இயக்கம். ஆக, எண்ணமும், காலமும், பயத்தின் ஆணி வேராக உள்ளன.

பௌதீகரீதியான காலத்தை நிறுத்திவைக்க உங்களால் முடியாது - ஒரு மொழியைக் கற்றுக் கொள்ளவோ அல்லது ஒரு திறமையை வளர்த்துக் கொள்ளவோ, காலம் தேவைப்படுகிறது. பயத்தின் ஆணிவேராக இருக்கும் காலமும் எண்ணமும் இயங்கிக் கொண்டிருப்பவை. ஆனால், உண்மையில், மனோ ரீதியான காலம் என்று ஏதாவது இருக்கிறதா என்ன?

காலம் என்ற பிரச்சினை, எண்ணம் என்ற பிரச்சினையைப் போன்றே மிகவும் முக்கியமானது. நாம் காலத்தின்படி வாழ்கிறோம். நம் விஷயஅறிவு அனைத்தும் காலத்தை அடிப்படையாகக் கொண்டவை. முரட்டுக் குணத்தை குறைத்துக்கொள்வதற்கு நாம் படும்பாடு, மற்றும், தற்சமயம் இருக்கும் நிலையிலிருந்து உயர்ந்துவிட நாம் நடத்தும் போராட்டம் ஆகியவையெல்லாம் வாழ்க்கைத் தராசில் நம் எண்ணம் போடும் எடைகள். நான் மகிழ்ச்சியாய் இல்லை, நான் முரடன், தனிமைப் பட்டு போய் மனச்சோர்வுடனும், பதற்றத்தோடும் இருக்கிறேன் - இதுதான் நான் - அது ஒரு உண்மை. நான் இவ்வாறு இருப்பதிலிருந்து மாறிவிட வேண்டும் என்ற எண்ணம் எழுகிறது.

'உள்ளதாய்' இருக்கும் இந்நிலையிலிருந்து வேறுவிதமாய் 'ஆதல்' வேண்டும் என்று தோன்றுகிறது. 'ஆதல்'-க்கு காலம் தேவைப்படுகிறது. அலுவலக எழுத்தர், மேலதிகாரியாக ஆவதற்கு காலம் தேவைப்படுகிறது. இவ்வகை செய்முறையையே, பிரக்ஞை, உணர்வு, சிந்தனை, உளப்பாங்கு ஆகிய தடங்களிலும் நாம் பின்பற்றுகிறோம். நீங்கள் வன்முறையாளனாக இருக்கிறீர்கள்; 'நான் அஹிம்சாவாதியாக ஆவேன்' என்று நீங்கள் சொல்லும்போது, காலத்தின் குறுக்கீட்டை நீங்கள் அனுமதிக்கிறீர்கள். ஆனால், 'நான் வன்முறையாளனாக இருக்கிறேன். என் இயல்பைப் பற்றி நான் ஆழமாக விசாரணை செய்யப்போகிறேன், என் நடவடிக்கைகளை உன்னிப்பாகக் கவனிக்கப் போகிறேன், அதை புரிந்துகொள்ளப் போகிறேன்' என்று நீங்கள் சொன்னால், அங்கே காலத்தின் குறுக்கீடு இல்லை. அதுவே, உள்ளதிலிருந்து வேறொன்றாக ஆக முயற்சிக்கும்போது, காலம் உள்ளே நுழைகிறது.

உள்ளதைவிட மேலானது என்று ஒன்றின் தரத்தை நிர்ணயிப்பது, அளவீடு செய்வதாகும். அளவீடாக இருக்கும் 'ஆதல்', அதற்கான காலத்தைக் கோருகிறது. உங்களைவிட புத்திசாலியான ஒருவருடன் உங்களை நீங்கள் ஒப்பிட்டுக்கொள்வது என்பது அளவிடுதலாகும். உங்களை நீங்கள் யாருடனும், உங்கள் கடவுளர்கள், புனிதர்கள், குருமார்கள், மற்றுமுள்ள அனைவருடனும் கூட, உங்களை ஒப்பிட்டுக்கொள்ளாதபோது என்ன நேரிடுகிறது? நீங்கள், நீங்களாகவே இருப்பீர்கள். ஆனால், பிறருடன் ஒப்பிட்டுக்கொண்டு, அவரைப்போலவே ஆகவேண்டும் என்று நீங்கள் முயற்சிக்கும்போது, நீங்கள் உங்களைப் புரிந்துகொள்வதில்லை. ஆக, காலம் என்பது, 'ஆதல்', 'ஆதல்' என்பது உண்மை அல்ல.

வன்முறையாளனாகிய நான், அஹிம்சாவாதியாக 'ஆதல்' வேண்டும் என்று நான் சொல்லும்போது, அங்கு அஹிம்சை, நிஜத்தில் இல்லை, அது ஒரு பொய்ம்மை. அஹிம்சையைப் பற்றி இந்த நாட்டில் பெருமளவில் பேசப்பட்டாலும், இங்கு அது இல்லை, உண்மையில் இருப்பது வன்முறையே. அஹிம்சையைப் பற்றி மறந்துவிடுங்கள் - மறந்துவிட்டால், நீங்கள் வன்முறையை எதிர்கொண்டு போராட முடியும்.

வன்முறை பற்றி புரிந்துகொள்ள நீண்டகாலம் ஆகலாம், அல்லது, சீக்கிரமே புரியலாம். 'வன்முறையைப் பற்றி நாளை விசாரணை செய்கிறேன். அதுவொன்றும் அவ்வளவு முக்கியமானதல்ல' என்று சொல்லிக் கொண்டு சோம்பேறித்தனமாய் இருப்பீர்களேயானால் வன்முறையைப் பற்றிய புரிதல் வர நீண்ட காலமாகலாம். ஆனால், அதைப் புரிந்துகொள்ள வேண்டும் என்ற தீவிர அக்கறை இருப்பின், வன்முறையை ஆழமாக நோக்கும் அக்கணமே அதைப் புரிந்துகொள்வீர்கள்.

'ஆதல்' இயக்கம் நடைபெறும் இடத்தில், உளரீதியான காலம் இருக்கும். 'ஆதல்' என்பது கானல் நீரைப்போன்றது. நிஜத்திலிருப்பது, உங்களுடைய உண்மையான நிலை - உங்கள் கோபம், உங்கள் பயங்கள், உங்கள் எண்ணப் பிரதிபலிப்புகள். பயம் மற்றும் எண்ணத்தின் முக்கிய காரணியாக இருப்பது காலம். பௌதீக ரீதியான காலத்தை உங்களால் நிறுத்த முடியாது. ஆனால், காலத்தின் இயல்பை உள்முகத்தில் புரிந்துகொள்ள முயற்சி செய்யுங்கள். 'ஆதல்' இயக்கத்தையும், எண்ணத்தின் இயக்கத்தையும் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். அவற்றை அடக்கவோ, மறுதலிக்கவோ செய்யாதீர்கள்.

'எண்ணத்தை எவ்வாறு கட்டுப்படுத்துவது?' என்ற கேள்வியை கேட்காதீர்கள் - அது ஒரு அபத்தமான கேள்வி. யார் அந்தக் கட்டுப்படுத்துபவர்? எண்ணத்தைக் கட்டுப்படுத்த எண்ணும் கட்டுப்படுத்துபவரான நீங்கள், அந்த எண்ணத்தின் அங்கமாகவே இருக்கிறீர்கள். எனவே, உண்மையிலேயே பயத்தை முடிவிற்குக் கொண்டுவர வேண்டும் என்ற தீவிர அக்கறையோடு நீங்கள் இருந்தால், காலம் மற்றும் எண்ணத்தின் இயல்பையும், வடிவமைப்பையும் ஆழமாகச் சென்று விசாரணை செய்ய வேண்டும்.

'தயவு செய்து, பயத்திலிருந்து விடுதலைபெற ஒரு வழிமுறையைச் சொல்லுங்களேன்' என்று விண்ணப் பிப்பது சரியல்ல. நீங்கள் உங்களைப் புரிந்துகொள்ள வில்லை, உங்கள் கோபம், பயம், ஆசை போன்றவை களாயிருக்கும் உங்கள் பிரக்ஞையை ஊன்றிப் பார்த்ததில்லை என்பதை, வழிமுறையை நாடும் உங்கள் விண்ணப்பம் குறிப்பாக உணர்த்துகிறது.

சோகம், அன்பு மற்றும் கருணை பற்றியும், உண்மையான சமயம் என்றால் என்ன என்பது பற்றியும் நாம் பேசலாம். சமய உணர்வுள்ள மனம் எது, தியானம் எப்படிப்பட்டது, எண்ணங்கள் அனைத்தையும் கடந்த புனிதம் என்று ஏதாவது உள்ளதா என்பதைப் பற்றியெல்லாம்கூட நாம் பேசவேண்டும். நாம் மேற்கூறியவைகளைப் பற்றியெல்லாம் விசாரணை செய்யவேண்டும். ஏனென்றால், அவைகள்தாம் நம் வாழ்க்கை.

மரணம், முரண்பாடு, வலி, சோகம், களிப்பு, பயம், தியானம் என்பதாக நம் வாழ்க்கை இருக்கிறது.

அவற்றையெல்லாம் பற்றிய புரிதல் பெற, நமக்கு சக்தியும் ஜீவனும் தேவை. சில நம்பிக்கைகளை கெட்டியாகப் பிடித்துக்கொண்டும், குறிப்பிட்ட வார்த்தைகளை திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டும், உறுதியான தீர்மானங்களை ஏற்றுக்கொண்டும் இருப்பது, உங்களுக்கு அத்தகைய சக்தியையும், ஜீவனையும் பெற்றுத்தராது. மாறாக, அவை உங்கள் சக்தியை அழிக்கும். சக்தியானது, குறிப்பாக சுதந்திரத்தை உணர்த்துகிறது. நீங்கள் நினைத்ததை செய்வதல்ல சுதந்திரம். சுதந்திரத்தோடு இருக்கும்போது, அசாதாரண சக்தியை பெறுகிறீர்கள்.

*கல்கத்தா, 21.11.1982*

■■

# 7

# சோகத்தை முடிவிற்குக் கொண்டுவருதல்

இந்நிகழ்ச்சி, அறிவுசார்ந்த கேளிக்கை அல்ல என்பதை மீண்டும் நினைவுபடுத்த விரும்புகிறேன். நம் அன்றாட வாழ்க்கையைப் பற்றியும், சக மனிதர்களுடன் நாம் கொண்டிருக்கும் உறவின் தன்மை பற்றியும் கலந்துரையாடவுள்ளோம். மேலும், உலக நடவடிக்கைகள், உலகில் நிலவும் சீர்கேடுகள், பொறுப்பற்ற செயல்கள், குழப்பங்கள் ஆகியவற்றைப் பற்றியும் விவாதிக்கப்போகிறோம். நாற்பதாயிரம் வருடங்களாக இப்புவியில் வாழ்ந்துவரும் மனிதன் ஏன் இன்னும் இவ்வாறு நடந்துகொள்கிறான்? மனிதனுக்கு என்ன நேர்ந்தது? நாம் ஏன் சீரான, விவேகமான, சமச்சீரான வாழ்க்கை வாழவில்லை?

நேர்மையற்ற, ஒழுக்கங்கெட்ட, ஊழல் மலிந்த, அழிவுசக்தியாய் விளங்கும் இந்தச் சமுதாயத்தை நாம்தான் உருவாக்கினோம்; நாம் ஒவ்வொருவரும் இந்தச் சமுதாயம் இப்படி உருவாவதற்குப் பங்காற்றியுள்ளோம். நாம் நிர்மாணித்த இச்சமுதாய கட்டமைப்பின் அடிப்படை மாற்றத்தை பரிபூரணமாக கொண்டுவர வேண்டுமென்றால், மாற்றம் முதலில் நமக்குள்

வரவேண்டும். மாற்றம் துவங்க வேண்டியது நமக்குள்தானே தவிர, அரசியலிலோ, கம்யூனிஸத்திலோ அல்லது, தற்போதைய நிலையிலிருந்து பின்வாங்குவதிலோ அல்ல. நாட்டை ஒழுங்குபடுத்துவதற்கு, முதலில் நம் வீட்டில் ஒழுங்கைக் கொண்டுவர வேண்டும். ஒழுங்கின்மை, வன்முறை, குழப்பம் மற்றும் தனிமை என்பதாக நம் இருப்பு உள்ளது. பரிபூரண ஒழுங்கு என்றால் என்ன, உலகில் அன்பு நிலவுகிறதா, காருண்யம் என்றால் என்ன, உலகெங்கிலும் வாழும் மனிதர்களின் துயரம் என்றாவது முடிவிற்கு வருமா என்பதைப் பற்றியெல்லாம் நாம் கலந்துரையாடவுள்ளோம்.

சுமுகமான முறையில் நம் பிரச்சினைகளைப் பற்றி விவாதிக்கப்போகிறோம். நமக்கிடையே எதிர்ப்போ அல்லது இணக்கமோ இல்லாமல், விசாரணை செய்யப்பார்க்கிறோம். நாம் ஏன் இத்தகைய ஒழுக்கமற்ற வாழ்க்கையை நடத்துகிறோம், நாம் ஏன் விஷயங்களை அப்படியே ஏற்றுக்கொள்கிறோம் என்பதைப் பற்றியெல்லாம் ஆராயலாம். இங்கு நாம் பேச இருப்பது, வெளிப்புறப் புரட்சியைப் பற்றிய பேச்சோ, இல்லை, அதைப் பரிந்துரைக்கும் பேச்சோ இல்லை. அத்தகைய வெளிப்புறப் புரட்சிகள் என்றுமே நல்லதோர் சமூகத்தை உருவாக்கியதில்லை.

மனிதன் ஏன் இவ்வாறிருக்கிறான் என்பதையும், அவன் நடவடிக்கையையும் உன்னிப்பாகக் காணப் போகிறோம். இந்த அவலநிலைக்கு சுற்றுச்சூழலையோ, அரசியல்வாதிகளையோ, விஞ்ஞானிகளையோ காரணம் காட்டி குற்றம் சொல்வது என்பது ஒரு சுலபமான தப்பித்தல் வழியாகும். ஆனால், நாம் ஊன்றிக் கவனிக்க வேண்டியதாக இருப்பது, ஓரளவு படித்தவர்களாகிய,

ஓரளவு புத்திசாலிகளாகிய நாம் ஏன் இந்த அளவிற்கு ஒழுங்கற்ற வாழ்க்கையை வாழ்கிறோம் என்பதே.

ஒழுங்கின்மை என்றால் என்ன? குழப்பத்திலிருக்கும் மனம், ஒழுங்கைப் பற்றி அறிய முடியாது. குழப்பத்திலிருக்கும் மூளை, தெளிவற்றிருப்பதால், ஒழுங்கை அதனால் காண முடிவதில்லை. நாம் கலக்கத்திலிருக்கிறோம், நிச்சயமற்றத் தன்மை நம்மை குழப்பத்திலாழ்த்துகிறது. நம் நிலைமை இவ்வாறிருக்கும் போது, ஒழுங்கான வாழ்க்கையைக் கோரி வெறுமனே தேடியலைவது, முட்டாள்தனமான காரியம்.

நம் வாழ்க்கை சீர்கெட்டிருப்பதற்கான காரணம் எது என்பதைப் பற்றியும், முற்றிலுமாக சீரற்ற நிலையிலிருக்கும் இச்சமுதாயம் உருவாகக் காரணமானது எது என்பதைப் பற்றியும் நாமே கண்டுபிடிக்க இயலுமா? உலக நடவடிக்கைகள் அனைத்திற்கும் நாம் அனைவரும் பொறுப்பாளிகள் என்ற தெளிவோடு இவ்வுரையாடலின் தொடக்கத்திலேயே நாம் இருக்க வேண்டியது மிகவும் அவசியம். நாம் ஏன் ஒழுங்கற்ற வாழ்க்கை வாழ்கிறோம், மற்றும் உலகத்தில் நடக்கும் செயல்களின் தொடர்பாய், நமக்குள்ளப் பொறுப்பு என்ன என்பதைப் பற்றியும் இங்கு நாம் விசாரணை செய்யப்போகிறோம்.

சீர்கேடு என்றால் என்ன? அதன் இயல்பும் கட்டமைப்பும் எத்தகையது? எங்கெல்லாம் முரண்பாடு உள்ளதோ, அங்கெல்லாம் சீர்குலைவு இருக்கும். சொல்வது ஒன்றாகவும், செய்வதொன்றாகவும், சிந்தனை ஒன்றாகவும் செயல்பாடு முற்றிலும் எதிர்மாறானதாகவும் உள்ள நிலைதான் முரண்பாடான நிலை. அந்நிலை பற்றிய விழிப்புணர்வு நமக்கு இருக்கிறதா என்று வியக்கிறேன். •

அரசியல் கோட்பாடுகளை அல்லது சமயக் கோட்பாடுகளைப் பின்பற்றும்போது, அங்கு முரண்பாடு கட்டாயம் தோன்றும். நம்மைப் பற்றிய தற்பெருமை களை முன்நிறுத்திக்கொள்ளும்போதும், சீர்குலைவு உண்டாகும். நிஜத்தில் உள்ளதை, குறிப்பிட்ட ஒரு மாதிரிவடிவமைப்பிற்கோ, குறிப்பிட்ட இலட்சியத் திற்கோ, குறிப்பிட்ட நம்பிக்கைக்கோ மாற்றியமைக்க முயற்சிக்கும்போதும், முரண்பாடு உண்டாகிறது. அதாவது, நிஜத்தில் நமக்குள் தோன்றும் உணர்வுகளை கவனிக்காமல் புறந்தள்ளி விட்டு, ஒரு இலட்சியத்தைப் பின்தொடர்ந்து செல்வது, சீர்குலைவைக் கொண்டுவரும் காரணிகளில் ஒன்றாகும். பிறிதொரு காரணியாய் இருப்பது, உளரீதியில் ஒரு அதிகாரத்தை ஏற்றுக் கொள்வதாகும்.

மதகுருவின் அதிகாரத்தையோ, சமய நூல்களின் அதிகாரத்தையோ, ஆன்மிகத் தலைவர்கள் என்று அழைக்கப்படுபவர்களின் அதிகாரத்தையோ ஏற்றுக் கொள்வது, முரண்பாடு மற்றும் சீர்குலைவிற்கு வித்திடுகிறது. மனோரீதியில், நாம் வெகுசுலபமாக அதிகாரத்தை ஏற்றுக்கொண்டு விடுகிறோம். விஞ் ஞானிகள், பொறியாளர்கள், மருத்துவர்கள் போன்றோர் அவர்கள் துறையில் அதிகாரபூர்வமாக சொல்வதை நாம் ஏற்றுக்கொண்டுதான் ஆகவேண்டும். ஆனால், உள்முகத்தில், மனோரீதியில், நாம் ஏன் அதிகாரத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்? இது ஒரு முக்கியமான கேள்வி. இதைப்பற்றி பின்பு ஆய்வு செய்யலாம்.

சீர்குலைவிற்கான காரணங்கள் யாவை என்பதை இப்போது பார்க்கலாம். இலட்சியத்தைப் பின்பற்றுதல் மற்றும் மனோரீதியில் அதிகாரத்தை ஏற்றுக்கொள்ளல்

ஆகியவை சீர்குலைவிற்கான காரணங்கள் என்று சொன்னோம். அகத்தில் மேன்மையான நிலையை அடைந்துவிட வேண்டும் என்ற நம் நிரந்தரமான முயற்சியும் சீர்குலைவிற்குக் காரணமாய் இருக்குமோ என்று தோன்றுகிறது. இக்காரணங்களை ஒவ்வொன்றாக ஆராய்ந்து பார்க்கலாம்.

நாம் ஏன் இலட்சியங்களைக் கொண்டிருக்க வேண்டும்? அரசியல் இலட்சியங்கள் பல உள்ளன. கம்யூனிஸ உலகில், மார்க்ஸ் அல்லது லெனின் உரைத்ததை, தத்துவ விளக்கமளிப்பவர்கள், தங்களின் நாட்டத்தின்படியும், தாங்கள் கற்ற விதத்தின்படியும், தாங்கள் செய்த சரித்திரபூர்வமான ஆராய்ச்சிகளின் படியும், மொழிபெயர்ப்பு செய்திருக்கிறார்கள். எனவே, நாம் கேட்கிறோம்; நாம் ஏன் இலட்சியங்களைக் கொண்டிருக்க வேண்டும்? என்று. இலட்சியம் என்றால் என்ன? 'ஐடியா' (idea) என்ற ஆங்கிலச்சொல்லின் மூலஅர்த்தமாக 'உற்றுக் கவனிப்பது, பார்ப்பது, நோக்குவது' (to observe, to see, to look) என்பதாக உள்ளது. ஆனால், பொதுவழக்கில், 'ஐடியா' என்பதற்கு, எண்ணத்தால் உருவாக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட கோட்பாடு என்று நாம் மொழிபெயர்த்துவிட்டோம் - 'ஐடியா'தான் இலட்சியமாகிவிட்டது.

இலட்சியம் வாழ்க்கைக்கு மிகவும் முக்கியமான ஒன்றாகக் கருதப்படுகிறது. இலட்சியத்தை பின்தொடர்வதே முழுநேரப் பணியாகிவிட்டது. 'உள்ளது' முற்றிலுமாக உதாசீனப்படுத்தப்பட்டது. ஆனால், 'உள்ளது'தான், முக்கியமானது, இலட்சியம் அல்ல. 'உள்ளது' என்று நாம் இங்கே குறிப்பிடுவது, அகத்திலும் புறத்திலும் உண்மையிலேயே நிகழ்ந்து கொண்டிருப்

பதையே. பெரும்பாலும், மனிதர்கள் வன்முறை யாளர்களே. 'உள்ளதாக' வன்முறை ஒருவரிடம் இருக்கும்போது, அவர் அஹிம்சையை இலட்சியமாகக் கொண்டிருப்பதில் எந்த மெய்ம்மையும் இல்லை, அதற்கு எந்த மதிப்பும் இல்லை. நாம் வன்முறையாளர்கள் என்பதுதான் மெய்ம்மை. இலட்சியங்களின்படியோ, மாதிரிவடிவமைப்புகளின்படியோ நாம் வன்முறை யாளர்கள் என்ற உண்மையை அணுகாமல், அவ்வன்முறைக்கான காரணத்தையோ காரணங்களையோ புரிந்துகொள்வதுதான் ஏற்புடையது. இந்த நாட்டில் அஹிம்சை என்ற மாயையை பெருமளவில் நாம் பின்தொடர்வதால், நிஜத்தில் நடந்துகொண்டிருப்பதை கண்டுணர்வதற்கான ஆற்றல் நமக்கு மறுக்கப்படுகிறது.

'உள்ளதை' நாம் ஒருபோதும் பார்ப்பதில்லை. நிஜத்தில் நடந்துகொண்டிருக்கும் விஷயத்தை வேறொன்றாக மாற்ற விரும்புகிறோம். ஆண்டாண்டு காலமாக இவ்வாறுதான் நடைபெற்று வருகிறது. அரசியல் சித்தாந்தங்கள், சமயக் கொள்கைகள், தனக்காக உருவாக்கிக்கொண்ட இலட்சியங்கள், இலக்குகள் போன்றவையெல்லாம் நம் வாழ்வில் அசாதாரண முக்கியத்துவம் பெற்றுவிடுகின்றன.

உண்மையில் அக்கணத்தில் நிகழ்ந்துகொண்டிருப் பதற்கு மதிப்பொன்றும் நாம் தருவதில்லை. அதாவது, 'உள்ளதாக' இருப்பதை, 'இப்படிப்பட்டதாக இருக்க வேண்டும்' என்ற இலட்சிய நிலைக்கு மாற்ற முயற்சிக்கும்போது அங்கு போராட்டமும், சீர்குலைவும் ஏற்படுகிறது. மாறாக, நாம் கவனத்துடன் 'உள்ளதை' புரிந்துகொள்ளும்போது, நம்மால் அதைச் சமாளிக்க முடியும்.

நம்மிடம் 'உள்ளதாய்' இருக்கும் வன்முறை, வெறுப்பு, விரோதம், மிருகத்தனம் ஆகியவற்றைப் பற்றிய 'புரிதலை' நாம் பெறும்போது, அவற்றை எதிர்கொள்ளக் கூடிய ஆற்றலை நாம் பெறுகிறோம். 'உள்ளதை', 'இப்படிப்பட்டதாக இருக்கவேண்டும்' என்ற இலட்சியத்தை நோக்கி மாற்றுவது, நம் வாழ்வின் முதன்மைச் செயலாக உள்ளது. இலட்சியமாக இருக்கும் 'இப்படிப்பட்டதாக இருக்கவேண்டும்' என்ற நிலை என்பது முற்றிலும் பொய்யான ஒரு நிலை. 'உள்ளது'தான் சகலமும், அதுதான் மிக முக்கியத்துவம் பெற்றது.

நான் பேராசைக்காரன் என்றால், பேராசையைப்பற்றி புரிந்துகொள்ள, பேராசையின் இயல்பைப் பற்றி சிந்திப்பேன், பேராசையை விட்டொழிக்க முடியுமா அல்லது தொடரத்தான் வேண்டுமா என்று விசாரணை செய்வேன். அப்படி செய்யாமல், மனநிறைவோடு இருக்கவேண்டும் என்ற இலட்சியத்தை நாடிச்செல்வது, முற்றிலும் மடமையான செயலாகும். ஆனால், இலட்சியத்தை கொண்டிருக்கவே நாம் பழக்கப் பட்டிருக்கிறோம், நாம் வளர்ந்த முறை அவ்வாறிருக் கிறது. 'இப்படியாக இருக்கவேண்டும்' என்ற நிலையின் பொய்ம்மைத்தன்மையை கண்டுணர்வதுதான் நுண்ணறி வின் துவக்கம்.

நம் சிந்தனையில் இருமைநிலை நிலவுகிறது. எதிர்மாறானவைகளும், பிரிவினைகளும் நம்முள் இருக்கிறது. எதிர்மறையானவை என்று ஏதேனும் இருக்கிறதா என்ன? வெளிச்சம் - இருட்டு, உயரம் - குள்ளம் போன்ற எதிர்மறைகள் உள்ளன. புறத்திலிருக்கும் வேறுபாட்டால் தோன்றியவை அவை. ஆனால், பேராசைக்கும், வன்முறைக்கும் அடிப்படையில்

எதிர்மறைகள் உள்ளதா? உளரீதியில், எதிர்மறைகள் உண்டா? - உண்டு என்று சொல்கிறீர்கள். நல்லது மற்றும் கெட்டது, நற்குணம் மற்றும் தீயகுணம் இருக்கிறது என்கிறீர்கள்.

ஐரோப்பாவில் இருக்கும் பல குகைகளில், முப்பது அல்லது நாற்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வரையப்பட்ட சித்திரங்கள் உள்ளன. தீய சக்திகள் ஒருபுறமும், நல்ல சக்திகள் எதிர்புறமும் வரையப்பட்டு, அவைகளுக்கிடையே யுத்தம் நடப்பதுபோல் சித்தரிக்கப்பட்டுள்ளது. புறத்தே, பௌதீகரீதியில் இருக்கும் வேறுபாடுகளைத் தவிர்த்து, உள்முகத்தில் எதிர்மறை என்று ஏதேனும் இருக்கிறதா? கெட்டதின் எதிர்மறையாகவா நல்லது (good) இருக்கிறது? நல்லது, கெட்டதின் எதிர்மறை என்றால், நல்லது, அதன் வேர்களாக, அதன் எதிர்மறையான கெட்டதைக் கொண்டிருக்கிறது என்றுதானே பொருள்? தீயது, நல்லதின் எதிர்மறை என்றால், நல்லதோடு அது சம்பந்தப்பட்டுள்ளது என்றாகிறது. எதிர்மறையை எண்ணம்தான் தோற்றுவிக்கிறது. ஒன்று, கெட்டதிலிருந்து முழுவதுமாக தொடர்பறுத்துக் கொண்டதாக நல்லது இருக்க வேண்டும்; அல்லது எண்ணத்தின் கண்டு பிடிப்பாகவோ நல்லதின் எதிர்மறையான கெட்டதின் விளைவாகவோ, நல்லது இருக்க வேண்டும். ஆக, நல்லது என்றால் என்ன?

நல்லது என்றால் என்ன? அகராதியில் அதற்கு 'நல்ல நடத்தை' என்று பொருள் தரப்பட்டுள்ளது. முழுமை யான, பிளவுபடாத, மேலும் வாழ்வின் முழு பரிமாணத்தின் இயல்பைப் பற்றிய புரிதலுடன் கூடிய மனப்பாங்கு, 'நல்லது' ஆகும். நல்லதில், தீயது என்ற

பகுதி இல்லை. ஆனால், நல்லதின் விளைவாக தீயது பிறந்தது என்றால், தீயதற்கு நல்லதுடன் தொடர்பு உள்ளது என்றாகிறது. நம் வாழ்க்கையில் எதிர்மறை இருக்கிறதா? வெறுப்பு மற்றும் பொறாமைக்கு எங்காவது அன்புடன் தொடர்பு இருக்க முடியுமா? அன்பிற்கு வெறுப்புடன் தொடர்பு இருக்குமேயானால், அது அன்பே இல்லை.

நான் ஒருவரை மிகவும் வெறுக்கிறேன். ஆனால், அதே சமயம் அன்பைப் பற்றியும் பேசுகிறேன் என்றால் அங்கு முரண்பாடு எழுகிறது. அன்பு மற்றும் வெறுப்பு ஆகிய இரண்டும் ஒத்துப்போகாத விஷயம், ஒருங்கிணையாத விஷயம். எனவே நாம் கேட்கிறோம்: 'எதிர்மறை என்று ஏதாவது இருக்கிறதா அல்லது இருப்பது 'உள்ளது' மட்டும்தானா?' என்று. எதிர்மறை இருக்கும் இடத்தில், முரண்பாடு கட்டாயம் இருக்கும். நான் வெறுக்கிறேன். ஆனால், நான் அன்பு செலுத்துவ தாகவும் எண்ணுகிறேன். வெறுப்பின் எதிர்மறையாக அன்பு இல்லை. வெறுப்பின் எதிர்மறையாக இருப்பதும் வெறுப்புதான். ஆக, நம் வாழ்வின் சீர்குலைவிற்குக் காரணமாக, இலட்சியம், எதிர்மறைகள் மற்றும் சமயக் கோட்பாடுகளின் அதிகாரத்தை ஏற்றுக்கொள்ளல் ஆகியவை உள்ளன.

சட்டங்களின் அதிகாரம், அரசாங்கத்தின் அதிகாரம், காவலதிகாரியின் அதிகாரம், மருத்துவரின் அதிகாரம் போன்ற அதிகாரங்கள் புறத்தில் உள்ளன. ஆனால், அகத்தில், உள்முகமாக, மனோரீதியில், ஆன்மிக குருவோ, புனித நூல்களோ, சமய தலைவர்களோ நம் மீது அதிகாரம் செலுத்த நாம் ஏன் சம்மதிக்கிறோம்? நாம் ஒருவரைப் பின்பற்றி, அவரால் வழிநடத்தப்பட்டு, எதை

நம்ப வேண்டும், எதை நம்பக்கூடாது, அவர் சொல்லும் முறைப்படி எப்படி ஞானத்தெளிவு பெறுதல் வேண்டும் என்பதையெல்லாம் அவர் சொல்படி செய்தால், நம் மூளைக்கு என்ன நேரிடும், மற்றும் நம் உள்முகப் பயணம் என்னவாகும்?

நீங்கள்தான் என் குரு என்று வைத்துக்கொள்வோம். நான் என்ன செய்யவேண்டும், என்ன சிந்திக்கவேண்டும், எதை நம்ப வேண்டும், மற்றும் நீங்கள் ஞானத்தெளிவு என்று அழைப்பதை நான் பெற, நான் எடுக்கவேண்டிய பல்வேறு நடவடிக்கைகள் போன்றவைகளை, நீங்கள் எனக்கு உபதேசிக்கிறீர்கள்.

ஏமாளியான நான், களங்கப்பட்டு, சீர்குலைந்து, பாதுகாப்பற்றிருக்கும் என் வாழ்விலிருந்து தப்பித்துக்கொள்ள, குருவை நம்புகிறேன். என் வாழ்வை அவருக்கு அர்ப்பணிக்கிறேன். ஞானத்தெளிவு - அதன் பொருள் என்னவோ தெரியாது - பெற்றுவிட, என் வாழ்வின் பெரும்பகுதியை தந்துவிடுகிறேன். ஏன் அப்படிச் செய்கிறேன்? ஏன்? ஒருவிதமான பாதுகாப்பு, ஒரு வகையான ஆனந்தம் என்றோ ஒருநாள் எனக்குக் கிட்டும் என்ற குருவின் உறுதிமொழி, மற்றும் என் அன்றாட வாழ்வின் கவலைகளிலிருந்தும், துயரங்களிலிருந்தும் ஒருமாதிரியான விடுதலை பெற முடியும் என்ற நம்பிக்கையை குருவை சரணடைவது எனக்குத் தருகிறது என்பதாலும் நான் அப்படிச் செய்கிறேன், இல்லையா?

குரு உங்களுக்கு உறுதிமொழி அளிக்கிறார், நீங்களும் திருப்தியடைகிறீர்கள். ஆனால், குரு சொல்பவைகளைக் குறித்து நீங்கள் எப்பொழுதும் ஐயுறுவதில்லை, குருவிடம்

வினா எழுப்புவதில்லை, விவாதிப்பதில்லை. உபதேசங்களை அப்படியே ஏற்றுக்கொள்கிறீர்கள். கோடிக்கணக்கான ஆண்டுகளாக உலகம் முழுவதும் மனிதனின் நிலை இவ்வாறாகத்தான் இருக்கிறது. உங்களுக்கும் கடவுளுக்கும் இடையே மொழிபெயர்ப் பாளராக குரு இருக்கிறார்.

தனக்குத் தெரிந்துவிட்டதாகவும், தான் ஞானத் தெளிவு பெற்றுவிட்டதாகவும், குரு நினைத்துக்கொண்டு விடுகிறார். அந்தக் கற்பனையான மேன்மைநிலை யிலிருந்துகொண்டு, நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை உங்களுக்கு உபதேசிக்கத் தொடங்கிவிடுகிறார். நீங்களோ சௌகரியமும், பாதுகாப்பும் வேண்டி, கொஞ்சம்கூட சந்தேகப்படாமல் குருவை ஏற்றுக்கொள் கிறீர்கள். எப்பொழுதாவது உங்கள் குருவுடன் நீங்கள் பேசி விவாதித்ததுண்டா? ஒருபோதும் விவாதித்திருக்க மாட்டீர்கள் என்று நான் உறுதியாகச் சொல்வேன். உங்கள் குரு, விவாதங்களை அனுமதிக்கமாட்டார். 'உங்களுக்கு ஒன்றும் தெரியாது. சும்மா இருங்கள். நான் உங்களுக்கு உபதேசிக்கிறேன்' என்று அவர் ஆரம்பித்துவிடுவார்.

சமயக் கோட்பாடுகளின் அதிகாரத்தைக் குறித்து வினா எழுப்ப வேண்டுமென்றால், நீங்கள் முற்றிலுமாக சுயசார்புடன் இருத்தல் வேண்டும். கிருத்துவ சமயத்தின் அதிகாரத்தையோ, அல்லது, குரான் நூலுடன் கூடிய இஸ்லாமிய மதத்தின் அதிகாரத்தையோ அல்லது உங்கள் குரு மற்றும் அவரது உபதேசங்களின் அதிகாரத்தையோ குறித்து நீங்கள் கேள்வி கேட்க வேண்டுமென்றால், அவற்றை ஐயுற வேண்டுமென்றால், மற்றவரால் ஒளியூட்டப்பட முடியாத, ஆனால், தானே தனக்கொளியாய் நீங்கள் திகழவேண்டும்.

தனக்கொளியாய் தானே இருப்பதற்கு, புறத்தே உள்ள சமயக் கோட்பாடுகளின் அதிகாரத்தைக் குறித்து மட்டும் கேள்வி எழுப்பாமல், நீங்கள் ஏன் நம்பிக்கை கொண்டிருக்கிறீர்கள் என்பது குறித்தும் உங்களைக் குறித்தும் விசாரணை செய்யவேண்டும். அவ்வாறு விசாரணை செய்வதால், உங்கள் மனம், தெளிவுறுகிறது, வலிமைபெறுகிறது, ஜீவசக்தி கொண்டதாகிறது. அத்தகைய மனம், சிருஷ்டிப்பதற்கான ஆற்றல் கொண்டதாகிறது.

நீங்கள் வேறொருவரை பின்பற்றி நடக்கும்போது உங்கள் மூளை இயந்திரத்தனமான, சலிப்பூட்டும் வழக்கமான நடவடிக்கைகளால் சோர்வடைந்து போகிறது. இது மனதிற்கு மிகுந்த நலிவைப் பெற்றுத் தருகிறது. நீங்கள் என்ன செய்யவேண்டும் என்று இங்கு அறிவுறுத்தப்படவில்லை. என்ன செய்துகொண்டிருக் கிறீர்கள் என்பதைப் பார்க்கவே வலியுறுத்துகிறோம். எதனால் உங்கள் வாழ்வில் ஒழுங்கீனம் நுழைகிறது என்று பார்த்து, அதைப்பற்றி விசாரணை செய்யும்போது, அந்த ஒழுங்கீனத்திலிருந்து, அங்கு ஒழுங்கு தோன்றுகிறது. ஒழுங்கீனத்திற்கான காரணங்கள் மறையும்போது, ஒழுங்கு நிலைக்கிறது. பிறகு ஒழுங்கைக் கொண்டுவர நீங்கள் அதன்பின் ஓட வேண்டாம். ஒழுங்கு என்பது ஒரு பண்பு, ஒழுங்கு என்றால் சுதந்திரம்.

சுதந்திரம் என்றால் என்ன என்று நாம் ஆராய வேண்டும். நம் வாழ்வில் முழுமையான ஒழுங்கு நிலவும்போது, அந்த ஒழுங்கு, ஒரு பண்பு ஆகிறது; அந்த ஒழுங்கே, சுதந்திரம் என்று கூறினோம். சுதந்திரம் என்ற சொல், வெகுவாக துஷ்பிரயோகம் செய்யப்படுகிறது. ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை என்பதாகவும், சுதந்திரம்

என்பதாகவும் உள்ளன. ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை என்பது சுதந்திரம் ஆகாது.

என் சொந்த கருத்துகள், என் சொந்த சூத்திரங்கள், மற்றும் என் சுய கோட்பாடுகள் என்ற சிறையில் நான் கைதியாக இருக்கிறேன். என் மனம், அச்சிறையின் கைதி. இந்நிலையில், சுதந்திரம் என்றால் அச்சிறையிலிருந்து வெளிவந்து, வேறொரு சிறையில் மாட்டிக்கொள்வதாகும். குறிப்பிட்ட ஒரு தளையிலிருந்து என்னை நான் விடுவித்துக்கொள்கிறேன். ஆனால், பின்பு தெரிந்தோ தெரியாமலோ, வேறொரு தளையில் மாட்டிக்கொள்கிறேன். ஆக, இது ஏதோ ஒன்றிலிருந்து, கோபத்திலிருந்து, பொறாமையிலிருந்து விடுதலை. ஆனால், இது சுதந்திரமே அல்ல. சுதந்திரம் என்றால் பூரண விடுதலை; ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை அல்ல சுதந்திரம்.

நாம் பேசிக்கொண்டிருக்கும் விஷயத்தைப்பற்றி அதிக அளவில் விசாரணை செய்ய வேண்டியுள்ளது. கணினி எவ்வாறு செயற்கட்டளைகளை ஏந்தியிருக்கிறதோ, அவ்வாறே நாமும் ஹிந்து என்றோ, முஸ்லீம் என்றோ, கிருத்துவர் என்றோ, நமக்கு மூளையில் இடப்பட்டிருக்கும் செயற்கட்டளைகளை தாங்கிக் கொண்டிருக்கிறோம். நமது மூளை, ஆயிரக்கணக்கான ஆண்டுகளின் செயல்திட்ட வரைவினைக் கொண்டிருக்கிறது. அவை நம்மைக் கட்டுப்படுத்துபவைகளாக உள்ளன. அத்தகைய கட்டுப்படுத்துபவைகளை முடிவிற்குக் கொண்டுவருவதுதான் சுதந்திரம்.

நம் தளைகள் கழன்று விழுந்தால் மட்டுமே சுதந்திரம் மலரும். அத்தகைய சுதந்திரம் இல்லாத இடத்தில், ஒழுங்கீனம்தான் இருக்கும். ஆக, இலட்சியம்,

முரண்பாடு, ஆன்மிக அதிகாரத்தைப் பின்தொடர்தல் மற்றும் நம் தளைகளை ஏற்றுக்கொள்ளல் ஆகியவை ஒழுங்கீனத்தைக் கொண்டுவருகின்றன. மேற்கூறப் பட்டவைகள் முடிவிற்கு வரும்போது, ஒழுங்கு இருக்கும். ஒருவரைப் பின்பற்றாமல் வாழ்வது இயலாத காரியம் என்று நீங்கள் சொல்வீர்கள். பாதுகாப்பு இல்லாதது போலவும் எதுவும் நிச்சயம் இல்லை என்பது போலவும் நீங்கள் உணர்வதால், பாதுகாப்பை உறுதிசெய்யும் ஒருவரைப் பின்பற்றுவதை நீங்கள் மிகவும் சுலபமாக ஏற்றுக்கொள்கிறீர்கள். உங்களின் இந்தச் செயல், உங்கள் மூளை, சோர்வுற்று செயல்பட முடியாமலிருக்கிறது என்பதைக் காட்டுகிறது. இந்நிலையில் உடல்ரீதியில், நீங்கள் உற்சாகத்துடன் செயல்படலாம். ஆனால், உளரீதியில், நீங்கள் சோர்வுற்று சலிப்புடன் இருக்கிறீர்கள்.

துக்கத்தைப் பற்றியும் நாம் கலந்துரையாட வேண்டும். துக்கத்தை முடிவிற்குக் கொண்டுவர முடியாதா என்று ஆராய வேண்டும். துக்கம் முடிவிற்கு வந்த பிறகுதான், அங்கு அன்பும், கருணையும் இருக்கும். துக்கம், வலி, துயரம், தனிமைப்பட்டுப்போன உணர்வு, தனிமையில் ஒதுக்கிவிடப்பட்டதாய் தோன்றும் மனநிலை - இவையெல்லாம் எப்படிப்பட்டது? துக்கத்தின் இயல்பு என்ன? துக்கம், வலியை, வேதனையை, கண்ணீரை, தனிமையை பெற்றுத்தந்து வருத்துகிறது.

துக்கத்திற்கான காரணம் எது? உடல்வலி மற்றும் கொடிய வியாதி தரும் துக்கம் ஒரு வகை. இங்கு, நாம், உள்முகத்திலிருக்கும் துக்கத்தைப் பற்றிப் பேசப் போகிறோம். துக்கத்தால் வரும் வலி, கண்ணீர் மற்றும் துக்கத்திலிருந்து தப்பிக்கும் வழிகள் என்பதாக உள்முக

துக்கம் உள்ளது. மனிதன் ஏன் காலங்காலமாக துக்கத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறான் என்பதை ஆய்வு செய்யலாம். கடந்த ஐந்தாயிரம் ஆண்டுகளாக, பல யுத்தங்கள் நடந்திருக்கின்றன. அந்த யுத்தங்களில் இறந்தவர்களையும், முடமாகிப்போனவர்களையும் எண்ணி கண்ணீர் சிந்தியவர்கள் எத்தனை பேர் என்பதைப் பற்றியெல்லாம் எண்ணிப் பார்த்திருப்பீர்களா என்று நான் வியக்கிறேன்.

யுத்தம் ஒன்று ஓய்ந்த பிறகு, இந்தப் பேச்சாளரை ஒரு மருத்துவ நண்பர், மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றார். மருத்துவமனையில், போரில், கை, கால்களை இழந்தவர்களையும், கண்களை இழந்தவர்களையும் காண நேர்ந்தது. அவர்களைப் பார்த்து, அவர்களுடைய தாய் தந்தையர் எப்படி அழுதிருப்பார்கள் என்பதை சற்றே கற்பனை செய்துபாருங்கள். வலி, பதற்றம், நம்பிக்கை ஆகியவை துக்கத்தின் அங்கமாக இருக்கிறது. நம் வாழ்க்கை முழுவதும் துக்கம் வியாபித்திருக்கிறது. துக்கத்திலிருந்து முழுவதுமாக விடுபட்டு நாம் இருந்ததே இல்லையோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

துக்கத்தைப் பற்றி மேலும் ஆழமாகச் சிந்தித்துப் பார்க்கலாம். சிந்தித்துப் பார்ப்பதால், துக்கத்தை முடிவிற்குக் கொண்டுவர முடியும். அன்பிற்குரியவரின் மரணத்தால் துக்கம் வருகிறது. என் மகனை நான் இழந்துவிட்டேன். சோகம், கண்ணீர், வருத்தும் தனிமையுணர்வு என்னை வாட்டுகிறது. அதிர்ச்சி, கலக்கம், தனிமை, வலி ஆகிய உணர்வுகளோடு நான் இருக்கும் அந்த நிலையில், நான் ஆறுதல் அளிப்பவைகளை நாடுகிறேன். என் வேதனையிலிருந்து தப்பியோட விரும்புகிறேன்.

போதை மருந்துகள், மதுவகைகள், கோயில்கள், மசூதிகள், மாதாகோயில்கள் என்று எல்லாவிதமான கேளிக்கைகள் மூலமாகவும் வேதனையிலிருந்து தப்பிக்கப் பார்க்கிறேன். வேதனையிலிருந்து தப்பியோடிவிட விரும்புவதால், நான் அனைத்துவிதமான கோட்பாடு களையும் கண்டுபிடிக்கிறேன். ஆனால், நான் என் மகனை இழந்துவிட்டேன், அவன் திரும்பி வரமாட்டான் என்ற வலி என்னை வாட்டுகிறது. அந்த வலியோடு என்னால் பொருந்தியிருக்க முடியுமா? அந்த வலியை என்னால் நோக்க முடியுமா? அந்த வலியிலிருந்து தப்பிக்க எண்ணாமல், அதை நசுக்க முற்படாமல், அதை அறிவுபூர்வமாக நியாயப்படுத்தாமல், வேதனைக்கு என்ன காரணம் என்று பகுத்தாராயாமல், அந்த வலியை, விலைமதிப்பற்ற ஆபரணத்தை கையில் ஏந்தி கவனமாய் பார்ப்பதுபோல் பார்க்க உங்களால் முடியுமா?

குடம், தண்ணீரை ஏந்தி வைத்துக்கொண்டிருப்பது போல், நீங்களும் வேதனையை கையில் ஏந்திக் கொள்ளுங்கள். அதாவது, நான் என் மகனை இழந்துவிட்டேன், நான் தனிமையில் வாடுகிறேன். அந்தத் தனிமையிலிருந்து தப்பிக்கவோ, அல்லது அதை அடக்கவோ, பகுத்தாய்வு செய்யவோ முயற்சிக்காமல், அந்தத் தனிமையின் இயல்பையும், ஆழத்தையும் புரிந்துகொள்ள வேண்டும்.

தனிமையுணர்வு என்பது மற்றவருடனான தொடர்பு முழுவதுமாக அற்றுப்போய், தனித்து விடப்பட்ட நிலையில் உணர்வதாகும். நமது அன்றாட வாழ்வின் தன்னல செயல்பாடுகளின் விளைவாய் தனிமையுணர்வு உண்டாகிறது. சுயநலப் பேரவாக்கள், சித்தாந்தங்களின் மீதுள்ள நாட்டம், மற்றும், போட்டி மனப்பான்மை

ஆகியவை நம் அன்றாட செயல்பாடுகளில் பெரும் பங்கு வகிக்கிறது. அவைகளே தனிமையுணர்ச்சிக்குக் காரணமாய் விளங்குகிறது. தனிமையுணர்விலிருந்து தப்பித்து நீங்கள் ஓடினால், துக்கத்தை முடிவிற்குக் கொண்டுவர உங்களால் என்றுமே முடியாது.

ஆங்கிலத்தில் Sorrow (துக்கம்) என்ற சொல், சொல்லியலின்படி (etymologically) Passion (பேரார்வம்) என்று பொருள்படுகிறது. நம்மில் பலருக்கு பேரார்வம் இருப்பதில்லை. நமக்கு காமவுணர்ச்சி இருக்கலாம், நமக்கு இலக்கை அடைந்துவிட வேண்டும் என்ற பெருவிருப்பம் இருக்கலாம், பெரும் செல்வந்தராகிவிட வேண்டும் என்ற ஆசை இருக்கலாம், நம் சக்தியை முற்றிலுமாக அவற்றிற்கே செலவிடலாம். ஆனால், இவையெல்லாம் பேரார்வத்தை கொண்டு வருவதில்லை. துக்கம் முடிவிற்கு வரும்போதுதான், பேரார்வம் அங்கு நிலைகொள்கிறது. எண்ணத்தால் வரையறைக்கு உட்படுத்தப்படாத பரிபூரண ஆற்றலாக பேரார்வம் இருக்கிறது. எனவே, அத்தகைய ஆற்றலைப்பெற, துக்கத்தின் தன்மையைப் புரிந்துகொண்டு, அதை முடிவிற்குக் கொண்டுவருதல் இன்றியமையாததாகிறது.

முடிவுறச் செய்தல் என்பது துக்கத்தை, வேதனையை நோக்குவதாகும். வேதனையை எப்படி ஏற்றுக்கொள்வது, நோக்குவது, அதனோடு கூடி வாழ்வது என்பதெல்லாம் மிகவும் அற்புதமான விஷயங்கள். வேதனையின் காரணமாய் வாழ்க்கையை வெறுத்து ஒதுக்காமல், எதிர்மறை சிந்தனையோடு குற்றங்குறை சொல்லிக் கொண்டிருக்காமல், துக்கத்தின் இயல்பைக் காண்பது மிகவும் மேன்மைமிக்க விஷயமாகும். துக்கத்தில் அழகு இருக்கிறது, துக்கத்தில் ஆழம் இருக்கிறது.

அன்பு என்றால் என்ன என்பதைப் பற்றியும் நாம் பார்க்க வேண்டும். அன்பு என்ற வார்த்தை உங்களுக்கு எப்படிப் பொருள்படுகிறது? 'அன்பு / பிரியம் என்பதற்கு நீங்கள் தரும் அர்த்தம் என்ன?' என்ற கேள்வி உங்களிடம் கேட்கப்பட்டால், உங்கள் பதில் என்னவாயிருக்கும்? நீங்கள் புத்திசாலியாய் இருந்தால், 'இது என்ன கேள்வி? கிரிக்கெட் விளையாட்டில் எனக்குப் பிரியம், புத்தகங்கள் படிப்பதில் எனக்குப் பிரியம், என் மனைவியின் மீது எனக்கு மிகுந்த அன்பு, நான் கடவுளை பெரிதும் விரும்புகிறேன்' என்று விடையளிப்பீர்கள். இதெல்லாம் அன்பாகுமா? உங்கள் மனைவியின் மீது உங்களுக்கு அன்பு இருக்கிறதா? உங்கள் நண்பரிடம் அன்புடனா இருக்கின்றீர்கள்?

அன்பு என்றால் என்ன என்று நாம் ஆராயப் போகிறோம். இந்த விஷயம் மிகவும் முக்கியமானது, ஆராயப்பட வேண்டியது. அன்பு இல்லாத வாழ்க்கை வெறுமையானது. உலகச் செல்வங்கள் அனைத்தும் பெற்றவராய் நீங்கள் இருக்கலாம், தலைசிறந்த விஞ்ஞானியாகவோ, கணிதமேதையாகவோ இருக்கலாம். ஆனால், உங்களிடம் அன்பு இல்லை என்றால், நீங்கள் பொருளேதுமற்ற வெறும் ஓடு, வாழ்க்கையை தொலைத்துவிட்ட ஏழை.

அன்பு என்றால் எது என்று நாம் பார்க்கப்போவதில்லை. எதுவெல்லாம் அன்பு இல்லை என்பதையே பார்ப்பதாக உள்ளோம். அதாவது, பொய்ம்மைகளை நிராகரித்து, அதன் மூலம் உண்மையான அன்பு பற்றித் தெரிந்துகொள்ளப் பார்ப்போம். எது அன்பு இல்லை என்று நிராகரிக்கிறோமோ, அந்த எதிர்மறையே, நேர்மறையை காட்டிவிடும்.

பொறாமை இருக்குமிடத்தில் அன்பு இருக்குமா? பற்றுதல், பதற்றம், வெறுப்பு போன்றவை பொறாமையில் இருக்கிறது. பொறாமை, அன்பாகுமா? உங்கள் குடும்பத்திற்கு, நீங்கள் மதிக்கும் ஒரு நபருக்கு, ஒரு கருத்திற்கு, ஒரு கோட்பாட்டிற்கு, ஒரு தீர்மானத்திற்கு, நீங்கள் பற்றுதல் கொண்டவராய் இருக்கிறீர்கள். பற்றுதல் கொண்டிருப்பதால் விளையும் தாக்கங்கள் யாவை?

நான் மணமானவன் என்று வைத்துக்கொள்வோம். என் மனைவி மீது பற்றுதலுடன் நான் இணைந் திருக்கிறேன். இதன் பொருள் என்ன? பற்றுதல் இருக்கும் இடத்திலெல்லாம், பயம் இருக்கும். எங்கெல்லாம் பற்றுதல் இருக்கிறதோ, அங்கெல்லாம் சந்தேகம் இருக்கும். பற்றுதல் இருக்கும் இடத்தில், தனக்கே சொந்தம் என்ற உரிமை கொண்டாடுதல் இருக்கும். ஒரு இலட்சியத்தின் மீதோ, ஒரு கோட்பாட்டின் மீதோ, ஒரு நம்பிக்கையின் மீதோ, அல்லது, ஒரு நபரின் மீதோ வைக்கும் பற்றுதலானது, அப்பற்றுதலின் விளைவாகத் தோன்றும் பொறாமை, கலக்கம், வெறுப்பு மற்றும் சந்தேகம் ஆகியவற்றுடன் கூடி இருக்கையில், அவ்வுணர்ச்சி நிச்சயமாக அன்பு இல்லை.

அன்பின் தன்மையைப் புரிந்துகொள்ளும் பொருட்டு, முற்றிலுமாகப் பற்றுதலிலிருந்து விடுபட்டிருப்பது சாத்தியமாகுமா? இக்கேள்வியை உங்களையே கேட்டுக்கொள்ளுங்கள். ஏதோவொன்றுடன் பற்றுதலோடு இணைந்திருங்கள். அந்தப் பற்றுதலின் விளைவை தயவுசெய்து விழிப்புடன் நோக்குங்கள். ஒரு இலட்சியத்தின் மீது பற்று கொண்டிருந்தீர்களென்றால், அந்த இலட்சியத்தின் மேன்மையை பிறர் குறைகூறாவண்ணம், அதற்காகப் பரிந்து பேசியோ,

அல்லது, உத்வேகத்துடன் அதை நிலைநிறுத்தியோ செயல்படுகிறீர்கள். நீங்கள் ஒரு தீர்மானத்திற்கு வந்துவிட்டீர்கள், அந்த தீர்மானத்தை உறுதியுடன் கொண்டிருக்கிறீர்கள் என்றால், மேற்கொண்டு விசாரணை செய்வதற்கு, அங்கு இடமில்லை. மார்க்ஸ் மற்றும் லெனின் போன்றோரின் கருத்துகளை ஏற்றுக்கொண்ட கம்யூனிஸ்ட்டுகள், ஒரு தீர்மானத்திற்கு வந்துவிட்டனர். சிந்திக்கும் மற்றும் ஆராய்வதற்கான திறனை அவர்கள் முடிவிற்குக் கொண்டு வந்துவிட்டார்கள். அவர்களின் கருத்தைப் பற்றி அவர்கள் ஐயுறுவதே இல்லை.

நான் என் மனைவி மீது மிகுந்த பற்றுதல் கொண்டுள்ளேன். ஆனால், அவள் வேறொருவனோடு ஓடிப்போகலாம், வேறு ஒருவன் மீது ஆசை வைக்கலாம், அல்லது, அவள் இறந்து போகலாம். ஆக, பற்றுதலின் விளைவாக, எப்பொழுதுமே பயம், கலக்கம், சந்தேகம் ஆகியவை வருகின்றன. இவ்வுண்மையைப் பார்க்கையில், நான் வைத்த பற்றுதல், நிச்சயம் அன்பு இல்லை, அல்லவா? எனவே எல்லாவித பற்றுதல்களிலிருந்தும் விடுபட்டிருக்க ஒருவருக்கு முடியுமா? நீங்கள்தான் சொல்லவேண்டும். நீங்கள் ஒருவரிடம் பற்று கொண்டிருக்கும்போது, அங்கு அன்பு இல்லை. ஏனெனில், அந்தப் பற்றுதலில், பயம் இருக்கிறது.

அச்சம் என்பது அன்பாகாது. வெற்றிப்படிகளில் ஏறி சாதிக்க விரும்பும் பேரார்வம் கொண்டவர், சதா தன்னைப் பற்றியும், தன்னுடைய சாதனைகள் பற்றியும், தனது பதவி, கௌரவம் பற்றியும் சுயநல வேட்கையுடன் இருப்பதால், அவரிடம் அன்பு இருப்பதில்லை. இத்தகைய ஒருவர், எப்படி அடுத்தவரிடம் அன்பு காட்ட முடியும்? அவருக்கு குடும்பம், குழந்தைகள் இருக்கலாம். ஆனாலும், அவரிடம் அன்பு இல்லை.

'மிகவும் மேன்மையானதான கடவுளின் மீது அன்புடையவனாக இருக்கிறேன்' என்று நீங்கள் சொல்கிறீர்களே, அது அன்பாகுமா? அந்தக் கடவுள், அந்த மேன்மையான பிரம்மம், உங்களின் எண்ணத்தின் விளைவாக இருக்கிறது. மனிதனால் கண்டுபிடிக்கப் பட்டவர் கடவுள். இப்படி நான் சொல்வதை நீங்கள் விரும்பமாட்டீர்கள் என்று எனக்கு நன்றாகத் தெரியும்.

கடவுள் இருக்கிறார் என்ற கோட்பாட்டிற்குப் பற்றுதல் கொண்டவராக நீங்கள் இருக்கிறீர்கள். ஆனாலும், 'உலகத்திலிருக்கும் துயரத்தை யார் உருவாக்கியது?' என்றும் கேட்கிறீர்கள். கடவுள், உலகத் துயரத்தைப் படைக்கவில்லை, சரிதானே? அவர்தான் துயரத்தைப் படைத்தார் என்றால், அவர் ஒரு விநோதமான கடவுள், பிறர் துன்பப்படுவதில் இன்பம் காணும் விசித்திரமான கடவுள். உலகில் ஆராதிக்கப்படும் அத்தனை கடவுள்களும், எண்ணத்தின் கண்டு பிடிப்புகளே.

எது அன்பு என்று கண்டுபிடிக்க, துக்கம் முடிவுற வேண்டும், பற்றுதல் முடிவுற வேண்டும், அகத்தில் நம்மை கட்டிப்போட்டிருக்கும் அனைத்தும் முடிவுற வேண்டும். 'நான், எனது' என்ற எண்ணம் இருக்கும் இடத்தில், அன்பு இருக்காது.

எனது இனிய நண்பர்களே, இவ்வுரையை நீங்கள் கேட்டீர்கள். ஆனாலும், இவ்வரங்கை விட்டு செல்கையில், எந்தவொரு மாற்றமும் இல்லாமல், நீங்கள் கொண்டிருக்கும் பற்றுதல்களுடனும், தீர்மானங் களுடனும் சேர்ந்தே செல்வீர்கள். நீங்கள் சுயவிசாரணை செய்யமாட்டீர்கள். இவ்விஷயங்களைப் பற்றியெல்லாம்

விசாரணை செய்யசெய்ய, வாழ்க்கை மேலும் அபாயகரமானதாக ஆகிப்போவதால், நீங்கள் ஆய்வு செய்வதில்லை.

தியாகம் செய்வதாக இல்லாமல், இயல்பாக, எளிதாக, பல்வேறு விஷயங்களை நீங்கள் கைவிட வேண்டிவரும் என்பதால், நீங்கள் இவ்விஷயங்களைப் பற்றிய விழிப்புணர்வு பெற முயற்சிப்பதில்லை. பற்றுதலின் இயல்பைப் பற்றி நீங்கள் புரிந்துகொண்டு, அதிலிருந்து விடுதலையாகிவிட்டு, உங்கள் மனைவியிடம் சென்று, 'நான் உன்னிடம் பற்றுதலோடு இல்லை' என்று சொன்னால், என்ன நடக்கும்? - அவள், உங்கள் மீது கல்லை எறியலாம், 'என்ன மடத்தனம்!' என்று கத்தலாம். ஆகவே, எந்தவொரு உண்மையையும் நீங்கள் கண்டுணரும்போது, நீங்கள் முற்றிலுமாக தனித்து நிற்கிறீர்கள் என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும்.

நீங்கள் உண்மையை கண்டுணருகிறீர்கள் - ஆனால், உண்மையின் தரிசனம் உங்களை பயப்பட வைக்கிறது. பற்றுதலின் இயல்பைப் பற்றிய உண்மையை உள்முகமாக நீங்கள் உணர்கிறீர்கள். இருந்தபோதிலும், அதைச் சொல்லி உங்கள் மனைவியுடன் சண்டையிடுவதை நீங்கள் விரும்பவில்லை என்பதால் புறத்தே நீங்கள் பற்றுதலை ஏற்றுக்கொள்கிறீர்கள். நாளடைவில் நீங்கள் கபடவேஷதாரியாகி விடுகிறீர்கள்.

நுண்ணறிவின் இயல்பைப் பற்றியும் நாம் கலந்துரையாட வேண்டும். காருண்யம் அதற்கே உரிய நுண்ணறிவைக் கொண்டிருக்கிறது. அதேபோல், அன்பும் அதற்கான நுண்ணறிவைக் கொண்டிருக்கிறது. நுண்ணறிவு என்றால் என்ன என்பதைப் பற்றி ஆராயலாம்.

நூல்களிலிருந்து நுண்ணறிவைப் பெற முடியாது என்பது உறுதி. அன்பும், காருண்யமும் இருக்கும் இடத்தி லெல்லாம், அவைகளுக்கான நுண்ணறிவின் அழகு மிளிர்கிறது.

நீங்கள் ஒரு ஹிந்துவாகவோ, கிருத்துவராகவோ, கம்யூனிஸ்ட்டாகவோ அல்லது பௌத்தராகவோ இருந்தால், உங்களிடம் காருண்யம் இருக்க முடியாது. எண்ணத்தின் விளைபொருளல்ல அன்பு. அன்பைப் பற்றியும், கருணைப் பற்றியும் புரிந்துகொள்வதற்கு, எதுவெல்லாம் உண்மையில் அன்பாகவும், கருணை யாகவும் இல்லையோ அவற்றை முதலில் நிராகரிக்க வேண்டும். பொய்ம்மையை, பொய்ம்மையாகப் பார்ப்பது, நுண்ணறிவின் துவக்கமாகும். ஒழுங்கீனத்தை ஒவ்வொரு நாளும் தொடர்ந்துகொண்டே இருக்காமல், அதன் இயல்பை கண்டுணர்ந்து, அதனை உடனே முடிவிற்குக் கொண்டுவருவது, நுண்ணறிவாகும்.

புத்திசாலித்தனம், நுண்ணறிவாகாது. கணிதம், சரித்திரம், விஞ்ஞானம், கவிதை எழுதுதல், ஓவியம் வரைதல் போன்ற துறைகளில் அதிக விஷயஞானம் பெற்றிருத்தல் என்பது நுண்ணறிவின் செயல்பாடல்ல. அணுவை ஆராயும் விஞ்ஞானி, கருத்தூன்றலிலும், கற்பனையிலும், ஆழமாக விசாரணை செய்வதிலும், கூர்ந்து ஆராய்வதிலும், சூத்திரங்கள் மற்றும் அனுமானங்களை தொடர்ந்து வகுத்துக்கொண்டே போவதிலும் அசாதாரண ஆற்றல் பெற்றிருக்கலாம். ஆனால், அவையெல்லாம் நுண்ணறிவல்ல.

வாழ்வின் பூரணத்துவத்தின் செயல்பாடாக நுண்ணறிவு இருக்கிறது. நுண்ணறிவு, உங்களுடைய

தென்பதாகவோ, என்னுடையதென்பதாகவோ, இருப்ப தில்லை. அது எந்தவொரு நாட்டிற்கோ, இனத்திற்கோ சொந்தமானதல்ல. ஹிந்து அன்பு / கிருத்துவ அன்பு என்றெல்லாம் அன்பு, தனிப்பட்ட ஒன்றாக இல்லாமல் பொதுவாக இருப்பதைப்போலவே, நுண்ணறிவும் பொதுவானது.

நம் வாழ்க்கை மேற்கூறப்பட்ட விஷயங்களைச் சார்ந்திருப்பதால், தயவுசெய்து அவற்றைப் பற்றி தீர விசாரியுங்கள். நாம் துரதிர்ஷ்டசாலிகள், சதா போராட்டத்திலும், துன்பத்திலும் உழலும் பரிதாபகரமானவர்கள். இத்தகைய நிலையை, நாம் வாழ்வின் நியதியாக ஏற்றுக்கொண்டுவிட்டோம். ஆனால், இவ்விஷயங்களை ஆய்வு செய்வதால், நுண்ணறிவு விழித்தெழுகிறது. நுண்ணறிவு செயல்படும்போது, அங்குச் சரியான செயல் மட்டுமே நடைபெறும்.

*கல்கத்தா, 27.11.1982*

■ ■

# 8

# அன்றாட வாழ்க்கையின் அர்த்தம்

**நாம்** பல விஷயங்களைப் பற்றி இங்கு கலந்துரையாடினோம். நாம் எதிர்கொள்ளும் பல பிரச்சினைகளைப் பற்றி பேசினோம். மேலும் பல விஷயங்களைப் பற்றி நாம் ஆராய வேண்டியுள்ளது. உலகின் இன்றைய நடவடிக்கைகளைப் பார்க்கும்போது, நாம் அவற்றைப் பற்றி ஒருங்கிணைந்து சிந்திப்பது மிகவும் அவசியமாகிறது. ஊழல், வன்முறை, மக்களை முற்றிலுமாக உதாசீனப்படுத்தும் அரசியல்வாதிகள் மற்றும் ஓயாமல் சொல்லிச் சொல்லித் தேய்ந்துபோன சில வாசகங்களைத் தவிர வேறெதுவும் கைவசம் வைத்திருக்காத மத குருமார்கள், என்றிருக்கும் இவ்வுலகின் நிலைமையைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டியுள்ளது.

இணங்கிப் போதலோ எதிர்ப்போ இல்லாமல், நாம் ஒருமித்து சிந்திக்க வேண்டும். தொழில்நுட்ப உலகில் மிகவும் பிரமிக்க வைக்கும் சாதனைகளைச் செய்ய உதவிய எண்ணம், மனித இனம் அல்லல்படுவதற்கும் அதுவே காரணமாய் உள்ளது. இவ்வுலகை எண்ணம் உருவாக்கியது. நாம் அனுபவிக்கும் இந்த நெருக்கடி யிலிருந்து வெளிவருவதற்கான வழியை நாமே

கண்டுபிடிக்க வேண்டும். தலைவரோ, குருவோ இனி நமக்கில்லை. இவ்விஷயத்தை உடனடியாக கவனிக்க வேண்டியது மிகவும் அவசியமாகும்.

ஒருங்கிணைந்து சிந்திப்பது மற்றும் தீர்வைக் காண ஒத்துழைப்பது போன்றவை, கடினமான செயல்களில் ஒன்றாக நமக்குத் தோன்றுகிறது. நம் ஒவ்வொருவருக்கும் பல்வேறு விதமான கருத்துகள் மற்றும் தீர்மானங்கள் இருப்பதால், நாம் ஒருசேர சிந்திப்பது என்பது கடினமான ஒன்றாகிவிடுகிறது. ஒருமித்து சிந்திப்பது என்றால், நாம் ஒருவரோடொருவர் தொடர்புகொள்வதைத் தடுக்கும் நம் சொந்த விருப்புவெறுப்புகள், பாரபட்சங்கள், தீர்மானங்கள் மற்றும் கருத்துகளை புறந்தள்ளி வைக்க வேண்டும் என்று பொருள். குறைந்தபட்சம் ஒரு மணி நேரத்திற்காவது நம் தீர்மானங்கள் போன்றவற்றை தள்ளி வைத்துவிட்டு நாம் சேர்ந்து சிந்திக்க முடியுமா?

நம் வாழ்க்கையின் யதார்த்தத்தை, உண்மையை, எவ்வித பாரபட்சமும் இல்லாமல் பார்க்க நம்மால் முடியுமா? தன்னை கம்யூனிஸ்ட் / சோஷியலிஸ்ட் என்ற நிலைப்பாட்டுடனோ அல்லது குறிப்பிட்ட பிரிவு / மதம் / தேசம் சார்ந்தவர் என்ற நிலைப்பாட்டுடனோ பார்க்காமல், மிகவும் நுணுக்கமாக, மிக அருகில் சென்று வாழ்க்கையைப் பார்க்க நமக்கு இயலுமா? சுற்றுச்சூழலோ, அதிகாரமோ, நூல்களோ நம் வாழ்க்கையை மாற்றிவிடப் போவதில்லை. பிறர் வந்து நம் வாழ்க்கையை மாற்றப்போவதில்லை. எனவே, உள்ளபடிக்கு நம்மை நாம் காண வேண்டும்; நம் வாழ்க்கையின் அர்த்தத்தை மற்றும் நம் செயல்பாடுகளில் பொதிந்திருக்கும் பொருளை நாம் மிக ஆழமாகச் சென்று ஆராய வேண்டும்.

இந்த நிகழ்ச்சி, ஒரு சொற்பொழிவு அல்ல என்பதை குறிப்பிட விழைகிறேன். நீங்கள் செய்ய வேண்டியது என்ன என்பதை இந்தப் பேச்சாளர் உங்களுக்கு உபதேசிக்கப் போவதில்லை. ஆனால், நாம் ஒருசேர 'எண்ணம்' எனும் சாம்ராஜ்யத்தினுள் செல்லலாம். எண்ணம், மகத்தான தொழில்நுட்ப சாதனைகளை சாத்தியமாக்கியது, சுகாதாரத்துறையிலும், மருத்துவத் துறையிலும் பல முன்னேற்றங்களை கொண்டுவந்தது. ஆனால், கூடவே உலக மகாயுத்தங்களையும், மிகுந்த இன்னல்களையும், சோகத்தையும் எண்ணம் பெற்றுத்தந்தது.

மனிதனின் வாழ்க்கையை அதன் முழு பரிமாணத்திலும் கூர்ந்து நோக்கப் போகிறோம். குறிப்பிட்டவொரு கோணத்தில் மட்டும் பார்க்காமல், அதாவது, சமயவாதியாகவோ அல்லது உலகாயதமானவராகவோ, பண்டிதராகவோ அல்லது துறவியாகவோ, ஆணாகவோ, அல்லது பெண்ணாகவோ வாழ்க்கையைப் பார்க்காமல், மனித வாழ்க்கையின் முழு பரிமாணத்தையும் பார்க்கப் போகிறோம். நம் வாழ்க்கையை, நம் வாழ்க்கையின் இயக்கத்தை முழுவதுமாகக் காணப்போகிறோம்.

அலுவலக வேலைக்கு நாற்பது வருடமோ, ஐம்பது வருடமோ நாள் தவறாமல் சென்றுவிட்டு, முடிவில் நமக்கு மரணம் நேரிடுகிறது. தொழிற்சாலையின் இரைச்சல், மாசுகள், கொடூரங்கள் அனைத்தையும் சகித்துக்கொண்டு வேலை செய்கிறோம். இவ்வாறாக நம் வாழ்க்கை இருக்கிறது. வாழ்க்கையை முழுமையாகப் பார்க்க, முதலில் நம்மை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

நாம் ஏன் குறிப்பிட்ட சில செயல்களை செய்கிறோம், நாம் ஏன் ஒன்று இதற்கோ அல்லது

அதற்கோ சார்புடையவராய் இருக்கிறோம், உள்ளபடி நிஜத்தில் நாம் எப்படிப்பட்டவர் என்பதையெல்லாம் நாம் உள்ளபடி பார்க்க வேண்டும், கவனத்துடன் நோக்கவேண்டும். நாம் கொண்டிருக்கும் இலக்கு என்ன என்பதைப்பற்றியோ, நாம் என்ன செய்யவேண்டும் என்பதைப்பற்றியோ ஆராய்ந்து கொண்டிராமல், உள்ளபடி நாம் யார் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். நம் வாழ்க்கைமுறையை எண்ணிப் பார்ப்பது மிகவும் அவசியமான ஒன்றாகும்.

உங்கள் வாழ்க்கையை நுணுக்கமாக நீங்கள் பார்க்கும்போது அது முழுமையற்று சிதறுண்டு இருக்கிறது என்பதை உங்களால் பார்க்க முடியும். நீங்கள் வர்த்தகராகவோ, மருத்துவராகவோ அல்லது பொறியாளராகவோ இருக்கலாம். ஆனால், உங்கள் சொந்த வாழ்க்கையில், உங்களுக்கும் மற்றவருக்கும் இடையே, அவர் எவ்வளவுதான் நெருக்கமானவராய் இருப்பினும், ஒரு பிரிவினை, ஒரு வேறுபாடு எப்போதுமே இருக்கிறது. பிறருடனான தொடர்பில், இத்தகைய பிரிவினை, போராட்டம், வலி எப்பொழுதும் இருக்கிறது.

வாழ்வில் ஒருவிதமான களிப்பு மற்றும் இன்பம் இருப்பதை மறுப்பதற்கில்லை. ஆனால், அதுவும் வாழ்வின் ஒரு பகுதியாக பிரிந்திருக்கிறது. தற்சமயம், நம் வாழ்க்கை, பிளவுபட்டதாகவும், சிதறுண்டதாகவும் உள்ளது. நம் சிந்தனை, முழுமையற்றதாய் இருப்பதே இதற்குக் காரணம். சிந்தனை, விஷயஅறிவின் பலனாக இருக்கிறது. விஷயஅறிவோ, வரம்பிற்குட்பட்டதாய் உள்ளது. மேலும் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் ஏராளமாய் இருப்பதால், நமக்குள்ள விஷய

அறிவு, சதா அறியாமையுடன் கைகோர்த்துக்கொண்டே பயணிக்கிறது.

எதைப்பற்றியும் பூரணமான அறிவு இருப்பதில்லை. ஆகவே, உங்கள் விஷயஅறிவிலிருந்து பிறந்த உங்கள் சிந்தனை, எல்லா காலங்களிலும், அனைத்து சூழ்நிலை களிலும், நீங்கள் விஞ்ஞானியோ, பொறியாளரோ யாராக இருந்தாலும், வரம்பிற்குட்பட்டதாகவே உள்ளது. ஆக, சிந்தனை, எல்லைக்குட்பட்டது, வரையறுக்கப்பட்டது. வரம்பிற்குட்பட்டிருக்கும் ஒன்றின் செயலால் பிரிவினைதான் உருவாகும். அனைத்து பிரிவினை களுக்கும், அனைத்து வேறுபாடுகளுக்கும் எண்ணம்தான் காரணம்.

எண்ணத்தின் இயல்பையும், கட்டமைப்பையும் பற்றிய புரிதல் இல்லாவிட்டால், உள்முகப் பயணத்தில் நீங்கள் வெகுதூரம் போக முடியாது. வெகுதொலைவு செல்ல, நீங்கள் அருகாமையில் தொடங்க வேண்டும். அருகாமை என்பது நீங்கள்தான். நீங்கள் எப்படிச் சிந்திக்கிறீர்கள், என்ன சிந்திக்கிறீர்கள் ஆகியவற்றை யெல்லாம் கூர்ந்து கவனித்து, எண்ணம் என்பது என்றுமே வரையறைகுட்பட்டது என்பதை நீங்களாகவே கண்டுபிடியுங்கள்.

கடவுளை, அளவிடற்கரியதை, முதன்மையானதை, அறிந்திராததை, எண்ணம் கண்டுபிடிக்கலாம். ஆனாலும், அந்தக் கண்டுபிடிப்பு எண்ணத்தின் விளைபொருளாக உள்ளது. ஆக, நமது போராட்டங்களுக்கும், இன்னல்களுக்கும், துயரங்களுக்கும் காரணியாக இருப்பவைகளில் எண்ணமானது மிகப் பெரிய அங்கம் வகிக்கிறது. இந்த உண்மையை, அறிவுபூர்வமாகவோ, வார்த்தையளவிலோ, தர்க்கரீதியாகவோ புரிந்துகொண்டு

பலனில்லை. மிகவும் ஆழமாக எண்ணத்தின் இயல்பை நீங்கள் புரிந்துகொள்ளாத வரையில், முற்றிலும் புதிய ஒரு உபகரணத்தை சுயமாகக் கண்டுபிடிக்கும் முயற்சியை துவங்க உங்களுக்கு முடியாது.

உங்களிடம் இப்போதிருக்கும் ஒரே உபகரணமாக எண்ணம் உள்ளது. எண்ணம், மிகவும் சிக்கலான பிரச்சினைகளை உருவாக்குகிறது. அந்தப் பிரச்சினைகளை எண்ணமே தீர்த்துவைக்க எத்தனிப்பதால், மேலும் அதிகமான பிரச்சினைகள் தோன்றுகின்றன. இவ்வாறு நிகழ்வதை நீங்கள் அரசியல் களத்தில் பார்த்திருக்கலாம், ஆன்மிக உலகிலும் பார்த்திருக்கலாம். எனவே, எண்ணம் என்ற கருவியை விடுத்து, முற்றிலும் புதியதோர் கருவியை நாம் கண்டுபிடிக்க வேண்டும்.

இறப்பு, சமயம் மற்றும் தியானம் ஆகியவைப்பற்றி நாம் கலந்துரையாடும்போது, எண்ணத்தின் குறை களையும், புதிய கருவியின் அவசியத்தையும் கவனத்தில் கொள்ளவேண்டும். அவ்வாறு செயல்படும்போது, புரிதலும், கண்டுபிடிப்பும் நிகழ்கிறது. இந்நிலையில் மனிதனால் படைக்கப்படாததும், காலத்தைக் கடந்ததும், அளவிடற்கரியதுமான ஒன்று எதிர்படுகிறது. நாம் அதைக் கண்டுபிடிக்கப் போகிறோம், நாம் அதைப்பற்றி பேசப்போகிறோம், ஒருவருக்கொருவர் அதைப் பரிமாறிக்கொள்ளப் போகிறோம்.

ஆனால், முதலில், நாம் எண்ணத்தின் நிலைமை, அதன் மதிப்பு, பிரிவினை மற்றும் வேற்றுமைகளைக் கொணரும் எண்ணத்தின் செயல்கள் பற்றியும் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும். எண்ணத்தைப் பற்றிய தெளிவு இருக்குமேயானால், எல்லைகளுக்குட்பட்ட நம் சொந்த வாழ்க்கையை நோக்க, நமக்கு இயலும்.

மரணத்திற்குப் பின் என்ன நேரிடுகிறது என்பதைவிட, மரணத்திற்கு முன்னர், அதாவது, வாழ்ந்து கொண்டிருக்கையில் என்ன நிகழ்கிறது என்பதே அதிக முக்கியத்துவம் வாய்ந்தது. மரணத்திற்குப் பின் என்ன நடக்கும் என்பதைப் பற்றியே நாம் சதா விசாரணை செய்கிறோம். மரணத்திற்கு முன்னர் - கடைசி நிமிடத்தையோ, அல்லது கடைசி நாளையோ குறிப்பிடவில்லை - அதாவது, முப்பது வருடம், நாற்பது வருடம், ஐம்பது வருடம், இல்லை அதற்கு மேலும், நாம் எப்படிப்பட்ட வாழ்க்கை நடத்துகிறோம் என்பதைப்பற்றி நாம் சிந்திப்பதில்லை.

காலம் என்பது மரணம். நாம் 'காலம்' என்று இங்குக் குறிப்பிடுவது மனோரீதியான காலம், உள்முகக் காலம். 'நான் நாளை பணக்காரனாகி விடுவேன் என்று நம்புகிறேன்', 'நான் பிற்காலத்தில் ஞானியாகி விடுவேன் என்று நம்புகிறேன்' என்றெல்லாம் எண்ணவைக்கும் 'நம்பிக்கை' என்ற கருத்தை உருவாக்கும் காலம். காலம் என்பது ஒரு இயக்கம். கடிகாரம் காட்டும் காலம், அஸ்தமன சூரியன் உணர்த்தும் காலம், ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்ல ஒருவர் எடுத்துக்கொள்ளும் காலம், ஒரு மொழியைக் கற்றுக்கொள்ள தேவைப்படும் காலம் என்றெல்லாம் இருக்கும் காலத்தைத் தவிர, 'நம்பிக்கை', 'சாதனை', 'மாற்றம்' போன்ற கருத்துகள் கொண்ட மனோரீதியான காலம் இருக்கிறது.

நம்பிக்கை, சாதனை மற்றும் மாற்றம் ஆகிய அனைத்திற்கும் பௌதீகரீதியான காலமும் தேவை, மனோரீதியான காலமும் தேவை. நாம் உள்முகத்தில் மனோரீதியாக இருக்கும் காலத்தைப் பற்றி பேசிக் கொண்டிருக்கிறோம். காலம், மரணமாக இருக்கிறது.

காலத்தின் அடிப்படையில் எண்ணுவது, பிரிவினையையும் வேற்றுமையையும் தோற்றுவிக்கிறது; மேலும், அது நிகழ்காலத்திற்குத் தரும் முக்கியத்துவத்தைவிட, எதிர் காலத்திற்கு அதிக அளவில் முக்கியத்துவம் தருகிறது.

மேற்கூறப்பட்ட விஷயங்களெல்லாவற்றையும் புரிந்துகொண்டீர்களா? புரிந்துவிட்டது என்றா சொல்கிறீர்கள்? என்னை ஊக்குவிப்பதாக நினைத்து தயவு செய்து அவ்வாறு சொல்லாதீர்கள். கையோடு கைகோர்த்து நாம் ஒரே பாதையில் நடந்து செல்கிறோமா என்று நான் வினவுகிறேன். நீங்கள் என்னை முந்திக்கொண்டோ அல்லது பின்தங்கியோ வரவில்லை, என்னுடன் சேர்ந்தே வருகிறீர்கள்.

அழகான மரங்கள் நிறைந்த, நறுமணத்துடன் கூடிய காற்று வீசும், நிழல் படர்ந்த இனியதோர் பாதையில் நாம் சேர்ந்து செல்கிறோம். நாம் சேர்ந்து செல்கிறோமா என்று நான் வினவுவது எதற்கென்றால் நாம் ஒருமித்து சிந்திக்கிறோமா, ஒத்துழைப்பு நல்கி இசைந்து செல்கிறோமா என்பதைக் கண்டுபிடிப்பதற்காகத்தான்.

காலம் என்பது ஓர் இயக்கம். அது எண்ணத்தின் கண்டுபிடிப்பாக உள்ளது. மனோரீதியான காலத்தை எண்ணம் தோற்றுவிக்கிறது, மற்றும் எண்ணம் என்பதே காலத்தின் விளைபொருளாய் இருக்கிறது. அவ்வாறு கூறுவதற்கான காரணம், மனிதன், தன் நீண்டகால பரிணாம வளர்ச்சியின் மூலமாக விஷயஅறிவைப் பெற்றிருக்கிறான் என்பதே. பரிணாமம் என்பதில் காலம் உணர்த்தப்படுகிறது.

காலத்தின் அடிப்படையில் நாம் சிந்திக்கும்போது, நாம் வாழ்க்கையை பகுதி பகுதியாகப் பிரித்து

விடுகிறோம். 'நான் ஒரு ஹிந்து, நீங்கள் ஒரு பௌத்தர்', 'நான் ஒரு முஸ்லீம், நீங்கள் ஒரு கிருத்துவர்' என்பதுபோல் பிளவுபடுத்தி பிரிவினை செய்கிறோம். வரையறுக்கப்பட்டதாய் இருக்கும் எண்ணத்தின் விளைவாகவே இந்தப் பிரிவினை தோன்றுகிறது. 'நான் இன்று இப்படி இருக்கிறேன், ஆனால், ஒருநாள் மாறிவிடுவேன்' என்று நீங்கள் சொல்லும்போது, உள்ளதிற்கும் நீங்கள் அடைந்துவிட விரும்புவதற்கும் இடையே உள்ள இடைவெளியாக காலம் உள்ளது. காலம் உங்கள் வாழ்க்கையில் இடம்பெறும்போது, சிறுசிறு கூறுகளாக உங்கள் வாழ்க்கை பிரிந்துகிடப்பது கட்டாயம் நிகழும். நீங்கள் தற்சமயம் வாழ்ந்து கொண்டிருக்கும் வாழ்க்கையிலிருந்து, மரணத்தைப் பிரித்து வைத்துவிட்டீர்கள்.

மரணத்திற்கு மிகவும் முன்னால் நீங்கள் வாழும் வாழ்க்கை எவ்வாறிருக்கிறது என்பதை ஆழமாக நீங்கள் சிந்திப்பதே இல்லை. மிகச் சிலரே, மரணம் ஏற்படுவதற்கு மிகவும் முன்னால் வாழும் வாழ்க்கையைப் பற்றி எண்ணிப் பார்க்கிறார்கள். மரணத்திற்குப் பின் என்ன நடக்கும் என்பதிலேயே நீங்கள் அனைவரும் மிகுந்த அக்கறை காட்டுகிறீர்கள். மரணத்திற்குப் பின் சொர்க்கம் என்றும், நரகம் என்றும் இருக்கிறதா, உங்களுக்கு முன் மரணமடைந்த உங்கள் சகோதரரை, நீங்கள் மரணமடைந்த பின் சந்திக்க இயலுமா போன்றவற்றில் நீங்கள் காட்டும் அக்கறை மிகவும் அதிகம்.

நாற்பது வருடமோ, ஐம்பது வருடமோ இவ்வுலகில் வாழ்கிறோமே, அது, மரணத்திற்குப் பின் நடக்கப் போவதைவிட மிகவும் முக்கியமானது. எனவே நாம் இங்கு நம் வாழ்க்கை எவ்வாறிருக்கிறது என்பதைப் பற்றி

பரிசீலிக்கப் போகிறோம், கண்டுணரப் போகிறோம். வாழ்க்கைப்பற்றி ஆழமாகப் புரிந்துகொள்ளாத நிலையில், நீங்கள் மரணத்தை சந்திக்க நேர்ந்தால், நீங்கள் மிகுந்த அச்சமடைகிறீர்கள், அனைத்தும் உங்களுக்கு இருண்டு விடுகிறது. எனவே, அன்றாட வாழ்க்கையைப் பற்றி நாம் ஆராய வேண்டும். இந்த வாழ்க்கையின் தாத்பரியம் என்ன, இதற்கு ஏதாவது மதிப்பு உண்டா, ஆழம் உண்டா, அழகு உண்டா என்பதைப் பற்றி ஆராய வேண்டும்.

உங்கள் அன்றாட வாழ்க்கை எத்தகையது? காலை ஒன்பது மணியிலிருந்து மாலை ஐந்து மணிவரை அலுவலகப் பணிகளில் உழைத்து வாழ்நாள் பூராவும் கழிப்பீர்கள். அது எத்தகைய அவலநிலை என்பதை எப்போதாவது நினைத்துப் பார்த்திருக்கிறீர்களா? இவ்வளவு உழைக்கிறீர்களே, எதற்காக? 'நான் பணம் சம்பாதிக்க வேண்டும், சம்பாதிப்பது என் குடும்பத்திற்காக நான் செய்ய வேண்டிய கடமை, அது என் பொறுப்பு' என்று நீங்கள் சொல்வீர்கள். உங்கள் கடமையின் காரணமாக, நீங்கள், காலை ஒன்பது மணியிலிருந்து மாலை ஐந்து மணிவரை அடுத்த அறுபது ஆண்டுகளுக்கு அலுவலகம் செல்வீர்கள், பிறகு வேலையிலிருந்து ஓய்வு பெறுவீர்கள், பிறகு மரணமடைவீர்கள்.

அன்றாட வாழ்க்கையின் ஒரு அங்கமாக அலுவலகம் செல்வது உள்ளது. நீங்கள் பணிபுரிவது அலுவலகத்திலோ அல்லது தொழிற்சாலையிலோ, அங்கு நீங்கள் போராடுகிறீர்கள், மற்றவருடன் போட்டி போடுகிறீர்கள், மேலாளராகி விடவேண்டும் என்று துடிக்கிறீர்கள்: பணியாளர், மேலாளராகிவிட நினைக்கிறார். அருட்தந்தை, போப் ஆண்டவ்ராகிவிட விரும்புகிறார்

என்பதாகத் தொடர்கிறது உலகம். சோர்ந்துபோய், சலித்துபோய், அவமதிக்கப்பட்டு, வெளியிலிருந்து வீடு திரும்புகிறீர்கள்.

வீடு என்று எதை அழைக்கிறீர்கள்? மேற்கூரை யையும், பல அறைகளையோ அல்லது ஒரே ஒரு அறையையோ கொண்டதா வீடு? 'வீடு' என்ற சொல், உங்களுக்கு எதை உணர்த்துகிறது? உண்டு, உறங்கி, சுகித்து, சண்டையிட்டு, விவாதித்து, ஒருவருக்கொருவர் தொல்லைக் கொடுத்துக் கொண்டு வாழும் இடமா வீடு?

வீடு, குடும்பம் ஆகியவற்றிலிருந்தெல்லாம் விட்டுவிலகி, சன்னியாசி ஆகிவிடுகிறீர்கள். ஆனாலும், வாழ்க்கையிலிருந்து உங்களால் விட்டுவிலக முடியாது. நீங்கள் காவியுடை அணிந்துகொள்ளலாம், ஆனால், வாழ்க்கை, நீங்கள் எங்கு இருக்கிறீர்களோ அங்கிருக்கிறது, நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ, அப்படியிருக்கிறது. வாழும் காலமான நாற்பது ஆண்டுகளோ, ஐம்பது ஆண்டுகளோ, ஓயாத போராட்டங்கள், ஓயாத சச்சரவுகள், வேதனைகள், சிறிதளவு களிப்பு, இன்பத்தைத் தேடி ஓடுதல், பிறகு தவிர்க்க முடியாத மரணம் என்பதாகவே இருக்கிறது. இதுதான் உங்கள் வாழ்க்கை; அவ்வாறில்லை என்று உங்களால் மறுக்க முடியாது.

இப்புவியில் வாழும் அனைத்து மாந்தரின் வாழ்க்கையும் இவ்வாறுதான் இருக்கிறது. பணக்கார சமுதாயத்தில் வாழ்ந்தாலும், சர்வாதிகார ஆட்சி நடக்கும் நாட்டில் வாழ்ந்தாலும், ஜனநாயக நாட்டிலோ, அல்லது கம்யூனிஸ நாட்டிலோ, எங்கு அவர்கள் வாழ நேரிட்டாலும், வேதனை, போராட்டம், சச்சரவு, நாள் முழுவதும் வேலை என்பதாகவே மக்களின் அன்றாட

வாழ்க்கை இருக்கிறது. அத்தகைய வாழ்க்கை நடத்துவதால் அவர்களின் நிலைமை என்னவாகிறது, அவர்களின் சிந்திக்கும் ஆற்றலுக்கு எவ்விதத் தாக்கம் ஏற்படுகிறது என்பது உங்களுக்குத் தெரியுமா?

'மானுடத்தின் ஏனையோரைப் போன்றவரே நானும்' என்ற உணர்வோடு, மிகவும் தெளிவாக சிந்திக்க உங்களால் முடியுமா? மானுடத்தின் ஏனையோரைப் போன்றவரே நீங்களும் என்பது ஒரு உண்மை, அது ஏதோ தர்க்கரீதியான முடிவு அல்ல. இந்த உண்மையை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும்; இல்லையென்றால், நாம் மரணத்தைப் பற்றி பேசும்போது, உங்களுக்கு உங்கள் பிரக்ஞை மற்றும் அதன் உட்பொதிவின் தாத்பரியம் பற்றி புரிந்துகொள்ள முடியாமல் போய்விடும்.

உங்கள் பிரக்ஞையின் உட்பொதிவாக உங்கள் பெயர், உருவம், நம்பிக்கைகள், கோட்பாடுகள், வேதனைகள், கலக்கங்கள், தனிமை, மனச்சோர்வு, ஆசை ஆகியவை உள்ளன; அவைகளாகவே நீங்கள் இருக்கிறீர்கள். உண்மையில் உங்கள் இருப்பு, பிரக்ஞையின் உட்பொதிவாகவே உள்ளது. இத்தகைய உங்கள் பிரக்ஞையே, உலக மாந்தர் அனைவரின் பிரக்ஞையாகவும் உள்ளது.

மேற்கூறப்பட்டது, தர்க்க ரீதியாகவும் சரியானதே. ஆனால், அவ்வுண்மையை வெறுமனே தர்க்கவாதம் செய்து முடிவெடுத்து ஏற்றுக்கொள்வதில், மதிப்பேதுமில்லை. ஆனால், மனிதகுலத்தின் ஏனையோரைப் போன்றவரே நீங்கள் என்ற உண்மையின் ஆழத்தை, அதன் அசாதாரணமான அழகை, அதன் வலிமையை

நீங்கள் உங்கள் இதயத்தில், உங்கள் இரத்தத்தில், உங்கள் மனதில் நன்கு உணர்வீர்களேயானால், பிறகு, நீங்கள் ஒரு தனி நபர் என்று ஒருபோதும் உணர்வதில்லை.

நீங்கள் ஏனையோரைப் போன்றவரே, தனிநபர் அல்ல என்ற உண்மை உங்களுக்குக் கசக்கிறது; அதை ஏற்றுக்கொள்வது உங்களுக்கு மிகவும் கடினமாக இருக்கிறது என்பதை நான் அறிவேன். நீங்கள் ஒரு தனிநபர் என்று காலங்காலமாய் சமூகம் உங்களைப் பழக்கப்படுத்தியிருப்பதால், அதற்கு மாறாக சிந்திப்பதுகூட உங்களுக்குச் சிரமமானதாய் இருக்கிறது. நீங்கள் உயரமானவரோ குள்ளமானவரோ, நீங்கள் புத்திசாலியோ முட்டாளோ, நீங்கள் தனிநபரல்ல. உயரம், குள்ளம், புத்திசாலித்தனம் ஆகியவையெல்லாம் வெளிவிளிம்பில் இருப்பவை. உள்முகத்தில், நீங்கள் உலக மாந்தராய் இருக்கும் ஏனையோரைப் போன்றவரே.

ஆக, நீங்கள் மனிதகுலத்தின் ஏனையோரைப் போன்றவர் என்றால் - நீங்கள் மனிதகுலம் என்றாகிறது - மனிதகுலத்திற்கு உங்கள் பொறுப்பு, கடமை என்ன? உலகில் நடந்துகொண்டிருக்கும் நிகழ்வுகளுக்கான உங்கள் பொறுப்பு என்ன? இந்தக் கேள்வியை நீங்கள் ஒருபோதும் உங்களைக் கேட்டிருக்கமாட்டீர்கள். நீங்கள் உங்கள் குடும்பத்திற்கும், உங்கள் தேசத்திற்கும் கடமைப்பட்டவர் என்று சொல்கிறீர்கள். 'உங்கள் தேசம்' என்ற கருத்து, எண்ணத்தின் மற்றுமொரு கண்டு பிடிப்பாகவே இருக்கிறது. மனிதகுலத்திற்கு நீங்கள் ஆற்றவேண்டிய பொறுப்பு என்ன? மனிதகுலம் தன்னை அழித்து கொண்டிருக்கிறது. இந்த நிலையில், உங்களுக் கான பொறுப்பு என்ன, நீங்கள் செய்யவேண்டிய சரியான செயல் என்ன என்பதை நீங்களே கண்டுணர வேண்டும்.

மனிதகுலத்திற்கான உங்கள் கடமைகளிலிருந்து நீங்கள் தப்பிச்செல்ல முடியாது. உங்கள் பிரக்ஞை, உங்களுக்கே உரிய பிரத்யேகமான ஒன்றல்ல. இப்புவி மீது வாழும் அனைத்து மாந்தராலும் உங்கள் பிரக்ஞை பகிர்ந்துகொள்ளப்படுகிறது. எல்லாவித இன்னல்களையும், வேதனைகளையும், கலக்கங்களையும், தனிமையையும் அனைத்து மாந்தரும் அனுபவிக்கிறார்கள். உலக நடப்புகளைப் பற்றிய விழிப்புணர்வை நீங்கள் கொண்டிருந்தால், அதன் தொடர்பான உங்கள் பொறுப்பு என்ன, உங்கள் பணி என்ன என்பதைப் பற்றியெல்லாம் நீங்கள் சுய விசாரணை செய்யவேண்டும்.

தற்சமயம், நீங்கள் ஒரு தனிநபர், ஏனையோரிடமிருந்து வேறுபட்டவர் என்று எண்ணுகிறீர்கள். அதனால், 'நான் இறந்தபின், எனக்கு என்ன நேரிடும்? நான் மறுபிறவி எடுப்பேனா?' என்பது போன்ற கேள்விகளை எழுப்புகிறீர்கள். இவ்விஷயத்தை மிகவும் நுணுக்கமாகப் பார்க்க வேண்டும். 'நான்' என்று நீங்கள் குறிப்பிட்டுக்கொள்ளும், அந்த நீங்கள் யார்? 'நான் மறுபிறவியில் நம்பிக்கை கொண்டவன். நான் இறந்தபின், மீண்டும் மறுபிறவி எடுத்து பூமியில் பிறக்க விரும்புகிறேன்' என்று நீங்கள் சொல்வதில், உங்களில் எது மறுபிறவி எடுக்கப்போகிறது?

நீங்கள் யார்? உங்கள் உடலும் பெயருமாக நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் சிந்தனையாக நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் கல்வியின் பலனாக நீங்கள் இருக்கிறீர்கள் - அளிக்கப்படும் கல்வி, உயர்வற்றது. அக்கல்வி, உங்களை ஒரு பொறியாளராகவோ, எழுத்தராகவோ, ஏதோவொன்றாக பயிற்றுவிக்கிறது. வாழ்க்கையின் முழுமையையும் அழகையும் பற்றிய

புரிதலை அக்கல்வி உங்களுக்கு அளிப்பதில்லை. மலைமலையாக விஷயஅறிவை மட்டுமே அக்கல்வி தருகிறது - அதைக்கொண்டு, திறமையாகவோ அல்லது திறமையற்றோ, நீங்கள் உலகில் செயல்படுகிறீர்கள்.

விஷயஅறிவை மட்டுமே அளிப்பது, கல்வி ஆகாது - அது, கல்வியின் மிகச் சிறிய பாகம்தான். கல்வி என்பது முழுமையான மனிதனாக வளர மாணவனுக்கு உதவ வேண்டும். அது, மனித மனம், விரிய, மலர்ச்சி பெற உறுதுணையாக இருக்க வேண்டும். தனித்துறை நிபுணர்களை உருவாக்கி, மனித மனத்தை முடக்கும் செயலைச் செய்வது, கல்வியாகாது.

ஆக, நீங்கள் யார்? நீங்கள் வார்த்தைகளின் தொகுதியா? கருத்துகளின் தொகுதியா? திரும்பத் திரும்ப வரும் ஞாபகங்களின் தொகுதியா நீங்கள்? தீர்மானமான முடிவுகளின் தொடர்ச்சியா நீங்கள்? 'நீங்கள் கூறும் இவ்வர்ணனைகள் எல்லாம் வெறும் வார்த்தைகளின் கட்டமைப்பு. நான் இது மட்டுமல்ல - மேலும் ஆழமான ஒன்றாக நான் இருக்கிறேன்' என்று நீங்கள் பதில் அளிப்பீர்கள். ஆழமான ஒன்றாக, கடவுள் என்றோ ஆத்மா என்றோ அல்லது உங்களுக்குப் பிடித்த வகையிலோ அல்லது கிருத்துவர்கள் அழைப்பது போலவோ இருக்கும் ஒன்று, உங்களுக்குள் உள்ளது என்று உறுதிபட கூறுவீர்கள்.

'நான் உருவமோ, பெயரோ, ஞாபகங்களோ மட்டுமல்ல. நான் இன்னும் கூடுதலானவன். என்னிடம் ஒளியின் கீற்று உள்ளது. வெறும் உடலமைப்பிலிருக்கும் தனித்தன்மைகளோ, வெறும் தீர்மானங்களோ, நம்பிக்கைகளோ, கோட்பாடுகளோ, சொற்களோ மட்டும்

நானில்லை; நான் இன்னும் மேம்பட்டவன்' என்று சொல்கிறீர்கள். இவ்வாறு கூறுவதும் எண்ணத்தின் செயல்பாடே, எண்ணத்தின் கண்டுபிடிப்பே என்பது வெளிப்படையாகவே தெரிகிறது. ஆக, நீங்கள் எண்ணம் கோர்த்த கோவை. நீங்கள் உங்களை ஹிந்து என்று சொல்லிக்கொள்கிறீர்கள், மற்றவர் தன்னை முஸ்லீம் என்று சொல்லிக்கொள்கிறார். இந்த வேறுபாடுகள் எல்லாம் எண்ணத்தின் விளைவாய் வந்தவையே. எனவே, உண்மையில் மனப்பதிவுகளின் தொகுப்பாய் மற்றும் எதிர்வினைகளின் தொகுப்பாய் நீங்கள் இருக்கிறீர்கள்.

உங்கள் எதிர்வினைகளும், பிரதி உணர்ச்சிகளும், உங்களுடைய விஷயஅறிவு, உங்கள் அனுபவம், உங்கள் மனப்பாங்கு போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. ஆக, நீங்கள் கடந்த காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள் - கடந்த காலமோ இறந்த காலம். இறந்த காலத்தில் வாழும் நீங்கள், உயிரோட்டமின்றி இருக்கிறீர்கள். விஷயஅறிவு காலங்காலமாய் சேகரிக்கப்பட்ட ஒன்றாய் இருப்பதால், அது இறந்தகாலத்தியது. நீங்கள் விஷயஅறிவை அடிப்படையாகக் கொண்டு வாழும்போது, கடந்த காலம், கடந்து போய்விட்டது, தற்சமயம் அது இங்கில்லை என்ற நிலையில், உங்களின் இருப்பு என்ன, நீங்கள் யார்? மேலே தொடருங்கள். நிலைக் கண்ணாடியில் பார்த்துக்கொள்வதுபோல, உங்களை, நிஜத்தில் நீங்கள் யார் என்பதைப் பாருங்கள்.

'நான் இறந்தபின், மீண்டும் மறுபிறவி எடுப்பேன்' என்று கூறுகிறீர்கள். அதாவது, அடுத்த பிறவியிலும் உங்கள் பேச்சுகள், அனுபவங்கள், ஞாபகங்கள், இப்பிறவியில் உள்ளதைவிட இன்னும் பெரிய வீடு,

இன்னும் அதிக செல்வம், இத்யாதிகள் தொடரும் என்று சொல்கிறீர்கள். மறுபிறவியில் நம்பிக்கை கொண்டவர் நீங்கள் என்றால், இந்தப் பிறவியில் என்ன செய்கிறீர்களோ, அதற்கானப் பலனை மறுபிறவியில் அடையப் போவதால், இந்தப் பிறவியில் செய்வது மிகவும் முக்கியத்துவம் பெறுகிறது.

மறுபிறவி என்ற கருத்தை கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருக்கிறீர்கள். கடந்த காலத்திய செத்துமடிந்த ஞாபகங்களையும், கருத்துகளையும் விடாமல் பிடித்துக் கொண்டிருக்கிறீர்கள். அதனால்தான், மூட நம்பிக்கைகள் பலவற்றை கொண்டிருக்கும், பலவற்றை ஏற்றுக்கொள்ளும் இந்தத் தேசம், மறுபிறவி என்ற விஷயத்திலும் நம்பிக்கை வைக்கிறது. மூடநம்பிக்கைகளால் இத்தேசம் மெதுமெதுவாக மடிந்து வருகிறது.

அடுத்ததாக எழும் கேள்வி : இறப்பு என்றால் என்ன? என்பது. தயவுசெய்து இக்கேள்வியை எழுப்புங்கள். ஞாபகங்கள், வார்த்தைகள், சின்னங்கள் மற்றும் குறியீடுகளின் சேமிப்புக் கிடங்காக நீங்கள் இருக்கிறீர்கள். நீங்கள் தனிநபரல்ல - மனித குலத்தின் ஏனையோரைப் போன்றவரே நீங்களும். நீங்கள் எண்ணமிடுவதைப் போலவே, மற்றவரும் எண்ண மிடுகிறார். சிந்திப்பது என்ற அனைவருக்கும் பொதுவான ஒன்று இருக்கிறதே தவிர, நீங்கள் சிந்திப்பது என்று தனிப்பட்டதாக எதுவும் இல்லை.

உங்களுக்கென்று பிரத்யேகமான உடலமைப்பு, தலையின் அமைப்பு, உங்களுக்கான குறிப்பிட்ட பணி என்பனவற்றால் மற்றவரிலிருந்து நீங்கள் வேறுபடலாம்.

ஆனால், உள்முகத்தில், நீங்கள் ஏனையோரைப் போன்றவரே. இவ்வாறிருக்கையில், இறப்பு என்பதற்கு என்ன பொருள்? பெயர், வடிவம், கல்வி, உடல்ரீதியான பிரதிஉணர்வுகள், மனோரீதியான எதிர்வினைகள், சுவீகரிக்கப்பட்ட இனம் சார்ந்த மனப்பதிவுகள், சொந்த ஞாபகங்கள் ஆகியவைகளின் தொகுதியாக நீங்கள் இருக்கிறீர்கள். அனைத்து மாந்தர்களும் அவ்வாறே உள்ளனர். மானுடப் பிரக்ஞையாகவும் அவைகளே இருக்கின்றன. இந்தத் தெளிவோடு, நாம் வினவும் கேள்வி : 'இறத்தல் என்பதின் பொருள் என்ன?' என்பதே.

தற்சமயம் நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள், சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருக்கிறீர்கள். பலர், இயந்திரத்தனமாக இயங்கிக் கொண்டிருப்பார்கள்... இருப்பினும் அதுவும் ஒரு இயக்கம்தான். உங்களுக்கென்று ஒரு வாழ்க்கை, உங்களின் உணர்ச்சிகள், உங்களின் எண்ணப் பிரதிபலிப்புகள் என்று நீங்கள் இருக்கிறீர்கள். மரணம் நேரிடும்போது, அவை அனைத்தும் துடைத்தெறியப்படுகிறது.

நீங்கள் கையகப்படுத்தியுள்ள உங்கள் நகைகள், வீடுகள், வங்கிச் சேமிப்புகள், உங்கள் மனைவி மக்கள், உங்கள் பற்றுதல்கள் ஆகிய அனைத்துமே மரணம் நிகழ்கையில் முடிவுறுகின்றன. எல்லாம் முடிந்து போகிறது - அதுதான் மரணம். ஆனால், உங்கள் பற்றுதல்களையெல்லாம் அடுத்த ஜென்மத்திற்கு எடுத்துச்செல்ல விரும்புகிறீர்கள். உங்களின் அந்த விருப்பம், வெறும் உள்ளக்கிடக்கை, வெறும் கருத்து. நீங்கள் மரணமடையும்போது, அனைத்து பற்றுதல்களும் முடிவுறுகின்றன.

பற்றுதல்களின் முடிவுறுதலை, மரணம் அளிப்பதாக இல்லாமல், நீங்களே வலிந்து சென்று வரவேற்க முடியுமா? அதாவது, முடிவிற்குக் கொண்டுவருதல் என்றால் மரணம். வலிமையோடும், ஊக்கத்தோடும் நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே, உங்கள் பற்றுதலை, உங்களின் ஒரு பழக்கத்தை, தன்னிச்சையாக, சுலபமாக, அமைதியாக உங்களால் முடிவிற்குக் கொண்டுவர முடியுமா? எங்கு ஒரு முடிவுறுதல் நிகழ்கிறதோ, அங்கு, முற்றிலும் வேறுபட்ட துவக்கம் உண்டாகிறது. அத்துவக்கம் விசித்திரமான கருத்துகளை கொண்ட மனிதன் என்பதாக இருப்பதில்லை.

பற்றுதல் போன்ற ஒன்றை நீங்கள் முடிவுறச் செய்யும்போது, வேறுபட்ட செயல்கள் தொடருகின்றன. அவை படைப்பாற்றலோடு கூடிய செயல்கள். ஆக, தற்சமயமே, நிகழ்காலத்திலேயே மறுபிறவி எடுக்கிறீர்கள்... இது உங்களுக்குப் புரிகிறதா? வாழும்போதே மறுபிறவி எடுக்க நீங்கள் நினைத்தால், அதற்கான பொறுப்பு, உங்கள் கையில்.

சமயம் என்றால் என்ன, சமய உணர்வுள்ள மனம் என்றால் என்ன, சமய உணர்வோடான வாழ்க்கை என்றால் என்ன என்பனவற்றைப் பற்றி நாம் கலந்துரையாடுவது அவசியம். இப்போதே அதைத் துவங்கலாமா? இந்த அவையிலிருக்கும் காவி உடை அணிந்திருக்கும் நண்பர்கள்கூட இதில் கலந்து கொள்ளலாம்.

'Religion' (சமயம்) என்ற ஆங்கிலச் சொல்லின் மூலவார்த்தை பற்றி சொற்பிறப்பியல் பிரிவில் தெளிவாக எதுவும் சொல்லப்படவில்லை. துவக்கத்தில் 'Religion' (சமயம்) என்ற சொல் 'to bind' (சேர்த்துப் பிணைக்க)

என்ற அர்த்தத்தில், ஒரு மேன்மையான கோட்பாட்டுடன், ஒரு உயரிய கருத்துடன் ஒருவர் தன்னைப் பிணைத்துக்கொள்ளுதல் என்பதாக வழங்கி வந்தது. அந்த அர்த்தம் இப்போது நீக்கப்பட்டுவிட்டது. அதனால் அகராதியில் உள்ள 'Religion' (சமயம்) என்பதற்கான அர்த்தத்தை கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. சமயம் என்றால் என்ன, சமய உணர்வோடு கூடிய வாழ்க்கை எது, தியானம் என்றால் என்ன மற்றும் எண்ணத்தால் தீண்டப்படாத ஒன்று என்று ஏதேனும் உள்ளதா என்பதைப் பற்றி இப்போது நாம் ஆராய்ந்து பார்க்கலாம்.

உலகில் நிலவிக்கொண்டிருக்கும் இன்றைய சமயங்களை 'சமயம்' என்று சொல்லலாகுமா? நீங்கள் ஒரு ஹிந்து, உங்கள் மதத்தில் நம்பிக்கை கொண்டவராக இருக்கிறீர்கள், உங்கள் புனித நூல்கள் உங்களுக்கு வாழ்வுநெறியை எடுத்துரைக்கின்றன, நீங்கள் உருவ வழிபாடு செய்கிறீர்கள். முஸ்லீம் மதத்தவர், உருவ வழிபாடு செய்வதில்லை, ஆனாலும், அவர்களுக்கான வழிபாட்டு முறை உள்ளது. கிருத்துவர்களுக்கும், அவர்களுக்கான சின்னங்கள், சடங்குகள், கோட்பாடுகள், நம்பிக்கைகள் மற்றும் மூடநம்பிக்கைகள் உள்ளன. சமய உலகிலும் அதிகார கட்டமைப்புகள் உண்டு. இவற்றை நீங்கள் சமயம் என்றழைக்கிறீர்கள்.

உங்களுக்குக் கடவுள் நம்பிக்கை உள்ளது. கடவுளிலோ அல்லது ஒரு மேன்மையான கோட்பாட்டிலோ, நீங்கள் நம்பிக்கை வைக்கவில்லையென்றால், நீங்கள் சமயம் சார்ந்தவராக கருதப்பட மாட்டீர்கள். ஆனால், உங்கள் கடவுளர்களோ எண்ணத்தால் உருவாக்கப்பட்டவை. நமது வாழ்க்கை, பரிதாபகரமான

தாகவும், நிச்சயமற்றதாகவும், விகாரமானதாகவும் இருப்பதால், நம்மை உருவாக்கும், காக்கும், வரமளிக்கும் ஏதோ ஒன்று கட்டாயம் இருக்கும் என்று நமக்கு நாமே சொல்லிக்கொள்கிறோம். புனித புத்தகங்கள் மற்றும் சம்பிரதாயங்களின் அடிப்படையில் எண்ணம் அந்தக் கருத்தை நம்முள் உருவாக்குகிறது.

கடவுளை நம்பவேண்டும் என்ற வகையில் செயல்திட்ட வரைவு ஒன்றை எண்ணம் வகுக்கிறது. எண்ணம் உருவாக்கிய இத்தகைய சமயங்கள், நிச்சயமாக சமயங்கள் அல்ல. இக்கூற்றினை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா? கட்டாயம் ஏற்கமாட்டீர்கள். ஆனால், எண்ணத்தால் உருவாக்கப்பட்டவை, சமயம் ஆகாது. உங்கள் நம்பிக்கை, உங்கள் வழிபாடு, கோயில் / மசூதி / சர்ச்சுக்குச் செல்லுதல், ஏதோ ஒரு சொற்றொடரை திரும்பத் திரும்பச் சொல்லுதல் ஆகியவையெல்லாம், முற்றிலுமாக முழுவதுமாக உங்கள் அன்றாட வாழ்க்கைக்கு எந்தவொரு சம்பந்தமும் இன்றி, விலகி நிற்கிறது.

அன்றாட வாழ்க்கையைப் பற்றிய புரிதல், அன்றாட வாழ்க்கையில் பரிபூரணமான அடிப்படை மாற்றத்தைக் கொணர்தல், மூடத்தனமான நம்பிக்கைகளைக் கொண்டிராத அறிவோடிருத்தல் - அதாவது, உண்மையை எதிர்கொள்ளல், உள்ளபடி தன்னை எதிர்கொள்ளல் - மற்றும் 'உள்ளதை' தாண்டி அப்பாலும் செல்லுதல் போன்ற செயல்பாடுக்ள், சமய உணர்வுள்ள மனம் பெறுவதற்கான தொடக்கமாக இருக்கிறது.

உலகில் நிலவிவரும் பல்வேறு மூடநம்பிக்கைகளோ உடலை வாட்டி வருத்தி செய்யப்படும் தவங்களோ, சமய உணர்வுள்ள மனதைப் பெற்றுத்தராது.

சம்பிரதாயங்கள், 'உன் உடலை வாட்டி வருத்திக் கொள்ளாமல், அதன் ஆசைகளை அழிக்காமல், உன்னால் ஜோதியை, கடவுளைக் காண முடியாது' என்று கூறுகின்றன. உடலை வருத்தி ஆசைகளை நீங்கள் அடக்கினாலும், உள்முகத்தில் ஆசைத்தீயின் நாக்குகள் கொழுந்துவிட்டு எரிகிறது.

சமய உணர்வைப் பெற, அன்றாட வாழ்க்கையின் முழு அர்த்தத்தையும் புரிந்துகொள்ள வேண்டும். நமக்கிடையே உள்ள உறவைப் புரிந்துகொள்வதுதான், வாழ்க்கையைப் புரிந்துகொள்வதாக உள்ளது. மேலும், நாம் அன்பு கொண்டிருக்க வேண்டும். தன் மனைவிக்கோ அல்லது குறிப்பிட்ட ஒருவருக்கோ அன்பு காட்டுவது அல்ல அன்பு. வேற்றுமை பாராட்டாத தன்மையுடைய அந்தத் தூய அன்பை, அதன் மணத்தை, அதன் அழகை, அந்தத் தீச்சுடரை, நாம் கொண்டிருக்க வேண்டும். அதுதான் சமயஉணர்வுள்ள மனம்.

மந்திர உச்சாடனம், சடங்குகள், ஆராதித்தல், மண்டியிடுதல் என்பதாய் இருக்கும் இன்றைய சமயங்கள், உண்மையில் சமயங்களே அல்ல. சமய உணர்வுள்ள வாழ்க்கை என்றால் முரண்பாடுகள் இல்லாமலும், கருணை, அன்பு, நுண்ணறிவுடன் கூடிய மனப்பாங்குடனும் வாழ்வதேயாகும். கருணையே நுண்ணறிவு. அதுவே சமய உணர்வுள்ள வாழ்க்கை. ஆனால், அது மட்டும் போதாது. மேலும் ஆழமான விஷயங்களைப் பற்றி நாம் அறிந்திட வேண்டும்.

தியானம் என்றால் என்ன என்பதைப் பற்றி ஆழமாகச் சிந்திக்க வேண்டும். குறிப்பிட்ட நிலையில் அமர்ந்து கொண்டு, கண்களை மூடிக்கொண்டு, மந்திரங்களை

திரும்பத்திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பதா தியானம்? 'மந்திரம்' என்ற சமஸ்கிருதச் சொல்லின் பொருள் என்னவென்றால், ஏதுமாக ஆகாதிருத்தல் (not-becoming) பற்றி தியானம் செய்தல், ஏதுமாக ஆகாதிருத்தலைப் பற்றி சிந்தித்தல் என்பதாகும்.

ஏதுமாகாமல் நீங்கள் இருக்கும்போது, நீங்கள் யார்? மேலும், மந்திரம் என்ற சொல், தன்னை மையமாகக் கொண்டு செய்யப்படும் செயல்களை தள்ளிவைத்தல் என்றும் பொருள்படுகிறது - இதுவே அச்சொல்லின் உண்மையான அர்த்தம். மந்திரத்தின் பொருளை எப்படிச் சிதைத்துவிட்டீர்கள் என்று பார்த்தீர்களா? ஏதோ சில வார்த்தைகளை திரும்பத் திரும்பச் சொல்கிறீர்கள், அதை மந்திரம் என்றழைக்கிறீர்கள். ஆக, சமய உணர்வுள்ள வாழ்க்கை என்பது உள்முகமாக ஏதுமாக ஆகாதிருத்தல்.

இவ்விஷயத்தை மேலும் ஆழமாகச் சிந்திக்க வேண்டும். அகராதியின்படி, தியானம் என்றால் ஒன்றைப் பற்றி சிந்தித்தல், எண்ணிப் பார்த்தல் என்பதாகும். இத்துடன் சேர்த்து 'அளவைகளை (measurement) முடிவிற்குக் கொண்டுவருதல்' என்பதையும் நாம் சேர்த்துக் கொள்ளலாம். இப்போது அவ்விஷயத்தைப் பற்றி ஆராயலாம்.

எவ்வாறு உண்மையில் வாழ்வது, எவ்வாறு சரியாக, ஒழுங்காக வாழ்வது என்பதைக் கண்டுணர்வதற்காக நீங்கள் உங்கள் வாழ்க்கையையே அர்ப்பணிக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். உங்களிடம் கருணையும், அன்பும் இல்லையென்றால் ஒழுங்கான வாழ்க்கை அமையாது. வாழ்வாங்கு வாழ வழிதேடுங்கள், அதற்கு உங்கள் வாழ்க்கையை அர்ப்பணியுங்கள். மாறாக,

ஏதோவொரு இனக்கும்பலில் சேர்ந்துகொண்டு வாழ்க்கையை வீணடிக்காதீர்கள்.

ஆக, தியானம் என்றால் என்ன? இங்கு, நம் கேள்வி, எப்படித் தியானிப்பது என்பதல்ல. 'எப்படி' என்ற சொல்லை, நீங்கள் உபயோகிக்கும்போது, அதன் உட்பொருளாக, 'தயவுசெய்து, தியானம் செய்ய ஒரு வழிமுறையைக் காட்டுங்கள், என்ன செய்யவேண்டும் என்று சொல்லிக்கொடுங்கள், வழிகாட்டுங்கள்' என்ற விண்ணப்பம் உள்ளது. 'எப்படி' என்ற சொல்லை மனதிலிருந்து அகற்றிவிடுங்கள். இப்போது 'தியானம் என்றால் என்ன?' என்பதை நோக்குங்கள்.

வழிமுறைகள், வகைகள், பயிற்சிகள், ஒருவிதமான ஒழுங்குக் கட்டுப்பாடுகள், சரியாக, ஆழமாக மூச்சை இழுத்துவிடும் மூச்சுப் பயிற்சிகள் போன்றவைகள் எல்லாம் தியானம் ஆகாது. 'இவை'களையெல்லாம் கடைபிடித்தால், 'அவை' கிடைக்கும் என்று பிறர் சொல்லக் கேட்டு, நீங்கள் இவற்றை பயிற்சி செய்கிறீர்கள், அவ்வளவே. பணத்தைக் கொடுத்து சந்தையில் பொருட்களை வாங்குவதுபோல, குருவால் விற்கப்படும் தியானத்தை வாங்கி, நீங்கள் வெறுமனே பயிற்சி செய்கிறீர்கள். நாம் இப்போது உண்மையில் தியானம் என்றால் என்ன என்பதைப் பார்க்கலாம்.

குறிப்பிட்ட ஒழுங்குமுறையை ஓயாமல் பயிற்சி செய்வது, தியானமாகாது. ஒன்றையே தீவிரமாகப் பயிற்சி செய்து கொண்டிருப்பது, மூளையை சோர்வடையச் செய்து மந்தமாக்குகிறது. அத்தகைய பயிற்சியின் காரணமாக, மூளை, ஜீவனோடும் சுறுசுறுப்பாகவும் இருப்பதில்லை. எனவே, தியானத்தைப் பற்றி தீவிர அக்கறை கொண்டிருந்தீர்களேயானால், முதலில் நீங்கள்

தெரிந்துகொள்ள வேண்டியது, தியானம் செய்வதற்கு வழிமுறைகள் மற்றும் பல்வேறு வகைமுறைகள் என்று எதுவும் கிடையாது என்பதையே.

அரை மணி நேரத்திற்குப் பயிற்சிகள் செய்வதோ அல்லது அமைதியாக அமர்ந்திருப்பதோ தியானம் அல்ல. அவ்வாறு செய்வது உங்களுக்கு ஓய்வையும், அமைதியையும் தரலாம்; திருப்தியாக உணவருந்திவிட்டு படுக்கையில் படுக்கும் சுகத்தைப் போன்றது அந்த அமைதி. ஒரு வழிமுறையை நாள்தோறும் பயிற்சி செய்வது, சலிப்பையும், சோர்வையும் தரும் நடைமுறையாகி விடுகிறது என்பதைக் காணும் நீங்கள், பயிற்சி மற்றும் அதன் தொடர்பான அனைத்தையும் நுண்ணறிவோடு மறுதலிக்க முடியுமா? ஏற்கனவே உங்கள் மனம் தளைபட்டதாய் இருக்கிறது, இயந்திரத்தனமாய் இயங்கிக் கொண்டிருக்கிறது. இத்தகைய பயிற்சிகளால் நீங்கள் அதை மேலும் இயந்திரத்தனமாகவும், மேலும் தளைபட்டதாகவும் மயங்கிக் கிடப்பதாகவும் ஆக்கி விடுகிறீர்கள்.

உண்மையில், தியானம், சுதந்திரத்தோடு இருக்க வேண்டும். தியானிக்க, பயம், பொறாமை, பேராசை, துக்கம், பிள்ளைப்பிராயத்திலிருந்து அனுபவிக்க நேர்ந்த மனக்காயங்கள் ஆகியவற்றிலிருந்து ஒருவர் விடுதலை பெற்றிருக்க வேண்டும்.

விழிப்புணர்வோடு இருத்தல் என்றால் என்ன என்பதை நாம் முதலில் ஆராயலாம். இதன் தொடர்பான மூன்று விஷயங்களைப் பற்றி நாம் தெரிந்துகொள்ள வேண்டும் - ஒன்று, விழிப்புடன் இருத்தல் என்றால் என்ன என்பது பற்றியும், இரண்டாவதாக, ஒருமுகப்

படுத்துதல் என்றால் என்ன என்பது பற்றியும், மூன்றாவதாக, கவனம் என்றால் என்ன என்பது பற்றியும் நாம் தெரிந்துகொள்ள வேண்டும். தியானத்தில் இவை மூன்றுமே இடம்பெறுகிறது.

நீங்கள் வாழும் சுற்றுச்சூழலைப் பற்றிய உணர்வு, நீங்கள் பேசும்முறை, நடக்கும் விதம், சாப்பிடும் விதம், மற்றவருடன் பேசுகின்ற முறை, மற்றவர்களை நடத்தும் விதம் போன்ற அனைத்து விஷயங்களையும் பற்றிய விழிப்புணர்வோடு இருத்தல் அவசியம். இப்போது நீங்கள் அங்கு அமர்ந்துகொண்டு இருக்கும்போது, உங்கள் பக்கத்தில் அமர்ந்திருப்பவர் அணிந்திருக்கும் சட்டையின் நிறம், அவரது தோற்றம் போன்றவற்றை எவ்வித விமர்சனமும் செய்யாமல் பார்க்க வேண்டும். இவ்வாறு விழிப்புடனிருப்பதால், உங்களுக்கு மிகுந்த மென்னய வுணர்வும், மற்றவர் உணர்வை அறியும் பாங்கும் வரப்பெறுகிறது. இதன் விளைவாய், நீங்கள், உங்களைச் சுற்றி நடப்பவைகளைப் பற்றிய விழிப்புணர்வு கொண்டவராகவும், உணர்வு நுட்பம் உடையவராகவும் உள்ளார்ந்த மென்னயம் உடையவராகவும் ஆகிறீர்கள்.

தெரிவு ஏதும் செய்யாமல் விழிப்புடனிருத்தல்தான் விழிப்புணர்வோடு இருத்தலாகும். நீங்கள் அமர்ந்திருக்கும் இடத்திலிருந்து, சுற்றி இருப்பவைகள் அனைத்தையும், பேச்சாளரையும் சேர்த்து விமர்சனம் ஏதுமின்றி, தெரிவு ஏதும் செய்யாமல், எண்ணங்கள் ஏதுமின்றி வெறுமனே பாருங்கள், விழிப்புடனிருங்கள்.

அடுத்ததாகப் பார்க்கவேண்டியது, கவனக் குவிப்பு, ஒருமுகப்படுதல் என்பதைப் பற்றி. ஒருமுகப்படுத்தலின் போது, என்ன நிகழ்கிறது? ஒரு புத்தகத்தைப் படிப்பதில்

கவனத்தை ஒருமுகப்படுத்தினீர்கள் என்றால், மற்ற எண்ணங்களை மூடி வைத்துவிட்டு, புத்தகத்திலேயே கவனத்தைக் குவித்து ஒருமுகப்படுத்துகிறீர்கள். அதாவது குறிப்பிட்ட ஒரு மையத்தில் கவனத்தை ஒருமுகப் படுத்துகிறீர்கள், மற்ற எண்ணங்கள் குறுக்கிடுவதற்கு நீங்கள் அனுமதிப்பதில்லை.

நீங்கள் ஒருமுகப்படுத்த முயற்சி செய்யும்போது, மற்ற எண்ணங்கள் உள்ளே நுழைவதும் வெளியே போவதுமாக, இங்குமங்குமாக அலைவதாக, தள்ளுவதாக, நிலைமை ஏற்படுகிறது. இதன் காரணமாகவே, நீங்கள் மற்ற எண்ணங்களின் குறுக்கீட்டைத் தவிர்க்க, ஒரு தடுப்புச் சுவரை எழுப்புகிறீர்கள். எதில் ஒருமுகப்பட எண்ணுகிறீர்களோ அந்த எண்ணத்தைத் தவிர, அல்லது அந்தச் சின்னத்தைத் தவிர, அல்லது, அந்தக் கருத்தைத் தவிர, மற்றவற்றிற்கு தடை விதிக்கிறீர்கள். பொதுவாக, இதுதான் கவனக்குவிப்பு என்றழைக்கப்படுகிறது.

அடுத்ததாக பார்க்கவேண்டியது, கவனம் என்பதைப் பற்றி. உங்கள் சக்தி முழுவதையும் கொடுத்து எதையாவது கேட்டிருக்கிறீர்களா, எதையாவது செய்திருக்கிறீர்களா? ஒரு போர்வீரர், சக்தி முழுவதையும் கொடுத்து செயல்பட தீவிரப் பயிற்சி செய்கிறார். அவ்வாறில்லாமல், விழிப்புணர்வு, ஒருமுகப்படுத்துதல் மற்றும் கவனம் ஆகியவற்றின் இயல்பினை தெரிந்து கொண்டதால், முழு சக்தியையும் அளித்து செயல்பட உங்களால் முடியுமா? இவ்வுரையை கேட்பதில் அத்தகைய முழு சக்தியுடன் கூடிய கவனம் உங்களுக்கு இருப்பின், 'நான்' என்ற மையம் அதிலிருப்பதில்லை. இங்குப் பேசப்பட்டதை, அத்தகையதொரு ஈடுபாட் டுடன், உங்கள் முழு சக்தியையும் அளித்து,

உயிர்த்துடிப்புடன் கேட்கிறீர்களா? அவ்வாறு கேட்டிருப்பின், 'நான்' என்ற மையம் கேட்பதாக அந்தச் செயல் இல்லை என்பதை நீங்களே கண்டுணர்வீர்கள்.

முழு சக்தியுடன் கூடிய கவனத்துடன் ஒரு செயலை செய்யும்போது, ஆழமாக அதில் ஈடுபடும்போது நம் மனம் தானாகவே, இயல்பாக அமைதிபெறுகிறது. அப்போது எண்ணங்களின் தொணதொணப்புகளும் இல்லை, அவற்றை அடக்க மேற்கொள்ளப்படும் கட்டுப் பாடுகளும் இல்லை. எண்ணங்களை கட்டுப்படுத்தும் அந்தக் கட்டுப்படுத்துபவர் யார்? மற்றொரு எண்ணம்தான் 'எண்ணத்தைக் கட்டுப்படுத்து' என்று சொல்கிறது. சரிதானே? எண்ணத்தின் ஒரு பகுதி, 'நான் ஒரு சாட்சியாக இருக்கிறேன். என் எண்ணத்தை கட்டுப்படுத்தப் போகிறேன்' என்று சொல்கிறது. ஆனால், கட்டுப்படுத்துபவரே, கட்டுப்பட்டதும் என்றாகிறது. எனவே, தியானத்தில், கட்டுப்படுத்துபவர் என்று யாருமில்லை. விருப்பத்திலிருந்து பிறந்த உறுதிப்பாட்டின் செயல்பாடும் தியானத்தில் இல்லை.

இயல்பான அமைதியில் தியானம் லயிக்கும்போது, மூளை, பரம அமைதியுடனும், மௌனத்துடனும் இருக்கிறது. அத்தகைய மூளை, தனது மற்ற செயல்பாடுகளை அதன் பாங்கில் செய்வதோடல்லாமல், அமைதியையும், மௌனத்தையும் தனக்குள் கொண்டதாகவும் இருக்கிறது. இந்த மோனம், எண்ணத்தால் விளைந்ததல்ல. அது நுண்ணறிவின் மௌனம், பேரறிவின் அமைதி. அந்த மோனத்தில், பெயரற்றது எதுவோ, அது வருகிறது, பெயரற்றது இருப்புகொள்கிறது. அது புனிதமானது, சாஸ்வதமானது, எண்ணத்தாலும், முயற்சியாலும் தீண்டப்படாதது. அது காருண்யத்தின் பாதையில்

இருக்கும் நுண்ணறிவின் பாங்கு. புனிதமான அது நிரந்தரமானது. அதுதான் தியானம். இவ்விதம் அமையும் வாழ்வே, சமய உணர்வுள்ள வாழ்வு. அதில் பேரழகு மிளிர்கிறது.

*கல்கத்தா, 28.11.1982*

■■

## மதராஸ் உரையாடல்கள்

1. 25.12.1982
2. 26.12.1982
3. 01.01.1983
4. 02.01.1983

# 9

# என்ணத்தின் இயல்பும் அதன் உட்பொதிவும்

நீங்கள் எல்லோரும் எதன் பொருட்டு இங்கு வந்திருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியவில்லை. இங்கு வருவதற்கான நோக்கம் என்ன, குறிக்கோள் என்ன, இங்கிருந்து வீடு திரும்பும்போது என்ன சேகரித்துக் கொண்டு போகப்போகிறீர்கள் போன்ற கேள்வி களெல்லாம், கேட்கப்பட வேண்டிய முக்கியமான கேள்விகளாகும். நாம் இங்கு ஒன்றுகூடி பல முக்கியமான விஷயங்களைப் பற்றி கலந்துரையாடப் போகிறோம். நம் அன்றாட வாழ்க்கைக்குத் தொடர்புடைய விஷயங்களைப் பற்றியும் வருந்தத்தக்க நிலையிலிருக்கும் இந்த அதிர்ஷ்டம் கெட்ட பூமியில் நிகழும் செயல்களைக் குறித்தும் நாம் விவாதிக்க இருக்கிறோம்.

'சொற்பொழிவு' என்று பொதுவாக அழைக்கப்படும் ஒன்றாக இந்நிகழ்ச்சி இருக்கப்போவதில்லை. பூமியின் மீதும், மக்களின் மீதும் அக்கறைகொண்ட இரு நண்பர்கள் உரையாடுவதைப் போல் நாமும் கலந்துரையாடப்போகிறோம். பூமியில் என்ன நடந்து கொண்டிருக்கிறது, சுற்றுச்சூழல் எப்படி பாதிக்கப்பட் டிருக்கிறது என்பதைப் பற்றி மட்டுமல்லாமல்,

மனிதர்களிடமும் எவ்விதமான தாக்கங்கள் ஏற்பட்டுள்ளன என்பது பற்றியும் பேசப்போகிறோம். பத்து லட்சம் ஆண்டுகளுக்கும் மேலாக மனிதன் இப்பூமியில் வாழ்ந்து வருகிறான். நீண்ட கால பரிணாம வளர்ச்சிக்குப் பின்னும், போர்கள் பலவற்றில் துன்பப்பட்டு அவற்றைக் கடந்து வந்த பின்னும், ஒரு சமயத்திலிருந்து இன்னொன்று என்று பல சமயங்களைப் பின்பற்றியபின்னும் ஒரு அரசாங்கத்திலிருந்து இன்னொரு அரசாங்கம் என்று மாறிமாறி இயங்கிய பின்னும், ஏன் இந்த நிலைக்குத் தாழ்ச்சியுற்றான், நெஞ்சுரம் இன்றி, எதிர்கொள்ளும் திறனின்றி, நேர்மைத் திறமற்று ஏன் போனான், அவன் மூளைக்கு என்ன நேர்ந்தது, அவன் நடத்தையின் நிலை என்ன என்பனவற்றைப் பற்றியெல்லாம் நாம் கலந்துரையாடப் போகிறோம்.

புதிய கருத்துகள், தீர்மானங்கள், கோட்பாடுகள், விழுமியங்கள் என்றெல்லாம் இவ்வுரையாடலில் இருக்கப்போவதில்லை என்பதை மிகவும் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன். பேச்சாளரும், நீங்களுமாக, வெளியுலக நிகழ்வுகளையும், நம் அன்றாட வாழ்க்கை முறையையும் மற்றும் நம் உள்முக வாழ்க்கையையும் பற்றி, கவனத்துடனும், தயக்கத்துடனும், நுணுக்கமாகவும் பரிசீலிக்கப் போகிறோம்.

உரையாடலின்போது, நீங்கள் உங்கள் சொந்தக் கருத்துகளைக் கொண்டிருந்தால் - அக்கருத்துகளின் மீது நீங்கள் தீவிரமாக, பிடிவாதமாக இருக்கலாம், அல்லது, லேசான பற்று கொண்டிருக்கலாம் - அல்லது, பேசப்போகும் விஷயத்தைப் பற்றிய முடிவான தீர்மானத்திற்கு நீங்கள் வந்துவிட்டிருந்தால், அதுவே ஒரு தடையாக செயல்பட்டு, நாம் ஒருவருக்கொருவர் நம்

புரிதலைப் பரிமாறிக்கொள்ள முடியாமல், உரையாடலைத் தொடர முடியாமல் செய்துவிடும். இந்தக் கலந்துரையாடல், சமயம் சார்ந்ததாகவோ, கம்யூனிஸ்ட், சோஷியலிஸ்ட், இடதுசாரி கொள்கை / வலதுசாரி கொள்கை என்பன போன்ற கொள்கைகள் சார்ந்த தாகவோ அல்லது தேசங்கள் சார்ந்ததாகவோ இருக்கப் போவதில்லை என்ற விஷயத்தை நாம் கலந்துரை யாடலின் ஆரம்பத்திலேயே மிகத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

ஆராய்ச்சி எதையும் மேற்கொள்ள, ஒருவர் திறந்த மனதுடன் இருக்க வேண்டும். மாறாக, கோட்பாடுகளை கொண்டிருக்கும் மனமாகவோ, சம்பிரதாயங்களின் பிடியிலிருக்கும் மனமாகவோ, ஒரு பிரிவையோ, மதத்தையோ, ஸ்தாபனத்தையோ சார்ந்திருக்கும் மனமாகவோ அவர் மனம் இருந்தால், அவரால் ஆய்வில் முன்னேற முடியாது.

உலகில் போர் மூளும் அபாயம் நிலவுகிறது - அணுஆயுதப் போரோ அல்லது படைகளின் போரோ, போர் நடக்கும் அபாயம் உள்ளது. சமயங்கள் அனைத்துமே வீழ்ச்சி கண்டுள்ளன. நேர்மையான செயல்பாடுகள் நடைபெறவில்லை. நம்மில் பெரும்பாலோர், மேலோட்டமாக, வாழ்க்கையை ஏதோ அறிவுபூர்வமாக மட்டுமே புரிந்துகொண்டு வாழ்கிறோம். இப்பூமியில் நிகழ்ந்துகொண்டிருப்பவைகளைப் பற்றி நாம் ஒருபோதும் விசாரணை செய்வதில்லை, அதைக் குறித்து ஐயப்படுவதில்லை, வினா எழுப்புவதில்லை. ஒன்றைப் பரீட்சிக்க, துருவித்துருவிப் பார்க்க, ஊன்றிக் கவனிக்க, மிகத் தெளிவான மனமும் சம்பிரதாயங்களால் தளைபடாத மூளையும் தேவைப்படுகிறது. மூளை,

ஏற்கனவே தளைபட்ட ஒன்றாக இருக்கிறது; கோடிக்கணக்கான ஆண்டுகளாக பரிணாம வளர்ச்சி அடைந்துவரும் ஒன்றாக இருக்கிறது. நம் மூளையின் செயல்பாடு மற்றும் நம் உணர்ச்சி பிரதிபலிப்புகள் பற்றிய விழிப்புணர்வு நமக்கு இல்லாவிட்டால், உலக நடவடிக்கைகளை ஆராய்வது என்பது இயலாத காரியம்.

இதமான குளிரில், அழகான மரத்தடியில் அமர்ந்துகொண்டு அறிமுகமான இரு நண்பர்கள், உலக விவகாரங்களைப் பேசுவதுபோல, நாமும் பேசலாம். இந்த மாலைப்பொழுதிற்கு மட்டுமாவது, சொந்த கருத்துகளையும், கோட்பாடுகளையும் ஒருவர் மேல் ஒருவர் திணிக்காமல், நண்பர்களாக உரையாடலாம். உலகம் என்றால் என்ன? அங்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது? உலகத்தை யார் படைத்தது? மனிதன் ஏன் கவனமற்றவனாகவும், அலட்சியம் செய்பவனாகவும் கொஞ்சமும் அன்பில்லாதவனாகவும், வன்முறையாளனாக வும், இம்சிப்பவனாகவும் இருக்கிறான்?

இதற்கெல்லாம் முந்தைய பரம்பரையிலிருந்து சுவீகரித்த குணங்கள்தான் காரணம் என்று நீங்கள் குற்றம் சாட்டலாம். சுற்றுச்சூழல், பண்பாடு மற்றும் சமூகத்தையும் காரணம் காட்டி நிந்திக்கலாம். ஆனால், சமூகத்தை யார் படைத்தது? கடந்த தலைமுறையினரும், இன்றைய தலைமுறையினரும், நாம் ஒவ்வொருவரும் சேர்ந்து படைத்ததுதான் இச்சமூகம். நம் ஒவ்வொருவரின் பங்களிப்பும் இதில் உண்டு. நாம் படைத்ததுதான் இந்த உலக சமுதாயம் என்ற உண்மையிலிருந்து தப்பித்துச் செல்ல முடியாது. உலகில் நிலவும் குழப்பம், சீர்கேடு, ஒழுங்கீனம், அராஜகம் ஆகியவற்றிற்கு நாம் ஒவ்வொருவரும் பங்களிக்கிறோம், நாம் ஒவ்வொருவரும் பொறுப்பாவோம்.

எண்ணம், உலகினை தேசங்களாகப் பிரித்துவிட்டது. தேசியம், போருக்கான காரணங்களில் ஒன்றாக இருக்கிறது. பாதுகாப்பிற்கான அதன் தேடலில், எண்ணம், தேசியத்தை வகுத்தது. பாதுகாப்பு கிடைக்கும் என்ற நோக்கில், எண்ணமானது, பிரிட்டிஷ், பிரெஞ்ச், இந்தியன், முஸ்லீம், பாகிஸ்தானி, ரஷ்யன், இத்யாதி, இத்யாதி என்று பிரித்துவிட்டது. இப்பிரிவினைகள் மூலம், யுத்தங்களையும் யுத்தத்திற்கான ஏற்பாடுகளையும், எண்ணம் உருவாக்குகிறது. மனிதனே, மனிதனைக் கொல்வதற்கான நிலையை உருவாக்கியது எண்ணம். எண்ணமே, உலகம் இன்றிருக்கும் நிலைமைக்குப் பொறுப்பு.

பாதுகாப்போடும் ஆபத்தில்லாமல் பத்திரமாகவும் இருப்பதற்கான வழியை தேடும் எண்ணமானது, முதலில் குடும்பத்திலிருந்து ஆரம்பித்து, அடுத்து, சுற்றத்தார், அருகில் வசிப்பவர்கள், சுற்றியுள்ள சமூகம் என்று விரிவடைய செய்து, பின்னர் தேசம், தேசத்தவர் என்று மேலும் விரிவடைந்து பாதுகாப்பைத் தேடுகிறது. சிறிய கூட்டத்தில் துவங்கி, தேசியம் வரை எண்ணத்தின் எல்லை விரிவாகிறது. மக்களை, சீனத்தவர், ரஷ்யர், அமெரிக்கர், ஆங்கிலேயர் என்றெல்லாம் பிரிக்கும் விநோத முறையை உலகின் அனைத்து அரசாங்கங்களும் ஆதரிக்கின்றன. ஹிந்து, முஸ்லீம், கிருத்துவம், பௌத்தம் என்பதுபோல், மதங்கள் பிரிந்ததற்கும் எண்ணமே பொறுப்பாகும்.

பிரமிக்க வைக்கும் தேவாலயங்களையும், மிகப் பெரிய மசூதிகளையும், அழகான கோயில்களையும் வடிவமைத்த பெருமை எண்ணத்தைச் சேரும். சடங்குகள், கோட்பாடுகள், விழாக்கள் போன்ற

பலவற்றையும் தேவாலயங்களிலும், கோயில்களிலும், மசூதிகளிலும் ஏற்படுத்தியதும் எண்ணம்தான். பிரிவினைகளைத் தோற்றுவித்த எண்ணம், பிரிவினையால் தோன்றும் பிரச்சினைகளுக்கும் பொறுப்பாகிறது. யூதர்களுக்கும், அரேபியர்களுக்கும் இடையே பிரச்சினை, ஒரு கூட்டத்திற்கும், அதற்கு எதிரான மற்றொரு கூட்டத்திற்கும் இடையே மோதல் என்று பிரிவினையால் உண்டாகும் பிரச்சினைகளுக்கு, எண்ணமே காரணம்.

தொழில்நுட்பத் துறையில் ஏற்பட்டுள்ள அசாதாரண முன்னேற்றத்திற்கும் எண்ணம்தான் பொறுப்பாகும். மரபணுக்களை மாற்றுவது போன்ற விபரீத முயற்சிகள் செய்வது, பேரழிவைக் கொண்டுவரும் போர்த் தளவாடங்களை உருவாக்குவது என்பதுபோல கணக்கிலடங்கா பயங்கர ஆராய்ச்சிகள் நடந்து கொண்டிருப்பதைப் பற்றி நம்மில் பலருக்குத் தெரியாது. உலக அமைதிக்காக செயல்படுவதாக சொல்லிக்கொண்டு, பல்லாயிரக்கணக்கான மக்களை படுகொலை செய்வதற்கு காரணமாய் இருப்பது எண்ணம்தான். நாட்டின் பெயரால், கடவுளின் பெயரால் நடக்கும் சண்டை களுக்கும் கொலைகளுக்கும் எண்ணம்தான் பொறுப்பு. போராட்டங்கள் பெரிய அளவில் நடந்துகொண்டிருக் கிறது. அதற்கெல்லாம் எண்ணம்தான் காரணம்.

எண்ணுதல் என்றால் என்ன, எண்ணத்தின் இயல்பு யாது என்று இப்போது நாம் ஆராயலாம். எண்ணம் மற்றும் எண்ணுதலின் செயல்பாடுகளையும், அவற்றின் விளைவுகளையும் நாம் முதலில் பரிசீலிக்கலாம். சுகாதாரம், தொலைதொடர்பு வசதிகள், போக்குவரத்து மற்றும் பல்வேறு துறைகளில், எண்ணம், மிகப்பெரிய நன்மைகளை பெற்றுத் தந்திருக்கிறது. மூளைக்கு

அபரிமிதமான ஆற்றல் இருக்கிறது. மூளையின் ஆற்றலைக் கொண்டு, தொழில்நுட்பத் துறையில், எண்ணம், பெரும் சாதனைகள் புரிந்துள்ளது. அச்சாதனைகள், சமூகப் பிரச்சினைகளையும், சுற்றுச்சூழல் பிரச்சினைகளையும் ஏற்படுத்தியுள்ளன என்பது அறிந்த விஷயமே.

நம் அன்றாட வாழ்க்கையிலும், நம் உறவுமுறை தொடர்புகளில், எண்ணம் குறுக்கிட்டு பெருங் குழப்பங்களை ஏற்படுத்துகிறது. அதனால்தான், உலகின் துன்பங்களுக்கெல்லாம் எண்ணம்தான் காரணம் என்று சொல்கிறோம். பேச்சாளர் கூறுவதை ஏற்கவோ அல்லது மறுக்கவோ வேண்டாம். இவ்விஷயங்களை அவர் உங்கள் முன் வைப்பதின் நோக்கம் நீங்கள் அவற்றை பரிசீலிக்க வேண்டும், கருத்தூன்றி நோக்க வேண்டும், ஐயுற வேண்டும், கேள்வி எழுப்ப வேண்டும் என்பதற்காகவே.

எண்ணத்தின் தோற்றுவாய் எது, எண்ணம் ஏன் இந்த அளவிற்கு உலகில் அழிவை உண்டாக்கியது. அன்பை என்றாவது தன்னுடன் இணைந்திருக்க செய்ய எண்ணத்தால் முடியுமா, அல்லது, அன்பு என்பது எண்ணத்தின் செயல்பாடுகளிலிருந்து முற்றிலும் வேறுபட்ட ஒன்றா என்பன போன்ற விஷயங்களை நாம் மிகவும் கவனத்தோடு ஆராய வேண்டும். அதிகார மனப்போக்குடனோ அல்லது மதம், இனம், குழுமம் போன்றவற்றைச் சார்ந்தவராகவோ இல்லாமல் இருப்பது ஆராய்ச்சி செய்வதற்கு மிகவும் அவசியம்.

முற்றிலுமாக தன்னை கட்டுப்பாடுகளிலிருந்து விடுவித்துக் கொண்ட சுதந்திரமான மனதினால்தான் எதையும் தீர விசாரிக்க முடியும். அத்தகைய மனதால்தான், தற்போதைய குழப்பங்களிலிருந்தும்,

ஒழுங்கீனத்திலிருந்தும் தாண்டி அப்பால் சென்று விசாரணை செய்ய இயலும். தயவு செய்து கவனமாகக் கேளுங்கள். கவனமாகக் கேட்பது, சொல்லப்படுவதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்காக அல்ல - நீங்களே கண்டறிய வேண்டும் என்பதற்காகவே, கவனமாகக் கேட்கச் சொல்கிறேன்.

நமக்கு நாமே குருவாகவும், சீடனாகவும் இருக்க வேண்டும். Disciple *(சீடன்)* என்ற ஆங்கில வார்த்தைக்கு 'One who learns' *(கற்றுக்கொள்பவன்)* என்று பொருள். சீடனாக இருக்கும் அதே சமயம், நாம் நமக்கு குருவாகவும் இருக்க வேண்டும். கற்றுக்கொள்ளும் அந்தச் செயல்பாடே, கற்பிக்கும் பொறுப்பையும் நமக்கு அளித்துவிடுகிறது. எனவே, நாம் ஒன்றுசேர்ந்து கற்றுக்கொள்ளப் போகிறோம்.

நம் பாரம்பரியம், நம் சொந்தக் கருத்துகள், தீர்மானங்கள் ஆகியவை கற்பதற்குத் தடையாக இருப்பதால், கெட்டியாக அவற்றைப் பிடித்து கொண்டிருக்காமல் அவற்றை நாம் தள்ளி வைக்க வேண்டும். நீங்கள் கற்றுக்கொள்ளப் போவது, பேச்சாளரிடமிருந்து அல்ல. காலங்காலமாய் சம்பிரதாயங் களால் தளைபட்டுப்போன மூளையின் இயல்பையும், எண்ணத்தின் இயல்பையும் கவனமாக பார்ப்பதின் மூலம், கற்றுக்கொள்ளப் போகிறோம்.

மூளையானது, பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக பரிணாம வளர்ச்சி கண்டுவந்துள்ளது. மகிழ்ச்சிகரமான அனுபவங்களும் அதற்கு உண்டு, வேதனை தந்த அனுபவங்களும் அதற்கு உண்டு. பல்வேறுபட்ட நிகழ்வுகளையும், விபத்துகளையும் அது கண்டிருக்கிறது.

இருப்பினும், அது ஒரு வகையில் வரையறைக் குட்பட்டிருக்கிறது. தொழில்நுட்பத் துறையில் அதற்கு வரையறை இல்லை. அத்துறையில் அது அதிவேகமாக முன்னேறுகிறது.

ஒரு குறிப்பிட்ட திசையில், தொழில்நுட்பத் துறையில், மூளையின் ஆற்றல் எல்லையற்றது என்பது தெள்ளத்தெளிவாகத் தெரிகிறது. நிலவில் மனிதன் கால்பதித்தது, மூளையின் சாதனையினால்தான். மனிதனைக் கொல்ல பயங்கர ஆயுதங்களை கண்டு பிடித்ததும் அதே மூளைதான். சுகமாக வாழ்வதற்கான வசதிகளையும், சுகாதாரமாக வாழ்வதற்கான பொருட்களையும், பிறருடன் தொடர்பு கொள்ள ஏராளமான வழிகளையும் மனிதனுக்குத் தந்தது மூளை. ஆனால், தொழில்நுட்பத் துறையைத் தவிர, வேறு வழியில் போகத் தெரியாத மூளை, வரையறைக்குட் பட்டதாக உள்ளது. அதாவது, இன்றைய நிலையில், மூளைக்கு, உள்முகப் பயணம் மேற்கொள்வது இயலாத காரியமாய் இருக்கிறது.

பிரமிக்கத்தக்க ஆற்றலுடனும், ஊக்கத்துடனும், தொழில்நுட்பத் துறை என்ற திசையில் நம் மூளையால் இயங்க முடிகிறது என்றால், வேறு திசையிலும் அவ்வாறே இயங்க அதனால் முடியும். கேளிக்கைகள் மற்றும் மனமகிழ் பொழுதுபோக்குகள் என்ற திசையை குறிப்பிடவில்லை. உளவியல் திசையிலும், ஆற்றலுடனும், ஊக்கத்துடனும் செயல்பட நம் மூளையால் முடியும். உள்முகப் பயணம் செய்து, நம் உள்ளத்தினை, உணர்ச்சிகளை, எண்ணப்பாங்கினை, திறம்பட நம் மூளையால் புரிந்துகொள்ள முடியும். தொழில்நுட்பத் துறையோடு நின்றுவிடாமல், மனோரீதியிலும்

ஆற்றலுடனும், ஊக்கத்துடனும் செயல்படும்போது, நம் மூளைக்கு எல்லையில்லா சக்தி வந்து சேர்கிறது.

தொழில்நுட்ப அறிவை வளர்த்துக்கொள்ள, ஆராய்ச்சி செய்கிறோம், எதனால் இத்தகைய விளைவுகள் ஏற்படுகின்றன என்று கேள்விகள் எழுப்பி விடை காண முற்படுகிறோம், கண்டுபிடிக்கிறோம். ஆனால், 'நாம் யார்?' என்ற கேள்விக்கு விடை காண, அறிவியல் ஆராய்ச்சியில் மேற்கொண்ட விசாரணை, ஐயுறுதல், வினா எழுப்புதல், நுணுக்கமாக கவனித்தல் போன்ற நடவடிக்கைகளை நாம் மேற்கொள்வதில்லை, மேலோட்டமாக சிந்திக்கிறோம்.

பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக இப்புவியில் வாழ்ந்து கொண்டிருப்பினும், மனிதகுலம் ஏன் உளவியல்ரீதியில் உயர்வு பெறவில்லை என்பதைப் பற்றி நாம் ஆய்வு செய்யலாம். மற்றவர்களுடனான நம் தொடர்பில் சச்சரவுகள் மிகுந்துள்ளன. கலக்கமுற்றும், மகிழ்ச்சியின்றியும், பதற்றத்துடனும், நம்பிக்கையிழந்தும், போலித்தனத்தோடும், நேர்மையற்றும், வஞ்சகத் தன்மையோடும், மிகுந்த சிரமத்திலும் நாம் இருக்கிறோம் - இதுதான் நம் உள்முகம். இந்த உள்முக நிலையை, உளவியல் உலகை, மிகச்சிலரே சீரிய முறையில் ஆழமாக விசாரணை செய்துள்ளனர். நம் பிரச்சினைகளை உளவியலாளர்களோ, உளவியல் மருத்துவர்களோ, நிபுணர்களோ தீர்த்து வைக்கவில்லை.

கணக்கிலடங்கா புத்தகங்களை உளவியல் குறித்து உளவியலாளர்கள் எழுதியுள்ளார்கள். இருப்பினும், அவைகளால் நமக்கு எந்த நன்மையும் ஏற்படவில்லை, நாம் கஷ்டப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறோம். நீங்களாகவே, உங்கள் பிரக்ஞையாகவே இருக்கும்

ஒன்றைப் பற்றி, எவ்வாறு விசாரணை செய்வீர்கள்? பிரக்ஞை மனமும் ஆழ்மனமுமாக, இரண்டுமாக, நீங்கள் இருக்கிறீர்கள். வெளி நடவடிக்கைகளுக்கான ஆணையைப் பிறப்பிக்கும் உள்முக நடவடிக்கையின் மொத்த இயக்கமாக நீங்கள் இருக்கிறீர்கள்.

உங்கள் உள்முக நடவடிக்கைகள் ஒழுங்கற்று இருந்தால், தற்போதைய சமூகத்தைப் போன்ற, ஒழுங்கற்ற, முற்றிலும் சீர்கெட்டுப்போன சமூகத்தை, நீங்கள் உருவாக்குவீர்கள். உள்முக ஒழுங்கு இல்லையென்றால் வெளிப்புற ஒழுங்கை கொண்டுவர முடியாது. ஒழுங்கு என்றால் என்ன என்பதைப் பற்றி நாம் இப்போது பேசப்போவதில்லை. மேற்கொண்டு பேசும்போது, ஒழுங்கைப் பற்றி பார்க்கலாம். வெளிப்புறத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கும் கலவரங்கள், யுத்தங்கள், குழப்பங்கள், வன்முறைகள், குரூரங்கள், பகைமை போன்றவை, நம் உள்முக ஒழுங்கீனம், நமக்குள்ளிருக்கும் முரண்பாடுகள், நம் உறவில் இருக்கும் சீர்கேடுகள், நம் அன்றாட வாழ்க்கையின் சீர்குலைவு, மனிதர்களிடையே நடந்துகொண்டிருக்கும் ஓயாத சண்டைகள் ஆகியவற்றின் விளைவே என்ற உண்மையை நாம் உணர்ந்துகொள்ள வேண்டும்.

துயரம், கலக்கம், போராட்டம், பதற்றம் ஆகிய இவையெல்லாம் என்றாவது முடிவுறுமா? அணுஆயுதப் போர் பற்றிய கேள்வியைவிட இந்தக் கேள்வி மிகவும் முக்கியமானது. நம் பிரக்ஞையின் உட்பொதிவாயிருக்கும் அனைத்தையும் முற்றிலுமாக அடிப்படை மாற்றம் செய்ய இயலுமா? நெருக்கடி, உண்மையில், நம் பிரக்ஞையில் தான் இருக்கிறது, உலகத்தில் இல்லை. தயவுசெய்து இதைப் புரிந்துகொள்ளுங்கள். நெருக்கடி தருவது,

அணுஆயுதப் போர் அல்ல; நடைபெற்றுக் கொண்டிருக்கும் பயங்கர பிரிவினைகளோ, கொடூரங்களோ அல்ல. நெருக்கடி, நம் பிரக்ஞையில் உள்ளது; நம் இருப்பும் நாம் அடைந்த மாற்றமும், நெருக்கடியை உருவாக்கியுள்ளது. இந்த நெருக்கடியை எதிர்கொண்டு, சவாலை வெற்றிகொள்ளும் வரையில், யுத்தங்களையும், அழிவையும் நாம் நீடித்திருக்கவே செய்வோம், வெளிப்புற குழப்பங்கள் தொடர்ந்து கொண்டிருக்கும்.

இந்த விஷயத்தை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா என்று எனக்குத் தெரியாது - உலகில் மிகுந்த கலவரங்களும் பாதுகாப்பிற்கு ஆபத்து என்பது போன்ற அபாயமும் நிச்சயமற்றத் தன்மையும் நிலவும்போது, உதவிக்காக நாம் சம்பிரதாய மரபுகளை நோக்கி ஓடுகிறோம். இஸ்லாமிய சமூதாயம் அதைத்தான் செய்கிறது, அவர்கள் புனித நூலான குரானை துணைக்கு அழைத்துக் கொள்கிறார்கள். கிருத்துவர்கள், பைபிளின் உதவியை நாடுகிறார்கள். அதிர்ஷ்டவசமாக, ஹிந்துக்களுக்கு பலநூறு புனித நூல்கள் இருப்பதால், அவர்களால் புத்தகத்தின் துணையை நாட முடியாது. ஆனால், அவர்கள் சம்பிரதாயங்களின் துணையையும், பாரம்பரிய வழிமுறையையும் நாடி ஓடுகிறார்கள்.

உலகம் மிகவும் அபாயகரமானதாய் இருப்பதால், ஹிந்துக்கள், தாங்கள் வாழும் ஒவ்வொரு மூலை முடுக்குகளிலும் கடவுளர்களின் சிலையை வைத்து, தங்களுக்கான பாதுகாப்பைத் தேடுகிறார்கள். ஏதோ ஒரு குழுமத்தில், ஒரு இனத்தில், அப்பகுதியிலிருக்கும் கடவுளிடம் பக்தி செலுத்தும் கூட்டத்தில், தான் ஒருவராய் இருக்கவேண்டுமென்று அவர்கள் விரும்புகிறார்கள். இந்தியாவில் வழிபடப்படும் கடவுள்கள் பற்றி

ஆய்வு செய்த ஒரு ஐரோப்பியர், இங்கு 3,30,000 கடவுள்கள் இருப்பதாக என்னிடம் கூறினார். ஒரு கடவுள் வைத்திருப்பதைவிட இது எவ்வளவோ மேல்! ஆயிரக்கணக்கான கடவுளர்களுடன் நாம் குஷியாக இருக்கலாமே!

பிரக்ஞையைப் பற்றிய ஆய்வை நாம் எவ்வாறு எடுத்துச்செல்வது? பிரக்ஞையின் உட்பொதிவாகவே நீங்கள் இருக்கிறீர்கள் - இவ்வாறு சொல்வது உறுதி செய்யப்பட்ட வாசகமோ அல்லது தீர்மானமோ அல்ல. அது ஒரு உண்மை. நீங்கள் எப்படிப்பட்டவராக இருக்கிறீர்களோ, அப்படிப்பட்டதே உங்கள் பிரக்ஞையின் உட்பொதிவும். உங்கள் நம்பிக்கைகள், உங்கள் கருத்துகள், உங்கள் அனுபவங்கள், உங்கள் மனத்தோற்றங்கள், உங்கள் மூடநம்பிக்கைகள், உங்கள் கடவுளர்கள், உங்கள் பயங்கள், உங்கள் களிப்பு, தனிமை, சோகம், மரணத்தைப் பற்றிய உங்கள் பயம் மற்றும் துக்கம் என்பதாக இருக்கும் உங்கள் பிரக்ஞையின் உட்பொதிவாகவே நீங்கள் இருக்கிறீர்கள்.

பிரக்ஞையை நீங்கள் உயர்ந்த பிரக்ஞை மற்றும் தாழ்ந்த பிரக்ஞை என்றெல்லாம் பிரிக்கலாம். ஆயினும், அவை அனைத்துமே உங்கள் பிரக்ஞையின் உட்பொதிவே. பத்மாசனத்தில் அமர்ந்துகொண்டு கண்ணை மூடிக்கொண்டு நீங்கள் தியானம் செய்யலாம், ஆனால், அதுவும் உங்கள் பிரக்ஞையை சார்ந்ததே. ஆக, எண்ணத்தால் உருவாக்கப்பட்டதே, உங்கள் கருத்துகளாகவும், உணர்ச்சிகளாகவும் இருக்கும் உங்கள் பிரக்ஞை.

மிகுந்த பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன் - தயவு செய்து இவ்விஷயங்களை பரிசீலியுங்கள், அலட்சியப்

படுத்தாதீர்கள். 'நீங்கள் சொல்வதை ஏற்க மறுக்கிறேன்' என்றோ, 'நீங்கள் சொல்வதை ஏற்றுக்கொள்கிறேன்' என்றோ சொல்ல வேண்டாம். விசாரணை செய்து, உண்மையை கண்டுபிடியுங்கள். உங்களோடு ஊறிப்போன பழைய கருத்துகளோடும், தீர்மானங் களோடும் உங்கள் புனித நூல்கள் கூறியவைகளோடும் கெட்டியாக ஒட்டிக் கொண்டிருக்காதீர்கள்.

எண்ணத்தால் பிரக்ஞையின் உட்பொதிவுகள் உருவாகின்றன என்று கூறினோம். நீங்கள் ஒரு ஹிந்து அல்லது கிருத்துவர், மார்க்ஸிஸ்ட் அல்லது மாவோயிஸ்ட் என்பதுபோல் உங்களை நீங்கள் எண்ணிக்கொள்வது, சிந்திப்பது, உங்கள் பிரக்ஞையில் ஒரு கருத்தாக பதிவாகிறது. வரையறைக்குட்பட்டதாக இருக்கும் எண்ணம், தன் செயல்பாட்டால், பிரக்ஞையிலும் வரையறையை ஏற்படுத்திவிட்டது. பிரக்ஞையை விரிவாக்க முடியும் என்று சிந்திக்கும் எண்ணம், விரிவாக்கம் செய்ய சோதனைகள் செய்கிறது. ஆனாலும், விரிவாக்கம் என்பது எண்ணத்தின் செயல்பாடாக உள்ளது.

உங்கள் பிரக்ஞையின் செயல்பாடு, மூளையின் செயல்பாடாக உள்ளது. மூளை, உணர்வுகளின் பிரதிபலிப்புகளை கொண்டிருக்கிறது. மேலும், அது, சிந்தனையின் மையமாகவும் உள்ளது. பயம், எண்ணத்தின் விளைவா, இல்லையா, மற்றும் காலத்தில் இயங்கும் எண்ணம், பிரக்ஞையின் உட்பொதிவு முழுமைக்கும் பொறுப்பானதாக இல்லையா என்பது போன்ற கேள்விகள் இங்கு எழுகின்றன. விஷயஅறிவின் பலனாய் எண்ணம் இருக்கும் காரணத்தால், எண்ணம், வரையறைக்குட்பட்டது என்று நாம் சொல்கிறோம்.

அனுபவத்தில் கனிந்த கனியாய் எண்ணம் இருக்கிறது. அனுபவத்தால் பெற்ற அறிவு, மனப்பதிவுகளாய் மூளையில் சேமித்து வைக்கப்படுகிறது. சவால்கள் எதிர்படும்போது, மனப்பதிவுகளின் எதிர்வினையாய் எழுவதுதான் எண்ணம்.

மேலும் மேலும் வளர்த்துக்கொள்ளக் கூடிய வாய்ப்பு இருப்பதால் விஷயஅறிவு என்றுமே குறுகியது, முழுமையற்றது. எதைப் பற்றியும் முழுமையான அறிவு என்றில்லை. விஞ்ஞான அறிவும் வரையறைக்குட்பட்டது. உயிரியல், சமூகவியல், தொழில்நுட்பவியல் மற்றும் அநேக கடவுளர்களைக் கொண்டிருக்கும் சமயவியல் என்று எந்தவிதமான விஷயஅறிவை எடுத்துக் கொண்டாலும், அவை அனைத்தும் முழுமையற்றது, குறுகியது. உலகெங்கிலும் காணப்படும் கடவுள்கள் அனைத்தும் எண்ணத்தால் கண்டுபிடிக்கப்பட்டவை. இக்கருத்தினை தவறு என்று நிராகரித்து விடாதீர்கள். தயவுசெய்து ஆராய்ந்து பாருங்கள். பூமியில் உள்ள கடவுள் எல்லாம் மனிதனால் கண்டுபிடிக்கப்பட்டவை. எண்ணம் அவற்றை கண்டுபிடித்தது. தான் கண்டுபிடித்ததை, எண்ணம் வழிபடத் துவங்கியது. நீங்கள் அதை 'மதம்' என்றழைக்கிறீர்கள்.

ஆக, எண்ணம், வரையறைக்குட்பட்டது, குறுகியது. எனவே, எண்ணத்தின் செயல்பாடுகள் அனைத்தும் முழுமையற்றவை, வரையறைக்குட்பட்டவை. இதன் காரணமாய், பிரச்சினைகள் தோன்றுகின்றன. தொழில்நுட்பத் துறையில் மட்டுமின்றி, மனித உறவுகளிலும் பிரச்சினையை எண்ணம் தோற்றுவிக்கிறது. தொடர்புகளில் ஏற்படும் பிரச்சினைகளை புரிந்து கொள்வது மிகவும் அவசியமாகிறது. நமக்கிடையே

ஓயாமல் தொடரும் கருத்து வேறுபாடுகள், நம்பிக்கைகள், அவநம்பிக்கைகள், ஒரு கோட்பாட்டிற்கு எதிரான மற்றொரு கோட்பாடு, ஒரு இலட்சியத்திற்கு போட்டியான இன்னொரு இலட்சியம் என்று மனித உறவுகளில் எதிர்படும் பிரச்சினைகள் ஏராளம் ஏராளம். மனிதர்களிடையே ஓயாமல் நடக்கும் இந்தப் போராட்டத்தை உருவாக்கியது எண்ணம்தான். போராட்டத்தை உருவாக்கிவிட்ட எண்ணம், போராட்டத்திற்குத் தீர்வு காணவும் முயற்சி செய்கிறது. அந்த முயற்சி, மேலும் பல பிரச்சினைகளைக் கொண்டு வருகிறது - உண்மையில் இதுதான் உலகில் இப்பொழுது நடந்துகொண்டிருக்கிறது.

எண்ணம்தான் பிரச்சினைகளுக்குக் காரணம் என்ற உண்மையை, ஒரு கருத்தாகவோ அல்லது ஒரு தீர்மானமாகவோ எடுத்துக்கொள்ளாமல், ஒரு நிதர்சனமாக பார்க்கும்பொழுது, நாம் முற்றிலும் வித்தியாசமான ஒரு கேள்வியை எழுப்புவோம். நம்மிடமிருக்கும் ஒரே கருவியாக எண்ணம் உள்ளது. எண்ணத்தின் இயல்பையும், அதன் உள்ளீட்டையும் தயவுசெய்து புரிந்துகொள்ளுங்கள். புலன்களின் பிரதிவுணர்ச்சிகள், மனதில் தோன்றும் கற்பனைகள், சிற்றின்ப குறியீடுகள், காமரசப் படங்கள், மனச்சோர்வு, எக்களிப்பு, பதற்றம் போன்றவைகளின் தொகுப்பாக எண்ணம் உள்ளது. அவ்வுணர்ச்சிகள் அனைத்துமே வரையறுக்கப்பட்ட எண்ணத்தின் விளைவாக உள்ளது.

எதைப் பற்றியும் முழுமையான விஷயஅறிவு என்று ஏதுமில்லாத நிலையில், விஷயஅறிவிலிருந்து பிறந்த எண்ணமும் வரையறுக்கப்பட்ட ஒன்றாக உள்ளது. இத்தகைய இயல்புடைய எண்ணம் எனும் கருவியால்

மானுடப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணமுடியாமல் போவதால், வேறு எந்தக் கருவியைக் கொண்டு தீர்வுகாண முடியும்? - இந்தக் கேள்வி, மிகமிக முக்கியமான, கேட்கப்பட வேண்டிய கேள்வி. எண்ணம், தேய்ந்துபோன, மழுங்கிப்போய்விட்ட கருவியாகி விட்டது. எண்ணம், சாதுர்யமானதாக இருக்கலாம், அதனால் சில பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முடியலாம். ஆனால், எண்ணம், மனிதனின் மனத்திலும், மற்றவர்களோடு அவன் கொண்டிருக்கும் தொடர்பிலும் எண்ணற்ற பிரச்சினைகளை கொண்டு சேர்க்கிறது.

நம் அன்றாட வாழ்க்கையில், நம் உறவுகளில் ஏற்படும் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண நாம் உபயோகித்த எண்ணம் எனும் கருவி, மழுங்கிப் போனதாக, தேய்ந்துபோனதாக, சிறிதே உதவுவதாக இருக்கிறது. புதியதோர் கருவியை நாம் கண்டுபிடிக்கும் வரை, நம் உளப்பாங்கில் புரட்சிகரமான அடிப்படை மாற்றம் ஏதும் ஏற்படாது. ஆகவே, அந்தப் புதிய கருவியைப் பற்றி, அதன் தன்மை, தரம், அமைப்பு மற்றும் அழகைப் பற்றி நாம் ஆராயப்போகிறோம்.

ஆய்வைத் தொடங்குமுன், தற்போது நம்மிடம் இருக்கும் எண்ணம் என்ற கருவியை மூட்டைக்கட்டி வைக்க வேண்டிய நேரம் வந்துவிட்டது என்ற தெளிவு நமக்கு வரவேண்டும். மனிதர்களிடையே உள்ள தொடர்பில் இருக்கும் பிரச்சினைகளை எண்ணத்தால் முடிவிற்குக் கொண்டுவர முடியாது. மனித உறவுகளில், எண்ணற்ற சச்சரவுகள், போராட்டங்கள் உள்ளன. அவ்வகையான போராட்டங்களிலிருந்து, நாம் இந்தச் சமுதாயத்தை உருவாக்கியுள்ளோம். நம் பேராசைகளின் மூலமும், கொடூரம், வன்முறை ஆகியவற்றின் மூலமும் இச்சமூகம் படைக்கப்பட்டுள்ளது.

நம் பிரச்சினைகளை களையும் கருவியாக எண்ணம் இல்லை என்பதில் நாம் மிகத் தெளிவாக இருத்தல் அவசியம். இதில் மாற்றுக்கருத்திற்கு இடமே இல்லை. நம் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு நாம் அனைத்து வழிகளிலும் முயன்று பார்த்துவிட்டோம். ஒரு இலட்சியத்திற்கோ அல்லது ஒரு குருவிற்கோ அல்லது ஒரு கோட்பாட்டிற்கோ நாம் சரணடைந்து, நம் பிரச்சினைகளைத் தீர்க்கப் பார்த்தோம். அரசியல் தலைவர்களையும், மதத் தலைவர்களையும், போலிச் சாமியார்களையும் பின்பற்றிச் சென்று தீர்வுகாண முயன்றோம். எந்த முயற்சியும் பலனளிக்கவில்லை.

தொன்றுதொட்டு மனிதன் எப்படி இருந்தானோ, அவ்வாறே நாமும் இருக்கிறோம். ஏதோ கொஞ்சம் மாற்றம் நம்மிடம் ஏற்பட்டிருக்கலாம், நாம் கொஞ்சம் கூடுதல் கவனத்தோடு இப்போது பார்க்கலாம், சிறிதளவு கூடுதல் கனிவோடிருக்கலாம் - ஆனால், அடிப்படையில் ஆதிமனிதன் போலவேதான் நாம் இருக்கிறோம். எண்ணம் என்ற நாம் கொண்டிருக்கும் கருவி, நம் பிரச்சினைகளை ஒருகாலும் தீர்க்க முடியாது. இந்த உண்மை, தெளிவாகப் புரிந்திருக்குமென நம்புகிறேன்.

புதியதோர் கருவியை கண்டுபிடிக்க வேண்டு மென்றால், ஆழமான கண்டுணர்தல், ஐயுறுதல், வினா எழுப்புதல், அதிகாரத்திற்கு அடிபணியாமை போன்ற பண்புகளை நாம் பெற்றிருப்பது பெரிதும் அவசியம். நம் மீது அதிகாரம் செலுத்துபவைகளாக உள்ள மதநூல்கள், சமுதாயத்தின் அதிகார கட்டமைப்பு, ஸ்தாபனங்களின் அதிகாரம், 'எனக்குத் தெரியும், ஆனால், உனக்கோ தெரியாது, நான் உனக்குச் சொல்கிறேன்' என்று சொல்பவர்களின் அதிகாரம் போன்றவைகளுக்கு

அடிமையாகாத மனம் இருந்தால்தான், புதிய கருவி ஒன்றைக் கண்டுபிடிக்க முடியும். அதிகாரங்களின் பிடியிலிருந்து முழுவதுமாக விடுபட்ட மனதால்தான், புதிய கருவியைப் பற்றி, அதன் தன்மை, தரம், அமைப்பு ஆகியவைப் பற்றி ஆராய முடியும்.

புதியவொன்றை ஆராயத் தொடங்கும் மனம், மிகுந்த மென்னயவுணர்வுடனும், சுதந்திரத்தோடும் இருத்தல் அவசியம். அதற்கு உறுதிப்பாடுடைய மூளையாக இருந்தால்தான் சாத்தியமர்கும். நம் மனம் எத்தனை ஒழுங்கற்று, கவனக்குறைவுடன் இருக்கிறது என்பது பற்றி உங்களுக்குத் தெரியுமா என்று வியக்கிறேன். ஒரு குருவிடமிருந்து விலகி, வேறொரு குருவிடம் ஓடுகிறோம். அதுவும் குறிப்பாக இந்த நாட்டில், நாம் எதையும் சகித்துக் கொள்கிறோம். அழுக்கு, நாற்றம், ஆபாசம், லஞ்சம், செத்துமடிந்த சம்பிரதாயம், உலகெங்கும் பரவிவரும் அர்த்தமற்ற கோயில்கள் என்று அனைத்தையும் சகித்துக்கொள்கிறோம். அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும்கூட கோயில்கள் கட்டப்போகிறார்களாம். இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள், அதில் லயித்துப்போகிறீர்கள்.

ஆராயத் தொடங்கும் மனம், மென்னயவுணர்வுடையதாகவும், சுதந்திரமானதாகவும் இருக்க வேண்டுமென்று சொன்னோம் - அதன் பொருள் என்னவென்றால், ஒருவர் கண்ணால் பார்த்தறிய வேண்டும்; மற்றவர் சொல்வதை பரிபூரணமாகக் கேட்டு, சொல்லப்பட்டதின் சாரத்தை உடனே உணர்ந்துகொள்ள வேண்டும்; இரக்கம், பரிவு, மற்றும் ஒத்துழைக்கும் உணர்வு கொண்டிருக்க வேண்டும்; வாஞ்சையோடும் அன்புடனும் இருக்க வேண்டும் என்பதே. இங்கு

அவையெல்லாம் உங்களிடம் இல்லை. ஆனால், நீங்கள் கடவுளை விரும்புகிறீர்கள், கோயிலுக்குச் செல்வதை விரும்புகிறீர்கள். நீங்கள் பயத்தில் நடுங்கிக் கொண்டிருக்கும் காரணத்தால், சாம்பலை பூசிக்கொண்டு குலதெய்வத்தை கொண்டாடுகிறீர்கள், பூஜிக்கிறீர்கள். பயம் இருக்கும் இடத்தில், ஆய்வு செய்வதற்கான சுதந்திரம் இருக்காது.

இந்த ஆய்வில் நாம் மிகமிகத் தீவிரத்துடன் செல்கிறோம். இவ்வுரையாடல் ஏதோ மனமகிழ் கேளிக்கை நிகழ்ச்சி அல்ல. இந்த விஷயத்தை வருடத்தில் ஒரு நாள் சிந்தித்துவிட்டு, பிறகு மறந்துபோகிற விஷயமும் அல்ல. நாம், நமது அன்றாட வாழ்க்கை, நம் போராட்டங்கள், நமது தனிமை, கலக்கம் ஆகியவற்றைப் பற்றி கலந்துரையாடிக் கொண்டிருக்கிறோம். நம் பிரச்சினைகளாக இருக்கும் இவற்றில் எதையும் எண்ணத்தால் தீர்த்துவைக்க முடியாது. இவ்வாறெனில், இப்பிரச்சினைகளை தீர்க்கக்கூடிய கருவி எது?

பேச்சாளர் இதற்கான விடையை சொல்லி விடுவாரென்று காத்திருக்காதீர்கள். விடையை பேச்சாளர் உங்களுக்குச் சொல்வதால், அவர் உங்களுக்குக் குருவாகிவிடுவார், உங்கள் தலைவராகி விடுவார். ஆனால், அவர் உங்கள் குருவாகவோ, அதிபதியாகவோ இருக்க விரும்பவில்லை. மனிதகுலத்தின் நலனின் அக்கறைகொண்ட இருவர் பேசுவதாகவே இவ்வுரை யாடல் உள்ளது. நீங்களும், மனிதகுலத்தின் ஏனையோரைப் போன்றவரே என்பதாலும் உங்கள் பிரக்ஞையும் அதன் உட்பொதிவும் ஏனையோரை ஒத்ததே என்பதாலும் மனிதகுல நலனில் அக்கறைகொள்வது அவசியமானதே.

உலகில் ஒவ்வொரு மனிதனும் உங்களைப்போன்றே கஷ்டப்படுகிறான், கலக்கமுற்றும் குழம்பிப்போயும் நம்பிக்கையிழந்தும் வாழ்கிறான். தனிமையிலும் கண்ணீரிலும் நாட்களை கழிக்கிறான். உங்கள் பிரக்ஞை என்று நீங்கள் கருதிக் கொண்டிருப்பது, உங்களுடையதல்ல, அது ஏனையோரின் பிரக்ஞை போன்றதே; ஆக, நீங்களே மனிதகுலம்.

நீங்களே மனிதகுலம் என்று சொல்வது வெறும் அறிவுபூர்வமான, தர்க்கரீதியான முடிவு அல்ல. அது ஒரு உண்மை. அதைத் தெரிந்துணர்ந்து வாழ்தல் வேண்டும். நீங்கள் ஒரு தனிநபர் அல்ல, தனிப்பட்ட மனிதனல்ல என்பதை உணர்ந்துகொள்ள வேண்டும். நீங்கள் தனிப்பட்டவர் இல்லை என்ற உண்மை, ஒரு கசப்பான மாத்திரை, விழுங்குவதற்குக் கஷ்டம்தான். நாம் ஒவ்வொருவரும் தனிப்பட்டவர், நம் சுண்டைக்காய் மூளை நமக்கே சொந்தம் என்று சம்பிரதாய மரபுகளால் தளைபட்ட நாம் எண்ணிக்கொள்கிறோம்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மனிதன் அனுபவித்துவரும் இன்னல்கள், தனிமைத்துயரம், கலக்கம், மனக்கிளர்ச்சி மற்றும் களிப்பு ஆகியவற்றின் பலனாக நாம் இருக்கிறோம். நீங்கள் சிந்திப்பது போலவே மற்றவரும் சிந்திக்கிறார். சிறந்த விஞ்ஞானியும் சிந்திக்கிறார், காலையிலிருந்து இரவுவரை உழைக்கும், பசியோடிருக்கும் படிக்காத கிராமத்து ஏழையும் சிந்திக்கிறார். ஆகவே, சிந்தனை என்பது உங்கள் தனிப்பட்ட விஷயமல்ல, நீங்கள் ஒரு வழியிலும் மற்றவர் வேறொரு வழியிலும் சிந்திக்கலாம். இருப்பினும் அது சிந்தனை என்ற ஒன்றே. ஆக, சிந்தனையும் பிரக்ஞையும் உலக மாந்தர் அனைவராலும் பகிர்ந்துகொள்ளப்

படுகிறது. இந்த அடிப்படையான உண்மையை நீங்கள் புரிந்துகொள்ளும்போது, உங்கள் செயல்பாடுகள் அனைத்திலும் மாற்றம் ஏற்படுகிறது. அப்போது உங்கள் அக்கறையும், கவனமும் உலகளாவியதாக, மனிதகுலம் பற்றியதாக இருக்கிறது. உங்கள் மகள், உங்கள் மனைவி, உங்கள் சுற்றத்தார், அண்டை அயலார் மற்றும் பல மைல்களுக்கு அப்பால் இருக்கும் மனிதனைப் பற்றியதாகவும் உங்கள் அக்கறை பரந்து விரிந்திருக்கும்.

எண்ணத்திலிருந்து வேறுபட்ட புதியதோர் கருவி இருக்கிறதா, எண்ணத்தின் செயல்பாடாக இல்லாத வித்தியாசமான செயல்பாடு உள்ளதா என்பதைப் பற்றிய நம் விசாரணையை இன்று இத்துடன் முடித்துக்கொண்டு மீண்டும் நாளைத் தொடரலாம். கற்பனையாக எதையும் கண்டுபிடிக்காதீர்கள். ஆராய்ந்து பார்த்து உண்மையை கண்டுபிடிக்கலாம். எந்தவித தீர்மானத்திற்கும் வந்துவிடாதீர்கள். விசாரணை செய்யுங்கள், கேள்வி எழுப்புங்கள், ஐயப்பாடு கொள்ளுங்கள், நுட்பமான மற்றும் எளிதில் கண்டுகொள்ளும் மனத்தை கொண்டிருங்கள், பாரம்பரியம், தீர்மானங்கள் மற்றும் கருத்துகளில் மூழ்கிப்போய் முன்னேற முடியாமல் இருக்கும் ஒன்றாக இல்லாமல் மிகவும் துடிப்பான மூளையை கொண்டிருங்கள். இத்தகைய மூளையும் மனமும் கொண்டிருக்கையில், நீங்களும் பேச்சாளரும் மிகவும் ஆழமாகச் சென்று புதியதோர் கருவி உள்ளதா என்பதைப் பற்றி தீர விசாரணை செய்ய முடியும்.

*மதராஸ், 25.12.1982*

■■

# 10

## உறவில் நிகழும் இயக்கமே, வாழ்க்கை

தகவல்களை தெரிவிக்கும் குறிக்கோளுடன் நடத்தப்படும் சொற்பொழிவாக இந்த நிகழ்ச்சி இல்லை என்பதை ஏற்கனவே தெரிவித்துவிட்டோம். நாம் ஒருங்கிணைந்து கலந்துரையாடுகிறோம். மரங்கள் நிறைந்திருக்கும் குறுஞ்சாலையில் நடந்து செல்கிறோம். அங்குப் பறவைகள் கூவிக்கொண்டிருக்கின்றன. இதமான நிழலில் நாம் அமர்ந்துகொள்கிறோம். மிகவும் சிக்கலானதாக இருக்கும் வாழ்க்கைப் பிரச்சினைகளைப் பற்றி பேசுகிறோம். நாம் நீண்ட நாள் நண்பர்கள். இன்னும் பல நாட்களுக்கு இப்பிரச்சினைகளைப் பற்றி ஆராயப் போகிறோம்.

நாம், மற்றவரை நம்ப வைக்கவோ, இணங்க வைக்கவோ இங்கு முயற்சி செய்வதில்லை, வாதாடி மற்றவரைப் பணிய வைக்கப் பார்ப்பதில்லை. நம் சொந்தக் கருத்துகளையும் விருப்புவெறுப்புகளையும் கொள்கைப் பிடிவாதத்துடன் நாம் பற்றிக்கொண்டிருப்பதில்லை. மாறாக, வெளி உலகத்தையும் நம்முள் இயங்கும் உள்மன உலகத்தையும் நாம் ஒருமித்து பார்க்கப் போகிறோம்.

சுற்றுச்சூழல், சமுதாயம், அரசியல், பொருளாதாரம் என்று பல்வேறு வெளியுலக விஷயங்களைப் பற்றி

எண்ணிலடங்கா நூல்கள் வெளிவந்துள்ளன. ஆனால், எனக்குத் தெரிந்தவரை, உண்மையில் நாம் யார் என்பதைக் கண்டுபிடிக்கும் வண்ணம் ஆழமான விசாரணைகளோடு கூடிய நூல்கள் மிகவும் குறைவே. மனிதர்கள் ஏன் இவ்வாறு நடந்துகொள்கிறார்கள், சக மனிதர்களை கொன்று குவித்துக்கொண்டும், ஒருவரோடு ஒருவர் சதா சச்சரவுகள் செய்துக்கொண்டும் இருக்கிறார்களே, ஏன்? மதங்களின் அதிகாரத்திற்கும் அரசியல்வாதிகளின் அதிகாரத்திற்கும் பணிந்து போகிறார்களே, ஏன்? ஒருசில நூல்கள், ஒரு சில மனிதர்கள் மற்றும் ஒரு சில இலட்சியங்கள் ஆகிய வற்றிற்கு அடிபணிகிறார்களே, ஏன்? அவர்களுடைய வாழ்க்கைத்துணையோடும், அவர்கள் நண்பர்களுடனும் மற்றும் அவர்கள் பெற்றெடுத்த பிள்ளைகளோடும் இணக்கமான, சரியான தொடர்புடன் இல்லாமலிருக் கிறார்களே, ஏன்?

கோடிக்கணக்கான வருடங்களாய் நடந்துவரும் பரிணாம வளர்ச்சிக்குப் பின்னும், இத்தனை ஆபாசத்துடனும், இத்தனை மிருகத்தனத்துடனும், மற்றவரைப் பற்றிய அக்கறை கொஞ்சமும் இல்லாதவனாய், அன்பின் செயல்பாட்டை முற்றிலுமாக மறுப்பவனாய் மனிதன் ஏன் உருவானான்? அன்பு என்றவொரு தன்மை அவனுக்கு இருக்கிறதா? ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக பல போர்களுக்கு நடுவில், போர்க்காலச் சூழலிலேயே மனிதன் வாழ்கிறான். அணுஆயுதப்போர் நிகழாவண்ணம் தடுக்க முயற்சிகள் எடுத்து வருகிறோம். ஆனால், மற்றவிதமான போர்களை நாம் ஒருபோதும் தடுத்து நிறுத்த மாட்டோம். குறிப்பிட்டவொன்றான அணுஆயுதப்போர் துவங்கக் கூடாது என்று ஆர்ப்பாட்டங்கள் நடத்துகிறார்களே

தவிர, எங்கும் எந்தக் காரணத்திற்காகவும் போர் நடத்தக்கூடாது என்று மக்கள் ஆர்ப்பாட்டம் செய்வதில்லை. போர்கள் நடந்துகொண்டே இருக்கிறது. மக்கள் வஞ்சிக்கப்படுகிறார்கள், அடக்கி ஒடுக்கப்படு கிறார்கள், பிறகு, ஒடுக்கப்பட்டவர் கிளர்ந்தெழுந்து, போர் நடத்தி, அடக்கியாளும் கொடுங்கோலர் ஆகிறார்.

துக்கம், தனிமை, மனச்சோர்வு, பெருகிவரும் பதற்றம், முற்றிலுமாக பாதுகாப்பின்மை என்பதாக மனித வாழ்க்கைச்சக்கரம் சுழன்றுகொண்டிருக்கிறது. சச்சரவு, சண்டை, அடக்கியாளுதல் போன்ற இடர்பாடுகள் இல்லாத ஒரு தொடர்பு, சமுதாயத்துடனோ அல்லது தனது நெருக்கமான உறவினருடனோ கூட இல்லாத நிலை - இந்த நிலையில்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நீங்களும் இதை அறிந்திருக்கிறீர்கள். ஆனால், இதைப் பற்றிய விழிப்புணர்வு நமக்கில்லையோ அல்லது அதைப் பெற நாம் விரும்பவில்லையோ என்ற சந்தேகம் வருகிறது. உலகில் உண்மையில் என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதைப் பற்றிய விழிப்புணர்வு நமக்கில்லை. விஞ்ஞானிகளும், உயிரியல் நிபுணர்களும், தத்துவ அறிஞர்களும், சராசரி மனிதர்களிலிருந்து விலகிச்சென்று, தங்களுக்கான தனிப்பட்ட முறையில் வாழ்கிறார்கள். பல யுகங்களாக நமது மூளை, தளைபட்டிருக்கிறது - விஷயஅறிவால் கட்டுண்டு தளைபட்டிருக்கிறது.

இந்தப் பேச்சாளர் சொல்வதை, தயவு செய்து, உடனே ஏற்றுக்கொள்ளவோ, நிராகரிக்கவோ செய்யாதீர்கள். ஆனால், கேள்வி எழுப்புங்கள், ஐயுறுங்கள், எளிதில் நம்பிவிடாதீர்கள். பேச்சாளரால் நீங்கள் தாக்கம் அடைவதை அனுமதிக்காதீர்கள்.

ஏனெனில், நாம் மிகவும் எளிதில் ஏமாறக்கூடியவர்கள், எளிதில் வசப்படுபவர்கள். வாழ்வியல் தொடர்பான விஷயங்களை நாம் மிகவும் தீவிரமாக கலந்துரையாடும் போது, நமது மூளை / மனம், ஆய்வு செய்வதற்கான சுதந்திரத்தோடும், விருப்புவெறுப்புகள், தீர்மானங்கள் மற்றும் கருத்துகளிலிருந்து விடுபட்டும் இருக்கவேண்டும். சதா விசாரணை செய்யும், ஐயுறும், வினா எழுப்பும் மூளையாக அது இருத்தல் அவசியம். அவ்வாறு இருந்தால் மட்டுமே, நம்மிடையே தொடர்பு எளிதாக நிகழும், நம்மால் சுலபமாக கருத்துப்பரிமாற்றம் செய்துகொள்ள முடியும்.

எண்ணங்களால் நாம் வாழ்வதால், எண்ணத்தின் செயல்பாடுகள் பற்றி அவசியம் பார்க்க வேண்டும். நம் செயல்கள் அனைத்துமே எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டவை. நம் ஆழ்ந்த சிந்தனை, தியானம், வழிபாடுகள் மற்றும் பிரார்த்தனைகள் ஆகிய அனைத்துமே எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டவை. தேசியம் என்ற பிரிவினை இயக்கத்தை எண்ணம்தான் கொண்டுவந்தது. தேசியம், யுத்தங்களுக்கு வித்திடுகிறது. மதங்களுக்குள்ளும் பிரிவினையை ஏற்படுத்தி யூதர்கள், அரேபியர்கள், முஸ்லீம்கள், கிருத்துவர்கள், ஹிந்துக்கள், பௌத்தர்கள் என்பன போல பல்வேறு பிரிவுகளை எண்ணம்தான் கொண்டுவந்தது.

பூகோளரீதியில் தேசங்களாக உலகை மட்டும் எண்ணம் பிரிக்கவில்லை; மனிதனையும் உள்முகத்தில், மனோரீதியில் பிரிவினைக்கு எண்ணம் உட்படுத்தியது. மனிதன், முழுமையற்று பிளவுபட்ட நிலையில் வாழ்கிறான் - மனோரீதியில் மட்டுமல்லாமல், செய்யும் வேலையிலும் முழுமையற்று இருக்கிறான். நீங்கள் ஒரு

பேராசிரியர் என்று வைத்துக்கொள்வோம். உங்களுக் கென்று ஒரு சிறிய வட்டம் உள்ளது. நீங்கள் அதில் வாழ்கிறீர்கள். நீங்கள் ஒரு வியாபாரியோ அல்லது அரசியல்வாதியோ, யாராயிருப்பினும், நீங்கள் குறிப்பிட்ட உங்கள் துறையில், பகுதியில் வாழ்கிறீர்கள். நீங்கள் ஒரு சமயவாதியாக இருப்பின் - பூஜை, சடங்குகள், தியானம், உருவ வழிபாடு செய்தல் போன்றவற்றை செய்பவரை, பொது வழக்கில் 'சமயவாதி' என்று அழைக்கிறீர்கள் - நீங்களும் பின்னப்பட்ட வாழ்க்கையையே வாழ்கிறீர்கள். பிளவுபட்டு துகள்களாக இருக்கும் ஒவ்வொரு துகளுக்கும், அதற்குரிய ஆற்றலும், திறமையும், ஒழுங்கும் இருக்கிறது. ஒவ்வொரு துகளும், தான் மற்றவற்றுடன் முரண்பட்டு இருக்கும் அசாதாரண வேலையை செய்கிறது. இதெல்லாம் உங்களுக்குத் தெரிந்ததுதான்.

பூகோள ரீதியில், மத ரீதியில் மற்றும் தனி நபர்களிடையே இருக்கும் இந்தப் பிரிவினையால் மானுட ஆற்றல்சக்தி ஏராளமாய் விரயம் ஆகிறது. சச்சரவுகளால் மனிதசக்தி வீணாகிப்போய் ஆற்றல் குறைகிறது. சண்டைச் சச்சரவுகளிலும், பிரிவினைகளிலும், சுயநல வேட்கைகளிலும், சுயபாதுகாப்பு நடவடிக்கை களிலும் நாம் சக்தியை வீணடிக்கிறோம். செயல்கள், நம் சக்தியை எடுத்துக்கொள்கின்றன. சிந்தனையிலும் சக்தி செலவாகிறது. நம் திறன், ஓயாமல் பகுக்கப்படுத்தப்படுவ தால், நம் ஆற்றல் வீணடிக்கப்படுகிறது. சொல்வது ஒன்றாகவும், செய்வது மற்றொன்றாகவும், செயல்களில் முரண்பாடுகளோடும் இருக்கும் ஒன்றை, 'வாழ்க்கை' என்று பாசாங்குத்தனத்துடன் ஏற்றுக்கொள்கிறோம்.

முரண்பட்ட நம் செயல்பாடுகள் அனைத்துமே நம் மனதில், நம் மூளையில் தாக்கம் ஏற்படுத்தி அதைத்

தளைபடுத்துகின்றன. நாம் ஹிந்துக்கள் என ஹிந்து மதத்திற்கே உரிய மூட பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் கொண்ட நம் சம்பிரதாய மரபுகள், நம்மைப் பழக்கப்படுத்தி வைக்கின்றன. நம் மூளையில் நன்கு பதிந்துப்போயிருப்பதால், ஹிந்து என்பவர் யார், முஸ்லீம் என்பவர் யார், பௌத்தர் என்பவர் யார், கிருத்துவர் என்பவர் யார் என்று நமக்குத் தெரியும். நாம் ஏற்றுக்கொண்ட மரபுகளால், நாம் தளைபட்டவர்கள். அதில் கேள்விக்கே இடமில்லை. மதரீதியாகவும், அரசியல் ரீதியாகவும், பூகோள ரீதியாகவும் நாம் கட்டுண்டவர்கள், தளைபட்டவர்கள்.

தளைகளிலிருந்து விடுபட்டாலொழிய, நம்மால் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முடியாது. தளைபட்ட மனதிலிருந்து தோன்றும் எண்ணங்கள், மிகப்பெரிய பிரச்சினைகளை உருவாக்குகின்றன. எண்ணம் தோற்றுவிக்கும் பிரச்சினைகளை, எண்ணம் என்ற கருவியைக் கொண்டே தீர்க்க நாம் இப்போது முயற்சி செய்கிறோம். ஆனால், நமக்கு வெற்றி கிட்டுவதில்லை. எனவே, பிரச்சினையைத் தீர்க்க ஒரு புதிய கருவி தேவைப்படுகிறது. அந்தப் புதிய கருவியின் தன்மை பற்றி பேச்சாளர் கூறவேண்டும் என்பதில்லை. ஒவ்வொருவரும் சுயமாக அதைக் கண்டுபிடிக்க வேண்டும். அந்த நோக்கத்தில்தான் நாம் இங்கு ஒருமித்து சிந்திக்கப் பார்க்கிறோம்.

அவ்வாறு சிந்திப்பதற்கு, மனிதனால் தொகுக்கப் பட்ட அனைத்தையும் மற்றும் மாந்தர்களுக்கிடையே தடைகளாக உருவாக்கப்பட்ட அனைத்தையும் உணர்ந்து, விசாரணை செய்து, ஐயுற்று, வினா எழுப்பி, தேடலில் ஈடுபடும் இயல்பு நமக்குத் தேவைப்படுகிறது. இந்தப்

பூமி, நம் பூமி - இது இந்திய பூமியோ, அமெரிக்க பூமியோ, பிரிட்டீஷ் பூமியோ அல்ல. நம் அழகான பூமியை நாம் மெதுமெதுவே அழித்துக் கொண்டு வருகிறோம். அறிவார்ந்த முறையில் பூமியைப் பாதுகாத்து அதில் நாம் மகிழ்ச்சியாக வாழவேண்டும். ஆனால், நாம் தளைபட்டவர்களாய் இருப்பதால், அவ்வாறு வாழ்வது இயலாது என்பது வெளிப்படையாகவே தெரிகிறது.

செயல்திட்ட வரைவுகளால் கணினி நிரப்பப் பட்டிருப்பது போல், நாமும் கருத்துகளாலும், தீர்மானங்களாலும் தளைபட்டிருக்கிறோம். ஹிந்து என்றும் முஸ்லீம் என்றும் கிருத்துவர் என்றும் நாம் செயல்திட்ட வரைவு (programme) செய்யப்பட்டிருக் கிறோம். இரண்டாயிரம் ஆண்டுகளாக கிருத்துவ உலகம், செயல்திட்ட வரைவு செய்யப்பட்டு, கட்டுண்டு இருக்கிறது. கணினியைப்போல் மூளையும் தளைபட் டிருக்கிறது. இவ்வாறு ஆழமாகத் தளைபட்டிருக்கும் மூளையை, தளைகளிலிருந்து விடுவிக்க முடியுமா என்று நாம் வினவுகிறோம். தளைபட்டிருத்தல் என்ற குறைபாட்டிலிருந்து நாம் முற்றிலுமாக வெளிவராமல், எண்ணத்திலிருந்து வேறுபட்ட புதிய கருவி எது என்று நாம் விசாரணை செய்வது அர்த்தமற்றதாகும்.

வெகுதொலைவு செல்வதற்காக, நாம் அருகிலிருந்து ஆரம்பிக்க வேண்டும். ஆனால், நம்மில் பலர், அதை விரும்புவதில்லை. ஏனென்றால், வெகு தொலைவிற்குப் போகவேண்டும் என்ற இலட்சியத்தை நாம் கொண்டிருப் பதால், நாம் அருகில் ஆரம்பிக்க விரும்புவதில்லை. முதல் அடியை எடுத்து வைக்காமலேயே, தொலைதூரத்தை அடைந்துவிட விழைகிறோம். எடுத்துவைக்கும் முதல் அடியேகூட, உச்சியை தொட்ட கடைசி அடியாய் இருக்கக்கூடும்.

இங்கு நாம், நமக்கிடையே தொடர்புடன் இருக்கிறோமா? இல்லை, எனக்கே நான் பேசிக்கொண்டிருக்கிறேனா? எனக்கு நானே பேசிக்கொள்வதாக இருந்தால், நான் அதை என் அறையிலேயே செய்யலாமே? ஆனால், நாம் இங்கு கலந்துரையாடுகிறோமென்றால், நாம் அனைவரும் சமதளத்தில், ஒத்த தீவிரத்தன்மையுடன், ஒரே சமயத்தில், சிந்தனையில் ஒன்றுபட்டால்தான், இக்கலந்துரையாடலுக்கு முக்கியத்துவம் உண்டாகும். அவ்வாறான நிலையில் குடிகொண்டிருப்பது அன்பு. அதுவே உண்மையான, ஆழமான நட்பு. பொதுவழக்கில் 'சொற்பொழிவு' என்றழைக்கப்படும் ஒன்றாக இந்நிகழ்ச்சி இல்லை. நம் பிரச்சினைகளை ஆராய்ந்து அவற்றிற்குத் தீர்வு காண நாம் இங்கு முயற்சிக்கிறோம்.

நம் பிரச்சினைகள், பல்வேறு கூறுகளைக் கொண்டதாகவும், சிக்கலானதாகவும் இருப்பதால், நாம் தீவிர விசாரணையை மேற்கொள்ள வேண்டியுள்ளது. இதைச் செய்ய காலம் சார்ந்திராத பொறுமை நமக்குத் தேவைப்படுகிறது. "சீக்கிரமாக எதையோ ஒன்றைச் சொல்லுங்கள்" என்று சொல்கிறோம், பொறுமையின்றி அவசரப்படுகிறோம். ஆனால், நமக்குப் பொறுமை தேவை. ஒன்றைச் சாதிப்பதற்கோ, இலக்கினை அடைவதற்கோ விசாரணையின்போது முயற்சி செய்யக்கூடாது. ஒவ்வொரு படியாக மெதுவாக ஆழமாக நம் பிரச்சினைகளை விசாரணை செய்யவேண்டும்.

நான் முன்பு சொன்னதுபோல, கணினியை போல், நாம் அனைவரும் செயல்திட்ட வரைவைக் கொண்டிருக்கிறோம். நம் மூளையின் செயல்பாட்டுமுறை, இயந்திரத்தனமானது. நமது எண்ணங்கள், உலகாயதமானவை. தளைபட்ட எண்ணமானது, நம்மை ஹிந்து என்றோ பௌத்தர் என்றோ கிருத்துவர் என்றோ,

எண்ண வைக்கிறது. ஆக, நமது மூளை தளைபட்டிருக்கிறது. தளைகளிலிருந்து விடுபட முடியுமா என்பது நம் கேள்வி.

தளைகளிலிருந்து விடுபட முடியாது என்று கூறுபவர்கள் உள்ளனர். அவர்கள் ஏதோ மந்தபுத்திக் காரர்கள் அல்ல, மிகவும் புத்திசாலிகள். பல நூறு ஆண்டுகளாக பழக்கப்படுத்தப்பட்டு, கட்டுப் படுத்தப்பட்டு, தளைபட்டதாய் மூளை இருப்பதால், அதனால் தளைகளிலிருந்து விடுபட முடியாது என்று அவர்கள் காரணம் காட்டுகிறார்கள். "ஏற்கனவே உள்ள தளைகளை எப்படி அகற்றிவிட முடியும்? அசாதாரணமானதாகவும், அசல்தன்மை கொண்டதாகவும் அளப்பரிய சக்தி கொண்டதாகவும் இந்தத் தளைபட்ட மூளையை மாற்ற, தளைகளை எப்படி முழுமையாக விலக்க முடியும்?" என்று அவர்கள் வினவுகிறார்கள்.

தளைகளை விலக்க முடியாது என்று அவர்கள் உறுதிபட கூறுகிறார்கள். மேலும், வெறுமனே தளைகளை சிறிதே மாற்றிவிடுவதில் அவர்கள் திருப்தியும் காண்கிறார்கள். ஆனால், தளைகளை பரிசீலிக்க முடியும், கண்டுணர முடியும், அவற்றிலிருந்து முற்றிலுமாக விடுதலை பெற முடியும் என்று நாம் சொல்கிறோம். விடுதலை பெற இயலுமா இயலாதா என்று நாம் கண்டுபிடிக்க முதலில் நாம் நம் உறவின் இயல்பை, இயக்கத்தை ஆராய வேண்டும்.

நம்மை உள்ளபடிக்குக் காண்பிக்கும் நிலைக் கண்ணாடியாக, நாம் பிறருடன் கொண்டிருக்கும் உறவு இருக்கிறது. வாழ்வு முழுவதும், உறவின் இயக்கமாகவே உள்ளது. புவியில் வாழும் உயிரினம் எதுவும் மற்றவற்றுடன் எந்த உறவும் கொண்டிராமல்

இருக்கவில்லை. உலகையே துறந்துவிட்டு, தனிமையில் வாழும் துறவிகூட, தன் கடந்த கால நினைவுகளுடனும், தன்னைச் சுற்றியிருப்பவர்களுடனும் தொடர்போடு இருக்கிறார். தொடர்பு கொண்டிருப்பதிலிருந்து யாரும் தப்பிக்கவே முடியாது. நிலைக்கண்ணாடியாய் செயல் படும் உறவின் மூலமாக, நாம் வெளிப்படுத்தும் எதிர்வினைகளையும், விருப்பு வெறுப்புகளையும், அச்சம், மனச்சோர்வு, கலக்கம், தனிமை, துக்கம், வலி மற்றும் துயரம் போன்ற உணர்வுகளையும், நம்மால் பார்க்க முடியும்.

மேலும், நாம் அன்புடையவரா, இல்லை, அன்பு என்ற ஒன்று துளிகூட இல்லாதவரா என்பதையும் பார்க்க முடியும். நம் வாழ்க்கையின் அஸ்திவாரமாக இருக்கும் உறவு என்ற விஷயத்தைப் பற்றி நாம் ஆராய வேண்டும். வாழ்வு மேம்பட நம்மிடமிருக்கும் ஒரே மூலதனம் உறவு மட்டுமே. கணவன் / மனைவி என்ற குறுகிய வட்டத்தில் வாழ்ந்துகொண்டு, வெளியுலகோடு சரியான தொடர்பை கொண்டிருக்காமல், தனிமைப்பட்டு வாழும் வாழ்க்கைமுறையானது, அழிவைப் பெற்றுத்தரும். ஆக, சமூகத்தோடு தொடர்புகொண்டிருத்தல் என்பது வாழ்க்கையில் மிகவும் இன்றியமையாத ஒன்றாக உள்ளது. அத்தொடர்பைப் பற்றி புரிந்துகொள்ளாமல், புதியதோர் சமுதாயத்தை நம்மால் உருவாக்க முடியாது.

வெளிப்புறப் புரட்சிகள் உலகில் ஏற்படலாம். கம்யூனிஸப் புரட்சி, மாவோயிஸ்ட் புரட்சி போன்ற வெளிப்புறப் புரட்சிகள் பல நடந்துள்ளன. இரஷ்யாவில் மிகப்பெரிய கம்யூனிஸப் புரட்சி தோன்றியது. ஆனால், நாளடைவில் அங்கும் பழைய நடைமுறையே மீண்டும் வந்திருப்பதை நம்மால் பார்க்க முடிகிறது. பிரமுகர்கள்

பெரிய பதவியில் அமர்ந்துகொண்டு அதிகாரம் செய்வதே அவர்களின் வாடிக்கையாய் இருப்பதைப் பார்க்கிறோம்.

உறவு என்றால் என்ன, மற்றும் அடக்கி ஒடுக்குதல், உரிமை கொண்டாடுதல், பற்றுதல், முரண்பாடுகள் போன்ற பிரச்சினைகளைக் கொண்டிராத உறவினை, புவியின்கண் வாழும் மனிதன் தன் மிக நீண்ட பயணத்தில், ஏன் எப்பொழுதுமே கொண்டிருந்ததில்லை என்பது பற்றியும் நெருக்கமாக சென்று நாம் ஆழமாக விசாரணை செய்யப்போகிறோம். 'ஆண்' என்றும் 'பெண்' என்றும் 'நாம்' என்றும் 'அவர்கள்' என்றும் ஏன் இந்தப் பாகுபாடுகள்? நாம் ஒருசேர விசாரணை செய்யப் போகிறோம். உறவு என்றால் என்ன என்பதைப் பற்றிய அறிவுபூர்வமான புரிதல் என்பது, வார்த்தையளவில் உறவைப் பற்றிய கோட்பாடுகளை நாம் பெற உதவலாம். ஆனால், அவ்விதம் செயல்படுவதில் எந்த உபயோகமும் இல்லை. நாம் பெற்ற கோட்பாடுகள் அனைத்தும் வெறும் கருத்துகள், எண்ணங்கள். ஆனால், நாம் கொண்டிருக்கும் உறவினை முழுமையாகப் பார்க்க நமக்கு இயலுமேயானால், உறவின் ஆழத்தையும், அதன் அழகையும், அதன் இயல்பையும் நாம் கண்டுணரக் கூடும்.

நாம், இங்கு, இலக்கணப்படியான உறவையோ, கிளர்ச்சியூட்டும் உறவையோ, இலட்சியப்படியான உறவையோ பற்றி பேசவில்லை - அவையெல்லாம் போலியானவை. ஆனால், நமக்கிடையே நிஜத்திலிருக்கும், அன்றாட வாழ்க்கையிலிருக்கும் உறவின் ஆழத்தைப் பற்றியே ஆராயப்போகிறோம். நமக்கிடையே உறவு உள்ளதா என்ன? உடல் சம்பந்தப்பட்ட காம வேட்கை நமக்குள்ளது. நாம் கொண்டிருக்கும் உறவு, உடலின்பத்

தின்பாற்பட்டது, சுகபோகமானது. நம் உறவில், தனது என்று உரிமை கொண்டாடும் குணம் இருக்கிறது. உறவு பாராட்டும் ஒன்றின் மீது மிகுந்த பற்றுதல் வைக்கிறோம். உறவு கொண்டிருப்பவை, ஒன்றின் உரிமையில் மற்றொன்று தலையிட்டு, தமக்குள் சங்கடம் விளைவிக்கும். நம் உறவுகளில் முக்கிய காரணியாக இருப்பது பற்றுதல்.

பற்றுதல் என்றால் என்ன? நமக்கு ஏன் பற்றுதல் அவ்வளவு அவசியமாகத் தேவைப்படுகிறது? நாம், ஒரு நபர் மீதோ, நம்பிக்கை மீதோ அல்லது ஒரு கோட்பாட்டின் மீதோ பற்றுதல் வைக்கிறோம். அப்படி பற்றுதல் வைப்பதால் உண்டாகும் தாக்கங்கள் யாவை? தன் மனைவி மேல், தன் குடும்பத்தின் மீது பற்றுதல் வைப்பதால் ஏற்படும் சிக்கல்கள் எவை? பற்றுதலின் அசாதாரண இயல்பு என்ன? ஏன் ஒருவர் பற்றுதல் வைக்கிறார்? எதன் மீது பற்றுதல் கொண்டாலும், அதை இழந்துவிட நேரிடுமோ என்ற பயம் கட்டாயம் இருக்கும் - நிச்சயமற்றத் தன்மையை சதா உணர நேரிடும். தயைகூர்ந்து, நீங்களே இவ்வுண்மைகளைப் பாருங்கள். பற்றுதலால் பிரிவு உணர்வும் எழும்.

நான் என் மனைவி மீது மிகுந்த பற்றுதலுடன் இருக்கிறேன். அவள் எனக்கு உடலின்பம் தருகிறாள், என் தோழியாக இருந்து மகிழ்ச்சி அளிக்கிறாள் - அதனால் அவள் மீது பற்றுதல் கொண்டிருக்கிறேன். இவையெல்லாம் உங்களுக்கே நன்றாகத் தெரியும், நான் சொல்லவேண்டுமென்பதில்லை. நான் அவளிடம் பற்றுதலோடு இருக்கிறேன் என்றால் நான் பொறாமைப்படுகிறேன், நான் பயந்து போயிருக்கிறேன் என்று அர்த்தம். இழந்துவிடுவோமோ என்ற பயம்,

பொறாமை மற்றும் பதற்றம் ஆகியவை பற்றுதலின் விளைவாக உள்ளன. எங்கெல்லாம் பொறாமை இருக்கிறதோ, அங்கெல்லாம் வெறுப்புணர்ச்சி இருக்கும். பற்றுதலுடன் இருப்பதா அன்புடைமை? நம் தொடர்புகளில் ஒரு காரணியாய் இருப்பது, பற்றுதல்.

நம் உறவில், மற்றவரைப் பற்றிய நம் கணிப்பிற்கு நாளடைவில் மனதில் ஒரு உருவகம் தந்துவிடுகிறோம். மற்றவரும் அவர் மனதில் நம்மைப் பற்றி ஒரு கருத்துருவம் ஏற்படுத்திக்கொண்டு விடுகிறார். உண்மையில் இந்த கருத்துருவங்கள் இடையே மட்டும் தொடர்பு உள்ளது. நீங்கள், உங்கள் மனைவியுடன் படுத்துறங்கலாம். ஆனால், உங்களைப் பற்றிய கருத்துரு உங்கள் மனைவிக்கும், அவரைப் பற்றிய கருத்துரு உங்களுக்கும் இருக்கிறது - தொடர்பில் இருப்பது அவை இரண்டுமே. இந்நிலையில் உண்மையான உறவு உங்களிடையே எப்படி இருக்க முடியும்? நாம் அனைவருமே சிறு வயதிலிருந்தே, மற்றவரைப் பற்றிய நம் கணிப்பிற்கு உருவகம் தந்து, அவரைப் பற்றிய கருத்துருவை ஏற்படுத்திக் கொள்கிறோம். அது மட்டுமல்ல, நம்மைப் பற்றியும் நிர்ணயித்துக்கொண்டு, அக்கருத்துருவையும் கொண்டிருக்கிறோம்.

நாம் இங்கு ஒரு மிகமிக முக்கியமான ஒரு கேள்வியைக் கேட்கிறோம்: ஒற்றைக் கருத்துருவம் கூட மனதில் இல்லாமல் நம்மால் உறவாட முடியுமா? இந்தப் பேச்சாளர் பற்றி கூட நீங்கள் கருத்துரு கொண்டிருக்கக் கூடும் - கட்டாயம் உங்களுக்கு இருக்கும். ஏன் அவ்வாறிருக்கிறது? உண்மையில் பேச்சாளரை உங்களுக்குத் தெரியாது. மேடையில் அமர்ந்து அவர் பேசுகிறார். அவரைப் பற்றிய கருத்துரு உங்களுக்கு

இருப்பதால், பேச்சாளருக்கும் உங்களுக்கும் இடையே உண்மையில் தொடர்பு ஏதுமில்லை. அவரைப் பற்றிய கருத்துருவை நீங்கள்தான் உருவாக்கினீர்கள். உங்களைப் பற்றியும் கருத்துரு கொண்டிருக்கிறீர்கள். உங்களிடம் ஏகப்பட்ட கருத்துருக்கள் உள்ளன - அரசியல்வாதியைப் பற்றி, வாணிபம் செய்பவரைப்பற்றி, குருமார்களைப் பற்றி, இதைப்பற்றி, அதைப்பற்றி என்று பல்வேறு கருத்துருக்களைக் கொண்டிருக்கிறீர்கள்.

ஒற்றைக் கருத்துருவம்கூட மனதில் இல்லாமல் சீரிய முறையில் வாழ இயலுமா? உங்கள் மனைவியைக் குறித்து நீங்கள் கொண்டிருக்கும் தீர்மானம்கூட ஒரு கருத்துருவம்தான். இருப்பதைவிட மேம்பட்ட உறவாக நீங்கள் கருதும் ஒன்றைப் பற்றிய உருவகம் மற்றும் சிற்றின்பம் சார்ந்த எண்ணம் உருவாக்கிய மனச் சித்திரங்கள் ஆகியவையும் கருத்துருக்களே. மனிதன் ஏன் கருத்துருக்களை உருவாக்கி வைத்துக்கொள்கிறான்? - இந்தக் கேள்வியை உங்களிடமே கேட்டுக்கொள்ளுங்கள். இக்கேள்விக்கான நேர்மையான பதிலை அளித்தீர்களே யானால், நீங்கள் உருவாக்கியிருக்கும் உங்கள் மனைவி மற்றும் குழந்தைகள் பற்றிய கருத்துருக்கள் தானே கரைந்துவிடும். மற்றவரைப் பற்றிய உங்கள் கருத்துரு, உங்களுக்கு ஒருவிதமானப் பாதுகாப்புணர்வைக் கொடுக்கிறது.

பேச்சாளர் கூறுவது மிகவும் முக்கியமானதாக இருப்பதால், தயவுசெய்து, அதைப் பரிசீலியுங்கள். அன்பு என்பது எண்ணமல்ல. அன்பு என்பது ஆசை அல்ல. அன்பு என்பது இன்பக் களிப்பு அல்ல. அன்பு என்பது கருத்துருக்களின் இயக்கமல்ல. மற்றவரைப் பற்றிய கருத்துருவை நீங்கள் கொண்டிருக்கும்வரை, அங்கு அன்பு

இருப்பதில்லை. "ஒரு கருத்துருகூட மனதில் இல்லாமல் வாழ்வது சாத்தியம்தானா?" என்று கேட்கிறோம். கருத்துருக்களைக் கொண்டிருக்கும் நிலையில், உங்கள் உறவானது, உடலுறவில் மட்டுமே இணையும் உறவாக உள்ளது. மற்றபடி, என்றுமே ஒன்றுசேராத இணைநேர்கோடுகள் போல நீங்கள் வாழ்கிறீர்கள். உங்களுக்குள் உண்மையான உறவு ஏதுமில்லை.

ஆண், அலுவலகத்திற்குச் செல்கிறார். இன்றைய நவீன மங்கையும் அலுவலகத்திற்குச் செல்கிறார். பேராசை, பொறாமை, அடைந்துவிடத் துடிக்கும் வேகம் ஆகியவற்றோடு, ஆண், வியாபாரத்தில், உத்தியோகத்தில், ஆன்மிகத்தில் முன்னேறி தனக்கென ஒரு இடத்தைப் பிடிக்க உழைக்கிறார். வாழ்க்கை நடத்த தேவையான பணம் சம்பாதிக்க பெண்ணும் உழைக்கிறார். குழந்தைகள் பெற்று குடும்பத்தைப் பெருக்க, அவர்கள் வீட்டில் கூடுகிறார்கள். பிறகு, குழந்தைகளை நன்றாக வளர்க்கவேண்டிய பொறுப்பு, அவர்களுக்கு நல்ல கல்வி அளிக்க வேண்டிய பொறுப்பு என்று ஆணிற்கும் பெண்ணிற்கும் பிரச்சினைகள் ஆரம்பித்து விடுகிறது.

உங்கள் குழந்தைகள் எப்படிப்பட்டவர்கள், அவர்களுக்குள்ள சிரமங்கள் என்ன என்பதையெல்லாம் அலட்சியப்படுத்துகிறீர்கள். எதிர்காலநலனைக் கருதி செய்துகொண்ட விவாகம், சொந்த வீடு, நல்லவேலை ஆகியவற்றோடு, உங்களைப் போலவே அவர்களும் இருக்கவேண்டுமென்று விரும்புகிறீர்கள். பாவம் அந்தக் குழந்தைகள்! பள்ளியில் கற்கும் கல்வியும் அவர்களைக் கட்டுப்படுத்துகிறது, பெற்றோர்களும் கட்டுப்படுத்து கிறார்கள். இந்த வகை செயல்பாடு, யுகயுகமாய் தொடர்ந்து வருகிறது. இதுதான் நம் அன்றாட

வாழ்க்கை. இது உண்மையிலேயே துக்ககரமான வாழ்க்கை.

மீண்டும் அதே கேள்வி: ஏன் மனிதன் கருத்துருவங்களோடு வாழ்கிறான்? உங்கள் கடவுளர் அனைவருமே கருத்துருவங்கள்தான் - கிருத்துவ கடவுள், முஸ்லீம் கடவுள், உங்கள் கடவுள் எல்லாமே உருவகங்கள்தாம். நம்பிக்கை இழந்து பயத்தோடு இருக்கும் எண்ணம், பாதுகாப்பு வேண்டி, கடவுளை உருவாக்குகிறது. ஆனால், எண்ணம் தொகுத்த எதிலும் பாதுகாப்பு கிடையாது. எண்ணம் தோற்றுவித்த உருவகத்தை, நீங்கள் வழிபடுகிறீர்கள். எண்ணம் செய்யும் ஏமாற்றுவித்தையால் நீங்கள் கடவுள் வழிபாடு செய்கிறீர்கள்.

தளைகளிலிருந்து விடுபட்ட சுதந்திரமான நிலையில் நமக்கிடையே உறவுடன் நாம் இருக்க முடியுமா? அதாவது, உறவு என்ற நிலைக்கண்ணாடியில், நம் எதிர்வினைகள் என்ன, அவை, இயந்திரத்தனமானவையா, பழக்கமாகிப்போனவையா, பாரம்பரியச் சார்புடையவையா என்பதைக் கவனமாக, நெருக்கமாக, தொடர்ந்து கூர்ந்து நோக்க வேண்டும் என்பது அக்கேள்வியின் உட்பொருளாகிறது. உண்மையில் நீங்கள் யார் என்பதை உறவு உங்களுக்குக் காட்டுகிறது. உறவு என்ற நிலைக்கண்ணாடியில் உங்களைப் பற்றி நீங்கள் எவ்விதம் கண்டுணர்ந்துகொள்வீர்கள்?

கண்டுணர்தல் என்றால் என்ன என்பதைப்பற்றி பார்ப்போம். நீங்கள் மணமானவர் என்று வைத்துக் கொள்வோம். கணவன் - மனைவி உறவுமுறை என்ற கண்ணாடியில் உங்களைப் பற்றி பார்க்கப்போகிறீர்கள்.

கோட்பாடுகளின்படி இருக்கப்போவதில்லை உங்கள் பார்வை. உண்மையில் உள்ளபடி பார்க்கிறீர்கள் - அவ்வாறு நோக்குவது என்றால் என்ன? நோக்குவது, பார்த்தறிதல், கண்டுணர்தல் என்பதற்கெல்லாம் என்ன அர்த்தம்? பூமியிலிருக்கும் மிகவும் அழகான, அருமையான விஷயங்களில் ஒன்று, மரம். நீங்கள் மரத்தைப் பார்க்கும்போது, எவ்விதத்தில் அதைப் பார்க்கிறீர்கள்? நீங்கள் எப்போதாவது அதைப் பார்த்திருக்கிறீர்களா? மெல்லிய வளைகோடாக, மென்மையுடன் பவனிவரும் இளைய வளர்பிறை நிலாத்துண்டை நீங்கள் பார்த்ததுண்டா? 'நிலா' என்ற சொல்லை பயன்படுத்தாமல் உங்களால் அதைப் பார்க்க முடியுமா?

நாம் பேசிக்கொண்டிருக்கும் இவ்விஷயங்களிலெல் லாம் உங்களுக்கு ஆர்வம் உள்ளதா? ஓடும் நதியைப்போல், நான் பேசிக்கொண்டே போவேன். நீங்கள் நதிக்கரையில் உட்கார்ந்துகொண்டு, நதியைப் பார்த்துகொண்டிருக்கிறீர்கள்... நீங்கள் ஒருபோதும் நதியாவதில்லை. ஏனென்றால், நீங்கள் என்றுமே நதியுடன் பங்கேற்பதில்லை, ஆரம்பமும் முடிவுமற்ற இயக்கமாய் அழகாக ஓடிக்கொண்டிருக்கும் நதியுடன் நீங்கள் இணைவதில்லை.

தயவுசெய்து, கண்டுணர்தல் என்றால் என்ன என்பதைப் பற்றி சிந்தித்துப் பாருங்கள். புறத்தே இருக்கும் எதையும், அது மரமாக இருக்கட்டும் அல்லது நிலவாக இருக்கட்டும், நீங்கள் அதை 'மரம்' 'நிலா' என்று, சொல்லை உபயோகித்தே பார்க்கிறீர்கள். அதனை அடையாளப்படுத்துவதற்காகச் சொல்லை உபயோகிக் காமல், அந்த நிலவை, அந்த மரத்தை, நிறமிக்க அந்த

மலரை, பெயரிட்டு அழைக்காமல், வார்த்தைகளின் உபயோகமின்றி உங்களால் நோக்க முடியுமா? வார்த்தைகளின்றி, வார்த்தைகளின் உட்பொருளால், மரத்தையோ அல்லது வேறு எதையோ அடையாளப் படுத்தாமல், உங்களால் பார்க்க இயலுமா?

உங்கள் வாழ்க்கைத்துணையை மற்றும் உங்கள் குழந்தைகளை, அவர்களைப் பற்றி நீங்கள் கொண்டிருக்கும் கருத்துருக்களின்றி, வார்த்தைகளின்றி பார்க்க உங்களுக்கு முடியுமா? அவ்விதமாகப் பார்க்க எப்போதாவது முயற்சி செய்திருக்கிறீர்களா? இல்லைதானே? வார்த்தைகளின்றி, பெயரிடுதல் இன்றி, கருத்துருக்களின்றி நோக்கும்போது, அந்தப் பார்வை, ஒரு மையத்திலிருந்து பார்ப்பதாக இருப்பதில்லை. உங்களுக்கு விருப்பமான அரசியல்வாதியைக்கூட, அவரைப் பற்றி உங்கள் கருத்துரு இல்லாமல், நீங்கள் பார்த்ததில்லை. இந்தப் பேச்சாளரை, கருத்துரு மூலமாகவோ பெயரின் துணை கொண்டோ பார்க்காமல், வெறுமனே பார்க்க உங்களால் முடியுமா?

எண்ணம் உருவாக்கியதுதான் வார்த்தை. எண்ணமோ மனப்பதிவுகளிலிருந்து பிறந்தது. ஆக, மனப்பதிவுகள், எண்ணம், வார்த்தை மற்றும் கருத்துரு ஆகியவை உங்களுக்கும் மற்றவைகளுக்கும் இடையே குறுக்கிடுகின்றன. ஆனால், அவைகளின்றி பார்க்கும் போது, அங்கு வார்த்தைகளோ, அவற்றின் பொருளோ, வார்த்தை உணர்த்தும் முக்கியத்துவமோ ஏதுமில்லை. அத்தகைய பார்வையில், 'நான்' என்ற மையம், 'உங்களைப்' பார்ப்பதாக இல்லை. அத்தகைய பார்வையே, உண்மையான உறவினைக் கொண்டுவரும். உண்மை உறவில், அன்பும் அழகும் மென்மையும் நிரம்பி

இருக்கும். ஆனால், மற்றவரைப் பற்றிய கருத்துருவை நீங்கள் தொடர்ந்து கொண்டிருக்கும்போது, அந்த உறவில், தொடர்போ அன்போ இருப்பதில்லை. கருத்துருக்கள், நம்மைத் தளைபடுத்துகின்றன.

ஆக, நாம் தளைபட்டுள்ளோம், ஒரு செயல்திட்ட வரைவின் செயல்பாட்டின்படி செயல்படுகிறோம். இரண்டாயிரம் ஆண்டுகளாக, கிருத்துவ உலகமும், ஆயிரத்தி நானூறு ஆண்டுகளாக முஸ்லீம் உலகமும், ஐந்தாயிரம் ஆண்டுகளாக ஹிந்து உலகமும், செயல்திட்ட வரைவிற்கு உள்ளாக்கப்பட்டுள்ளது. பரிணாம வளர்ச்சி என்றழைக்கப்படும் இக்காலக்கட்டத்தில், நமது மூளையானது, அபரிமிதமான விஷயஅறிவாலும், அனுபவங்களாலும் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. மூளையின் அசாதாரணமான தன்மையை காலமும், வெளியும் பெற்றுத்தந்தன.

பேச்சாளர், மூளை நிபுணர் அல்ல. அவருக்கு நிபுணராகவும், ஏன் சமய நிபுணராகக்கூட, ஆக வேண்டாம்! உங்கள் சொந்த எண்ணத்தின் செயல்பாட்டை நீங்கள் உற்றுநோக்க முடியும் - அதாவது, எண்ணம், தன்னையே நோக்குவதாக இருக்கவேண்டும், நீங்கள் எண்ணத்தைப் பார்ப்பதாக இல்லை - வித்தியாசம் புரிகிறதா? எண்ணம் தொகுத்த தொகுதியாய் நீங்கள் இருப்பதால், எண்ணத்தைப் பற்றி அறிய, எண்ணம் தன்னையே நோக்குதல் வேண்டும். உங்கள் பெயர், உங்கள் நாட்டுரிமை, உங்கள் பண்புகள், உங்கள் பயங்கள், உங்கள் கலக்கங்கள், உங்களின் சுபாவம் மற்ற பிறவும், எண்ணம் ஒருங்கிணைத்தவை. அதுவே உங்கள் பிரக்ஞையாக இருக்கிறது.

உளவியலாளர்கள், பிரக்ஞை என்ற விஷயத்தை ஏற்றுக்கொள்வதில்லை என்று கேள்விப்பட்டோம். கண்ணால் காணும் பொருளின் மீது ஏற்படும் விருப்பம், விருப்பத்தினால் எழும் ஆர்வக்கிளர்ச்சி, வேறு வழியின்றி, தற்போதைய வாழ்க்கைக்கு சரிகட்டிக்கொண்டு போவது போன்ற உணர்வுகளைக் கொண்டவர்களாக மட்டுமே, மக்களை உளவியலாளர்கள் எண்ணுகிறார்கள். அவர்கள் சொல்கிறார்கள்: 'பல்வேறு காரணங்களால், நீங்கள் சற்றே மனக்கிலேசம் அடைகிறீர்கள். அக்காரணங்களை நீக்கிவிடும்போது, நீங்கள் இன்றைய சமுதாயத்திற்கு, அதாவது தற்போதைய துயரத்திற்கு, ஈடுகட்டிக்கொண்டு போகமுடியும்' என்று. நாம் சொல்கிறோம்: 'நாம் ஆழமாகத் தளைபட்டுள்ளோம். தளைகளைப் பற்றி அறிவதற்கு, நாம், 'ஆதல்' முயற்சியின் இயல்பைப் புரிந்துகொள்ள வேண்டும்' என்று.

உங்களுக்குக் களைப்பாக இல்லையா? நீங்கள் களைப்படைந்திருக்க வேண்டும். ஏனென்றால், துடிப்புடன் இக்கலந்துரையாடலில் பங்கேற்றிருந்தால், உங்கள் மூளை மிகவும் சுறுசுறுப்புடன், உன்னிப்பாக கவனித்துக்கொண்டும், வினா எழுப்பிக்கொண்டும், பரிசீலித்துக்கொண்டும் இப்போது இருந்திருக்கும். அவ்வாறு கவனத்தோடும், அக்கறையோடும் இருப்ப தென்பது களைப்படையச் செய்யும் விஷயம்தான். இருந்தாலும், நான் தொடர்ந்து பேசப்போகிறேன்.

உலகெங்கிலும் மனிதர்கள் ஏன் ஓயாமல் சச்சரவுகளோடும், முரண்பாடுகளோடும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்ற கேள்வியை தயவு செய்து, உங்களையே கேட்டுக்கொள்ளுங்கள். நீங்கள் முரண்பாட்டுடன் வாழ்கிறீர்கள். உங்கள் தியானம்

மற்றும் வழிபாடு, முரண்பாடுடன் கூடியதாய் இருக்கிறது. உங்களுக்கு பல்வேறுபட்ட கடவுளர்கள் உள்ளனர் - அவர்கள், தங்களுக்குள்ளும் உங்களுடனும் முரண்பட்டிருக்கிறார்கள். ஓயாத போராட்டம், வலி, முரண்பாடு ஆகியவற்றுடன் மக்கள் ஏன் துன்பப்படுகிறார்கள்?

முரண்பாடு என்றால் என்ன? அதற்கான காரணம் என்ன? காரணம் இருக்கும்பட்சத்தில், அக்காரணத்தை முடிவிற்குக் கொண்டுவர முடியும். நான் அனுபவிக்கும் வலிக்குக் காரணம், எனக்கு வந்திருக்கும் புற்றுநோய் என்றால், மருத்துவர், அறிகுறியாக இருக்கும் வலியையும், அதற்கான காரணத்தையும் ஆராய்ந்து பார்க்கிறார். காரணமாயிருக்கும் புற்றுநோய் கண்ட பாகத்தை அகற்றிவிடுகிறார். ஆக, காரணம் என்ற ஒன்று இருந்தால், அக்காரணத்தை முடிவிற்குக் கொண்டுவந்து பிரச்சினைக்குத் தீர்வு காண முடியும்.

எனவே, காலங்காலமாய் முரண்பாடுகளுடன் மனிதன் வாழ்ந்துகொண்டிருப்பதின் காரணம் என்ன என்பதை நீங்களே சுயமாகக் கண்டுபிடியுங்கள். இந்தப் பேச்சாளர், காரணத்தைச் சொல்வார் என்று காத்திருக்க வேண்டாம். நம் வாழ்வின் அகத்திலும், புறத்திலும் தொல்லை தரும் 'முரண்பாடு' என்ற பிரச்சினைக்கு என்ன காரணம் என்பதை நீங்களே ஆராய்ந்து கண்டுபிடியுங்கள்.

முரண்பாட்டிற்கான காரணம் ஒன்றா அல்லது பலவா? பல காரணங்கள் இருந்தால், அவை ஒவ்வொன்றையும் நாம் பொறுமையாகப் பார்த்து தீர்வுகாண முயற்சிக்கலாம். பிரச்சினைக்குக் காரணம்

ஒன்றாகக்கூட இருக்கலாம். இருக்கும் நிலையிலிருந்து வேறொரு நிலையை எட்டவேண்டும் என்ற ஓயாத நம் முயற்சி, பிரச்சினைக்கான காரணங்களில் ஒன்றாக இருக்கலாம்.

"நான் 'இது'வாக இருக்கிறேன். நான் 'அது'வாக ஆகவேண்டும்', 'நான் பேராசைக்காரன். ஆனால், வருங்காலத்தில் அப்படி இருக்கமாட்டேன்', 'நான் அழகாய் இல்லை, ஆனால், அழகாய் ஆகிவிடுவேன்', 'நான் இப்போது வன்முறைவாதி, ஆனால், எதிர்காலத்தில் அஹிம்சாவாதி ஆகிவிடுவேன்' என்றெல்லாம் 'ஆகி'விடுவதற்கு தொடர்ந்து முயற்சிக்கிறோம். அனைத்துவிதமான 'ஆகி'விடுதலும் - ஊழியர், மேலதிகாரி ஆவதும், மேலதிகாரி, நிறுவனத் தலைவர் ஆவதும் - அடிமட்ட நிலையிலிருந்து மேல்நிலைக்கு உயரும் பரிணாம வளர்ச்சி, காலத்தின் செயல்பாடு. நீங்கள் ஒரு சிறு செடியை நடுகிறீர்கள், அது வளர்ந்து பெரிய மரமாகி விடுகிறது - அது அந்தச் செடியின் பரிணாம வளர்ச்சி.

'நான் இப்போது வன்முறையாளனாக இருக்கிறேன், ஆனால், வருங்காலத்தில் நான் அஹிம்சாவாதி யாகிவிடுவேன்' என்று கூறுவதில், 'உள்ளதாக' இருக்கும் வன்முறையிலிருந்து அஹிம்சாவாதியாக 'ஆகிவிடுதல்' என்பது ஒரு பரிணாம வளர்ச்சி. அவ்வளர்ச்சிக்கு காலமும் இடைவெளியும் தேவைப்படுகிறது. 'உள்ளது'-திலிருந்து 'எதுவாக இருக்க வேண்டும்' என்ற நிலையை அடைவதற்கான இயக்கமாக இருக்கும் பரிணாம வளர்ச்சி, முரண்பாட்டிற்கான காரணங்களில் ஒன்றாக இருக்குமா? காலம் என்பது ஒரு காரணியாக இருக்கக் கூடுமா?

மேலும், இருமை நிலைப்பாடு என்பது முரண்பாட்டிற்கான காரணங்களில் ஒன்றாக இருக்கக்கூடுமா? புறத்தே பௌதீகரீதியில், வெளிச்சம் / இருட்டு, ஆண் / பெண் என்பதுபோல இருமை நிலை உள்ளது. நல்ல தரமான துணி / தரம் குறைந்த துணி, சிறந்த பாதுகாப்பான கார் / மோசமான கார் என்று நல்லது / கெட்டது என்று இரு கூறுகள் உள்ளன. பௌதீக ரீதியில் வேற்றுமைகள் இருப்பது தெரிந்ததே. மனோரீதியில், உள்முகத்தில், அவ்வாறிருப்பின், எதனால் இருமை நிலை உண்டானது என்று வினவுகிறோம்.

எனக்குள் வன்முறை இருக்கிறது. நான் அவ்வாறிருக்கக் கூடாது என்று நினைப்பதால், அஹிம்சை என்ற ஒன்றைக் கண்டுபிடிக்கிறேன். இந்த நாட்டில், அஹிம்சை, மிகவும் நாகரீகமான ஒன்றாக இருக்கிறது. அர்த்தமற்ற இந்த அஹிம்சை நாகரீகம் உலகம் முழுவதும் பரவிக்கொண்டிருக்கிறது. வன்முறை என்பது ஒரு நிஜம், மெய்ம்மை. அஹிம்சை என்பது பொய்ச்செய்தி, கதையளப்பு. 'உள்ளது' மட்டுமே இருக்கிறது. 'என்னவாக இருக்க வேண்டும்' என்பதை ஒருவர் கழித்துக்கட்டி விடலாம். அப்போது இருமைநிலை இருப்பதில்லை. 'உள்ளது'-திலிருந்து விலகி, 'நான் அப்படியிருக்கக் கூடாது', 'நான் இப்படி இருக்கவேண்டும்', 'நான் இப்படி இருப்பேன்' என்பன போன்ற கருத்துகள் தோன்றும் அக்கணத்திலேயே, முரண்பாடுகள் தொடங்கிவிடுகிறது.

உளரீதியில் 'உள்ளது' மட்டுமே இருக்கிறது, அதன் எதிர்மறை இருக்கவில்லை என்பதை அறிவுபூர்வமாகத் தெரிந்துகொண்டீர்களா அல்லது மெய்யாகவே உணருகிறீர்களா? 'உள்ளது' மட்டுமே இருக்கும் நிலையில், நீங்கள் அதனை மட்டும் எதிர்கொள்கிறீர்கள்,

'என்னவாக இருக்கவேண்டும்' என்பதற்கு இடமில்லை. நான் வன்முறையாளனாக இருக்கிறேன். இந்நிலையில் அஹிம்சை என்ற கருத்து, பாசாங்குத்தனத்தையும், போலித்தனத்தையும் கொண்டதாய் இருக்கிறது. அஹிம்சை என்ற கருத்திற்கு எந்த மதிப்பும் இல்லை. ஏனென்றால், அஹிம்சாவாதியாக 'ஆகி'விடும் என் முயற்சியில், நான் எந்நேரமும் ஹிம்சையின் விதைகளை விதைக்கிறேன். ஆக, வன்முறை மட்டுமே உள்ளது.

வன்முறை என்றால் என்ன, வன்முறையின் இயல்பு எத்தகையது? வன்முறை எவ்விதக் கட்டமைப்புடன் உள்ளது? கோபப்படுவதோ, பிறரைக் கொல்வதோ அடிப்பதோ மட்டுமே வன்முறை அல்ல. மிருகங்களைக் கொல்வதும் இயற்கையை அழிப்பதும்கூட வன்முறையே. உண்மையில் உங்களிடம் இல்லாத பண்பை, இருப்பதாகக் காட்டிக்கொள்ளும் போலித்தனம், சுயநலத்திற்காக இணங்கிப்போதல், கபட வேஷம் போடுதல் ஆகியவையும் வன்முறையே.

உடல்ரீதியாக வன்முறையால் வெடிக்கும் கோபம் மற்றும் கோபத்தின் வெளிப்பாடுகளை மட்டும் பார்க்காமல், வன்முறையின் முழுமையான உட்பொதிவை யும் நோக்க உங்களுக்கு இயலுமா? முழுமையாகப் பார்த்த அந்த உணர்வை நழுவவிடாதீர்கள், அப்படியே ஏந்திக் கொள்ளுங்கள், அதை அடக்கிவிடவோ, அதிலிருந்து தப்பிக்கவோ, அதைத் தாண்டிச் செல்லவோ முயற்சி செய்யாமல், அரியதோர் ஆபரணத்தை எவ்வாறு உற்றுநோக்குவீர்களோ, அப்படி அதைப் பாருங்கள். அவ்வாறு பார்க்கும்போது, உங்களிலிருந்து வேறுபட்ட ஒன்றைப் பார்ப்பதுபோல் பார்க்கிறீர்களா? அல்லது, நீங்கள் என்ன கண்டுணர்கிறீர்களோ, அதுவாகவே நீங்கள் இருக்கிறீர்களா?

நான் வன்முறையாளனாக இருக்கிறேன். என்னிடமுள்ள வன்முறையை, என்னிலிருந்து வேறுபட்ட ஒன்றாகக் கருதுகிறேன். ஆகவே, வன்முறையை வேறொன்றாக, அஹிம்சையாக, மாற்ற முயற்சி செய்கிறேன். ஆனால், உண்மையில் நான், வன்முறையிலிருந்து வேறுபட்டு நிற்கவில்லை, நான்தான் வன்முறை. பேராசை என்பது என்னில் ஒரு பகுதி. பேராசை, பொறாமை, வெறுப்பு போன்ற என் குணங்களிலிருந்து நான் வேறுபட்டவன் அல்ல, நானேதான் அவை. என் துயரம், என்னிலிருந்து வேறுபட்டதல்ல.

என் கோபம், பொறாமை, தனிமை, துயரம் போன்றவற்றை என்னிலிருந்து பிரித்து வைத்துவிட்டேன். காரணம், என்னை விட்டுப்பிரித்து அவற்றை தனியாக நிற்கவைத்தால்தான், நான் அவற்றை கட்டுக்குள் வைக்கமுடியும், வடிவமைக்க முடியும் அல்லது அவற்றிலிருந்து தப்பித்து ஓடமுடியும் என்று நினைக்கிறேன். ஆனால், நானே அவைகளாக இருக்கும்போது, என்னால் அவற்றை நோக்க மட்டுமே முடியும், எவ்வித நடவடிக்கையும் எடுக்க முடியாது. ஆக, உண்மையில், காண்பவரே, காட்சிப்பொருள், எண்ணுபவரே எண்ணம், அனுபவிப்பவரே அனுபவம் - இதுதான் உண்மை. இரண்டும் வெவ்வேறானவை அல்ல.

எங்கெல்லாம் பிரிவினை உள்ளதோ, அங்கெல்லாம் முரண்பாடு இருக்கும். மனோரீதியாக, நான் என் மனைவியை விட்டுப்பிரிந்திருந்தால், முரண்பாடு கட்டாயம் தோன்றும். எனவே, காலம், பரிணாமம் மற்றும் வேற்றுமைப்படுத்தும் மனோபாவம் ஆகியவை முரண்பாட்டிற்கான காரணிகளாக உள்ளன. 'நான், எனது' என்ற எண்ணம்தான் அந்தக் காரணிகள்

அனைத்தும். ஆக, அடிப்படையில் 'நான், எனது' என்ற எண்ணமே, முரண்பாடுகளுக்கான காரணமாய் அமைகிறது. 'நான், எனது' என்ற எண்ணத்திலிருந்து நான் எப்படி விடுபடுவது?' என்ற கேள்வி, தவறான ஒன்றாகும். முரண்பாட்டின் மொத்த இயக்கத்தையும் நோக்குங்கள். அதை உங்களுக்குப் பிடித்த முறையில் மொழிபெயர்ப்பு செய்யாதீர்கள், அதைப் புரிந்துகொண்டு விடவேண்டும் என்று முயற்சிக்காதீர்கள்.

வானத்திலும், கடலிலும் நிகழும் பிரமிப்பூட்டும் மேகங்களின் இயக்கத்தையும், அலைகளின் இயக்கத்தையும் பார்ப்பதுபோல், முரண்பாட்டின் முழு இயக்கத்தையும் பாருங்கள். அவ்விதமாக நோக்கும்போது, நீங்கள் பகுத்தாய்வதற்கு தேவையே இல்லாமல், முரண்பாடே அதன் உள்ளடக்கத்தை உங்களுக்குச் சொல்லும். முரண்பாட்டுடன் இருக்கும் மனம், தனக்குள்ளும் தன்னைச் சுற்றியும் சீர்குலைவைக் கொண்டுவருவது தவிர்க்க முடியாதவொன்று. முரண்பாடுகளிலிருந்து முற்றிலுமாக, முழுமையாக விடுதலை பெறுவதென்பது சாத்தியம்தானா? அத்தகைய விடுதலை இருக்கும்போது, அங்கு ஒழுங்கு இருக்கும், அங்கு அமைதி இருக்கும், அங்குக் கருணை இருக்கும். அந்தக் கருணைதான் நுண்ணறிவு.

*மதராஸ், 26.12.1982*

■■

# 11

# காலம்

நாம் இங்குக் கோட்பாடுகள் பற்றியோ, ஊகிக்க முயலும் தத்துவங்களைப் பற்றியோ, கற்பனையில் விளைந்த ரம்யமான வாழ்க்கைப் பற்றியோ, கலந்துரையாடவில்லை. நாம் அனுபவிக்கும் அன்றாடப் பிரச்சினைகளைப் பற்றி பேசிக்கொண்டிருக்கிறோம். நம் வாழ்க்கை, மிகவும் சிக்கலானதாய் உள்ளது. கருவறையிலிருந்து கல்லறைவரை நாம் எதிர்கொள்ளும் பிரச்சினைகளைப் பற்றி நண்பர்களாக நாம் பேசிவருகிறோம். முரண்பாடுகள் ஏதுமின்றி, சச்சரவுகள் ஏதுமின்றி வாழ முடியுமா என்று பார்த்தோம். நெருங்கிய உறவோ அல்லது வெறும் அறிமுகம் மட்டுமோ, உறவுகள் எவ்வகைத்தாயினும், அவை எதிலும் சச்சரவின் நிழல்கூட படாமல், பயங்கரமான இந்த நவீன உலகில் நம்மால் வாழ முடியுமா என்று விசாரணை செய்தோம். சச்சரவுகள், ஒழுங்கீனத்தைக் கொண்டுவருகின்றன. நம் வாழ்க்கை ஒழுங்கீனத்தில் உழலும்போது, நம்மால் நம் சமுதாய அமைப்பில், உளரீதியான அடிப்படை புரட்சியை கொண்டுவர முடியாது.

இம்மாலைப்பொழுதில், மிகவும் சிக்கலான பிரச்சினைகளைப் பற்றி நாம் ஆராயப்போகிறோம்.

காலம், விருப்பம், பயம், களிப்பு மற்றும் உலக மாந்தர் அனைவருக்கும் விதிக்கப்பட்ட நியதியாக இருக்கும் துக்கம் என்றாவது முடிவிற்கு வருமா போன்ற பல பிரச்சினைகளை நாம் ஆராய வேண்டியிருக்கிறது. எதைப்பற்றி நீங்கள் சிந்திக்க வேண்டும் என்ற முறையில் பேச்சாளர் உங்களை வழிநடத்தப் போவதில்லை. பேச்சாளர் கூறுவதை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் அவர் உங்களை நிர்பந்திக்கவில்லை. நாம் இங்கு ஒருங்கிணைந்து இப்பிரச்சினைகளை ஆராயப்போகி றோம். பேச்சாளர் கூறுவதை கேட்டபின், உங்கள் சம்மதத்தையோ, மறுப்பையோ நீங்கள் தெரிவிப்பதாக இல்லாமல், நாம் சேர்ந்தே விசாரணை செய்யலாம்.

காலம் என்பதைப் புரிந்துகொள்வது மிகவும் இன்றியமையாத ஒன்றாக இருப்பதால், காலத்தின் இயல்பைப் பற்றி நாம் இப்போது பார்க்கலாம். துக்கம் இருக்குமிடத்தில், அன்பும், காருண்யமும், நுண்ணறிவும் இல்லாமல் போய்விடுகிறது. எனவே, துக்கம் என்றாவது முடிவிற்கு வருமா என்பதைப் பற்றியும் விசாரணை செய்யவேண்டும். மிகவும் சிக்கலான விஷயமாக இருக்கும் விருப்பம் பற்றியும் பேச வேண்டும்.

இவ்விசாரணைகளை மேற்கொள்ள பேச்சாளரும், நீங்களும் ஒரே தளத்தில், ஒரே நேரத்தில், ஒரே தீவிரத் தன்மையோடு சந்திப்பது என்பது மிகவும் இன்றியமையாத தேவையாகும். அவ்வாறு நிகழவில்லை யென்றால், நமக்கிடையே தொடர்பு இருப்பதற்கு வாய்ப்பே இல்லை. பேச்சாளர் கூறுவதை மட்டுமல்லாமல், மற்றும் வேறு யார் சொல்வதையும் முழுவதுமாக புரிந்துகொள்வதற்கு, அறிவுபூர்வமாக மட்டும் புரிந்துகொள்ளாமல் இதயப்பூர்வமாகவும்

புரிந்துகொள்ளல் அவசியம். 'இதயம்' என்ற வார்த்தை, வெறும் உடலுறுப்பை மட்டும் குறிப்பதாக இல்லை. நுண்ணறிவுடன் கூடிய மனதையும் தனக்குள் கொண்டிருக்கும் அதிசயமாய் இருப்பது இதயம்.

நாம் பிறர் சொல்லும் கருத்துகளைக் கேட்கிறோம், வாசகங்களைக் கேட்கிறோம் - சிலவற்றை ஏற்றுக்கொள் கிறோம், சிலவற்றை மறுக்கிறோம், கருத்துகளைப் பகுத்துப் பார்க்கிறோம், ஊகிக்கின்றோம், இன்னவாறு பலவும் செய்கிறோம். ஆனால், ஒரே தளத்தில், ஒரே நேரத்தில், ஒரே தீவிரத்தன்மையோடு நம்முடன் பேசுபவரை சந்திப்பதில்லை. அப்படிச் சந்தித்தால், அங்கு உண்மையான, ஆழமான, பரிபூரணத் தொடர்பு நிலவும். அந்நிலையில், தொடர்புகொள்ள வார்த்தைகள் தேவைப் பட்டாலும், அங்கு வார்த்தைகளுக்கு முக்கியத்துவம் ஏதுமில்லை.

வார்த்தைகளுக்கு வரையறுக்கப்பட்ட அர்த்தம் இருக்கிறது. இலக்கணப்படி அமைந்த சொல்கட்டமைப் போடு கூடியதாய் வாசகங்கள் இருக்கவேண்டும். ஆனால், மற்றவரோடு தொடர்பில் சந்திக்க, இலக்கணங்கள் ஏதுமிருக்கக் கூடாது, தடைகள் ஏதுமிருக்கக்கூடாது. இவ்வாறு சொல்வதின் பொருள் என்னவென்றால், உங்களுக்கும் பேச்சாளருக்கும் எவ்விதமான பாரபட்சங் களோ, விருப்புவெறுப்புகளோ இருக்கக்கூடாது. மேலும், எந்தவொரு தத்துவ கோட்பாட்டிற்கோ, தீர்மானத்திற்கோ கடமைப்பட்டவராகவும் நாம் இருக்கக் கூடாது, சுதந்திரமாக நாம் சந்தித்து தொடர்புகொள்ள வேண்டும் என்பதே. சுதந்திரமாகச் சந்திக்க, அபரிமித மான நுண்ணறிவும், மிக அதிக அளவில், தேடலும் தேவை.

இம்மாலைப்பொழுதில், நாம் ஒரே தளத்தில் சந்திக்கப்போகிறோம் என நம்புகிறேன். நீங்கள் உங்கள் வாழ்க்கையை எப்படி நடத்தவேண்டும் என்று பேச்சாளர் சொல்லப்போவதில்லை - அதிகாரம் எதுவும் அவருக்கில்லை. ஒரு பிரச்சினையை இங்கு ஒருசேர ஆராயும்போது, அந்தப் பிரச்சினைதான் பேச்சாளருக்கும், உங்களுக்கும் முக்கியமானது. அதைப் பற்றி மட்டுமே நாம் அக்கறை கொள்கிறோம். நாம் இங்கு ஆராயப்போவது புறத்தே நிகழ வேண்டிய புரட்சியைப் பற்றி அல்ல. நம் அக்கறையெல்லாம் மனோரீதியானப் புரட்சியைப்பற்றி – அகத்தே நிகழவேண்டிய அடிப் படையான, புரட்சிகரமான, மாறுதலைப் பற்றி. ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, துக்கம், வலி, கலக்கம், பயம், தனிமை, பீதி மற்றும் அலைமோதும் ஆசைகளோடு மனித இனம் வாழ்ந்து கொண்டிருக்கிறது. மேலும், காலம் முற்றுப்பெறுமா என்ற கேள்வியை, மனிதன் என்றுமே கேட்டுவருகிறான்.

காலம் என்றால் என்ன? அடிப்படையில், பிரிவினை, பகிர்மானம், பரிணாமம், சாதனை என்பதாக காலம் பொருள்படுகிறது; இங்கிருந்து அங்கு சென்றடைதல், நேற்று - இன்று - நாளை, சூரியன் உதித்தல், சூரியன் மறைதல், அழகான பௌர்ணமி இரவு - போன்றவைகளில் காலம் செயல்படுகிறது. காலம் என்பது மிகமிகச் சிக்கலான விஷயம். அதைப் புரிந்துகொள்ள பொறுமை தேவைப்படுகிறது. பொறுமை என்பது காலத்திற்கு உட்படாதது, காலமற்றது. ஆனால், பொறுமையின்மை, காலத்தைக் கொண்டிருக்கிறது.

காலத்தின் தன்மையைப் பற்றி ஆராய, மிகுந்த பொறுமை வேண்டும். 'நீங்கள் சொல்வது புரிகிறது.

மேலே தொடருவோம்' என்று அவசரப்பட முடியாது. நாம் காலத்தின்படி வாழ்கிறோம். நம் வாழ்க்கையை, கால இயக்கத்தின்படி, வகுத்துவிட்டோம். இயக்கம் என்பது காலம். இங்கிருந்து அங்குச் சென்றடைவதற்கு காலம் தேவைப்படுகிறது. ஒரு மொழியைக் கற்றுக்கொள்ள காலம் தேவைப்படுகிறது. விஷயஅறிவை சேகரிக்க, அனுபவங்களைப் பெற, இன்பம் துய்க்க, பயமூட்டுவதையோ களிப்பூட்டுவதையோ எதிர்பார்த் திருக்க, நேற்றைய நினைவலைகளோ, அல்லது, முந்தைய வருடங்களின் நினைவலைகளோ, நிகழ்காலத்தை சந்தித்து, சிறிதே மாற்றமடைந்து எதிர்காலத்தை நோக்கி பயணிக்க - ஆகியவை அனைத்திற்குமே, காலம் தேவைப்படுகிறது. எழுத்தர், மேலதிகாரியாவதற்கும்,. செயல்திறன் எவ்வகைத்தாயினும், அதை வளர்த்துக்கொள்வதற்கும் காலம் தேவைப்படுகிறது. வழக்கமான அனுபவங்களி லிருந்து முற்றிலும் மாறுபட்டதோர் அனுபவத்தைப் பெற்றிட விழையும் ஆர்வமும், அதற்கான முயற்சியும் கூட காலம்தான்.

உளரீதியான காலம் என்ற ஒன்று உண்டா, என்ன? அதாவது, உள்ளதாக இருக்கும் வன்முறையிலிருந்து, அஹிம்சைக்கு மாற காலம் தேவைப்படுகிறது என்றும் ஒரு இலட்சியத்தை அடைய செய்யப்படும் முயற்சியில் காலம் தேவைப்படுகிறது என்றும் கருதப்படுகிறது. காலம் என்பதற்கு பௌதீகரீதியிலும் உளரீதியிலும் ஏற்படும் பரிணாம வளர்ச்சி என்று பொருள். எதிர்காலத்தில், 'உள்ளது'-திலிருந்து முற்றிலும் வேறுபட்ட மற்றொன்றாக பரிணாம வளர்ச்சி அடையப்போவதாக, ஒருவர் கற்பன்ன செய்கிறார், இல்லை, தவறாக எண்ணிக் கொள்கிறார். புரிதலைப் பெறுவதற்கும் ஞானவொளி அடைவதற்கும் காலம் தேவைப்படுகிறது என்ற இக்கருத்தைக் குறித்து, பேச்சாளர், வினா எழுப்புகிறார்.

வார்த்தையளவில் மட்டும் புரிந்துகொள்ளாமல், காலத்தின் தன்மையை நாம் அனைவரும் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும். காலம் என்பது கடந்தகால ஞாபகங்கள். கடந்த காலம் எனும் நோக்குபவர், தற்சமயம் நிகழ்ந்துகொண்டிருப்பதைப் பார்க்கிறார் - தன்னுடைய கடந்தகால அனுபவங்கள் மற்றும் தன்னுடைய நிலைமை ஆகியவற்றிற்கு ஏற்றவாறு நிகழ்கால நிகழ்வை மொழிபெயர்ப்பு செய்து பார்க்கிறார். காலம் என்பது, அடிப்படையில் காலகட்டங்களாக இருக்கும் பிரிவுகள் என்பதை நாம் மனதில் நிறுத்திக்கொள்ள வேண்டும். காலகட்டப் பிரிவுகள், காலப்பங்கீட்டை குறிப்பாக உணர்த்துகிறது.

ஒரு செயல்திறனை ஒருவர் வளர்த்துக்கொள்ள தேவைப்படும் காலம், மற்றும், அறிவியலாளர்கள், பருப்பொருட்களைப் பற்றி மிகவும் நுணுக்கமாக, துல்லியமாக அறிந்துகொள்ள, அவர்களுக்கு, மிக அதிக அளவில் தேவைப்படும் காலம் என வெளிப்புற மாற்றங்களைக் கொணர, காலம் இன்றியமையாதது என்று காண்கிறோம். இதையே அளவுகோலாக வைத்துக்கொண்டு, தேசியத்தைப் பார்க்கிறோம்.

இன்றைய காலகட்டத்தில், உலகம், பல நாடுகளாகப் பிரிந்து, மக்கள் பல்வேறு தேசத்தவராய் இருக்கும் நிலை உள்ளது. காலப்போக்கில், தேசியம் மெதுமெதுவே மறைந்து, மக்கள், உலக மாந்தராகி, பரந்துவிரிந்த உலகளாவிய தொடர்புடன் இருப்பார்கள், அந்தக் காலகட்டம் வரும் என்று எண்ணுகிறோம். உலகளாவிய தொடர்பு கொண்டிருக்க, நாம் அதற்கான திசையில் பரிணமிக்க வேண்டுமென்றும் அதற்குக் காலம் தேவைப்படுகிறது என்றும் கற்பனை செய்து

கொள்கிறோம். ஆக, அடிப்படையில், ஒரு பிரிவினை செயல்முறையாக, காலம் உள்ளது.

வெளிப்புறத்தில், பௌதீகரீதியில், காலம், தேவையான ஒன்றாக இருக்கிறது. உதாரணமாக, ஒரு சிறிய விதை முளைத்து வளர்ந்து பெரிய மரமாவதற்குக் காலம் தேவைப்படுகிறது. ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கும் மேற்பட்ட வயதுடைய மரம் ஒன்று, கலிபோர்னியாவில் இருக்கிறது. கணக்கிலடங்கா எண்ணிக்கையில், மழை, புயல், மின்னல், காட்டுத்தீ ஆகியவற்றை அம்மரம் இத்தனை ஆண்டுகளில் பார்த்திருக்கும் - அது காலத்தின்படியான வளர்ச்சியே.

கணிதத்தைக் கற்கவோ, பௌதீகத்தைக் கற்கவோ, ஜெட் விமானத்தை ஓட்டவோ, அவற்றைப் பற்றிய விஷயஅறிவைச் சேகரித்து நம் செயல்திறனை வளர்த்துக் கொள்ள வேண்டும், அதற்குக் காலம் தேவைப்படுகிறது. இவ்வகையில் தேவைப்படும் காலத்திலிருந்து தப்பித்துக் கொள்ளவோ, அல்லது, அதற்கு முற்றுப்புள்ளி வைக்கவோ முடியாது; அவ்வாறு செய்ய முயற்சிப்பது, சிறிதும் அர்த்தமற்ற, முட்டாள்தனமான செயலாகும். கடமையில் முனைப்பும், அக்கறையும் காட்டி, அதன் மூலம், ஒரு தொழிலாளி, மேலதிகாரி ஆகலாம் - இதில் காலம் உள்ளது. இவ்விடத்திலிருந்து அவ்விடத்திற்குச் செல்வது, சிறிய செடி, மிகப் பெரிய மரமாக வளர்வது, கோடைக்காலம், பனிக்காலம், கார்காலம், இளவேனிற் காலம் ஆகிய பருவ காலங்கள் போன்றவையெல்லாம் உணர்த்துவது, காலத்தின் பிரிவுகளையே.

ஒரு உணர்ச்சியிலிருந்து, அல்லது, புலன்களின் பிரதி உணர்ச்சியிலிருந்து, பிறிதொன்றாக மாற, காலம் தேவைப்படுகிறது என்ற நம் எண்ணத்தைப் பற்றியும்,

உளரீதியான காலம் இருக்கிறதா என்பது பற்றியும் இப்போது நாம் ஆராயலாம். நம்மிடமிருக்கும் வன்முறையும், பொறாமையும் அகல, கால அவகாசம் தேவை என்று நினைக்கிறோம். உளரீதியான காலம் இருக்கிறதா என்று நாம் வினா எழுப்புகிறோம். பௌதீக ரீதியில் அவசியமாய் இருக்கும் காலத்தைப் பற்றி நாம் பேசவில்லை. ஒரு வீடு கட்ட காலம் தேவைப்படும். கற்றுத்தேற, காலம் தேவைப்படும். ஆனால், இவற்றை விட மிக அதிக அளவில் முக்கியமான, இன்றியமையாத விஷயத்தைப் பற்றி நாம் பேசிக்கொண்டிருக்கிறோம்.

'உள்ளது' என்பது நம் விருப்பப்படி 'எவ்வாறு இருக்க வேண்டுமோ, அதுவாக' மாற, காலம் அவசியம் தேவை என்ற கருத்திற்கு அல்லது கோட்பாட்டிற்கு, அல்லது, மாயத் தோற்றத்திற்கு கட்டுண்டவர்களாய், தளைபட்டு நாம் இருக்கிறோம். அடிப்படையான, பரிபூரண புரட்சிகரமான மாற்றத்திற்கு காலம் அவசியம்தானா என்று நாம் வினவுகிறோம்.

காலம் என்பது பிரிவினை என்று சொன்னோம். 'நான் தற்சமயம் இப்படி இருக்கிறேன்' என்றும் 'நான் அப்படி ஆகிவிட வேண்டும்' என்றும் காலம் பிரிந்திருப்பதால், அங்குப் பிரிவினை உள்ளது. 'நான் அப்படி ஆகிவிட வேண்டும்' என்பதற்கு காலம் தேவைப்படுகிறது என்ற விஷயத்தை எதிர்த்து, இங்கு நாம் வினா எழுப்புகிறோம். 'குறிப்பிட்ட ஒன்றாக ஆகிவிடுதல் அல்லது குறிப்பிட்ட அனுபவத்தைப் பெறுதல் என்றெல்லாம் உண்மையில் இருக்கிறதா?' என்று நாம் கேட்கிறோம்.

ஞானநிலை எய்துவது பற்றி பலரும் பேசுகிறார்கள். ஞானநிலை எய்த, காலம் தேவைப்படுமா என்ன? காலம்

தேவைப்படும் என்ற அடிப்படைக் கருத்தையே நாம் ஐயுற்று வினா எழுப்புகிறோம். அனைத்து சித்தாந்தங் களும், மற்ற நூல்களைவிட எவ்விதத்திலும் புனிதமாக இல்லாத, ஆனால், புனித நூல்கள் என்று கருதப்படும் நூல்களும் ஞானநிலையை எட்ட, காலம் மிகவும் அவசியம் என்று கூறுகின்றன. கடவுளை அறிய எல்லா அளவீடுகளுக்கும் அப்பாற்பட்ட அனுபவமாய் இருக்கும் ஒன்றை உணர்ந்துகொள்ள, காலத்தால் தீண்டப்படாத மனப்பாங்கினைப் பெற, பல்வேறு ஒழுங்குக்கட்டுப்பாடு களை கடைபிடிக்க வேண்டும், பலவிதமானப் பயிற்சிகளை செய்ய வேண்டும் என்று புனித நூல்கள் அறிவுறுத்துகின்றன.

உளரீதியான காலம் என்று ஏதாவது இருக்கிறதா என்ற விஷயத்தை நாம் மிகவும் நுணுக்கமாக ஆராய வேண்டும். உளரீதியான காலம் இருக்கிறது என்று நீங்கள் ஏற்றுக்கொள்ளும் அந்தத் தருணத்திலேயே, பிரிவினையாக இருக்கும் காலம், போராட்டத்தைக் கொண்டுவந்து விடுகிறது. நாம் முரட்டுத்தனத்தோடு இருக்கிறோம். மேலும், உள்ளதற்கு நேர்மாறாக இருக்க வேண்டும் என்றும் நினைக்கிறோம். எங்கு எதிர்மறை உள்ளதோ, அங்குப் பிரிவினை இருக்கும், அதன் காரணமாய், சச்சரவுகள் தோன்றும். ஆக, காலம், போராட்டத்திற்குக் காரணமாய் அமைகிறது.

நான் பேராசைக்காரன். பேராசை அற்றவனாக மாற, காலம் தேவைப்படும் என்று கருதுகிறேன். எங்குக் காலம் நுழைகிறதோ, அங்கெல்லாம் போராட்டம் இருக்கும். உள்ளதிலிருந்து மாறி, வேறொன்றாக 'ஆதல்' என்ற செயல்பாட்டிற்கு முடிவேதும் கிடையாது. 'காலத்தின் தலையீடே இல்லாத வகையில், வன்முறையை

முடிவிற்குக் கொண்டுவருதல் சாத்தியமா?' என்று நாம் வினவுகிறோம்.

போராட்டத்தை முடிவிற்குக் கொண்டுவர, காலம் தேவை என்று சொல்லப்படுகிறது. ஆனால், அதற்கு முற்றிலும் மாறுபட்ட கருத்தை நாம் தெரிவிக்கிறோம். 'நான்' என்றும், 'சிறப்பு, மேன்மை அல்லது வேறு எதையோ ஒன்றை அடைந்துவிடப் போகிற நான்' என்றும் பிரிவுற்று இருக்கும் நிலை, காலத்தின் செய்முறையாக உள்ளது. பிரிவு என்பது நிஜத்தில் உள்ளதா என்ன? நான் வன்முறையாளனாக இருக்கிறேன் என்ற விஷயம் மட்டுமே உண்மையில் என்னிடம் உள்ளது. நான் அடைய விரும்பும் அஹிம்சை, நிஜத்தில் இருப்பு கொண்டிருக்கவில்லை. அஹிம்சை என்பது ஒரு கோட்பாடு, எண்ணத்தின் வடிவமைப்பு. அக்கோட்பாட்டினால், வன்முறையை புரிந்துகொள்ளவோ, முடிவிற்குக் கொண்டுவரவோ இயலாது.

இலட்சியம் கொண்டிருப்பது என்பது ஒரு தப்பித்தல் வழிமுறை. நீங்கள் பல இலட்சியங்களைக் கொண்டிருக்கிறீர்கள். எந்தச் சந்தர்ப்பத்திலும் உங்களால் இலட்சியத்தை நிறைவேற்ற முடிவதில்லை. காரணம், இலட்சியங்கள் யாவும் வெறும் எண்ணத்தின் கண்டுபிடிப்புகள். 'நான் 'இது'வாக இருக்கிறேன் - நான் 'அது' வாக ஆகிவிடுவேன்' - இது ஒரு கணிப்பு, ஒரு அளவீடு. இதில் உளரீதியான காலம் குறிப்பாக உணர்த்தப்படுகிறது. 'உளரீதியான காலம்' என்ற மாயையில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். உளரீதியான காலம் என்பதின் மெய்ம்மையைப் பற்றி நாம் கேள்வி எழுப்புகிறோம். 'உள்ளது' மட்டும்தான் இருக்கிறது, பேராசை மட்டும்தான் இருக்கிறது,

வன்முறை மட்டும்தான் இருக்கிறது, யுத்தம் மட்டும்தான் இருக்கிறது.

இவ்விஷயத்திற்குள் மிகவும் கவனத்துடன் செல்லலாம். நான் வன்முறையாளனாக இருக்கிறேன். ('நான்' என்று குறிப்பிடும்போது, மனித குலத்தையே குறிப்பதாகத்தான் பொருள்படும்). நீங்கள் வன்முறை யாளனாக இருக்கிறீர்கள், மாந்தர் அனைவருமே வன்முறையாளர்கள். 'நமக்கிருக்கும் வன்முறை உடனே முடிவிற்கு வருமா?' என்று கண்டுபிடிப்பது மிகவும் அவசியமல்லவா? 'நான் அஹிம்சாவாதியாக மாறுவேன்' என்பதில் காலகட்டம் தொனிக்கிறது. அந்தக் காலகட்டத்தில், வன்முறையின் விதைகளை நீங்கள் விதைக்கிறீர்கள் என்பது தெள்ளத் தெளிவு. வன்முறை, பேராசை மற்றும் இன்ன பிறவற்றையும் உடனடியாக, தாமதமின்றி முடிவிற்குக் கொண்டுவர முடியுமா?

வன்முறை என்றால் என்ன? கோபம், மற்றவரைத் தாக்கி காயப்படுத்துவது, வெறுப்பு காட்டுவது, குற்றங்குறை சொல்வது, மனதை நோகடிப்பது ஆகியவை மட்டும் வன்முறை அல்ல. போலித்தனம் மற்றும் இணங்கிப் போதல் போன்றவைகூட வன்முறையே. மேற்கூறியவை, வன்முறையின் மொத்த இயக்கமாக உள்ளது. அந்த இயக்கம் முழுமையாக முடிவுறுமா என்பதைக் காண, காலம் என்பது பிரிவினை என்பதை ஒருவர் புரிந்துகொள்ள வேண்டும்.

நிஜத்தில் உள்ளதையும் 'எப்படி இருக்க வேண்டும்' என்ற இலட்சியத்தையும் தனித்தனியாக எண்ணம் பிரித்துவிடுகிறது. 'இன்று நான் மூடன். ஆனால், வரும் நாட்களில் ஞானத்தெளிவு பெற்றவனாகி விடுவேன்' -

இங்கு, எண்ணம், காலப்பிரிவினை செய்கிறது. வன்முறையையோ, பேராசையையோ, அல்லது நீங்கள் முடிவுறச் செய்ய விழையும் வேறொன்றையோ, அவை மீண்டும் தலையெடுக்காத முறையில், உடனடியாக முடிவுறச் செய்தல் சாத்தியம்தானா என்று கேட்கிறோம்.

உடனடியாக முடிவுறச் செய்வது எப்படி என்பதைக் கண்டுபிடிக்க உங்களுக்கு ஆர்வம் உள்ளதா? ஆர்வம் இருப்பின், விலையாக என்ன தருவீர்கள்? பணமோ மற்ற எதையாவது கொடுத்து தானே ஒன்றை வாங்க முடியும்? 'ஆம், பேராசையை முடிவுறச் செய்ய விரும்புகிறேன்' என்று சொன்னால் மட்டும் போதாது. அதை முடிவுறச் செய்ய, நீங்கள் சிந்திக்க வேண்டும், நீங்கள் அதற்காக உழைக்க வேண்டும், தீவிரத்துடன் இருக்க வேண்டும். மேம்போக்காக ஆர்வம் இருப்பதாகச் சொன்னால் போதாது. அதனால்தான், ஆரம்பத்திலேயே, 'நாம் ஒரே தளத்தில், ஒரே நேரத்தில், ஒரே தீவிரத்தன்மையோடு சந்திக்க வேண்டும்' என்று பேச்சாளர் வலியுறுத்திக் கூறினார். அவ்வாறிருப்பின், வெறும் வார்த்தையளவில் தொடர்பு என்றில்லாமல், நம் தொடர்பில் மிகவும் ஆழமான சிந்தனை பரிமளிக்கும். அந்நிலையில் நெஞ்சத்தினுள் மனமும் இணைந்து, அதாவது, அன்புடன் இயங்கும் நுண்ணறிவுடன் நாம் தொடர்புகொள்வோம்.

வன்முறையை நீங்கள் எவ்வாறாகப் பார்க்கிறீர்கள்? வன்முறை என்பது புலன்களின் எதிர்வினை. நீங்கள் என்னைக் காயப்படுத்தினீர்கள். அதனால் என்னைப் பற்றிய என் கருத்துருவம் காயப்பட்டு போனது. நீங்கள் என் உடலைக் காயப்படுத்தாவிட்டாலும், என் உள்ளத்தைக் காயப்படுத்திவிட்டீர்கள். நான் என்னைப்பற்றி மிகப்பெரிய மனிதன் என்றும், சிறந்த

பேராசிரியர் என்றும் எண்ணிக் கொண்டிருக்கிறேன். அந்த எண்ணம், ஒரு பிம்பமாக, ஒரு கருத்துருவமாக எனக்குள்ளது. அந்தப் பிம்பம், காயப்பட்டுவிட்டது. அந்தக் காயம் நீங்க, அந்த ரணத்திலிருந்து நான் வெளிவர 'சிறிது கால அவகாசம் கொடுங்கள்' என்று கேட்கிறேன்.

'மனதளவில் காயப்படாமலிருக்க நான் முயற்சிப் பேன். நான் விழிப்புடனிருப்பேன். நான் கவனத்துடன் பிறர் சொல்வதைக் கேட்பேன்' என்றெல்லாம் சொல்கிறீர்கள். இவையனைத்தும் நீங்கள் செய்யும் முயற்சிகள். அம்முயற்சிகள் யாவும் காலத்தின் பிரிவுகள் கொணர்ந்தவையாக உள்ளன. திரும்ப வரவே முடியாத அளவில், வன்முறையை முழுவதுமாக முற்றுப்பெறச் செய்வது சாத்தியம்தானா? இதற்கானப் பதிலைக் காண்பதற்காகத்தான், 'வன்முறையை நீங்கள் எவ்விதமாக நோக்குகிறீர்கள், கண்டுணர்கிறீர்கள்?' என்று வினவினோம்.

ஒரு மரத்தை, நிலாவை, நட்சத்திரங்களை, வானத்தை, இரவின் அழகை எவ்விதமாகப் பார்க் கிறீர்கள்? உங்கள் வாழ்க்கைத்துணையை, உங்கள் நண்பரை எப்படிப் பார்க்கிறீர்கள்? கடந்து வந்த காலத்தின் நிகழ்வுகள், மனக்காயங்கள், களிப்புகள், மற்றும் தோழமை உணர்வுகள் ஆகியவை ஞாபகங்களாக மூளையில் சேமிக்கப்பட்டு உள்ளன. அந்த ஞாபகங்களின் ஊடே அவர்களைப் பார்க்கிறீர்களா? ஞாபகம், மனப்பதிவு என்பது காலம். காலம் இருக்கும் இடத்தில் பிரிவினை இருக்கும் என்ற காரணத்தால், உங்கள் உறவில் ஒரு சச்சரவைத் தொடர்ந்து இன்னொன்று, மற்றும், ஓயாத பிணக்குகள் என்பதாகவே வாழ்நாள் பூராவும் நீடிக்கிறது.

ஆக, எவ்வாறு தெளிந்த பார்வையுடன் கண்டுணர்வது என்பது பற்றி அறிந்துகொள்வது மிகவும் இன்றியமையாததாகிறது. பூமியின் மீதிருக்கும் அழகான விஷயங்களில் ஒன்றாக இருக்கும் மரத்தை நீங்கள் எப்படிப் பார்க்கிறீர்கள்? மரத்தை நீங்கள் அடையாளப் படுத்தும் அக்கணமே, நீங்கள் அதைப் பார்க்கவில்லை என்கிறாகிறது. மரத்தைப் பற்றிய உங்கள் மனப்பதிவுகள் மற்றும் மரத்தின் பெயராக இருக்கும் அந்தச் சொல், மரத்தை நீங்கள் உண்மையில் பார்ப்பதைத் தடுத்து விடுகிறது.

உங்கள் மனைவியைப் பார்க்க விரும்புகிறீர்கள். ஒருவேளை, உள்ளபடி அவரை நீங்கள் பார்த்திருக்கவே மாட்டீர்கள். உங்கள் மனைவியாக, உங்கள் உடைமை யாக, உங்களின் உடலின்பமாக பார்த்திருப்பீர்கள். உங்கள் மனைவியின் தொடர்பான நினைவுகளுடன் - அந்த நினைவு, கடந்துபோன பத்து நாட்களுடையதோ, பத்து வருடத்தியதோ அல்லது ஐம்பது ஆண்டு களுடையதோ - நீங்கள் பார்க்கிறீர்கள். அந்த நினைவுகள், உங்களுக்கும் உங்கள் மனைவிக்கும் இடையே குறுக்கிடுகிறது. உங்கள் மனைவிக்கும் கடந்தகால நினைவுகள் இருக்கும். உங்கள் வாழ்க்கைத் துணையை, அந்த மரத்தை, அந்த நிலவை, சிறப்புமிக்க அந்த நதியின் பெருக்கெடுத்தோடும் வெள்ளத்தை, கடந்த காலமாக இருக்கும் அவைகளைப் பற்றிய ஞாபகங்கள், மற்றும் பெயர்களின் குறுக்கீடு இல்லாமல், உங்களால் அவற்றைப் பார்க்க இயலுமா?

வன்முறை போன்றவற்றை அதைக் குறிக்கும் சொற்கள் இல்லாமல் பார்க்க முடியுமா? வன்முறை என்ற விஷயத்தை நோக்க விரும்பும் நீங்கள், 'வன்முறை' என்ற சொல்லை அறிமுகப்படுத்தும் அக்கணமே, நீங்கள்,

காலத்தை உங்கள் பார்வையில் உட்புகுத்திவிட்டீர்கள். அவ்விஷயத்தின் தொடர்பாக, இதற்கு முன்னரே, ஆயிரம் தடவைகளுக்கு மேல் உபயோகிக்கப்பட்ட 'வன்முறை' என்ற சொல்லே, காலத்தின் காரணியாக இருக்கிறது. காலம் உள்ளே நுழைந்ததால், பிரிவினை தொடங்கிவிட்டது.

உங்கள் எண்ணங்களால் சமைக்கப்பட்ட கருத்துருவம் இல்லாமல், உங்களால் உங்கள் மனைவியை, உங்கள் நண்பரை, அல்லது இந்தப் பேச்சாளரை நோக்க முடியுமா? எண்ணங்களின் இயக்கமாக காலம் இருக்கிறது. பிரிவினை செய்யும் காலத்தைப் போலவே, எண்ணமும் பிரிக்கிறது. கடந்த காலமாகவும், சொல்லாகவும், மனப்பதிவுகளாகவும் இல்லாத பார்வையாளராக, நீங்கள் நோக்க வேண்டும். கடந்த காலம், 'உள்ளதை' பார்க்கவிடாமல், பிரிவினை செய்கிறது.

நிலைக்கண்ணாடியில் உங்கள் புறத்தை, மேனியழகைப் பார்ப்பது போலவே, உங்கள் அகத்தை, நீங்கள் யார் என்பதை நீங்கள் கொண்டிருக்கும் தொடர்பு என்ற நிலைக்கண்ணாடியில் பார்த்தறியலாம். தொடர்பு என்ற நிலைக்கண்ணாடியில், உங்கள் எண்ணத்தின் ஒவ்வொரு அசைவையும் உங்கள் ஒவ்வொரு பிரதிபலிப்பு உணர்ச்சியையும் நீங்கள் பார்க்க முடியும். எனவே, அங்கே, பார்ப்பவரே, பார்க்கப் படுவதாகவும், பகுத்தாய்பவரே ஆய்வுப்பொருளாகவும் உள்ள நிலை தோன்றுகிறது.

அசாதாரணமானதோர் அனுபவத்தைப் பெற்றிட நான் விழைகிறேன். உடலின்பம், இன்பக்களிப்பு போன்றவற்றையெல்லாம் அனுபவித்துவிட்டேன்.

அவையெல்லாம் எனக்குச் சலித்துப்போய்விட்டது. எண்ணங்களுக்கு அப்பாற்பட்ட, 'அதியுன்னதமான' அனுபவத்தைப் பெற விரும்புகிறேன். பெற விரும்பும் அனுபவம் பற்றி அனுபவிப்பவரே முன்நிறுத்துவதால், அனுபவிப்பவரே, அனுபவித்த அனுபவமும் ஆகிறார்.

அனுபவம் வேண்டும் என்று கோராத மனம், முற்றிலும் வித்தியாசமான ஒன்று. எவ்விதம் கண்டுணர வேண்டும், எவ்வாறு கேட்டறிய வேண்டும் என்ற கலையை நீங்கள் வசப்படுத்திக்கொள்ள வேண்டும். கடந்த கால மனப்பதிவுகளின் வழியாகப் பார்க்காமல், விஷயஅறிவைச் சேகரிப்பதாக இல்லாமல், வெறுமனே உள்ளபடி பார்க்க வேண்டும், கேட்டறிய வேண்டும். அவ்வாறு நோக்குங்கால், வன்முறை என்ற விஷயத்தை கண்டுணர முயலும் நீங்களாகிய காண்பவருக்கும் காட்சிப்பொருளுக்கும் இடையே பிரிவேதுமில்லை என்பதைக் காண்பீர்கள். காண்பவர் தான் வன்முறை. ஆக, நீங்கள் விழிப்புணர்வோடு, உன்னிப்பாக நோக்கும்போது, எதை நோக்குகிறீர்களோ, அதன் மீது, ஊடுருவும் ஒளிக்கதிரை செலுத்துகிறீர்கள் என்றாகிறது. அதன்பின் அப்பொருள், முழுவதுமாக மறைந்து போகிறது, மறுபடி திரும்ப வராமல் போய்விடுகிறது.

ஆசை என்றால் என்ன என்பதைப் பற்றி நாம் பேச வேண்டும். எண்ணம், ஆசை மற்றும் காலம் ஆகிய மூன்றும் பயத்தின் மிகப்பெரிய காரணிகள். ஆசை என்றால் என்ன என்பது பற்றியும், சுற்றித்திரியும் ஆசையின் இயல்பு, என்றுமே திருப்தி அடையாத ஆசையின் குணம், மற்றும் சமயங்கள் அனைத்துமே ஆசையை அடக்க வேண்டும் என்று வற்புறுத்துவது ஆகியவை பற்றியும் நாம் கலந்துரையாட வேண்டும்.

முக்தி பெறவேண்டும் என்ற ஆசை மற்றும் கடவுள் மீது பற்று ஆகியவை முற்றிலும் சரியானது என்று கூறும் உலகெங்கிலும் உள்ள மதத்தலைவர்கள், மற்ற ஆசைகளை அடக்கவேண்டும் என்று ஏன் கூறுகிறார்கள்? ஒரு பெண் மீது ஆசை, ஒரு வீட்டை சொந்தமாக்கிக்கொள்ள வேண்டும் என்ற ஆசை, அழகான பொருட்களின் மீது ஆசை, ஒரு ஓவியம் அல்லது சிலை அல்லது ஆங்கில கவிஞர் கீட்ஸ் எழுதிய கவிதையை ரசிக்க ஆசை போன்ற இன்னபிற ஆசைகள் உங்களை திசைதிருப்பிவிடும், சபலத்தை உண்டாக்கும் என்று மதத்தலைவர்கள் ஏன் கூறுகிறார்கள்? காலங்காலமாய், ஆசையை அடக்கும் கலையையோ, இல்லை, ஆசைக்கு அடிபணியும் கலையையோ, நாம் பயின்று வந்துள்ளோம்.

ஆசை என்றால் என்ன? நாம் ஆசைப்படும் பொருளா, நம் ஆசையைத் தூண்டியது? அல்லது, ஆசை ஏற்கனவே உள்ளது, ஆசைப்படும் பொருட்கள் மட்டும் வித்தியாசப்படுகின்றனவா? - இவ்விஷயத்தில் நீங்கள் தெளிவாக இருக்க வேண்டும். ஒரு அழகான கார், கண்ணைக் கவரும் சட்டை, பிரமாதமான வீடு, கலைநயம்மிக்க ஓவியம் ஆகியவற்றைப் பார்க்கிறீர்கள். அந்த வீடு, அந்தக் கார், அந்த ஓவியமா உங்களுக்குள் ஆசையை உருவாக்கியது? அல்லது, ஆசை உள்ளது, பொருட்கள் ஒரு பொருட்டல்ல என்று கூறுகிறீர்களா? பொருட்கள் ஆசையைத் தூண்டுவதாக இருப்பின், அதற்கு முற்றிலும் வேறுவிதமான விசாரணையை செய்யவேண்டி இருக்கும். ஆனால், ஒன்றிலிருந்து மற்றொன்று என்று அலைந்து திரியும் ஆசை, அடிப்படையில் இருக்கிறது. ஆசையின் தோற்றுவாய், ஆரம்பம் எது?

எப்படி ஆசையை அடக்குவது, கட்டுப்படுத்துவது, தாண்டிச் செல்வது என்பதல்ல நம் விசாரணை. ஆசையின் துவக்கமாக எது இருக்கிறது என்பதே கேள்வி. ஆசையின் தோற்றுவாயை, துவக்கத்தை நாம் புரிந்துகொண்டுவிட்டால், நம்மால் ஆசையை சமாளிக்க முடியும். அப்படி ஆசையின் மூலமுதலைக் கண்டுபிடிக்க இயலவில்லை என்றால், நம் ஆய்வு, ஆசையெனும் மரத்தின் கிளைகளை மட்டும் வெட்டி, கவாத்து செய்வதற்கு ஒப்பாகும்.

நாம் உணர்ச்சிகளின் வழி வாழ்கிறோம். நம் உணர்ச்சிப் பிரதிபலிப்புகள் யாவும் நம் உணர்ச்சிகளின் செயல்களாகவே உள்ளது. நன்றாக உடை உடுத்தி, ஆரோக்கியமாக, அழகாக, மிகவும் சுத்தமாக நீங்கள் இருப்பதை நான் பார்க்கிறேன். அப்படிப் பார்ப்பதே, உணர்ச்சி வெளிப்பாட்டின் துவக்கமாக அமைகிறது. பார்ப்பது, உற்றுநோக்குவது, தொடர்புகொள்ளுதல், கிளர்ச்சிகொள்ளல் போன்றவை புலன்களின் பிரதிஉணர்வு. பிறகு, என்ன நிகழ்கிறது?

மலைமேல் கட்டப்பட்டிருக்கும் உறுதியான அழகான வீடு - நான் அதைப் பார்க்கிறேன், தட்டிப்பார்த்து அதன் அழகையும் உறுதியையும் ரசிக்கிறேன், என் உள்ளத்தில் கிளர்ச்சி ஏற்படுகிறது. பிறகு என்ன நிகழ்கிறது? அழகான ஆணையோ, பெண்ணையோ பார்க்கிறேன். அழகான, தெளிவான, பொலிவுடன் கூடிய அந்த முகத்தை பார்ப்பதே ஒரு கிளர்ச்சிதான். பிறகு, என்ன நிகழ்கிறது? சிற்பி, மிகுந்த ஈடுபாட்டுடன், தனது முழு ஆற்றலையும் வெளிப்படுத்தி வடித்த சிலையைக் காண்கிறீர்கள். அச்சிலையைப் பார்க்கும்போதே, ஆர்வக் கிளர்ச்சி மேலெழுந்து,

சிலையைத் தொட்டுப் பார்க்கிறீர்கள். பிறகு, என்ன நிகழ்கிறது? தயவுசெய்து, உற்றுக் கேளுங்கள். நீங்களே என்ன நிகழ்கிறது என்பதைக் கண்டுபிடியுங்கள்.

எண்ணம் உள்ளே நுழைந்து, 'என்ன பிரமாதமான அழகு! எனது அறையில் இந்தச் சிலை இருக்கவேண்டும் என்று விரும்புகிறேன்!', 'இந்தக் காரில் நான் பயணிக்கக் கூடாதா என்று ஆசைப்படுகிறேன்', 'இந்த வீடு என்னுடையதாக இருக்க வேண்டும் என்று எனக்குக் கொள்ளை ஆசை' என்றெல்லாம் எண்ண வைக்கிறது. ஆர்வக்கிளர்ச்சியை, எண்ணம், தன் கைவசம் எடுத்துக் கொண்ட அந்தக் கணத்திலேயே, ஆசை பிறந்துவிடுகிறது.

உணர்ச்சிக் கிளர்ச்சி என்பது ஆரோக்கியமானது, இயல்பானது, முக்கியமான தேவையும்கூட. உணர்வுக்கிளர்ச்சி இல்லையென்றால் நீங்கள் ஜடமாகிப் போகிறீர்கள். உணர்வுகளை அடக்கினால், நீங்கள் ஜடமாகிப் போகிறீர்கள் - இந்நாட்டில் இவ்வாறுதான் நடந்துகொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. பகவத்கீதை, உபநிஷத்துக்கள் மற்றும் புனித நூல்கள் அத்தனையையும் படிக்கிறீர்கள். குருமார்கள் பின்னால் போகிறீர்கள். உங்கள் ஆசைகளை கட்டுப்படுத்துகிறீர்கள், அடக்கி வைக்கிறீர்கள், தப்பித்து ஓடப்பார்க்கிறீர்கள். ஆனால், இங்கு நாம் இதிலிருந்து முற்றிலும் வித்தியாசமான ஒரு வழியைச் சொல்கிறோம்.

நாம் சொல்கிறோம்: அழகான காரைப் பார்த்ததும் ஆர்வக்கிளர்ச்சி மேலிட்டு வந்ததும், எண்ணம் குறுக்கே நுழைந்து, 'அந்தக் காரில் நான் உட்கார்ந்து பயணித்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!' என்று சொல்ல, ஆசை பிறக்கிறது. எண்ணத்தை குறுக்கிட விடாமல் செய்வது சாத்தியமாகுமா? ஆர்வக்கிளர்ச்சி தோன்றுவதற்கும்,

எண்ணம் உள்ளே நுழைவதற்கும் இடையே, இடைவெளி கொஞ்சம் இருக்கிறதா? இடைவெளி இருந்தால், என்ன நேரிடுகிறது? உங்கள் புலனுணர்வு விழிப்புடன் இல்லையென்றால், உங்களால் பூமியின் அழகையும், கடலின் அலைகளையும் ரசிக்க முடியாது. புலனுணர்வு, வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாத வொன்று. ஆனால், எண்ணம் புகுந்து, உணர்ச்சிகளை கட்டுப்படுத்தி, வடிவமைத்து, அதற்கோர் அடையாளம் அளிக்கும் அந்தக் கணமே, ஆசை பிறந்துவிடுகிறது.

எண்ணங்கள், உணர்ச்சிகளின் மீது எவ்வாறு செயல்படுகிறது என்பதை அறிவுபூர்வமாகவேனும், வார்த்தையளவில் மட்டுமாவது, எவ்வித கட்டுப்பாடும் இல்லாமல் வெறுமனே பார்த்து, கண்டுகொள்வதற்கு நமக்கு இயலுமா? ஆசை எவ்வாறு துவங்குகிறது என்ற விஷயத்தை ஆழமாக ஆராய, உங்களுக்கு மிகுந்த துடிப்பும், அக்கறையும், கவனமும், பரிவும் வேண்டும். எண்ணம் என்றால் என்ன, மற்றும் எண்ணம் எவ்வாறு நம் வாழ்க்கையை ஒரு பிரச்சினையாக ஆக்கிவிடுகிறது என்பதையும் நாம் பார்க்க வேண்டும்.

மேலும், எண்ணம் என்பது ஒரு பௌதிக ரீதியான இயக்கம் என்பதையும் நாம் பார்க்க வேண்டும். இதைப்பற்றியெல்லாம் நீங்கள் சிந்தித்துகூட இருக்கமாட்டீர்கள். நிபுணர்களால் இதைப்பற்றி எழுதப்பட்ட நூல்களை நீங்கள் படித்திருக்கலாம். ஆனால், உங்களுக்குள் நடைபெறும் ஆசையின் துவக்கத்தை நீங்களே கண்ணுறுவது என்பது மிகவும் உற்சாகமானது, நிஜமானது.

எண்ணம், வரையறைக்குட்பட்ட விஷய அறிவையும், அனுபவத்தையும் சார்ந்திருப்பதால்,

எண்ணமும் வரையறைக்குட்பட்டதே. அனுபவம், விஷய அறிவு மற்றும் மனப்பதிவுகளிலிருந்து எண்ணம் தோன்றுகிறது. எதைப்பற்றியும் முழுமையான அறிவு எட்டப்படவில்லை. விஞ்ஞானமும் தொழில்நுட்பமும் மேலும் மேலும் கண்டுபிடிப்புகளை கூட்டிக்கொண்டே போகிறது. ஆக, அனுபவம், விஷயஅறிவு மற்றும் மனப்பதிவுகள் என அனைத்தும் வரம்பிற்குட் பட்டவையே.

காலம், ஆசை மற்றும் எண்ணம் ஆகியவை பயத்தின் காரணிகளாக உள்ளன. சில நாட்களுக்கு முன்பு, எதிர்பாராத விபத்தில் நான் சிக்கிக்கொண்டு கஷ்டப்பட்டேன். அதுபோன்ற விபத்து மறுபடியும் நிகழ்ந்துவிடுமோ என்று அஞ்சுகிறேன். என்ன நேருமோ என்ற பயத்தில் நான் இருக்கிறேன். இருட்டைப் பார்த்தால் எனக்குப் பயம், என் மனைவியிடம் பயம், என் மேலதிகாரியிடம் பயம் என்று நான் பயத்திலிருக்கிறேன். நீங்களெல்லாம் பயப்படவில்லையா? வெட்கப்பட வேண்டாம், சொல்லுங்கள்.

பயத்தோடு வாழ்தல் என்பது மனிதகுலத்தின் பொதுவான நியதி. பயத்தோடு இருப்பதை நீங்கள் மறுக்கலாம், அல்லது, அந்த உண்மையை எதிர்கொள்ள மறுக்கலாம். ஆனாலும், நீங்கள் பயப்படுகிறீர்கள். பயம், மனிதனுக்கு பயங்கர இடர்களைக் கொண்டுவருகிறது. உளரீதியில், மனிதனை நன்கு செயல்படவிடாமல் பயம், அவனது சுதந்திரத்தை வெட்டி, குறைத்துவிடுகிறது. அதிகாரத்திற்கும், கோட்பாடுகளுக்கும் மனிதனை பணியவைத்து, பயமானது, அவனை பிறரைச் சார்ந்திருப்பவனாகவும், பற்றுதல் கொண்டவனாகவும் மாற்றிவிடுகிறது.

பயத்தின் வகைகளையோ, பயத்தின் பல்வேறு வகையான வெளிப்பாடுகள் பற்றியோ, இங்கு நாம் பேசவில்லை. பயம் என்பது பற்றி மட்டுமே நாம் விவாதிக்க இருக்கிறோம். மனைவி / கணவனிடத்தில் பயம், வேலை போய்விடுமோ என்ற பயம், கடந்த காலத்தில் துன்புறுத்திய வலிகள் பற்றிய பயம், அவை மீண்டும் என்றும் வரக்கூடாது என்ற பயம் போன்ற பயத்தின் வகைகளைப் பற்றிப் பேசப்போவதில்லை. இவ்வாறான பயங்கள் தோன்றுவதற்கான மூலகாரணம் எது என்பதையே கண்டுபிடிக்கப் போகிறோம்.

பயத்திற்கு ஆணிவேராக இருப்பது எது? காலமும் எண்ணமும் அல்லவா பயத்தின் ஆணிவேர்? நான் ஒரு குமாஸ்தா. நான் மேலதிகாரியாக பதவி உயர்வு பெறவே முடியாமல் போகக்கூடும். நான் ஒரு சிஷ்யன். நான் என்றுமே குருவாக உயராமல் போகக்கூடும். 'அறியாமை' என்ற சொல்லின் ஆழமான அர்த்தத்தில், நான் ஒரு அறியாமை மிக்கவன். நூல்களைப் பற்றி அறியாமல் இருப்பதை 'அறியாமை' என்று இங்கு நான் குறிப்பிடவில்லை. தன்னை முழுமையாக அறியாமல் இருப்பதே மிகுந்த அறியாமையாகும். ஆரம்பமும், ஒருவேளை, முடிவும்கூட இல்லாத 'நான், எனது' என்ற இயக்கத்தைப் பற்றி அறியாமல் இருப்பது மிகுந்த அறியாமையாகும். இந்த அறியாமையை புரிந்துகொள்ள எனக்கு கால அவகாசம் வேண்டும் என்று கற்பனை செய்துகொள்கிறேன். காலம் தவிர, அனுபவம், அனுபவங்களின் சேகரிப்பு, மறுபிறப்பு போன்றவைகளும் இந்த அறியாமையை புரிந்துகொள்ள தேவைப்படுகிறது என்று நினைக்கிறேன். புரிந்துகொள்ள முடியாமல் போகுமோ என்று அஞ்சுகிறேன். எனவே, நாம் கேட்கிறோம்: 'இதற்கெல்லாம் மூலகாரணம் எது?' என்று.

காலங்காலமாய், பயம் என்ற இந்தச் சுமையை மனிதன் ஏன் சுமந்துகொண்டிருக்கிறான்? பயத்திற்குத் தீர்வுகாண அவனால் முடியவில்லை. அனைத்து கோயில்களுக்கும், அனைத்து தேவாலயங்களுக்கும் அவன் சென்று வரலாம். குருமார்கள் பலரை அவன் பின்பற்றிப் போகலாம். பல்வேறுவிதமான தியானப் பயிற்சிகளை மேற்கொள்ளலாம். இருப்பினும், அவனிடம் பயம் எப்போதும் குடிகொண்டிருக்கிறது. பயம் இருப்பதைப் பற்றி அவன் கண்டுகொள்ளாமல் இருக்கலாம், அதைத் தவிர்க்கப் பார்க்கலாம் - இருந்தாலும், ஏதோ ஒரு வகையில் அவன் பயப்படுகிறான்.

எனவே, 'பயத்தின் ஆணிவேர் எது?' என்று நாம் வினவுகிறோம். காலமும் எண்ணமும்தான் அதன் ஆணிவேராக இருக்கிறது என்பது நன்றாகத் தெரிகிறது. இரண்டு மூன்று வாரங்களுக்கு முன் நான் அனுபவித்த வலி, திரும்ப வந்துவிடுமோ என்று பயப்படுகிறேன் - வலியைப் பற்றிய ஞாபகம், வலி திரும்ப வந்துவிடுமோ என்ற பயம் - திரும்ப வராது என்ற நம்பிக்கை வீணாகிப்போகுமோ என்ற பயம் - இவற்றிலெல்லாம் காலம் செயல்படுகிறது. நான் என் மனைவியை கடுஞ்சொற்களால் காயப்படுத்தினேன் - பதிலுக்கு அவள் என்னைப் புண்படுத்தினாள் - என்னை வார்த்தையாலோ, செய்கையாலோ, கண்ணீராலோ மேலும் புண்படுத்த மாட்டாள் என்று நம்புகிறேன். புண்படுத்துவாளோ என்று பயப்படுகிறேன். ஆக, பயத்தின் காரணிகளாக காலமும் எண்ணமும் உள்ளன.

காலத்தின் தன்மையையும், எண்ணத்தின் இயல்பையும் நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். மேலும், ஆசையின் இயக்கத்தையும் அதன் அலைபாயும்

குணத்தையும் புரிந்துகொள்ள வேண்டும். காலம், எண்ணம் மற்றும் ஆசையைப் பற்றி வெறும் வார்த்தையளவில் அறிவுபூர்வமாக தீர்மானங்கள் செய்து புரிந்துகொள்வதை நான் சொல்லவரவில்லை. அவற்றைப் பற்றிய உண்மைகளை உடனடியாக கண்டுணர்ந்து, அவற்றின் ஆழத்தையும், அவற்றின் தீவிரத்தன்மையையும், அவற்றின் யதார்த்தத்தையும் புரிந்துகொள்ள வேண்டும் என்ற பொருளில் சொன்னேன். அவ்வாறாக உங்களால் பார்க்க முடிந்தால், பயத்தை எவ்வாறு முடிவிற்குக் கொண்டுவருவது என்ற கேள்வியை நீங்கள் எழுப்ப மாட்டீர்கள். மேலும், 'எண்ணத்தை என்னால் அடக்கி கட்டுப்படுத்த முடியுமா?' என்றோ, 'பயத்தின் காரணியாய் இருக்கும் எண்ணத்தை எவ்வாறு தடுத்து நிறுத்துவது? என்றோ கேட்கமாட்டீர்கள். எண்ணத்தைப் பற்றிய உண்மைகளை நிஜத்தில் கண்டுணர்ந்த காரணத்தால், அக்கேள்விகளை நீங்கள் எழுப்ப மாட்டீர்கள்.

எண்ணம் இருக்கிறது. எண்ணத்தின் சுயசொரூபம் நீங்கள் பார்க்கும்வண்ணம் எதிரே உள்ளது. நீங்கள் அதை மறுக்கவோ, விவாதிக்கவோ, பகுத்தாய்வு செய்யவோ, கலந்தாலோசிக்கவோ, நேர்மறையாகவோ அல்லது எதிர்மறையாகவோ அதன் பக்கம் இருக்கவோ, வாய்ப்பு இல்லை, உங்களுக்கு அது இயலாத காரியம். புவியின் மீதிருக்கும் அழகானப் பொருளைப் பார்ப்பதுபோல், அதையும் பார்க்கலாம் - அது காட்சிகொடுக்கிறது. சீரிய மனம்போல, அது அங்கே இருக்கிறது. பொங்கி பிரவகிக்கும் இதயத்தைப் போல, அது அங்கே உள்ளது. நீங்கள் அதைப் பார்த்தீர்களேயானால், பயம் முடிவிற்கு வருகிறது. எங்கே பயம் முடிவுறுகிறதோ, அங்குக் கடவுள் இல்லை. நம் பயம் மற்றும் ஆசைகளிலிருந்து, கடவுளை

நாம் உருவாக்குகிறோம். பயமே இல்லாத மனிதன், முற்றிலுமாக வித்தியாசமான ஒருவனாய் திகழ்கிறான். எந்தக் கடவுளும் அவனுக்குத் தேவைப்படுவதில்லை.

எனவே, நண்பர்களே, இவ்விஷயங்களை உங்கள் நெஞ்சத்தின் கவனத்திற்கு எடுத்துச் செல்லுங்கள். நான் இங்கு குறிப்பிட்டது நெஞ்சத்தை, மனதையோ அறிவையோ அல்ல. அறிவிற்கான இடம் உண்டு. ஆனால், மிகுந்த அக்கறையுடன் தீவிரத்துடன் நாம் இங்குச் செய்யும் விசாரணையில், நெஞ்சம் பங்கேற்க வேண்டும். நெஞ்சம் நுழையும்போது, அதாவது, கண்டுணர்வதற்கும் ஆழமாக நோக்குவதற்கும் ஆர்வம் மற்றும் அன்பு இருக்கும்போது, காலம் - எண்ணம் - ஆசை பற்றிய உண்மையை நீங்கள் கண்டுணரும்போது, எந்தவொரு பயமும் உங்களை நெருங்க முடியாது. பயமற்ற அந்நிலையில்தான், அன்பு இருக்க முடியும். பயமும் அன்பும் ஒருசேர பயணிக்க முடியாது. பயமும், களிப்பும் கூடிக்குலவிச் செல்லும். ஆனால், அன்பும் பயமும் அப்படிப்பட்டதல்ல.

*மதராஸ், 01.01.1983*

■■

# 12

# தியானம், அன்றாட நடவடிக்கைகளின் வெளிப்பாடு

**ப**யம், பயத்தின் இயல்பு மற்றும் பயத்தின் காரணிகள் பற்றி நேற்று நாம் பார்த்தோம். காலம், ஆசை மற்றும் எண்ணம் ஆகியவை பயம் தோன்றுவதற்கான காரணங்களாய் இருக்கிறது என்று சொன்னோம். கற்கால மனிதன் பயத்தோடு வாழ்ந்தான். நாமும் இன்று பயத்தோடுதான் வாழ்கிறோம். கடந்த காலத்தைப் பற்றிய பயங்கள் மற்றும் மனிதகுலத்திற்கு என்ன நேரிடுமோ என்ற எதிர்கால பயங்களுடன் நாம் வாழ்கிறோம். இன்று மனிதன் எப்படி இருக்கிறானோ, அவ்வாறேதான் எதிர்காலமும் கட்டாயம் இருக்கும் என்பது வெளிப்படையாகவே தெரிகிறது.

மாற்றம் என்பது சமுதாயத்திலோ, அரசாங்க வகைகளிலோ ஏற்பட வேண்டும் என்பதில்லை. மனோரீதியில், உள்முகத்தில், மனிதன் முற்றிலுமான அடிப்படை மாற்றத்தைப் பெறவில்லையென்றால், எதிர்காலம் என்பது இன்றிருக்கும் நிலை போன்றதாகவே இருக்கும். மேலும் பல யுத்தங்கள், மேலும் அதிக அழிவு, வன்முறை, மேலும் பல்வேறு தேசத்தைச் சேர்ந்தவர்களாக சிதறுண்டு போன மனிதகுலம் என்பதாகவே எதிர்காலம்

இருக்கும் என்பது உறுதி. நாம் தற்காலத்தில் எப்படிப்பட்டவராய் இருக்கிறோமோ, அவ்வாறாகவே நம் எதிர்காலமும் இருக்கும்.

நாம் இந்தக் கலந்துரையாடல்கள் அனைத்திலுமே, உளரீதியான புரட்சியை கொணர்வது எவ்வளவு முக்கியமான, உடனடியாக கொண்டுவர வேண்டிய விஷயம் என்பதை வலியுறுத்தி வந்திருக்கிறோம். ஒரு கருத்திலிருந்து மற்றொரு கருத்திற்கு, அல்லது, ஒரு வழிமுறையிலிருந்து இன்னொரு வழிமுறைக்குத் தாவுதல் என்பது அடிப்படை மாற்றம் அல்ல. இந்த அழகான பூமியில் கோடிக்கணக்கான ஆண்டுகளாக வாழ்ந்துவரும் மனித இனம் மாற்றம் பெற இயலுமா, துயரம் முடிவுறுமா, அன்பு என்றால் என்ன, கருணை என்றால் என்ன, நுண்ணறிவு என்றால் என்ன என்பதைப் பற்றியெல்லாம் நாம் இந்த மாலைப்பொழுதில் கலந்துரையாடப் போகிறோம். மரணத்தின் தாத்பரியம் மற்றும் தியானம் பற்றியும் கூட பேசப்போகிறோம்.

தலைமுறை தலைமுறையாக, நாம் துயரத்தில் வாழ்ந்து வருகிறோம். துக்கம், தனிமையின் துயரம், மிகுந்த பதற்றத்தின் துன்பம், மற்றவருடன் இணக்கமான தொடர்பு இல்லையே என்ற கவலை, ஒரு தாயின் சோகம், ஒரு தந்தையின் சோகம், போரில் கணவனை இழந்த மனைவியின் சோகம் என பல்வேறு வகையான துயரத்தில் நாம் உழல்கிறோம். அறியாமையால் வரும் துயரத்தையும் அனுபவிக்கிறோம்.

துயரம், பலவகைப்பட்டது. மரணம் எனும் ஒரு விபத்தாக மட்டும் துயரம் இல்லை. ஒருவர் வாழ்க்கையில் ஏற்படும் ஒரு நிகழ்வாக மட்டும் துயரம் இருந்துவிடுவதில்லை. ஒன்றன்பின் ஒன்றாகத் தொடரும்

நிகழ்வுகள், விபத்துகளின் தொடர்ச்சி, களிப்பு மற்றும் வேதனை இரண்டையுமே கொண்டிருக்கும் அனுபவங்கள், பரிசு மற்றும் தண்டனை என்ற இயக்கத்தால் வரும் துன்பம், வயோதிகத்தின் துன்பம், உடல்நலக் குறைவால் வரும் துன்பம், கண்பார்வை இல்லாததால் படும் வேதனை, ஊனமுற்ற சிறுவர்கள் படும் வேதனை என்று வேதனைகளின் பட்டியல் நீண்டுகொண்டே போகிறது, தொடர்ந்துகொண்டே வருகிறது.

துன்பத்தின் இந்த மிகப்பெரிய பாரத்தை மனிதன் சுமக்கிறான். அதிலிருந்து தப்பியோட முயற்சிக்கிறான். துயரத்திலிருந்து தப்பிக்க, அனைத்து வகையான சூத்திரங்களையும் கண்டுபிடிக்கிறான். தப்பிக்க ஏதுவான பல்வேறு வழிமுறைகளைக் காண்கிறான். விசித்திரமான கோட்பாடுகளை உருவாக்குகிறான், சித்தாந்தங்களை உண்டாக்குகிறான். இவை அனைத்தையும் செய்த பின்னரும், துயரம் நீடிக்கிறது. நடந்து முடிந்த யுத்தங்கள், மனிதகுலத்தின் மீது எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன என்பதைப் பற்றி நாம் சிந்தித்திருக் கிறோமா என்று நான் வியக்கிறேன்.

தேசியம், இன வேற்றுமைகளால் தோன்றும் வெறுப்பு, மொழிப்பற்று ஆகியவற்றை நாம் உறுதியாகப் பிடித்துக்கொண்டிருக்கும் காரணத்தால், ஏராளமான பெண்கள், தந்தைமார்கள், சகோதரர்கள், சகோதரிகள் கண்ணீர் சிந்தியுள்ளனர். தேசியம் போன்ற கொள்கைகள் தாங்கொணாத்துயரை உலகிற்கு அளிக்கிறது. நாம் விரும்பிய ஒன்றை இழந்துவிடும்போது அந்த இழப்பு, நமக்கு வேதனையளிக்கிறது. நாம் அன்பு செலுத்திய ஒருவரை - நம்மால்கூட அன்புடன் இருக்க முடியும்

என்றபட்சத்தில் - இழக்க நேரிடும்போது வேதனை யடைகிறோம்.

இவைத்தவிர, மகிழ்ச்சிகரமான, உண்மையிலேயே போலித்தனமற்ற, அசலான நாளாக, ஒருநாள்கூட வாழ்நாளில் வரவில்லையே என்ற வேதனையும் நமக்குள்ளது. இந்த நாட்டில் நிலவும் வறுமையும், வறுமையை நீக்க எவ்வித நடவடிக்கையும் எடுக்காமலிருப்பதும், வேதனை அளிக்கிறது. காலங்காலமாக, துயரத்தைச் சுமந்துகொண்டு மனிதன் வாழ்கிறான். வெற்றி கிட்டாமையும், நல்ல வாய்ப்புகள் வராமலே போவதும், விரும்பிய பொருள் கிடைக்காமல் போவதும் நம்மை வேதனைக்குள்ளாக்குகிறது. பல்வேறு கவலைகள் நம்மைப் பாரமாய் அழுத்துகின்றன, பதற்றமும் தனிமையும் நம்மை வாட்டுகின்றன, நம் கண்கள் கலங்குகின்றன.

மனிதகுலம் சுமக்கும் இந்தத் தாங்கொணாத் துயரச் சுமையை முடித்துவைக்க, அதைத் தூக்கியெறிய முடியுமா என்பது பற்றி நாம் ஆராய வேண்டும். துயரம் என்றால் என்ன? துயரம் எதனால் வருகிறது? துயரம் நேரிடக் காரணமாய் இருப்பது எது? ஒரு விஷயத்திற்கான காரணம் என்ற ஒன்று இருந்தால், அதற்கு முடிவு என்ற ஒன்று கட்டாயம் உண்டு. நான் அனுபவிக்கும் வலிக்குக் காரணம் புற்றுநோய் என்றால், புற்றுநோயை குணப்படுத்தி, என் வலியை முடிவிற்குக் கொண்டுவர முடியும். ஆக, விளைவிற்கான காரணம் என்ற ஒன்று இருந்தால், அதற்கான முடிவும் உண்டு.

காரணக்காரியம் என்பது ஒரு இயக்கம்; அது ஒரு நிரந்தரமான, நிலையான மையக்கூறு அல்ல. துயரத்தைப் புரிந்துகொண்டு, அதற்கான காரணத்தையும் உங்களால்

கண்டுகொள்ள முடிந்தால், அந்நிலையில் உங்களால் அன்பின் இயல்பை அறிந்துகொள்ள முடியலாம். நான், கடவுள் பக்தியையோ அல்லது குரு பக்தியையோ அல்லது புனித நூல்களின் மீது உங்களுக்கிருக்கும் மதிப்பையோ, அன்பு என்று குறிப்பிடவில்லை. நான் குறிப்பிட்டது, மனிதர்களிடையே நிலவும் அன்பு, உங்கள் மனைவி மீது / உங்கள் கணவர் மீது / உங்கள் குழந்தைகளிடம் நீங்கள் காட்டும் அன்பு. அன்பு என்ற அந்த அசாதாரணமான பரிமள சுகந்தத்தை நுகர, உண்மையில் உலகின் ஒளியாகத் திகழும் அந்த அன்பைக் காண, துயரத்தின் இயல்பையும், அதன் கூறுகள் இணைந்திருக்கும் கட்டமைப்பையும் நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

நீங்களும், இந்தப் பேச்சாளரும் ஒருசேர இந்த ஆய்வில் பயணிக்கிறோம் என்று நம்புகிறேன். பேச்சாளர் தனித்து விசாரணை செய்வதாகவும், அதை நீங்கள் கேட்டுவிட்டு ஆமோதிப்பதோ அல்லது மறுப்பதோ செய்வதாக இல்லாமல், மனிதகுலத்தின் இந்த மிகமிக முக்கியமானப் பிரச்சினையை நாம் ஒருங்கிணைந்து ஆய்வு செய்வதாக இருக்க வேண்டும். உணர்ச்சிப் பூர்வமாக இப்பிரச்சினையை அணுகுதல் கூடாது. துயரம் முடிவிற்கு வரும் என்ற தீர்மானத்தையோ அல்லது மனிதகுலம் என்றென்றும் துயரத்துடன் தான் இருக்கும் என்ற முடிவையோ, ஆய்வு மேற்கொள்ளும் நாம் கொண்டிருக்கக் கூடாது. இப்பிரச்சினையை நாம் ஆழமாகச் சிந்திக்க வேண்டும்.

துயரத்தை நோக்க, 'நெஞ்சத்தினுள் இருக்கும் மனம்' (mind in the heart) கொண்டவராக நீங்கள் இருக்க வேண்டும். நாம் நம் அறிவால் ஒன்றைப் புரிந்து

கொள்கிறோம், கூர்ந்து கவனிக்கிறோம், அதைப்பற்றி விவாதிக்கிறோம். ஒன்றைத் தெரிவு செய்வதற்கோ, அளவீடு செய்து ஒன்றின் தரத்தை நிர்ணயிப்பதற்கோ அறிவை உபயோகிக்கிறோம். மூளையின் ஆற்றல்களில் ஒன்றாக அறிவு இருக்கிறது. மனிதகுலத் துயரம் என்ற இந்த ஆழமான பிரச்சினை பற்றிய ஆய்வில், அறிவு என்பதற்கு மிகச் சிறிய பங்கே உள்ளது. உங்களில் பலரும் பெரும் அறிவாளிகள், மெத்தப் படித்தவர்கள், வியக்கவைக்கும் அளவிற்கு பகுத்தாய்வு செய்யும் இயல்பு கொண்டவர்கள் - குறிப்பாக, இந்தியாவில் இத்தகைய வர்கள் அதிகம். பூமி மீதிருக்கும் அனைத்தையும் பகுத்தாய உங்களால் முடியும். நுட்பமான மனதைக் கொண்டிருப்பவர்கள் நீங்கள். ஆனால், துயரத்தினைப் பற்றி அறிந்துகொள்வதற்கு, அறிவு மட்டும் நம்மை வெகுதூரம் அழைத்துச் செல்லாது.

புரிந்துகொள்வது, ஊன்றிக் கவனிப்பது, விவாதிப்பது, தெரிவுசெய்வது, மற்றொன்றோடு ஒப்பிட்டுப் பார்ப்பது, ஒன்றின் தராதரத்தை எடைபோடுவது போன்றவை அறிவின் செயல்பாடுகளாக உள்ளன. நாம் அனைவரும் அறிவின் ஆற்றலைப் பெற்றவர்களாக இருக்கிறோம். துயரம் என்ற இப்பிரச்சினையை அறிவுபூர்வமாக அணுகினால், உங்கள் மனம் மற்றும் அறிவானது, ஆய்வின் செயல்முறையில் அதிகாரம் செலுத்தத் துவங்கிவிடும். அதன் காரணமாய், பிரச்சினையானது திரித்துக்காட்டப்பட்டு, சிதைவுற்றுப் போகும். இப்பிரச்சினையை, பரிபூரணமாக அணுகுவது என்பது சாத்தியம்தானா?

நாம் எதையுமே முற்றிலுமாக அணுகுவதில்லை. நம் வாழ்க்கையையும் நாம் ஒட்டுமொத்தமாகப் பார்ப்ப

தில்லை. அறிவு, உணர்ச்சி, அன்பு என்றெல்லாம் தனித்தனிப் பிரிவுகளாக்கி நம் வாழ்க்கையை பிளவுபட்டவொன்றாக்கிவிட்டோம். அதனால், எந்தப் பிரச்சினையையும் முழுமையாக நாம் என்றும் பார்ப்பதில்லை. 'முழுமை' என்ற சொல், 'நிறைவானது' என்று மட்டும் பொருள்படவில்லை. பகுதிகள் அனைத்தையும் உள்ளடக்கிய ஒன்று என்ற உணர்வைத் தருவதோடு மட்டுமல்லாமல், பகுதிகள் முழுமையாகாது என்ற உணர்வையும் அச்சொல் நமக்கு அளிக்கிறது.

'முழுமை' என்பது 'ஆரோக்கியமானது' என்ற பொருளையும் தருகிறது. தேங்கி நிற்கும் குட்டையாய் குழம்பிப் போகாத ஒன்றாகவும், செயலிழந்து முடங்கிப் போன ஒன்றாகவும் இல்லாத மனம், ஆரோக்கியமான மனமாகும். முழுமையானதாய் இருக்கும் அந்த மனம், வானம், பூமி மற்றும் ஆங்கு மிளிரும் அழகு அனைத்தையும் காணும் மனப்பாங்கு உடையதாய் இருக்கும். 'முழுமை' என்ற சொல்லிற்கு 'புனிதம்' என்ற பொருளும் உண்டு. புனிதத்தன்மை கொண்ட மனதோடு வாழ்க்கையை நாம் எப்பொழுதுமே அணுகுவதில்லை. துயரம் என்ற இப்பிரச்சினையை விசாரணை செய்யும் நமக்கு, இத்தகைய இயல்புடைய மனம் இருத்தல் வேண்டும். கற்பனை வயப்பட்டவொன்றாகவோ, இலட்சியத்தைக் கொண்டிருக்கும் ஒன்றாகவோ, முழுமையான மனம் இருப்பதில்லை. அது, அன்பின் தன்மை கொண்ட யதார்த்தமான மனமாய் இருக்கிறது.

'நெஞ்சம்' என்ற சொல்லை நாம் இங்கு பயன் படுத்தும்போது, கருத்துகளுடனோ, இலட்சியங் களுடனோ, கீழ்ப்படிதலுடனோ சம்பந்தமே இல்லாத ஒரு மனதையே குறிப்பிடுகிறோம். நெஞ்சத்தினுள்

இருக்கும் அம்மனம், அன்பின் இயல்பைக் கொண்டது. ஊன்றிக் காண்பதற்கான சுதந்திரம் நமக்கு இருத்தல் அவசியம். மனிதன், அகத்திலும் புறத்திலும் பலவற்றால் சூழப்பட்டுள்ளான். அவையனைத்தையும் அவன் ஏற்றுக்கொள்கிறான். பயத்தை ஏற்றுக் கொண்டான். அதுபோலவே, களிப்பு மற்றும் ஆசையையும் இயல்பானதாக ஏற்றுக்கொள்கிறான்.

நாம் இப்போது, மனிதன் ஏன் துயரத்தை ஒரு நியதியாய் ஏற்றுக்கொள்கிறான், துயரத்தை ஏன் சகித்துக் கொள்கிறான், துயரம் என்றால் என்ன என்பதை யெல்லாம் பற்றி கலந்துரையாடப் போகிறோம். மிகவும் தெளிவாக, நேரிடையாக, குழப்பம் இல்லாமல் இப்பிரச்சினையை நாம் நோக்க வேண்டும்.

துயரம் என்றால் என்ன? அதன் தன்மை எப்படிப்பட்டது, துயரம் என்றழைக்கப்படுவதில், வலி, துக்கம், தனித்து விடப்பட்ட சோகம், தொடர்புகள் ஏதுமில்லாத தனிமை போன்றவை உள்ளடங்கி உள்ளது. துயரம் அளிக்கும் அதிர்ச்சி, உடலுக்கு மட்டுமல்ல, நம் உணர்வுத் திரளாக இருக்கும் பிரக்ஞையும் மிகப்பெரிய அதிர்ச்சிக்கு ஆளாகிறது, மனப்பாங்கும் தாக்கம் அடைகிறது.

பாசத்தைக் கொட்டி நான் வளர்த்த என் மகனை இழந்துவிட்டேன். அவன் வளர்ந்து, பெரிய அளவில் வாணிபம் செய்யும் வர்த்தகராகி, பெரும் செல்வம் ஈட்டி, வீடு வாசல் என்று சொத்துகள் சேர்க்க வேண்டும் என்று பெரிதும் ஆசைப்பட்டேன். அவனில் என்னை நான் கரைத்துக்கொண்டேன். அவனோ திடீரென என்னைவிட்டு போய்விட்டான். எதிர்பாராத நேரத்தில்

திடீரென நேரிடும் நிகழ்வின் தாக்கம் எப்படிப்பட்டது? என் மகனால் நான் பெற்ற பெரும் மகிழ்ச்சி, அவன் நலனில் நான் கொண்டிருந்த அக்கறையால் நான் அனுபவித்த பதற்றம், வலி, அவன் நல்ல ரசனையோடு கலைநயம் மிக்க வாழ்க்கை வாழவேண்டும் என்பதற்காக நான் அவனுக்கு அளித்த உதவி மற்றும் அறிவுரைகள் போன்ற அனைத்துமே ஒரு நொடியில் முடிந்துபோனதே! இவ்வகை உணர்ச்சிகளைப் பற்றி நீங்கள் அறிவீர்களா?

ஒவ்வொரு வீட்டிலும், துயரத்தின் நிழல் படிந்திருக்கிறது. என் மகன் மீது நான் வைத்த பற்றுதல், அவன் எதிர்காலம் பற்றிய என் நம்பிக்கை போன்றவை, எதிர்பாராத அவன் மறைவால் திடீரென முடிந்து போனது. நான் பெரும் அதிர்ச்சிக்கு ஆளானது மட்டுமின்றி, என் வாழ்க்கையே சூன்யமாகிப் போனது. இவ்வாறான நிலைமையில், நான், ஒன்று, மிகவும் நம்பிக்கை இழந்து போய் எதிலும் குற்றங்குறை கூறிக் கொண்டிருப்பேன், அல்லது, என் நிலைமைக்கு அறிவார்ந்த விளக்கங்கள் அளித்துக்கொண்டிருப்பேன், அல்லது, என் கவலைகளை மறக்க ஏதோ ஒரு வகை கேளிக்கைகளில் ஈடுபடுவேன், அல்லது, போதை மருந்திற்கு அடிமையாகிப் போவேன் அல்லது அடுத்த ஜென்மத்தில் நல்லது நடக்கும் என்ற நம்பிக்கையில் இருப்பேன். உலகமாந்தர் அனைவருக்கும் இதே நியதிதான்.

முடிவுறுதல் என்பதின் பொருள் என்ன? உள்நோக்கம் எதுவுமில்லாமல், பரிசிற்காகவோ அல்லது தண்டனைக்காகவோ இல்லாமல், நாம் எதையாவது முடிவிற்குக் கொண்டு வந்திருக்கிறோமா? எங்கு முடிவுறுதல் நிகழ்கிறதோ, அங்கு முற்றிலும் புதிய

துவக்கம் தொடங்குகிறது. ஆனால், நாம் ஒருபோதும் எதையும் முடிவிற்குக் கொண்டுவருவதில்லை. ஒரு விஷயத்தை முடித்துவிடப் போகிறோம் என்றால் அதற்கு காரணங்கள் இருக்கும் - ஒன்று, அதை முடிவிற்குக் கொண்டுவருவதால், நமக்கு சிலபல லாபங்கள் கிடைக்கும். லாபம் கிடைப்பது காரணம் இல்லையென்றால், அவ்விஷயம் நமக்கு வேதனை அளிப்பதால், அதை முடிக்கப் பார்ப்போம்.

நம் வாழ்க்கையே, பரிசு மற்றும் தண்டனையை அடித்தளமாகக் கொண்டிருக்கிறது. வெளிப்புற நடவடிக்கைகளில் மட்டுமின்றி, சொல்லப்போனால், உள்முகச் செயல்பாடுகளிலும், பரிசு மற்றும் தண்டனையே நம் செயல்களை தீர்மானிக்கிறது. ஆகவே, காரணம் ஏதுமில்லாமல், நாம் எதையும் முடிவிற்குக் கொண்டுவருவதில்லை. ஆக, சோகம், தனிமை, விட்டுப்பிரிந்த வருத்தம் ஆகியவற்றை அனுபவிக்கிறோம். காலம், அடையாளப்படுத்திக்கொள்ளல், நேசத்தின் காரணமாய் நீங்கள் அவன் வளர்ச்சிக்காகச் செய்த பல்வேறு முயற்சிகள் எல்லாம் திடீரென முடிவிற்கு வருகின்றன, அதிர்ச்சியை அளிக்கின்றன. அந்த அதிர்ச்சியை நீங்கள் துயரம் என்று அழைக்கிறீர்கள். அத்துயரத்துடன் நிலைமாறாமல் தங்கியிருக்க உங்களால் முடியுமா? துயரத்திலிருந்து தப்பிக்கவோ, சுகபோகங்களை நாடி ஓடாமலோ இருக்க உங்களுக்கு இயலுமா? தப்பிக்கப் பார்ப்பதெல்லாம் சிறுபிள்ளைத்தனமான செயலாகும். குரு என்ற ஒருவரைப் பின்தொடர்ந்து செல்லாமல், கோயிலுக்குக் குடிபெயராமல், எண்ணத்தின் இயக்கமே இல்லாமல், துயரம் என்ற இந்த மிகப்பெரிய சவாலுடன் நிலைமாறாமல் தங்கியிருக்க உங்களுக்கு முடியமா?

மனித மனம் எதிர்கொள்ளும் சவால்கள் பலவற்றில், துயரம் என்ற சவால்தான் மிகவும் வலிமையானதாக இருக்கக்கூடும். அதீதமான ஆழத்தை கொண்டிருக்கும் துயரத்திலிருந்து, வெறுமனே தப்பித்து ஓடினால், துயரம் உங்களை நிழலாக பின்தொடரும். ஆனால், துயரத்தை முடிவிற்குக் கொண்டுவந்துவிட்டால், அங்குச் சக்தியின் சாரமாகவே இருக்கும் தீவிர உணர்ச்சி, பேரார்வம் உண்டாகும். நம்மில் வெகு சிலருக்கே, அத்தகைய பேரார்வம் உள்ளது. இருப்பினும், ஜீவனுள்ள அப்பேரார்வம், இவ்வுலகை நடத்திச் செல்கிறது.

அன்பு என்றால் என்ன என்று பார்ப்போம். 'அன்பு' என்ற சொல், மிகவும் கொச்சைப்படுத்தப்பட்டு விட்டது. கற்பனையில் திளைக்கும் பெண் ஒருவர், தான் கடவுள் மீதும் மற்றும் குருவின் மீதும் காட்டும் உணர்வையும், தான் ரசிக்கும் ஓவியம் மற்றும் புத்தகத்தின் மீது தனக்குள்ள ஆசையையும், அன்பு என வர்ணிக்கிறாள். மிகவும் குறுகிய, ஆழமற்ற அர்த்தத்தை 'அன்பு' என்ற சொல்லிற்கு நாம் வழங்குகிறோம். 'என் மனைவியின் மீது அன்பு கொண்டிருக்கிறேன்' என்று நீங்கள் சொல்லலாம். உங்கள் கூற்றை நான் எதிர்த்து கேள்வி எழுப்புகிறேன். நீங்கள் 'அன்பு' என்று குறிப்பிடுவது, உங்கள் மனைவியின் மீது நீங்கள் கொண்டிருக்கும் பற்றுதலாய் இருக்கலாம், மனைவியிடம் பெறும் உடலின்பமாய் இருக்கலாம், தோழமை உணர்வாய் இருக்கலாம். அன்பு என்றால் என்ன என்பது பற்றியும், அதன் ஆழத்தையும், அழகையும் மற்றும் அதன் அசாதாரணமான இயல்பைப் பற்றியும் இப்போது நாம் கலந்துரையாடலாம். மரணத்துடன் தொடர்புடையதாய் அன்பு இருக்கக்கூடும்.

உண்மையான ஒன்றைக் கண்டுபிடிக்க, பொய்யானவைகளை மறுதலிக்க வேண்டும். எவையெல்லாம் உண்மை இல்லையோ, அவைகளை நீக்க வேண்டும். பொய்ம்மை என்பது போலித்தனமானது, விவேகமற்றது, பகுத்தறிவிற்கு ஒவ்வாதது. ஆனால், " 'பொய்ம்மை' என்பது ஆளுக்கு ஆள் வித்தியாசப்படுமே, ஒருவருக்கு பொய்ம்மை என்று தோன்றுவது, மற்றவருக்கு அப்படியிருக்காதே" என்று நீங்கள் சொல்லலாம். எது உண்மை, எது பொய்ம்மை மற்றும் பொய்ம்மையில் உள்ள உண்மை என்ன என்பதையெல்லாம் கண்டுபிடிக்க, ஒருவருக்கு தெளிவாகச் சிந்திக்கும் ஆற்றல் மட்டும் இருந்தால் போதாது; அவர் ஐயுற வேண்டும், வினா எழுப்ப வேண்டும், வற்புறுத்திக் கேட்க வேண்டும்.

அன்பு என்றால் என்ன? அன்பு என்றால் ஆசை என்று சொல்வீர்களா? அன்பு என்றால் களிப்பு என்பீர்களா? அன்பு என்றால் பற்றுதல் என்றா பதிலளிப்பீர்கள்? நேர்மையான பதிலை உங்களுக்கு நீங்களே அளியுங்கள், உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்ளாதீர்கள். தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்வது மிகவும் சுலபம். நீங்கள் பிரமாதமான மனிதர் என்றும், இந்தக் குறைபாடுகளிலிருந்தெல்லாம் விடுபட்டவர் என்றும் நீங்கள் எண்ணிக்கொண்டிருக்கலாம். ஆனால், எவையெல்லாம் அன்பு இல்லையோ, அவற்றை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும். அதாவது மறுதலிப்புதான், மிகவும் நேர்மறையான செயல்.

'விருப்பம் என்பது அன்பாகுமா?' என்று நாம் கேட்கிறோம். விருப்பம் என்பது, சுற்றி அலையும் ஒரு இயக்கமாக இருக்கிறது. அன்பு, அலைந்து திரிவதாகவும், நிலையற்றதாகவும், பலவீனப்பட்டதாகவுமா இருக்கிறது?

அல்லது, மரணத்தைப்போல, வலிமையானதாகவும், அதிமுக்கியமானதாகவும் அன்பு இருக்கிறதா? களிப்பு, அன்பாகுமா? உடலின்பம் காண்பதும் மற்றும் ஒருவரைச் சொந்தமாக்கிக் கொண்டு, அவர் மீது அதிகாரம் செலுத்திக்கொண்டு, அவரை தனது சொத்தாக வைத்துக் கொண்டிருப்பதுமா அன்பு? ஒரு நபரின் மீது பற்றுதல், கணவன் / மனைவி மீது பற்றுதல், குடும்பத்தின் மீது பற்றுதல் என்றிருப்பதா அன்பு?

'அட்டாச்மென்ட்' (attachment) என்ற ஆங்கிலச் சொல், 'அட்டாகேர்' (attacare) என்ற லத்தீன்மொழிச் சொல்லிலிருந்து பிறந்ததாகும். அச்சொல் 'பற்றிக்கொள்', 'கெட்டியாகப் பிடித்துக்கொள்' என்பதாகப் பொருள்படுகிறது. பற்றுதல் கொண்டிருப்பதா அன்பு? பயம், பொறாமை, பதற்றம், வெறுப்பு போன்ற உணர்வுகளோடு கூடியதாக பற்றுதல் இருக்கிறது. பற்றுதல் அன்பாகுமா? பொறாமை இருக்கும் இடத்தில், வெறுப்பும் இருக்கும். பொறாமையும் வெறுப்பும் இருக்கும் இடத்தில், அன்பிருக்குமா? வெறுப்பிற்கும் அன்பிற்கும் தொடர்பு ஏதும் உண்டா? அன்பு என்ன வெறுப்பின் எதிர்மறையா? எது நல்லது இல்லையோ, அதன் எதிர்மறையா நல்லது? வெறுப்பு, அன்பின் எதிர்மறை என்றால், வெறுப்பின் வேர்கள் அன்பில்லல்லவா இருக்கும்? எதிர்மறைகள் அனைத்தும், அவைகளுக்கான எதிர்மறைகளில் தங்கள் வேர்களைக் கொண்டிருக்கின்றன.

பேச்சாளர் கூறுவதை வெறுமனே கேட்டுக் கொண்டிராமல், தயவுசெய்து, உங்கள் வாழ்க்கையை பரீட்சித்து, வினாக்களை எழுப்புங்கள். விருப்பம், களிப்பு, பற்றுதல், பொறாமை, பதற்றம், இழந்துவிடுவோமோ

என்ற பயம் - இவையெல்லாம் அன்பாகுமா? உங்களால் பற்றுதலின்றி இருக்க முடியுமா? உங்களுக்கு மரணம் சம்பவிக்கும் அந்த இறுதி நேரத்தில், பற்றுதலிலிருந்து விடுதலை பெறுவதாக இல்லாமல், வாழும் நாட்களிலேயே பற்றுதல் இன்றி வாழ்தல் சாத்தியமா? பிறர் மேல் வைக்கும் பற்றுதல் ஏற்படுத்தும் தாக்கத்தையும், அதன் விளைவுகளையும் கண்டுணர்ந்து, பிறர் மேல் பற்றுதல் வைப்பதை முடிவிற்குக் கொண்டுவர உங்களுக்கு இயலுமா? பற்றுதல் இருக்குமிடத்தில் பொறாமை, வெறுப்பு மற்றும் கோபம் இருக்கும். இத்தகைய தன்மைகளை உடைய பற்றுதலா அன்பு?

கருணை என்றால் என்ன? அகராதியில் கொடுக்கப்பட்டுள்ள அதற்கான விளக்கத்தைக் கேட்கவில்லை - கருணை என்றால் என்ன? கருணைக்கும் அன்பிற்கும் இடையே உள்ள தொடர்பு என்ன? அவை இரண்டுமே ஒரே இயக்கமா? 'தொடர்பு' என்ற சொல்லை நாம் உபயோகிக்கும்போது, குறிப்பாக இருமைநிலை உணர்த்தப்படுகிறது. ஒன்று, பிரிந்திருக்கும் மற்றொன்றுடன் தொடர்புகொள்வதால், அங்கு ஒரு பிரிவினை இருக்கிறது, இருமைநிலை இருக்கிறது. 'கருணையில் அன்பிற்கான இடம் எது? கருணையின் உச்சநிலை வெளிப்பாடாக அன்பு இருக்கிறதா?' என்று நாம் வினவுகிறோம்.

நீங்கள் ஒரு மதத்தைச் சேர்ந்தவராக, குருவைப் பின்பற்றும் சீடராக, சமய நூல்களில் நம்பிக்கை யுடையவராக, கொள்கைப்பிடிப்பு உள்ளவராக இருக்கும்பட்சத்தில், கருணையுள்ளம் கொண்டவராக உங்களால் எப்படி இருக்க முடியும்? உங்கள் குருவை

நீங்கள் ஏற்றுக்கொண்டவுடன், நீங்கள் ஒரு தீர்மானத்திற்கு வந்துவிடுகிறீர்கள். கடவுள் மீதோ, ரட்சகர் மீதோ, அல்லது, வேறு ஏதோவொன்றின் மீதோ நீங்கள் திடநம்பிக்கை கொண்டிருக்கும்போது, உங்களிடம் காருண்யம் இருக்குமா? நீங்கள் சமூகசேவை செய்யலாம், இரக்கத்தின் காரணமாக, தர்மசிந்தனை காரணமாக, நீங்கள் ஏழைகளுக்கு உதவலாம். ஆனால், சமூகசேவை மற்றும் ஏழைகளுக்கு உதவுவது எல்லாம், அன்பு மற்றும் கருணையின்பாற்பட்டதா?

அன்பின் தன்மையைப் புரிந்துகொள்ள வேண்டும். 'நெஞ்சத்திலிருக்கும் மனம்' கொண்டிருக்கும் அன்பைப் புரிந்துகொள்வதுதான் நுண்ணறிவாகும். நுண்ணறிவு, அன்பு என்றால் என்ன என்பதைப் புரிந்துகொள்கிறது, கண்டுபிடிக்கிறது. எண்ணம், புத்திசாலித்தனம் மற்றும் விஷயஅறிவுடன், நுண்ணறிவிற்கு எவ்விதத் தொடர்பும் இல்லை. நீங்கள் படிப்பில் கெட்டிக்காரராய் இருக்கலாம், உங்கள் வேலையில் கைதேர்ந்தவராய் இருக்கலாம், சிறப்பான முறையில் திறமையாக நீங்கள் வாதிடலாம் - ஆனால், அவையல்ல நுண்ணறிவு.

அன்புடனும், கருணையுடனும், நுண்ணறிவு சேர்ந்து செல்கிறது. தனிப்பட்ட நபராக, நீங்கள் நுண்ணறிவை அணுக முடியாது. 'எண்ணுதல்' என்பது மனிதகுலத்திற்கே உரியதாய் இருப்பதைப் போலவே, கருணை என்பது, 'என் கருணை' என்பதாகவோ, 'உங்கள் கருணை' என்பதாகவோ இல்லை. எங்கு நுண்ணறிவு செயல்படுகிறதோ, அங்கு 'நான்' மற்றும் 'நீங்கள்' என்ற பிரிவினை இல்லை. உங்கள் மனதிலோ அல்லது உங்கள் இதயத்திலோ, உறைவதாக நுண்ணறிவு இல்லை. மிக மேன்மையானதாய் இருக்கும் நுண்ணறிவானது, எங்கும்

நிறைந்திருக்கிறது. அது கருணையாய் இருப்பதால் இப்புவியையும் வானத்தையும் விண்மீன்களையும் அதுதான் இயக்குகிறது.

இவ்விஷயங்களைப் பற்றியெல்லாம் உங்களுக்கு அக்கறை இருக்கிறதா? இல்லை, நீங்கள் மிகவும் வயோதிகராகி விட்டீர்களா? இளைஞர்களில் சிலர், ஏற்கனவே வயோதிகர்களாகி விட்டார்கள்! மேற்கூறப்பட்ட விஷயங்களை கேட்டபின், அதன் தொடர்பாக நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்? இங்கிருந்து திரும்பிச் சென்றவுடன், கேட்டவைகளை யெல்லாம் மறந்துவிட்டு, சலிப்பூட்டும், அரைகுறைத் தன்மை கொண்ட, உங்கள் அன்றாட வாழ்க்கையில் மூழ்கி விடுவீர்களா? இக்கேள்விகளை உங்களையே கேளுங்கள்.

இறத்தல் பற்றியும் நாம் கலந்துரையாடப் போகிறோம். இறத்தல் என்பது முடிவுறுதலாக இருக்கிறது. உங்கள் மனப்பதிவுகளின் முடிவுறுதல், உங்கள் பற்றுதல்களின் முடிவுறுதல், வாழ்வின் இறுதித்தருணம் வரை நீங்கள் வைத்திருக்க விரும்பும் உங்கள் வங்கிக் கணக்கு சேமிப்பின் முடிவுறுதல் என்று பலவகை முடிவுறுதல்கள். இறத்தல் என்றால் என்ன? எது இறக்கிறது? மேலும், வாழ்க்கை என்றால் என்ன? இறத்தல் என்பதின் பொருள் என்ன? யார் இறக்கிறார்கள்? இந்த ஸ்தூல சரீரம் மரணமடைவதைப் பற்றி நாம் இங்குப் பேசவில்லை. வாழ்க்கை, வாழ்க்கை முடிவுறுதல் மற்றும் இறத்தலின் மிகவுயர்ந்த தாத்பரியம் ஆகியவற்றைப் பற்றி ஆராயப்போகிறோம்.

நம்மால் இறப்பிலிருந்து தனியே பிரிக்கப்பட் டிருக்கும், இந்த வாழ்க்கை என்றால் என்ன? பிறப்பிற்கும்

இறப்பிற்கும் இடையே நாற்பது, ஐம்பது அல்லது நூறு ஆண்டு, இடைவெளி இருக்கிறது. நம் வாழ்நாளை எந்த அளவிற்கு நீட்டிக்க முடியுமோ, அந்த அளவிற்கு நீட்டிக்க நாம் விரும்புகிறோம். நவீன மருத்துவம் மற்றும் அறுவைச்சிகிச்சை ஆகியவை ஒருவரின் ஆயுளை நீட்டிக்க உதவுகிறது. எதற்காக வாழ்நாளை நீட்டிக்க வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை - இருந்தாலும் வாழ்நாளை நீட்டிக்கவே ஒருவர் விரும்புகிறார்.

வாழ்க்கை என்றால் என்ன? அது உங்கள் வாழ்க்கையா? அல்லது, பிரபஞ்சத்தின் வாழ்க்கையா, பூமிக்கோளத்தின் வாழ்க்கையா, இயற்கையின் வாழ்க்கையா, ஆரம்பமும் இல்லாமல் முடிவும் இல்லாமல் இயங்கும் இயக்கத்தின் வாழ்க்கையா? இதற்கான பதிலைக் காண, உங்கள் சம்பிரதாய மரபின் உதவியை நாடி, அதன் வலையில் வீழ்ந்துவிடாதீர்கள். சம்பிரதாயங்கள் மடிந்துப்போனவை, கதவில் அடித்த ஆணியாய் மரத்துப்போனவை. சம்பிரதாயங்களை நீங்கள் ஏற்றுக்கொண்டு செயல்படும்போது, நீங்கள் இறந்து கொண்டிருக்கிறீர்கள் - ஒருவேளை, இறந்தே போயிருக்கவும் கூடும்.

வாழ்க்கையைப் பற்றி பேசும்போது, வாழ்க்கை என்றால் என்ன என்பதை நாம் ஆராயவேண்டும். வளர்ச்சியின் பல நிலைகளைக் காணும் மரத்தின் வாழ்க்கை, நீரில் வாழும் மீனின் வாழ்க்கை, புலியின் வசீகரத்தின் வாழ்க்கை, பிரபஞ்சத்தின் வாழ்க்கை என்று அளவிட முடியாத ஆழத்தோடு, பிரமிப்பூட்டும் அளவில் விரிந்து பரந்திருக்கும் இந்த வாழ்க்கையை ஆராய வேண்டும். நாம் இப்போது பேசிக்கொண்டிருப்பது அவைகளைப் பற்றியா, அல்லது உங்கள் சொந்த வாழ்க்கைப் பற்றியா?

உங்கள் வாழ்க்கையைப் பற்றி பேசிக்கொண்டிருக்கிறோம் என்றால், அது எப்படிப்பட்ட வாழ்க்கையாக உள்ளது? ஐம்பது அல்லது அறுபது ஆண்டுகளுக்கு, காலையிலிருந்து இரவு வரை அலுவலகம் சென்றுவருவது, குழந்தைகளைப் பெற்று வளர்ப்பது, ஏதோ ஒரு இனப்பிரிவுடன் தன்னை இணைத்துக்கொள்வது, ஏதோ ஒரு குருவைப் பின்பற்றிச் செல்வது என்பதாக உங்கள் வாழ்க்கை உள்ளது. உங்கள் குருவின் மீது அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருக்கிறீர்கள் - அதனால் அவரைப் பின்பற்றுகிறீர்கள். நாள் முழுவதும் போராட்டத்தில் இருக்கிறீர்கள். களிப்பு என்பதாகவும், பயம் என்பதாகவும் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ள எடுக்கும் முயற்சி என்பதாகவும் போராட்டம் பல வழிகளில் வருகிறது - உங்கள் வாழ்க்கை இப்படியாகத் தான் இருக்கிறது. இதைப்பற்றியா, இந்த வாழ்க்கையின் முடிவைப் பற்றியா பேசிக்கொண்டிருக்கிறோம்?

வாழ்க்கையில் எப்பகுதி முக்கியமானது? - மரணத்திற்கு முந்தைய பகுதியா அல்லது மரணத்திற்கு பிந்தைய பகுதியா? வாழ்க்கை, அழகானது, ஆற்றல் வாய்ந்தது, பேரார்வம் கொண்டது, விரிந்து பரந்தது - ஆனால், நீங்களோ, வாழ்க்கையை 'நான் எனது' என்ற அளவிற்கு அதைச் சிறுமைப்படுத்தி, ஆழமற்றதாக்கி, சின்னத்தனப்படுத்தி விட்டீர்கள். கட்டாயம் என்றோ ஒரு நாள் மரணமடையப் போகும் இந்த 'நான், எனது' என்ற விஷயத்திலா பெரிதும் அக்கறை கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் இயந்திரத்தனமாக வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். இத்தகைய வாழ்க்கையை நீட்டிக்க விரும்புகிறீர்கள். நீங்கள் நடத்தும் வாழ்க்கையை நீங்கள் ஊன்றிக் கவனிப்பதில்லை, அதுகுறித்து கேள்விகள் எழுப்புவதில்லை, ஐயுறுவதில்லை, கண்டுபிடிப்பதில்லை.

ஆனால், 'நான், எனது' மரணமடைவதைப் பற்றி மிகுந்த கவலையும், அக்கறையும் கொண்டுள்ளீர்கள். 'நான், எனது' என்பது என்ன? 'நீங்கள்' என்பது என்ன? அவை என்ன தொடர்சொற்களா? தயவுசெய்து, கூர்ந்து நோக்குங்கள், பரீட்சித்துப் பாருங்கள்.

'நான், எனது' என்பது உங்கள் பெயரா, உங்கள் உருவமா, உங்கள் தோற்றமா, உங்கள் வங்கிச் சேமிப்புக் கணக்கா, உங்கள் கருத்துகளா? உங்கள் நம்பிக்கைகளா, உங்கள் அனுபவங்களா? நீங்கள் கடவுள் நம்பிக்கை உடையவராக இருக்கிறீர்கள். உங்கள் நம்பிக்கையாக இருப்பது, நீங்கள்தான். ஆக, கடவுளை சிருஷ்டித்தது நீங்கள்தான். நீங்கள் யார்? இக்கேள்வியை எழுப்பி சிந்தித்துப் பாருங்கள்.

பிரமிப்பூட்டும் சாதனமாக இருக்கும் உங்கள் தேகத்தை மிகவும் மோசமாக உபயோகித்துவிட்டு, அதற்குக் கெடுதல்களை செய்துவிட்டு, போதைப் பொருட்களால் அதைக் கெடுத்துவிட்டு, அந்த உடல் ஒருநாள் இறந்து போகப்போகிறது என்பதை அறிந்திருப்பதால், பயப்படுகிறீர்கள். மருத்துவ வசதிகளால் உங்கள் ஆயுளை, நீண்ட காலம் நீட்டிக்கலாம். ஆனால், அது கட்டாயம் ஒருநாள் முடிவிற்கு வரும். ஏதோ ஒரு குறிப்பிட்ட துறையில் நீங்கள் வெற்றி பெற்றிருந்தால், 'நான் மகிழ்ச்சியுடன் நல்ல வாழ்க்கை வாழ்ந்துவிட்டேன். இறப்பதைப்பற்றி கவலைப்படவில்லை' என்று வேண்டுமானால் நீங்கள் சொல்லிக்கொள்ளலாம்.

'எது இறக்கிறது? எது வாழ்க்கையை பற்றிக் கொண்டு இருக்கிறது?' என்று நாம் வினவுகிறோம். வாழ்க்கை என்று நான் குறிப்பிட்டதில், அலுவலகத்திற்குச்

செல்வது, உடலின்பம் அனுபவிப்பது, வலி, களிப்பு, பிறருடன் சண்டையிடுதல், பிறர் வாழ்க்கையை கெடுத்தல் போன்றவை அடங்கும். நீங்கள் இளைஞரோ, இல்லை, வயதானவரோ, மேற்கூறியவாறுதான் உங்கள் வாழ்க்கை இருக்கிறது. இவ்விதமாக இருக்கும் வாழ்க்கை முடிவுறப்போகிறதே என்றா நீங்கள் பயப்படுகிறீர்கள்? இல்லையென்றால், வாழ்க்கை என்பதை முழுமையாகவும், கணக்கிடற்கரியதாகவும் விரிந்து பரந்திருக்கும் பிரபஞ்சத்தின் வாழ்க்கையாக கருதுகிறீர்களா? அதிசயிக்கத்தக்க வாழ்க்கையாக பிரபஞ்சம் இருக்கிறது - இங்கு நீங்களோ உங்கள் குறுகிய வாழ்க்கையை, பதற்றத்துடனும், போராட்டத்துடனும் கொடுமைகளுடனும் அபூர்வமாக அனுபவிக்கும் தெளிவுடனும் களிப்புடனும் நடத்துகிறீர்கள். நீங்கள் யார்? உங்கள் எண்ணம் எதைப் பற்றிக்கொண்டிருக்கிறது? உங்களைப் பற்றி நீங்கள் உருவாக்கியிருக்கும் கருத்துரு எத்தகையது?

ஆன்மாவின் அழியாத்தன்மை மற்றும் உங்களின் நிலைபேறுடைமை என்பதெல்லாம் வெறும் கற்பனை. 'நான், எனது' என்பது காலத்தின் படைப்பு. நீங்கள் பூமியில் பிறந்த அக்கணத்திலிருந்து இதுநாள்வரை 'நான், எனது' என்பதாக பரிணாம வளர்ச்சி அடைந்துள்ளீர்கள், அதனை மெய்யான ஒன்றாகவும் ஏற்றுக்கொள்கிறீர்கள். 'நான், எனது' என்ன மெய்யான ஒன்றா? வார்த்தைகளையும், மனப்பதிவுகள் மற்றும் அனுபவங்களையும் எண்ணமானது தொகுத்து 'நான், எனது' என்று ஆக்கிவிடுகிறதா? இந்த 'நான், எனது' வாழ்க்கையின் இன்னல்களையெல்லாம் தாங்கிக் கொள்கிறதா? 'நான், எனது' என்ற குறுகிய வட்டத்திலிருந்துகொண்டு, வாழ்க்கையின் அவலங்களைச் சுமக்காவிட்டால், பின்பு வாழ்க்கை என்பது முற்றிலும் வித்தியாசமானவொன்றாக

மிளிரும். வாழ்க்கை என்பது பரந்த, கணக்கிடற்கரிய இயக்கமாகும். ஆனால், 'நான், எனது' என்ற எண்ணம் இல்லாவிட்டால்தான், நம்மால் வாழ்க்கையின் பிரம்மாண்டத்தைப் பார்க்க முடியும்.

நாம் இப்போது மற்றுமொரு கேள்வியை எழுப்ப வேண்டும்: தியானம் என்றால் என்ன? என்ற கேள்விதான் அது. தியானம் என்ற விசாரணை, உங்கள் கவனம், அக்கறை மற்றும் ஆழ்ந்த சிந்தனையை முழுவதுமாக கோருகிறது. தியானம் என்றால் என்ன என்பதைப் பரிசீலிக்கப் போகிறோம். எப்படித் தியானம் செய்வது என்பதல்ல நம் கேள்வி. தியானத்தின் இயல்பு, தன்மை, கட்டமைப்பு மற்றும் அழகைப் பற்றி விசாரணை செய்யப்போகிறோம்.

Meditation (மெடிடேசன் : தியானம்) என்ற ஆங்கிலச் சொல்லிற்கு, அகராதியில், 'எண்ணிப் பார்ப்பது', 'விசாரணை செய்வது', 'கவனமாகச் சிந்திப்பது', 'தீர விசாரிப்பது' போன்ற அர்த்தங்கள் தரப்பட்டுள்ளன. 'அளவீடு செய்வது', 'அளவீடுகள்' போன்ற பொருளும் அதற்கு உண்டு. 'அளவீடு' என்பது ஒப்பிடுதல் என்று பொருள்படுகிறது.

கிருஸ்து பிறப்பதற்கு 450 ஆண்டுகளுக்கு முன்பாகவே, கிரேக்க நாடானது, ஐரோப்பா முழுவதையும் அதிரவைத்தது. கிரேக்கர்கள்தான் அளவீடுகளை கண்டுபிடித்தனர். தொழில்நுட்பத் துறைக்கு அளவீடுகள் மிகவும் அவசியம். அளவீடுகள் இல்லாவிட்டால், தொழில்நுட்பத்துறையே இருக்க முடியாது. மேற்கத்திய நாடுகள், தொழில்நுட்பத் துறையில் மிகுந்த வளர்ச்சி கண்டது. அவ்வளர்ச்சி,

இப்போது ஜப்பானுக்கு வந்திருக்கிறது. ஆனால், பண்டைக்காலத்தில், அளவீடுகள் என்பது ஒரு மாயத்தோற்றம் என்று இந்தியர்கள் உரைத்தார்கள்.

அளவீடுகள் அனைத்தும் வரையறைக்குட்பட்டது என்று இப்போது இந்தப் பேச்சாளர் கூறுகிறார். அளவீடுகள் அனைத்தும் துல்லியமாக, மிகச் சரியாக அளவிடும்பட்சத்தில், தொழில்நுட்பத்தில், திருத்தங்கள் பலவற்றிற்குப் பின், மிகச் சரியான உற்பத்திப் பொருள் என்பதாக இல்லாமல், உடனடியாக பூரண பலன் கிடைக்குமே, ஆனால், இப்போது அப்படி இல்லையே. ஆக, இந்தியா அன்று ஆசியா கண்டத்தையே அதிரவைத்தது. இதைக் கேட்டதுமே, ரொம்பவும் கர்வம் கொள்ளாதீர்கள் - அந்தச் சிறப்பு எல்லாம் மறைந்து போய்விட்டது. உங்களிடமிருந்த மதிப்புமிக்க ஆபரணத்தை நீங்கள் தொலைத்துவிட்டீர்கள், அரிதான அச்சிறப்பை இழந்துவிட்டீர்கள்.

தியானம் என்றால் தீவிரமாக எண்ணிப்பார்ப்பது மற்றும் அளவீடு செய்வது என்றிருக்கிறது. 'நான் இப்படி இருக்கிறேன், நான் அப்படி ஆகவேண்டும்' என்பது ஒரு அளவீடு. நீங்கள் புத்திசாலியாக இருக்கிறீர்கள், அழகாக இருக்கிறீர்கள் - ஆனால், நான் அவ்வாறில்லை. உங்களோடு என்னை ஒப்பிடுகிறேன் - அது ஒரு அளவிடுதல். ஒரு முன்உதாரணத்தை பின்பற்றிச் செல்வது, அளவீடு ஆகும். இலட்சியத்தைப் பின்பற்றிச் செல்வதும், அளவீடே. உளரீதியில் எங்கெல்லாம் ஒப்பிடுதல் இருக்கிறதோ, எங்கெல்லாம் அளவிடுதல் இருக்கிறதோ, அங்கெல்லாம் தியானம் இருக்க முடியாது.

எதிரில் நிற்கும் இரண்டு மோட்டார்கார்களை நீங்கள் ஒப்பிட்டுப் பார்க்கிறீர்கள், இருவேறு வகையான

துணிரகங்களின் தரத்தை ஒப்பிட்டுப் பார்க்கிறீர்கள். ஆனால், உங்களை மற்றவருடன் ஒப்பிட்டுப் பார்த்து, 'இன்னும் மேம்பட்ட' என்ற தொனியில் மனம் எண்ணத் துவங்கினால், தியானம் செய்வது உங்களுக்கு சாத்தியமாகாது. கால்களை பத்மாசனத்தில் வைத்து அமர்ந்துகொண்டு நீங்கள் தியானம் செய்யலாம், பல்வேறுவிதமான யோகப்பயிற்சிகளை, அனைத்துவித கட்டுப்பாடுகளுடன் நீங்கள் செய்யலாம். ஆனால், கட்டுப்பாடுகள் இருக்குமிடத்தில், அளவீடுகள் இருக்கும். தியானத்தில், எந்தவிதமான முயற்சியும் இருக்கக் கூடாது.

ஏதோ ஒரு வார்த்தையை, ஒரு மந்திரத்தை, திரும்பத்திரும்ப உச்சாடனம் செய்வதை நீங்கள் தியானம் என்கிறீர்கள். 'உள்ளது' என்பது, தான் விரும்பியவாறு 'ஆதல்' என்ற இயக்கத்தில், 'இதைவிட மேன்மையான' என்ற அளவீடு முறையில் செயல்படுகிறது. ஆனால், 'ஏதுமாக ஆகாத' நிலையில் அளவிடுதல் ஏதுமில்லை. இத்தகைய நிலையை ஆழ்ந்து சிந்திப்பதுதான் தியானம் என்று பிறர் கூறக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

சுயநலத்தை மையமாகக் கொண்ட அனைத்து செயல்களையும் முற்றிலுமாக மறுதலிப்பது என்றும் தியானம் பொருள்படுகிறது. 'ஏதுமாக ஆகாத' நிலைப்பாட்டில் இருந்துகொண்டு சுயநலமில்லா மலிருப்பதுதான், 'தியானம்' என்பதின் அடிநாதமாக, எனக்குத் தோன்றுகிறது.

நீங்கள் மந்திரங்களை திரும்பத் திரும்பச் சொல்லலாம், சரியான மூச்சுப்பயிற்சி செய்யலாம், யோக முறை ஒன்று உங்களுக்குப் பிடித்தமில்லையென்றால் மற்றொன்றிற்கு மாறலாம், வேறுவேறு வழிமுறைகளைப் பின்பற்றலாம், 'ஜென்' கற்றுக்கொள்ள ஜப்பானிற்குப்

போகலாம், சமீபத்தில் பிரபலமாகிவரும் புதிய குரு, எப்படித் தியானம் செய்வது என்று உங்களுக்குச் சொல்லித்தரலாம் - இவை அனைத்திலும் கட்டுப்பாடு குறிப்பாக உணர்த்தப்படுகிறது. கட்டுப்பாடு உள்ள இடத்தில், கட்டாயம் சச்சரவு தோன்றும், அளவிடுதல் / ஒப்பிடுதல் இருக்கும். எனவே, மேற்கூறப்பட்டவை, தியானம் ஆகாது.

தியானம் என்பது ஊக்கத்துடன் கூடிய முழுமையான வாழ்க்கை வாழ்வதாகும். அன்றாட வாழ்க்கையிலிருந்து பிரிந்து நிற்பதாக தியானம் இல்லை. காலையிலோ அல்லது மாலையிலோ குறிப்பிட்ட ஒரு மூலையில் இருபது நிமிடங்களுக்கு தியானம் செய்வது என்பது பிற்பகலில் இளைப்பாற எடுக்கும் குட்டித் தூக்கம் போன்றதுதான். தியானத்திற்கு வழிமுறைகள் கிடையாது. வழிமுறையானது, பயிற்சியை உள்ளடக்கியது. பயிற்சி என்பது அளவிடுதல் என்று பொருள்படுகிறது. ஏனென்றால், பயிற்சியால் நீங்கள் தற்சமயம் இருப்பதிலிருந்து முன்னேறி எந்த அளவிற்கு எட்ட விரும்புகிறீர்களோ, அந்த அளவிற்கு உயர முயற்சிகள் செய்கிறீர்கள் - அது அளவிடுதல்தான் அல்லவா? ஒரு வேளை, நீங்கள் தவறான பயிற்சிகூட செய்து கொண்டிருக்கலாம் - அபஸ்வரத்தைப் பயிற்சி செய்கிறீர்கள். அதைத் தியானம் என்று அழைக்கிறீர்கள்.

மேலும் நீங்கள் செய்யும் தியானம், உங்கள் அன்றாட வாழ்க்கையோடு எந்த சம்பந்தமும் கொண்டிராமல், முற்றிலுமாகப் பிரிந்து நிற்கிறது. அன்றாட வாழ்க்கையை தியானத்துடன் கூடி வாழ முடியுமா என்பதைக் கண்டுபிடியுங்கள். எந்த நேரத்திலும் அளவிடுதல் என்ற செயல்பாடு இல்லாமல் வாழ்தல்

என்பதே தியானத்துடன் கூடி வாழ்வதாகும். அப்படி வாழ்வது என்பது சுலபமானதல்ல. இதை மிகவும் கவனமாகக் கேட்டு புரிந்துகொள்ளுங்கள். கட்டுப்படுத்த எண்ணும் அவரே, கட்டுப்படுத்தப்படுவதாகவும் இருக்கிறார். ஆனால், தியானத்தில் கட்டுப்பாடுகள் கிடையாது. முயற்சி என்பது ஆசை. ஆனால், தியானத்தில் முயற்சி ஏதுமில்லை. 'நான் தியானம் செய்வேன். ஒவ்வொரு நாளும் தியானிப்பேன், ஒழுங்கு கட்டுப்பாட்டுடன் இருப்பேன்' என்று நீங்கள் கூறும்போது, ஆசையின் சாரமாய் இருக்கும் முயற்சி செயல்படுகிறது. கட்டுப்படுத்துபவர் இல்லை, மேலும் கட்டுப்பாடும் இல்லை என்பதால் தியானத்தில் முயற்சி என்பது துளியும் இல்லை.

தியானம், விழிப்புணர்வை குறிப்பாக உணர்த்துகிறது. பூமியைப் பற்றிய விழிப்புணர்வு, புவியின் பேரழகைப் பற்றிய விழிப்புணர்வு, சருகாய் காய்ந்துபோன இலையைப் பற்றிய விழிப்புணர்வு, சொறிபிடித்த நாயைப் பற்றிய விழிப்புணர்வு என விழிப்புணர்வின் முழுமையை, தியானம் உட்பொருளாய் கொண்டிருக்கிறது. நீங்கள் வாழும் சுற்றுச்சூழல், உங்கள் அண்டைவீட்டுக்காரர், உங்கள் ஆடையின் நிறம், நீங்கள் ஏன் அந்த நிறத்தையும், மணிகளையும் அணிந்துகொள்ள விரும்புகிறீர்கள் என்பதைப்பற்றியெல்லாம்கூட விழிப்புணர்வுடன் இருத்தல் வேண்டும். இலைகளிடையே ஊடுருவிச் செல்லும் காற்றின் அழகைப் பற்றிய விழிப்புணர்வு, உங்கள் எண்ணங்களைப் பற்றிய விழிப்புணர்வு, உங்கள் உணர்ச்சிகளைப் பற்றிய விழிப்புணர்வு என்று எதிலும் விழிப்புணர்வோடு இருத்தல் வேண்டும்.

'இதைப் பற்றிய விழிப்புணர்வு இருந்தால் போதும், அதுபற்றி வேண்டாம்' என்று நீங்கள் தேர்ந்தெடுக்காமல், தெரிவு ஏதும் செய்யாமல், எதையும் உற்றுநோக்கி, அதைப்பற்றிய விழிப்புணர்வோடு இருத்தல் வேண்டும். அவ்வாறிருப்பது, உங்கள் மென்னயவுணர்வை உயர்த்துகிறது, அனைத்தையும் முழுமையாக நோக்க உதவுகிறது. ஒன்றை 'அவசியம் செய்வேன்' என்று கூறினீர்கள் என்றால், அதைக் கட்டாயம் செய்துவிடுங்கள், ஒருபோதும் சொன்ன வார்த்தையை மறந்துவிடாதீர்கள். உண்மையிலேயே ஒன்றைப் பற்றி அவ்வாறு நீங்கள் நினைக்கவில்லையென்றால், அவ்வாறு பொருள்படும்படி பிறரிடம் பேசாதீர்கள் - தியானத்தின் ஒரு பகுதியாக இது இருக்கிறது. அதாவது, உங்கள் உணர்ச்சிகளை, உங்கள் கருத்துகளை, உங்கள் தீர்ப்புகளை, உங்கள் நம்பிக்கைகளைப் பற்றிய விழிப்புணர்வை நீங்கள் கொண்டிருக்க வேண்டும். இத்தகைய விழிப்புணர்வில், தெரிவு செய்வதற்கான வாய்ப்பு இல்லை. அது, பூமியின் அழகு, வானத்தின் எழில், நீர்ப்பரப்பின் ஒளி போன்றவைப்பற்றிய விழிப்புணர்வோடு இருக்கும்.

தேர்வற்ற அறிநிலையாய் இருக்கும் விழிப்புணர்வில், கவனம் செயல்படுகிறது. அத்தகைய விழிப்புணர்வுடன் நீங்கள் இருக்கும்போது, பேச்சாளர் பேசுவதை மட்டுமின்றி, உங்கள் வாழ்க்கைத்துணை பேசுவதை, உங்கள் குழந்தைகள் பேசுவதை, அரசியல்வாதிகள் பேசுவதை, உங்களால் கவனமாய் கேட்கமுடியும். தீவிர கவனத்துடன் கவனிக்கும்போது, 'நான்' என்ற மையம் கவனிப்பதாக, அது இருப்பதில்லை. இதுவும் தியானம்தான்.

துக்கம், அன்பு, கருணை, மரணம், தியானம், விழிப்புணர்வு, கவனம் என்பதைப் பற்றிய புரிதலோடு கூடிய மனம், இந்த நெடிய பயணத்திற்குப் பின் கேட்க வேண்டிய கேள்வியாக 'சமயம் என்றால் என்ன?' என்ற கேள்வி உள்ளது. கோயில்கள், கோயில்களில் வைக்கப்பட்டிருக்கும் தெய்வச் சிலைகள், பூஜை வழிபாடுகள், தேவாலயங்கள் - இவைகளில் எதுவுமே சமயம் இல்லை. எண்ணங்கள் உருவாக்கியதாக சடங்குகளும், நம்பிக்கைகளும் உள்ளன. எண்ணங்கள் உருவாக்கியதை, உங்களால் உருவாக்கப்பட்டதை, நீங்கள் வழிபாடு செய்கிறீர்கள்.

உங்கள் பயத்தின் காரணமாகவும், நீங்கள் பாதுகாப்பைக் கோருவதின் காரணமாகவும், நீங்கள் கடவுளர்களை உருவாக்கினீர்கள் என்பதை எப்பொழுதாவது உணர்ந்திருக்கிறீர்களா? நாள் தவறாமல் செய்யப்படும் சடங்குகள், பூஜைகள் மற்றும் பிரார்த்தனைக் கூட்டங்கள் போன்றவைகள் யாவும், ஒரு வகைப்பட்ட கேளிக்கையே. இந்த உண்மையை நீங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டீர்கள் என்று நான் அறிவேன். இந்தச் சடங்குகளையெல்லாம் நீங்கள் செய்துகொண்டே தான் இருப்பீர்கள். உங்கள் மனம், சம்பிரதாயங்களால் தளைபட்டிருக்கிறது, வாழ்க்கையை பற்றிய பயத்தில் இருக்கிறது. மேலும், அது, ஏதோ ஒரு வகையான பாதுகாப்பைப் பெற விரும்புகிறது - இவ்வுலகில் கிடைக்கவில்லையென்றால், வேறு எங்காவது கிடைக்கக்கூடுமா என்று ஏங்குகிறது.

ஆக, சமயவுணர்வுள்ள ஒருவர், எந்தவொரு குழுமத்தைச் சேர்ந்தவராகவும் இருப்பதில்லை, எந்த மதத்தைச் சார்ந்தவராகவும் இருப்பதில்லை. அவருடைய

மனம், பயமற்றதாகவும், சுதந்திரமானதாகவும் இருப்பதால், அவருக்கு நம்பிக்கைகள் ஏதும் கிடையாது. நுண்ணறிவு மட்டுமே ஒருவருக்கு மேன்மையான பாதுகாப்பை வழங்க முடியும். நுண்ணறிவு என்று இங்குக் குறிப்பிடப்பட்டது, கபடம்மிக்க எண்ணத்தின் நுண்ணறிவு அல்ல. மாறாக, அது காருண்யத்தின் நுண்ணறிவாகும். அத்தகைய நுண்ணறிவிற்கு, ஐயப்பாடுகளோ, பயங்களோ கிடையாது. அது, பிரம்மாண்டமானது, பொதுவானது, உலகளாவியது.

கவனம் உள்ள இடத்தில், மௌனம் இருக்கும். உங்கள் கண், காது, நாடி நரம்புகள், உடல் அனைத்தும் கவனத்துடன் ஊன்றி, பேச்சாளரின் உரையைக் கேட்கும்போது, அந்தக் கவனத்தின் தன்மையில் பேரமைதியும், ஆழம் காண முடியாத மௌனமும் இருக்கிறது. அந்த அமைதியை, எண்ணம் ஒருபோதும் தொட்டதில்லை. அந்த உன்னத அமைதியில், மௌனத்தில் மட்டுமே, தொன்றுதொட்டு மனிதன் தேடும் அந்தப் புனிதமான, விஞ்சி நிற்கும், அனைத்தையும் கடந்த 'அது' இருக்கும். வாழ்க்கையின் வேதனைமிக்க பிரயாசைசளிலிருந்து முற்றிலுமாக விடுபட்டவரே, அளவிடற்கரிய அந்தப் புனிதத்தைக் காண முடியும். ஆக, அன்றாட வாழ்க்கையின் செயல்பாடுகளின் வெளிப்பாடாக, தியானம் இருக்க வேண்டும் என்றாகிறது.

*மதராஸ், 02.01.1983*

■■

13

# காரணம் உண்டென்றால், முடிவும் உண்டு

இந்நிகழ்ச்சி, ஒரு சொற்பொழிவு நிகழ்ச்சி அல்ல என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். பொதுவாக, சொற்பொழிவு என்றால் குறிப்பிட்டதொரு விஷயத்தைப் பற்றிய விளக்கங்களை உங்களுக்குத் தெரிவித்து, அதைப்பற்றிய அனைத்து விவரங்களையும் நீங்கள் கற்றுக்கொள்ளும் வகையில் தெரிவிப்பதாக இருக்கும். ஆனால், நாம் இங்கே அன்றாட வாழ்க்கையைப் பற்றி கலந்துரையாடப் போகிறோம். நம் தினசரி வாழ்க்கையில் எதிர்ப்படும் பலதரப்பட்ட பிரச்சினைகளையும், அவற்றிற்குத் தீர்வுகள் உண்டா என்பது பற்றியும் பார்க்கப்போகிறோம். ஊகங்கள் மற்றும் சூத்திரங்களைக் கொண்டிருக்கும் தத்துவங்கள் எதிலும் நாம் அக்கறை செலுத்தப்போவதில்லை. தத்துவங்கள், ஒருவித அறிவுசார் கேளிக்கைகளாக உள்ளன. பேச்சாளரும் நீங்களும் நம் ஒட்டுமொத்த வாழ்க்கைப் பற்றியும், அதில் நாம் சந்திக்கும் பல்வேறு பிரச்சினைகளைப் பற்றியும் நிதானமாக கலந்துரையாட இருக்கிறோம். திறந்த மனதுடன், கேள்விகள் எழுப்பி ஐயுற்று, தீர விசாரிப்பதாய் இருக்கிறோம்.

நாம் இங்கு ஒருமித்து சிந்திக்க வேண்டும் என்ற பொறுப்பு, உங்களுக்கும், அதேபோன்று, பேச்சாளருக்கும் இருக்கவேண்டும். சிந்தனைத்தளத்தில் நாம் ஒருவரையொருவர் சந்திக்கிறோமா என்பதை நாம் ஒவ்வொருவரும் கண்டுபிடிக்க வேண்டும். அறிவுபூர்வமான நிலையிலோ அல்லது உணர்வு நிலையிலோ அல்லது கொள்கை நிலையிலோ மட்டும் சந்திப்பதாக இல்லாமல், பிரச்சினைப் பற்றிய விசாரணையில் தொடர்பு கொண்டவராக இருக்கிறோமா என்பதைக் காண வேண்டும். விசாரணையில் ஆமோதிப்பது முக்கியமல்ல. தீர விசாரிக்க, கேள்விகள் எழுப்ப வேண்டும்.

கேள்விகள் எழுப்ப, விசாரணை செய்ய, ஒருவர் விருப்புவெறுப்புகளிலிருந்து விடுபட்டவராக இருக்க வேண்டும்; அவ்வாறு இல்லாவிட்டால், அவர் செய்யும் விசாரணைக்கு மதிப்பு ஏதுமில்லை. ஒரு குறிப்பிட்ட வகை சிந்தனையை ஏற்றுக்கொண்டவராகவோ அல்லது, ஒரு குறிப்பிட்ட கோட்பாட்டிற்கு இணங்குபவராகவோ, நீங்கள் இருப்பின், உங்களால் மற்றவருடன் ஒருமித்து சிந்திக்க முடியாது. ஒருமித்து சிந்திப்பதற்கு, மிக அதிக அளவில் கவனம் தேவைப்படுகிறது. நம்மில் பலரும் ஏற்கனவே கொள்கைகளுக்கும், தீர்மானங்களுக்கும், கருத்துகளுக்கும் கட்டுப்பட்டவர்களாய் இருப்பதால், சிந்தனைத்தளத்தில் நாம் எவரையும் சந்திப்பதே இல்லை.

இந்தப் பேச்சாளருக்கு எந்தவிதமான நம்பிக்கைகளும் கிடையாது, கொள்கைகள் எதுவும் கிடையாது, எவ்வித அதிகாரமும் கிடையாது. இக்காரணங்களினால், அவரால் சுலபமாகவும், சுதந்திரமாகவும், மகிழ்ச்சியாகவும் விசாரணை செய்ய முடியும். நீங்களும் சுதந்திரமான நிலையில் இருந்தால், உங்களாலும் விசாரணை செய்ய

முடியும், நம் சமுதாயத்தின் பரந்த பரிமாணத்தையும், அதன் சிக்கல்களையும் பார்க்க முடியும், பல்வேறு நாடுகளின் அரசாங்கங்களின் செயல்பாட்டையும் காண முடியும்.

ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக, இப்புவியின் மீது மனிதன் வாழ்ந்துகொண்டிருக்கிறான். இத்தனை ஆண்டுகளுக்குப் பின்பும், ஊக்கமற்ற, கொடூரமான, மூடநம்பிக்கைகள் கொண்ட, முட்டாள்தனமான, மற்றும் சம்பிரதாயங்களைப் பின்பற்றுபவனாக, அவன் ஏன் ஆனான் என்ற கேள்விக்கும் விடை காணமுடியும். நம்மைப் பற்றி, நம் இயல்பைப் பற்றி, ஆழமாக புரிந்துகொள்ளக்கூடிய ஆற்றல் நமக்குள்ளது. நாம்தான் இந்தச் சமுதாயம், நாம்தான் இச்சமுதாயத்தை உருவாக்கினோம்.

சமுதாயத்தில் ஒழுங்கைக் கொண்டுவர, அரசாங்க சட்டதிட்டங்களோ, விதிமுறைகளோ பயன்படாது. முதலில், நம் வீட்டில் ஒழுங்கைக் கொண்டுவந்தால்தான், சமுதாயத்தில் ஒழுங்கைக் கொண்டுவர முடியும். நம் வீடு என்று இங்கு குறிப்பிடப்பட்டது, செங்கல் மற்றும் சிமிண்டால் கட்டப்பட்ட நாம் வசிக்கும் கட்டிடத்தை அல்ல. நமது போராட்டங்கள், சச்சரவுகள், இன்னல்கள், குழப்பம் மற்றும் துக்கத்தின் இருப்பிடமாக, வீடாக இருப்பது நம் பிரக்ஞை. பிரக்ஞையில், ஒழுங்கு நிலைபெற்றால்தான், சமுதாயத்தில் ஒழுங்கைக் கொண்டு வர முடியும். அகத்தில் ஒழுங்கைக் கொண்டுவராமல், புறத்தில் ஒழுங்கைக் கோருவதில் அர்த்தமேதுமில்லை.

மனிதர்கள் ஏன் இந்த நிலையில் இருக்கிறார்கள், அவர்கள் அவ்வாறிருக்க என்ன காரணம் என்பதில்தான் நாம் அக்கறை கொண்டுள்ளோம். அவர்கள் இன்றிருக்கும்

நிலை என்னவோ, அதுவேதான் அவர்களின் எதிர்கால நிலையாகவும் இருக்கும். நிகழ்காலத்தில் மாற்றம் ஏற்படாவிட்டால், மனிதனின் எதிர்காலமும், சற்றே வேறுபட்டு சிறிய மாற்றங்களுடன் நிகழ்காலத்தைப் போலவேதான் இருக்கும். தங்களது மனோபாவத்தில், தங்களது வாழ்க்கையில், புரட்சிகரமான அடிப்படை மாற்றத்தைக் கொண்டுவருவதே, அகத்தில் ஒழுங்கைக் கொண்டுவருவதாகும். அத்தகைய மாற்றம் பெறாமல், இவ்வுரைகளைக் கேட்பதில் பொருளேதுமில்லை.

குறிப்பிட்டதோர் தளத்தில், சமச்சீர் அளவு தீவிரத் தன்மையுடன், ஓரே நேரத்தில், நாம் இங்கு ஒன்று கூடுகிறோம் என்பது தெளிவானால், பிறகு நமக்குள் தொடர்புகொள்வது என்பது மிகச் சுலபமான விஷயமாகிவிடும். பேச்சாளர், உங்களோடு சேர்ந்து வாழ்வியல் விஷயங்களை விசாரணை செய்ய வந்திருக்கிறார் என்பது தெரிந்த விஷயம். ஆனால் உங்கள் உறுதிப்பாடு, நம்பிக்கைகள், குருபக்தி போன்றவற்றை நீங்கள் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தீர்கள் என்றால், சிந்தனைத்தளத்தில் நாம் சந்தித்துக்கொள்ளவே மாட்டோம். தங்கள் சொந்த வாழ்க்கையைப் பற்றி மட்டும் கவலைப்படாமல், உலகின் நிலையைப் பற்றியும், அதன் சீர்குலைவைப் பற்றியும், போர் அச்சுறுத்தல்கள் பற்றியும், உலகெங்கும் வறுமை, வன்முறை மற்றும் அழிவு தலைவிரித்தாடுவது பற்றியும் கவலைப்படும் இரண்டு நண்பர்கள் கலந்துரையாடுவது போன்றதே இந்நிகழ்ச்சி.

உலகச் சீர்குலைவிற்கு, நாம்தான் காரணம். இந்நிலையில், நாம் மூலையில் உட்கார்ந்துகொண்டு தியானம் செய்வதால் எந்த நன்மையும் இல்லை. எதைப்

பற்றி தியானிக்கிறோம் என்பது அந்தக் கடவுளுக்குத்தான் வெளிச்சம்! நம் பிரச்சினைகளுக்கான தீர்வுகளைக் காணவேண்டும் என்பதில் நாம் மிகுந்த அக்கறையுடனும், தீவிரத்துடனும் இருக்கிறோம் என்பதையும், நம் விசாரணை மேலோட்டமானதல்ல என்பதையும் தயவுசெய்து நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்.

பிரச்சினை என்றால் என்ன? பிறந்ததிலிருந்து இறக்கும்வரை, நமக்குப் பிரச்சினைகள் இருந்து கொண்டே இருக்கிறதே, ஏன்? சமூகப் பிரச்சினைகள், பொருளாதாரப் பிரச்சினைகள், கணினி பிரச்சினைகள், உறவுமுறையில் உண்டாகும் பிரச்சினைகள், அன்றாடப் பிரச்சினைகள் என பல்வேறு பிரச்சினைகள் உள்ளன. Problem (ப்ராப்ளம் = பிரச்சினை) என்ற ஆங்கிலச் சொல்லின் மூல அர்த்தமாக 'உங்கள் மீது எறியப்பட்ட ஒன்று', 'சவால்' என்பதாக உள்ளது. என்ன காரணத்தினால், நமக்குப் பிரச்சினை உண்டாகிறது? ஒரு பிரச்சினைகூட இல்லாமல் வாழ்க்கை நடத்துவது சாத்தியம்தானா?

நமக்கிருக்கும் பிரச்சினைகள், நமக்குள் முரண்பாடு களைத் தோற்றுவித்து, உராய்வை ஏற்படுத்தி, நமது மூளையை சோர்வடையச் செய்துவிடுகிறது, நமக்கு வயோதிகம் வந்துவிடுகிறது. நாம் பிரச்சினைகளுடன் வாழ்கிறோம். நம் வாழ்க்கையே, பிரச்சினைகளின் இயக்கமாக உள்ளது. பிரச்சினைகளே இல்லாமல் இருப்பது சாத்தியம்தானா என்று நாம் வினவுகிறோம். இதைப்பற்றி விசாரணை செய்யப்போகிறோம் - பிரச்சினைகள் இல்லாமல் வாழமுடியும் என்றோ, வாழ முடியாது என்றோ தீர்மானிக்கப்போவதில்லை, அதுவல்ல நம் நோக்கம். எதனால் நமக்குப் பிரச்சினைகள் வருகிறது,

ஏன் நமது மூளை, பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முற்படுகிறது என்பதைக் காண்பதே நம் நோக்கம். தொழில்நுட்பத் துறையில் ஈடுபட்டவர் நீங்கள் என்றால் இயந்திரங்கள் தொடர்பான பிரச்சினைகளும், கணினி சம்பந்தமான பிரச்சினைகளும், இயந்திர வடிவமைப்பு பிரச்சினைகளும், கணக்கிடுதல் சம்பந்தமான பிரச்சினை களும் எதிர்ப்படும்; அவை தவிர்க்க முடியாதவை.

ஆனால், நாம், நம் தொடர்புகளில், நம் வாழ்க்கை முறையில், நம் குடும்பத்தில், நம் அன்பிற்குரியவரிடத்தில், பிரச்சினைகளை எதிர்கொள்கிறோமே, அதற்கு என்ன காரணம்? தொழில்நுட்பத் துறையில், பிரச்சினைகள் தவிர்க்க முடியாதவை என்று பார்த்தோம். ஒரு கணினியை வடிவமைக்கும்போது தோன்றும் பிரச்சினை களுக்கு உடனே தீர்வு காணவேண்டிய கட்டாயம் இருக்கிறது.

நமது மூளை, பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும்முறையில் பயிற்றுவிக்கப்பட்டுள்ளதா? இயந்திர மயமான உலகில் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். வர்த்தகர், மருத்துவர், விஞ்ஞானி, பொறியாளர் என்பது போன்று நாம் செயலாற்றுகிறோம். நமது மூளை, கல்வி முறையாலும் மற்றும் பயிற்சிகளாலும், பிரச்சினை களுக்குத் தீர்வு காண வேண்டும் என்று எண்ணுகிறது. நம் அன்றாட செயல்பாடுகளிலும், பிரச்சினைகளுக்குத் தீர்வு காண வேண்டும் என்ற மனோபாவமே தொடருகிறது. ஒருவர், கணினி நிபுணராக இருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவர், தன் தொழிலில், கணினியில் ஏற்படும் சிக்கல்களுக்கு விடை காணவேண்டும். அவர் பெற்ற கல்வி, பயிற்சி மற்றும் கட்டுப்பாடுகள், கணினியைச் சரிசெய்ய, சிக்கல்களுக்குத்

தீர்வுகாண உதவுகிறது. 'பிரச்சினைகளுக்குத் தீர்வு' என்ற இந்த இயக்கத்தையே, நாம், மனோரீதியான பிரச்சினைகளுக்கும் நீட்டிக்கிறோம். ஆக, தொடர்பு, பயம், பதற்றம் போன்ற மனோரீதியான விஷயங்களுக்கும், பிரச்சினைகளுக்குத் தீர்வு காணவேண்டும் என்ற எண்ணமே, மனோபாவமே, நமக்கு உள்ளது. நம் அன்றாட செயல்பாடுகளில், தீர்வுகாணும் எண்ணமே, செயலாற்றுகிறது.

பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் முறையில் நீங்கள் பயிற்றுவிக்கப்பட்டுள்ளீர்கள். ஒரு சிக்கலைத் தீர்க்கும் போது, பல்வேறு சிக்கல்களை அல்லவா தோற்றுவிக்கிறீர்கள்! உலகெங்கும், அனைத்து அரசாங்கங்களும் இவ்வகையில்தான் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. சமூகத்தின் ஒரு பிரச்சினையைத் தீர்க்க அவர்கள் முயற்சிக்கிறார்கள். அவர்கள் செயல்படுத்தும் பிரச்சினைக்கான தீர்வானது, பல்வேறுவிதமான பிரச்சினைகளைத் தோற்றுவிக்கிறது. அதன் காரணமாய், பிரச்சினைகளுடன் நாம் தொடர்ந்து வாழ்கிறோம்.

நாம் இங்குச் சொல்வது, 'பிரச்சினைகளுக்குத் தீர்வு' என்ற முறையிலிருந்து முற்றிலும் வித்தியாசமான ஒன்றாகும். வாழ்க்கையை கவனித்துப் பாருங்கள் என்று சொல்கிறோம். தீர்வுகாண முயற்சிக்கும் மனதோடு வாழ்க்கையை பார்க்காதீர்கள். ஏன் நம் மூளை, பிரச்சினையைத் தீர்க்க வழியைத் தேடுகிறது, ஏன் அவ்வாறு அது பயிற்றுவிக்கப்பட்டிருக்கிறது, பிரச்சினைகளைத் தீர்ப்பது என்ற நோக்கோடு நாம் ஏன் வாழ்க்கையை சந்திக்கிறோம் என்ற விஷயங்களைப் புரிந்துகொண்டு, வாழ்க்கையை கவனித்துப் பாருங்கள் என்று சொல்கிறோம்.

வாழ்வின் பலதரப்பட்ட பிரச்சினைகளைப் பார்க்கப்போகிறோம். ஆனால், அவற்றிற்கான விடை களையோ, தீர்வுகளையோ நாம் கோரப்போவதில்லை. தீர்வுகாண பயிற்றுவிக்கப்பட்ட மூளையோடு, நாம் வாழ்க்கையை பார்க்கப்போவதில்லை. ஒரு பிரச்சினைகூட இல்லாமல் வாழ்வதென்பது, மிகவும் சிறப்பான வாழ்க்கை வாழ்வதாகும். அத்தகைய வாழ்க்கை, பேராற்றலையும் அதீத சக்தியையும், தன்னை சதா புதுப்பித்துக்கொள்ளும் இயல்பையும் கொண்டது. இத்தகையதோர் வாழ்க்கை வாழ்வதைப் பற்றிய இவ்விசாரணை, மிகவும் தீவிரமான ஒன்றாகும்.

சிக்கல்கள் - சிக்கல்களைத் தீர்வுகளால் தீர்ப்பது - தீர்வுகளினால் உண்டாகும் சிக்கல்கள் - மறுபடியும் தீர்வுகள் என்பதாய் இருக்கும் இந்தச் சுழற்சியில் சிக்கிக்கொண்டுவிட்டீர்கள் என்றால், பிரச்சினை களிலிருந்து நீங்கள் வெளியே வரவே மாட்டீர்கள். எந்தவொரு விஷயத்தையும் 'பிரச்சினை' என்று பெயரிட்டு அழைக்காமல், அந்த விஷயத்தின் தன்மையையும், உட்பொதிவையும் விழிப்புணர்வுடன் நோக்க, நம்மால் முடியுமா என்பதைப் பார்க்கலாம். ஒரு விஷயத்தை, பிரச்சினையாகக் கருதி, அதை அணுகினால், அதற்கான தீர்வைக்காண நீங்கள் முயன்றால், நீங்கள் மேலும் பிரச்சினைகளை உண்டாக்குவீர்கள்.

உதாரணத்திற்கு, அமைதியான மனம் கொண்டிருப் பது மிகவும் அவசியம் என்று ஒருவர் சொல்கிறார். அவர் மேலும் சொல்கிறார்: 'மனம், சதா எதிலாவது மூழ்கிவிடக்கூடாது, அது எண்ணங்களால் நிரப்பப்படாத ஒன்றாய் இருக்க வேண்டும். அத்தகைய மனதால் / மூளையால்தான் முற்றிலும் புதிய, சுதந்திரமான, அதீத

உயிர்ப்புடைய ஒன்றைக் கண்டுணர முடியும். அமைதியான மனதால்தான் தெளிவாகவும் முற்றிலும் வித்தியாசமாகவும், சிந்திக்க முடியும் என்று.' இதைக் கேட்டதும் 'நான் எப்படி அத்தகைய அமைதியான மனதைப் பெறுவது?' என்று வினவத் தொடங்கி விடுகிறீர்கள். ஆக, இந்த விஷயத்தை நீங்கள் ஒரு பிரச்சினையாக்கி விட்டீர்கள்.

'என் மனம் சதா அலைபாய்ந்துக் கொண்டே இருக்கிறது, எந்நேரமும் அது தொணதொணத்துக் கொண்டே இருக்கிறது. எப்படி மன அமைதியை கொண்டுவருவது? சலனம் எப்படி முடிவிற்கு வரும்?' என்று கேட்கிறீர்கள். மனதின் சலனத்தை நிறுத்த எழும் விருப்பம், பிரச்சினைகளைத் தோற்றுவிக்கிறது. 'எப்படி மன அமைதியை கொண்டுவருவேன்?' என்பது ஒரு பிரச்சினையாக ஆகிவிடுகிறது. ஆனால், சிந்தனைகள் அற்ற நிறைவெளி மனம் தேவை என்ற கோரிக்கையோடு அணுகாமல், எண்ணங்களால் நிரம்பி வழியும் உங்கள் மனதை நீங்கள் நோக்கும்போது, ஏன் உங்கள் மனம், எந்நேரமும் ஏதோ ஒரு விஷயத்தில் மூழ்கிப் போகிறது, மனதை மூழ்கடிக்கும் விஷயங்களின் தன்மை என்ன, குறிப்பிட்ட ஒன்றில் ஏன் மனம் மூழ்கிப்போகிறது என்பதையெல்லாம் உங்களால் கண்டுணர முடிகிறது. விழிப்புணர்வுடன் ஒன்றை நோக்கும்போது, அது, தனது சுயசரிதையை உங்களுக்குச் சொல்கிறது.

மேற்கூறப்பட்ட விஷயங்களையெல்லாம் ஆழமாகச் சிந்திக்கப்போகிறோம். ஆனால், அதற்கு முன், நீங்களும், பேச்சாளரும் வாழ்க்கையை ஒரு பிரச்சினையாகக் கருதாமல், ஒரு பிரம்மாண்டமான இயக்கமாகவே கருதுவதைப் பற்றி மிகத் தெளிவாக இருக்க வேண்டும்.

பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான வழிமுறைகளில் பயிற்றுவிக்கப்பட்ட மூளையாய் உங்கள் மூளை இருந்தால், வாழ்க்கையை தீர்க்கப்பட வேண்டிய ஒரு பிரச்சினையாகவே நோக்கும். வாழ்க்கை எனும் இயக்கத்தை, பிரச்சினையாக நோக்காமல், மிகவும் சிக்கலான முடிச்சுகளைக் கொண்ட அதை, விருப்பு வெறுப்பு இன்றி தெளிவாகப் பார்க்க இயலுமா?

வாழ்க்கையை நாம் பார்க்கும்போது எவ்விதத் தீர்மானத்திற்கும் வந்துவிடாமல், வாழ்க்கையின் அனைத்து விஷயங்களையும் தெளிவாகப் பார்க்க வேண்டும். நம் தீர்மானங்கள், நாம் எப்படி வாழ்க்கையை நோக்க வேண்டும் என்று கட்டளையிடும் என்ற காரணத்தால்,அவற்றைத் தவிர்க்க வேண்டும். உங்கள் சொந்த வாழ்க்கையை நோக்குவதோடு நின்றுவிடாமல், மாபெரும் இயக்கமாக இருக்கும் மானுடத்தின் வாழ்க்கை, பூமிக்கோளத்தின் வாழ்க்கை, மரத்தின் வாழ்க்கை என உலகின் இயக்கம் அனைத்தையும் நோக்குங்கள், பாருங்கள், கண்டுணருங்கள், அந்த இயக்கத்தோடு இணைந்து நடைபோடுங்கள். அதற்கு மாறாக, வாழ்க்கையை பிரச்சினையாகக் கருதினால், நீங்கள் மேலும் பல பிரச்சினைகளை உருவாக்குவீர்கள்.

நம் வாழ்க்கையில் முதலாவது விஷயமாக இருப்பது எது? ('பிரச்சினை' என்ற சொல்லை நான் உபயோகிக்கவில்லை.) மனிதனின் வாழ்க்கையில் முதல் இயக்கமாக இருப்பது எது? மிகக் குறுகிய உங்கள் சொந்த வாழ்க்கையைப் பற்றி நாம் இங்கு விவாதிக்கவில்லை. பரந்து விரிந்து வியாபித்து, நம்மைச் சுற்றியிருக்கும் இந்தச் சிக்கலான, உலக இயக்கமாக இருக்கும் வாழ்க்கையைப் பற்றி பேசுகிறோம்.

பிரம்மாண்டமான இந்த வாழ்க்கையில் எது உங்கள் கவனத்தை முதலில் ஈர்க்கிறது? அர்த்தமும் ஆழமும் ஜீவனும் கொண்டிருக்கும் அந்த ஒன்று எது? - இந்தக் கேள்விக்கு உங்கள் ஒவ்வொருவருடைய பதில் என்னவாயிருக்கும்? எது உங்கள் கவனத்தை ஈர்த்து, உடனடியாக விசாரணையை மேற்கொள்ள வைக்கும் ஒன்றாக இருக்கும்? இதுமாதிரியான கேள்விகளை நீங்கள் ஒருபோதும் வினவியிருக்க மாட்டீர்கள். அதனால்தான் நீங்களே இவற்றிற்கான விடைகளைத் தருவதற்கு விரும்புவதில்லை.

பிரமிப்பூட்டும் அகண்ட இயக்கமாய் இருக்கும் வாழ்வில், நீங்கள் ஒரு அங்கம். இவ்வியக்கத்தில் நீங்கள் சந்திக்கும் முதல் விஷயம் எது? தொடர்புடைமை என்று சொல்லலாமா? தன்னார்வம் என்று சொல்லலாமா? உங்கள் பயங்கள், பதற்றங்கள், உங்களின் குறுகிய வரம்பிற்குட்பட்ட விசாரணைகள், கடவுளைத் தேடும் உங்கள் முயற்சி - இவற்றில் ஒன்றை அக்கேள்விக்குப் பதிலாகச் சொல்லலாமா? உங்களின் இயல்பான, இயற்கையான கோரிக்கையாக, தொடர்பாக எது இருக்கும்?

சிறியதோர் ஜன்னல் வழியாகவா வாழ்க்கையெனும் இந்தப் பிரம்மாண்டத்தை எட்டிப் பார்க்கிறீர்கள்? 'தான்' எனும் உங்களின் எண்ணம், உங்களின் கவலைகள், உங்கள் கலக்கங்கள், உங்களின் உடலின்பத் தேவைகள் போன்றவற்றைத்தான் 'சிறியதோர் ஜன்னல்' என்று குறிப்பிட்டேன். குறிப்பிட்டவொரு கருத்தைச் சார்ந்தோ, அல்லது, உறுதிப்பாட்டின்படியோ பார்க்காமல், எந்த 'ஜன்னல்' வழியாகவும் பார்க்காமல், வாழ்க்கையெனும் பிரம்மாண்டத்தை நேரடியாகப் பார்க்கிறீர்களா?

இல்லையென்றால், ஒரு வழிமுறை அல்லது சம்பிரதாயம் அல்லது விஷயஞானம் போன்றவற்றில் மிகவும் ஆழமாக சிக்கிக்கொண்டதால், அவற்றின் வழியாக, வாழ்க்கையைப் பார்க்கிறீர்களா?

பேராசிரியர் / தத்துவஞானி / எழுத்தாளர் / மருத்துவர் என்பதுபோல் ஏதோ ஒரு துறையில் நீங்கள் நிபுணர் என்பதால், ஒரு நிபுணராக வாழ்க்கையைப் பார்க்கிறீர்களா? அல்லது, விடைகாணாத கேள்விகள், துக்கம், வேதனை, கலக்கம் ஆகியவற்றை சுமந்து கொண்டிருக்கும் ஒரு மனிதனாக, வாழ்க்கையைப் பார்க்கிறீர்களா? உங்கள் பார்வை எத்தகையது?

பலரிடம் இக்கேள்விகளைக் கேட்டால், பல்வேறு வித்தியாசமான பதில்கள் கிடைப்பது இயற்கையே. ஒவ்வொருவரும் அவரவர்களின் இயல்பின்படி பதில் அளிப்பார்கள். ஆனால், நாம் அனைவரும் மனிதர்கள், சமுதாயத்தின் ஏனையோரைப் போன்றவர்களே. நாம் இந்தியர்கள் அல்ல. நமக்கென்று ஒரு பின்னணி இருக்கலாம், குறிப்பிட்ட சம்பிரதாயம் இருக்கலாம், நீண்ட சரித்திரம் இருக்கலாம்; அவையனைத்தும் வெறும் அடையாள குறியீடுகளே. ஆனால், முதற்கண், நீங்கள் ஒரு மனிதன் - கிருத்துவரோ, பௌத்தரோ, ஹிந்துவோ அல்ல. ஏனைய மாந்தருடன் தொடர்புகொண்டிருக்கும் மனிதர் நீங்கள். ஆக, நீங்கள் மனிதகுலத்தின் அங்கமாக இருக்கிறீர்கள்.

மற்றவரிலிருந்து உங்கள் உருவம் வேறுபடலாம், ஸ்தூல சரீரம் வேறுபடலாம். பேச்சாளரிலிருந்து, உடல்ரீதியாக, நீங்கள் வித்தியாசமானவர் என்பது தெரிந்த விஷயம். ஆனால், இந்த உடல், 'நான் மிகவும் சிறப்பானவன்' என்று ஒருபோதும் சொன்னதில்லை.

'என்னுடைய வளர்ச்சி', 'என்னுடைய வெற்றி', 'நான் கடவுளை தேடியடைய வேண்டும்' என்றெல்லாம் கூறி, உடல் ஆர்ப்பரிப்பதில்லை. இவற்றையெல்லாம் எண்ணம்தான் சொல்கிறது. மற்றவரிலிருந்து உடல்ரீதியில் நீங்கள் வித்தியாசப்படுகிறீர்கள். ஆனால், பிரமிப்பூட்டும் வகையில் செயல்புரியும் உடல்உறுப்புகளை கொண்டிருக்கும் தேகமானது, தான் மற்றவரிலிருந்து வேறுபட்டது என்பதைப் பற்றிய பிரக்ஞையை ஒருபோதும் கொண்டிருக்கவில்லை. 'நான் வேறுபட்டவன்' என்று, எண்ணம்தான் சொல்கிறது.

எண்ணம்தான் பிரிவினையை உண்டாக்குகிறது என்பதைப் பற்றிய புரிதல் மிகவும் அவசியம். வாழ்க்கையின் பரந்த இயக்கத்தைக் காணும்போது, மனிதன் எவ்வாறு தன்னைப் பிறரிடமிருந்து வேறுபடுத்திக்கொண்டு, பிரிவினையை கொண்டு வருகிறான் என்பதே உங்கள் கவனத்தை ஈர்க்கும் முதல் விஷயமாக இருக்கிறது. தன்னை, அமெரிக்கன் / ரஷ்யன் / யூதர் / அரேபியர் / ஹிந்து என்று ஏதோ ஒரு வகையில் பிரித்துக்கொண்டு, மற்றவர்களிடமிருந்து விலகி நிற்கிறான். இப்படி சிதறுண்டு பிரிந்திருக்கும் மானுடத்தை நீங்கள் பார்க்கிறீர்களா? இதைப்பற்றிய விழிப்புணர்வு உங்களுக்கு இருக்கிறதா? பூகோள ரீதியாகவும், இனரீதியாகவும், மதரீதியாகவும், உலகமானது, தேசங்களாகப் பிரிந்து கிடப்பது, வாழ்வின் இயக்கத்தில் நீங்கள் பார்க்கும் முதல் விஷயமாக இருக்கவில்லையா?

இந்தப் பிரிவினை, தாங்கொணாப் போராட்டங்களைத் தோற்றுவிக்கிறது. இந்தப் பிரிவினையின் காரணமாக முஸ்லீம்களுக்கு எதிராக ஹிந்துக்களும்,

ஆப்கானிஸ்தர்களுக்கு எதிராக ரஷ்யர்களும் என, ஒருவரை எதிர்த்து மற்றவர் போரிட நேர்கிறது. மனிதன் உருவாக்கிய இந்தப் பிரிவினைதான், வாழ்க்கையின் இயக்கத்தில் நீங்கள் பார்க்கும் முதல் விஷயமாக இருக்கிறதல்லவா? எண்ணத்தால் உருவாக்கப்பட்ட ஒன்றாய் இருப்பதால், இந்தப் பிரிவினை நீடிக்கிறது.

மனிதன், தனக்கும் பிறருக்கும் எத்தகைய தீங்கிழைத்துவிட்டான் என்பதை, நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால் நன்றாகப் பார்க்க முடியும். வாழ்க்கையின் பரந்த இயக்கத்தில் பிரிவினையால் நேர்ந்த அழிவுகளும், தேசியத்தால் வெடித்த யுத்தங்களும், மனிதன், மனிதனை எதிர்த்து சண்டையிடுவதும், ஒருவரை முதலில் பார்க்கவைக்கும் விஷயங்களாக உள்ளன. வாழ்க்கையின் பரந்த இயக்கத்தை முழு நிறைவான ஒன்றாக நாம் கருதுவதே இல்லை. கடவுளின் பெயரால், அமைதியின் பெயரால், தேசிய கொடியின் பெயரால், தாய்நாட்டின் பெயரால், ஒருவரையொருவர் எதிர்த்து, அழித்து வருகிறோம். இம்முறையில்தான் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழ்ந்தோம், இன்னமும் அதைத் தொடர்ந்து செய்கிறோம். 'மனிதனுக்கு என்ன ஆயிற்று? அவன் ஏன் இப்படி செயல்படுகிறான்?' என்ற வினா எழுகிறது.

தொழில்நுட்பத் துறையில், அவன் மிகவும் கெட்டிக்காரன். பிரமிக்க வைக்கும் ராக்ஷஸ கருவிகளை மட்டுமல்ல, மிகவும் மென்மையான நுண்ணிய கருவிகளையும் அவன் படைத்திருக்கிறான். ஆனால், அவன் வாழ்க்கையை, இன்னமும் மடத்தனமாகவே நடத்திக் கொண்டிருக்கிறான் - அதற்கு என்ன காரணம்? இந்தப் பிரிவினைகளுக்கு, இந்த யுத்தங்களுக்கு,

ஒவ்வொரு நாட்டிலும் நிலவும் அதிகாரவர்க்க கட்டமைப்புக்கு, என்ன காரணம்? சமய உலகிலும் சரி, அரசியல் உலகிலும் சரி, விஞ்ஞான உலகிலும் சரி, அதிகாரம்தான் அஸ்திவாரமாக இருக்கிறது. விஷய அறிவின் அதிகாரம், அனுபவங்களின் அதிகாரம் என்று அதிகாரத்தின் கட்டமைப்பில்தான் அனைத்தும் இயங்குகின்றன.

இந்த நிலைக்கெல்லாம் எது காரணம்? யார் பொறுப்பாளி? தயவுசெய்து விசாரணை செய்யுங்கள், பேச்சாளருடன் சேர்ந்து ஆழமாக சிந்தித்துப் பாருங்கள். காரணம் உண்டென்றால், அதற்கு முடிவும் உண்டு. ஆகவே, காரணத்தைக் கண்டுபிடிப்போம், வாருங்கள். உதாரணத்திற்கு, புற்றுநோயின் காரணமாக வந்த வலி என்றால், வலிக்கு நிவாரணம் தேடலாம் அல்லது வலியால் மரணமடையலாம். ஆக, எங்கெல்லாம் ஒரு காரணம் செயல்படுகிறதோ, அங்கெல்லாம் அக்காரணத்திற்கு முடிவும் உண்டு - இதுதான் நியதி.

எனவே நாம் கேட்கிறோம்: 'இந்த மாறாத சோகத்திற்கு, இந்தக் கவலைகளுக்கு, இந்தக் கடவுள்கள் படைக்கப்படுவதற்குக் காரணமாய் இருக்கும் இந்த அதீதமாக உணரப்படும் நிச்சயமற்றத் தன்மைக்கு, எது காரணம்? இந்த அவலநிலையின் ஆணிவேராக இருப்பது எது?' என்று. பேச்சாளர், பதிலைத் தருவார் என்று எதிர்பார்த்து காத்திருக்கிறீர்களா? அல்லது, விடையை நீங்களே கண்டுபிடிக்கப் போகிறீர்களா? பேச்சாளர் விடை அளித்தால், அந்த விடையை நீங்கள் ஒரு கருத்தாக, ஒரு கோட்பாடாக மாற்றிவிடுவீர்கள். பிறகு, அந்தக் கருத்தை செயலாக்கம் செய்வதில் பிரச்சினைகள் ஏற்படும். ஆகவே, நீங்களும் நானும் சேர்ந்தே விடையைக் காண வேண்டும்.

மக்கள் தொகைப்பெருக்கம், மலிந்துப்போன ஊழல், நிர்வாகக் குறைபாடுகள் மற்றும் எதிலும் சீர்குலைவு என்றிருக்கும் இந்த நாட்டின் துயரத்திற்கான காரணத்தை மட்டும் நாம் ஆராயப்போவதில்லை. இந்த நாட்டிலிருக்கும் குறைபாடுகள், உலக நாடுகள் அனைத்திலும் உள்ளன. பெருத்த துயரத்தை மனிதகுலத்திற்கு தரக்கூடிய கொடூரமான யுத்தங்களுக்கான ஆயத்தங்கள் அங்கு நடந்து கொண்டிருக்கிறது. இந்த அவலநிலைக்கு ஆணிவேராக இருக்கும் காரணம் எது?

மேற்கூறியவைகளைப் பற்றி நாம் சேர்ந்து சிந்திப்போமா? நான் விளக்குவதாகவும், நீங்கள் ஆமோதிப்பதாகவும் இல்லாமல், நாம் ஒருசேர நிதானமாகவும், கவனத்தோடும் இவற்றிற்கெல்லாம் ஆணிவேராக இருக்கும் காரணம் என்ன என்பதைக் காணலாம். தற்சமயம் காரணத்தைக் கண்டுபிடிக்கவில்லையென்றால், எதிர்காலமும் நிகழ்காலத்தைப் போலவே, யுத்தம், பிரிவினை, துக்கம், வலி, கலக்கம், நிச்சயமற்றத் தன்மை ஆகியவற்றோடுதான் இருக்கும். எனவே, காரணத்தைக் கண்டுபிடிக்கலாம், வாருங்கள். பேச்சாளர் உங்களுக்கு அறிவுரைகள் வழங்கவில்லை, அதற்கான அதிகாரமும் அவருக்கில்லை. நீங்கள் அவருடைய மாணவர்களும் அல்ல, அவர் உங்களுடைய ஆசிரியரும் அல்ல. இங்கு பரிசும் அளிக்கப்படவில்லை, தண்டனையும் அளிக்கப்படவில்லை. நாம் ஒன்றுசேர்ந்து சிந்திக்கலாம் - இவ்வாறு சொல்வதின் பொருள், பேச்சாளருக்கு இணையான ஆர்வத்தோடும், காரணத்தை கண்டுபிடிக்க வேண்டும் என்று அவருக்கிருக்கும் உத்வேகத்திற்கு இணையான உத்வேகத்தோடும், தீவிரத்தோடும் நீங்களும் இருக்க வேண்டும் என்பதே.

ஏதோ இந்த உரையாடலைக் கேட்டோம் போனோம் என்று சொல்லிவிட்டு, குறுகியதாகவும், கசப்பானதாகவும் பதற்றமும், துயரமும் கொண்டதாகவும் இருக்கும் உங்கள் பழைய வாழ்க்கைக்கு மீண்டும் திரும்புவதாக இருக்கக்கூடாது. யுத்தம், கலவரம், சச்சரவுகள், நிரந்தரமாய் இருக்கும் முரண்பாடுகள், ஆணிற்கும் பெண்ணிற்கும் இடையே உள்ள பாலுறவு சச்சரவுகள் போன்ற பல்வேறு சச்சரவுகளை விளைவிப்பதாய் இருக்கும் இந்தப் பிரிவினை ஏன் தோன்றுகிறது, அது தோன்ற எது காரணம்?

இக்கேள்வியை போன்றதொரு கேள்வியை எவ்வாறு அணுகுவீர்கள்? 'மேற்கூறப்பட்ட விஷயங்களுக்கெல்லாம் மூலகாரணமாய் இருப்பது எது?' என்ற கேள்வியை எப்படி அணுகுவீர்கள்? எப்படி அதன் அருகில் செல்வீர்கள்? 'Approach' (அப்ரோச் = அணுகுமுறை) என்ற ஆங்கிலச் சொல்லிற்கு, 'to come near', 'to come into contact' (நெருங்கி வருதல், தொடர்புகொள்ளுதல்) என்று அர்த்தம். இது உங்களுக்கான கேள்வி. இக்கேள்வியை, தீர்க்கப்பட வேண்டிய ஒரு பிரச்சினையாகப் பார்ப்பீர்களா? இல்லை, கேள்வியை நெருங்கிப் பார்ப்பீர்களா? நெருங்கிப் பார்த்தீர் களென்றால், நீங்கள் திறந்த மனதுடன் பார்க்கிறீர்கள் என்றாகும். கேள்வியிலிருந்து விலகி நின்றீர்கள் என்றால், நீங்கள் கேள்வியோடு துடிப்பானத் தொடர்பில் இல்லை என்றாகிறது. ஆக, நீங்களும் நானும், எந்த உள்நோக்கமும் இல்லாமல், எந்தவொரு வழிமுறையையும் பின்பற்றாமல், கேள்வியை அணுகுகிறோமா? உள்நோக்கம் இருந்தால், அந்த உள்நோக்கம், கேள்விக் கான பதிலைக் காண்பதில் தாக்கத்தை ஏற்படுத்தி, உள்ளபடி கண்டுணர்வதை குலைத்துவிடுகிறது.

இவ்வாறு எண்ணிப்பார்க்கலாம்: வாழ்வின் இந்த அவலநிலைக்கு மூல காரணம் எது என்ற கேள்வியை எனக்கே கேட்டுக்கொள்கிறேன் என்று வைத்துக் கொள்வோம். இதற்கான பதில் என்னிடமில்லை, எனக்குத் தெரியாது. ஆனால், பதிலை நான் கண்டுபிடிக்கப் போகிறேன். பதிலைக் காண, நான் வழிமுறைகள் எதையும் பின்பற்றக் கூடாது. அவைகளிலிருந்து முற்றிலுமாக நான் விடுபட்டு சுதந்திரமாய் இருக்கவேண்டும். வழிமுறையையோ, உள்நோக்கத்தையோ கொண்டிருந்தேன் என்றால், பரிசு அல்லது பலனை எதிர்பார்த்து செயல்பட்டேன் என்றால், அந்த உள்நோக்கம், அந்த எதிர்பார்ப்பு, என் விசாரணையை அதிகாரம் செய்ய ஆரம்பித்துவிடும். எனவே, நம்முடைய இந்த நிலைக்கு எது மூலகாரணம் என்பதைக் கண்டுபிடிக்க, நான் சுதந்திரமானவனாய் இருக்க வேண்டும்.

நாம் விடாமுயற்சியுடன் அழித்துவரும் இந்த அழகான பூமியில் போராட்டங்களுடனும், கலக்கத்துடனும், பயத்துடனும் நாம் வாழ்க்கை நடத்துவது என்பது தவிர்க்க முடியாத ஒன்றா? தவிர்க்க முடியாத ஒன்றாக நீங்கள் அதை ஏற்றுக்கொண்டால், விசாரணைக்கே இடமில்லை. ஒரு தீர்மானத்திற்கு வந்துவிட்டீர்கள் என்றால், மேற்கொண்டு விசாரணை செய்ய ஏதுமில்லை, விசாரணைக்கான கதவை அடைத்துவிட்டீர்கள். தீர்மானம் என்பதன் பொருள், விசாரணையின் முடிவு என்பதாகும். Conclusion (கன்குளுஷன் = தீர்மானம்) என்ற ஆங்கிலச் சொல், 'மூடுதல்', 'முடித்தல்' என்று பொருள்படுகிறது. ஒரு தீர்மானத்திற்கு வந்துவிட்டீர்கள் என்றால் உங்களால் பதில் காண முடியாது. ஆகவே, நீங்கள் 'எது காரணம்?'

என்ற கேள்வியை எப்படி அணுகுகிறீர்கள் என்பதைப் பற்றிய விழிப்புணர்வு கொண்டிருக்க வேண்டும்.

'இதற்கெல்லாம் எண்ணம், மூலகாரணமா?' என்று நாம் வினவுகிறோம். எண்ணம் என்றால் என்ன? உங்கள் எண்ணம், மற்றவர் எண்ணத்திலிருந்து தனிப்பட்டு இருக்கிறதா? அனைவரும் சிந்திக்கிறார்கள். கிராமத்திலிருக்கும் படிக்காத பாமரரும் சிந்திக்கிறார், நகரத்திலிருக்கும் சிறந்த விஞ்ஞானியும் சிந்திக்கிறார். எனவே, சிந்திப்பது என்பது நம் அனைவருக்கும் பொதுவானது. அதில் நான் சிந்திப்பது, நீங்கள் சிந்திப்பது என்றெல்லாம் இல்லை. நீங்கள் ஒரு வகையில் எண்ணத்தை வெளிப்படுத்தலாம், நான் வேறுவகையில் வெளிப்படுத்தலாம். ஆனால், எண்ணுதல் என்பது மனிதகுலத்திற்கே பொதுவான இயக்கம். இந்த உண்மையை உங்களால் பார்க்க முடிகிறதா? இந்த உண்மையை பார்ப்பதும், ஏற்றுக்கொள்வதும் சற்று சிரமமானக் காரியம்தான். ஏனென்றால், 'என் சிந்தனை, உன் சிந்தனையிலிருந்து வேறுபட்டது', 'என் அபிப்பிராயம், உன்னுடையதிலிருந்து வேறுபட்டது' என்ற வகையில் பயிற்றுவிக்கப்பட்டுள்ளோம், கற்பிக்கப்பட்டுள்ளோம், தளைபட்டுள்ளோம். 'என் அபிப்பிராயம்', 'உன் அபிப்பிராயம்' என்பதெல்லாம் இல்லை; எண்ணம் தோற்றுவிக்கும் அபிப்பிராயம், அவ்வளவே.

உலகில் நிலவும் இந்தத் துயரங்களுக்கெல்லாம், அழிவுகளுக்கெல்லாம், சீர்குலைவுகளுக்கெல்லாம், எண்ணம்தான் மூலகாரணமா? அதுதான் மூலகாரணம் என்றால், மிகுந்த நாசத்தை உலகில் ஏற்படுத்தும் இந்த எண்ணத்தின் இயக்கத்தை முடிவிற்குக் கொண்டுவர

முடியுமா? பிரமாதமான தொழில்நுட்ப சாதனைகள், போர்த்தளவாடங்கள், அசாதாரணமான நீர்மூழ்கிக் கப்பல்கள் போன்றவைகளை உருவாக்கியது எண்ணம்தான். உலகிலிருக்கும் அனைத்து சமயங்களையும் உண்டாக்கியதும் எண்ணம்தான். அதிசயிக்கத்தக்க தேவாலயங்களையும், மசூதிகளையும், கோயில்களையும், அவற்றிலிருக்கும் பிரமிப்பூட்டும் சிலைகளையும், சித்திரங்களையும் உருவாக்கியதும் எண்ணம்தான்.

எண்ணம் சடங்குகளை கண்டுபிடித்தது, கிருத்துவ உலகிற்கு இரட்சகரை கண்டுபிடித்தது, இந்த நாட்டில், மோட்சம் அல்லது முக்திநிலை என்பதைக் கண்டு பிடித்தது. மேலும், எண்ணம், கடவுளைக் கண்டுபிடித்தது. நிச்சயமற்றத் தன்மையும், ஆபத்தும் உலகில் அதிகரிக்க அதிகரிக்க, எண்ணம், பாதுகாப்பையும், பத்திரவுணர்வை யும் மேலும் அதிகரிக்க வேண்டியிருக்கிறது. அதன் காரணமாய் எண்ணம், கடவுளைக் கண்டுபிடிக்கிறது. 'என் கடவுள்', 'உன் கடவுள்', 'என் கடவுள், உன் கடவுளைவிட மேலானவர்', 'என் குரு, உன் குருவைவிட ஒருபடி மேல், அவர் தீட்சை தருகிறார்' என்பதெல்லாம் எண்ணத்தின் கோலம், எண்ணம்தான் பொறுப்பு.

நம் துயரம், நம் மூடநம்பிக்கை, நம் கலக்கம் ஆகியவைகளுக்கு எண்ணம்தான் பொறுப்பு என்றால் எண்ணத்திற்கு முடிவு உண்டா? எண்ணம்தான் காரணம் என்றால், அதற்கு ஒரு முடிவும் இருக்கவேண்டும். அதாவது, தொழில்நுட்ப வளர்ச்சிக்கும், உலகின் அவலநிலைக்கும் எண்ணம்தான் மூலகாரணம் என்றால், அதற்கு ஒரு முடிவு கட்டாயம் இருக்கும். வியாதியின் காரணத்தை கண்டுபிடித்தபின், அதற்கான சிகிச்சையை மேற்கொண்டால், காரணம் முடிவுறும், வியாதி

தீர்ந்துவிடும். அதுபோலவே, எண்ணம்தான் வீழ்ச்சிக்குக் காரணம் என்றால், அக்காரணத்திற்கு முடிவு உண்டு. அதை முடிவிற்குக் கொண்டுவர முடியும்.

'எண்ணத்தை எப்படி முடிவிற்குக் கொண்டுவருவது என்று எனக்குச் சொல்லுங்கள்' என்று கேட்டீர்களே யானால், நீங்கள் அதை ஒரு பிரச்சினை ஆக்கிவிட்டீர்கள். உங்கள் மூளை, பிரச்சினைக்குத் தீர்வு காண்பது என்ற முறையில் பயிற்றுவிக்கப்பட்டுள்ளதால், விஷயத்தை உள்ளபடி உற்றுநோக்காமல், அதை ஒரு பிரச்சினையாகக் கருதி, தீர்வுகாணத் தொடங்கிவிடுகிறது. கணினி நிபுணர், இயந்திரத்தில் ஏற்படும் சிக்கலான பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதுபோல, அதே தீர்வுகாணும் இயக்கத்தை, உளரீதிக்கும் நீட்டிக்கிறோம்.

எண்ணம்தான் காரணம் என்ற நிலையில், அதை எப்படி முடிவிற்குக் கொண்டுவருவது என்பதல்ல கேள்வி. எண்ணத்தின் ஒட்டுமொத்த இயக்கத்தையும் முழுமையாகப் புரிந்துகொள்ள வேண்டும். 'என் சிந்தனை, உன்னுடையதிலிருந்து வேறுபட்டது' என்ற கருத்தை நீக்கிவிட வேண்டும். எண்ணுதலை உங்கள் சிந்தனை, மற்றவர் சிந்தனை என்று பாகுபடுத்தி பார்க்கும்போது, கவனிக்கப்பட வேண்டிய விஷயங்கள் வேறுபட்டுப் போகிறது. இதனால், மெய்ம்மை சிறிதும் இல்லாத, அனைத்துவிதமான மாயைகளும், மூடநம்பிக்கைகளும் தோன்றுகின்றன.

கருப்பு, வெள்ளை, சிவப்பு, முஸ்லீம், ஹிந்து, கிராமவாசி, படித்தவர், படிக்காதவர் என பலதரப்பட்ட மானுடர் அனைவரும், எண்ணம் என்ற அடித்தளத்தின் மீதுதான் நின்று கொண்டிருக்கிறார்கள். எனவே, தனிப்பட்ட 'உங்கள் எண்ணம்' என்ற கருத்திலிருந்து

இப்போது நீங்கள் விலகிச் செல்ல முடியும். அதன்பின், இந்திய பண்பாட்டின்படி சிந்தித்தல் என்பதெல்லாம் உங்களுக்கு ஒரு பொருட்டல்ல. உங்கள் அக்கறையெல்லாம் உலகத்தைப்பற்றி, நீங்களும் ஒரு அங்கமாயிருக்கும் மானுடத்தைப் பற்றி என்றாகிறது. நீங்கள் தனிப்பட்டவரல்ல. 'Individual' (இண்டுஜுவல் = தனிநபர்) என்ற ஆங்கிலச் சொல் 'அலாதியான', 'பகுக்கப்படாத' என்று பொருள்படுகிறது. ஆனால், நீங்கள் அலாதியானவர் அல்லவே, மற்றவர்களைப் போன்றவர்தானே.

மேலும், நீங்கள் உள்முகத்தில் முரண்பாடுகளால் பிரிவினையடைந்து பிளவுபட்டுள்ளீர்கள். கடந்துபோன தலைமுறைகளின் வாரிசாக, விளைவாக நீங்கள் இருக்கிறீர்கள். ஆயிரமாயிரம் ஆண்டுகளாக பரிணாமம் அடைந்து வருகின்ற உங்கள் மூளை, உங்களுடையதல்ல. உங்கள் சமயம், உங்கள் புனித நூல்கள் மற்றும் உங்களின் அன்றாட வாழ்க்கை நடைமுறை, நீங்கள், மற்றவர்களிலிருந்து வேறுபட்டவர் என்று சொல்கிறது. அந்தக் கூற்றினை ஏற்றுக்கொள்ளும்விதமாக நீங்கள் பயிற்றுவிக்கப்பட்டுள்ளீர்கள். அவ்விஷயத்தைப் பற்றி நீங்கள் சிந்தித்துப் பார்த்ததில்லை, சந்தேகப்பட்டு கேள்விகள் கேட்டதில்லை, யதார்த்தமாக எண்ணிப் பார்த்ததில்லை.

நீங்கள் வேறுபட்டவர், தனிநபர் என்று சொல்லப் படுவதை ஏற்றுக்கொள்கிறீர்கள். அவ்வாறு ஏற்றுக் கொள்வதால்தான், உங்களுக்குப் பிரச்சினைகள் துவங்குகின்றன. உங்களைத் தனிநபர் என்று எண்ணிக் கொள்ளாமல், அகண்டு விரிந்திருக்கும் வாழ்க்கை இயக்கத்தில், நீங்கள் ஒரு அங்கம் என்பதாகவும்,

வாழ்க்கை இயக்கமானது, ஆரம்பமும் முடிவும் அற்ற எல்லையில்லாத ஒன்று என்பதாகவும் நீங்கள் காணும்போது, எண்ணத்தின் இயல்பைப் பற்றி ஆராயத் தொடங்குகிறீர்கள்.

எண்ணத்தின் தோற்றுவாய் எது? எண்ணம் ஏன் பிரிவினைகளை தோற்றுவிக்கிறது? பிரிவினை உண்டாக்குவதே அதன் இயல்பா? எண்ணத்தின் இயக்கம், தனக்குள்ளே பிரிவினை, வரைமுறை, சிதைவு ஆகியவற்றைக் கொண்டுள்ளதா? இக்கேள்விகளை நீங்கள் வினவ வேண்டும். அவ்வாறு செய்யாமல், 'எண்ணம்தான் பிரச்சினைகளுக்குக் காரணம் என்பதால், அக்காரணத்தை எவ்வாறு முடிவிற்குக் கொண்டுவருவது என்பதை, தயவு செய்து எனக்குச் சொல்லவும்' என்று கேட்டீர்களேயானால், நீங்கள் மீண்டும் பிரச்சினை வலைக்குள் சிக்குகிறீர்கள். எண்ணத்தை முடிவுக்குக் கொண்டுவருவதற்காக நீங்கள் செய்த உபாயம், மேலும் பல்வேறு பிரச்சினைகளைக் கொண்டுவருகிறது.

எண்ணம், பிரச்சினைகளை உருவாக்குகிறது... ஆனால், 'எண்ணுவதை எப்படி நிறுத்துவது என்று தயவு செய்து சொல்லுங்கள்' என்று நீங்கள் பிறரைக் கேட்டால், உங்களுக்கு உதவ பலபேர் முன்வருவார்கள். பலரும் பல்வேறு வழிகளை பரிந்துரை செய்வார்கள். ஒருவர், 'தியானம் செய்தால் எண்ணம் முடிவுறும்' என்பார். மற்றவரோ, 'தியானம் செய்யாதே' என்பார். இன்னொருவர், 'இம்முறையில் மூச்சுப்பயிற்சி செய்' என்று சொல்வார் - உலகெங்கும் நடக்கும் இம்மாதிரியான அபத்தங்கள் நீங்கள் அறிந்த ஒன்றே. ஆக, நீங்கள் பிரச்சினைகளைப் பெருக்குகிறீர்கள். எண்ணுதலின் இயக்கத்தை நீங்கள் நோக்க வேண்டும்.

'எண்ணத்தை எப்படி முடிவிற்குக் கொண்டுவருவது?' என்ற கேள்வியை கேட்கக்கூடாது, அது ஒரு மடத்தனமானக் கேள்வி. 'எண்ணத்தின் இயல்பு என்ன?' என்பதுதான் உங்கள் கேள்வியாக இருக்கவேண்டும். எண்ணம், விஷயஅறிவைக் குறிப்பதாக இருப்பதால், அதற்கு முக்கியத்துவம் தரப்படுகிறது. நம் வாழ்க்கையில் விஷயஅறிவிற்கான இடம் எது? அதன் முக்கியத்துவம் என்ன?

இன்று இத்துடன் முடித்துக்கொண்டு, இக்கலந்துரையாடலை நாளை மாலை மீண்டும் தொடரலாம். இன்று இவ்வரங்கிலிருந்து நீங்கள் திரும்பிப் போகும்போது, இங்குப் பேசப்பட்ட விஷயங்களை விசாரணை செய்யுங்கள். தற்சமயம் நிகழ்ந்து கொண்டிருப்பதுபோல், நீங்கள் சிந்திப்பதற்கு நான் உங்களைத் தூண்டுவதாக இல்லாமல் இருக்கவேண்டும். பேச்சாளரின் தூண்டுதலால் நீங்கள் சிந்திப்பதாய் அமைந்துவிட்டால், நீங்கள் அவரைச் சார்ந்து வாழத் தொடங்குகிறீர்கள், அவரைக் குருவாக உயர்த்தி விடுகிறீர்கள், அவர் உங்களுக்கு ஒரு போதை மருந்துபோல ஆகிவிடுகிறார்.

பேச்சாளரை குருவாக மாற்றியதால் பல பிரச்சினைகள் துவங்குகின்றன - இதைப் பற்றியெல்லாம் சிந்தியுங்கள், அறிந்து கொள்ளுங்கள். அவ்வாறு செய்வதற்கு, உங்கள் மூளை, சிந்திப்பதாகவும், கூர்ந்து பார்ப்பதாகவும், விவாதிப்பதாகவும், சுறுசுறுப்புடன் இருக்க வேண்டுமே தவிர, சம்பிரதாயத்தில் ஊறிப்போன குறுகிய நோக்குடையதாய் இருக்கக்கூடாது. நாமெல்லோரும் முதுமை எய்திக்கொண்டிருக்கிறோம் என்பது உலகில் நிகழும் பேராபத்துகளில் ஒன்றாக

இருக்கிறது - உடலளவில் மட்டுமல்லாமல், மனதளவிலும் முதுமை வந்துசேர்கிறது. தளர்ச்சி முதலில் துவங்குவது உள்முகத்தில்தான்.

நாம் இயந்திரத்தனமாக செயல்படுவதால், உடல் தளர்ச்சி அடைவதற்கு முன்பாகவே, மனம் தளர்ச்சி யடைந்து விடுகிறது. உண்மையை கண்டுபிடிப்பதற்கான சக்தியோ, ஜீவனோ, உத்வேகமோ நம்மிடம் இல்லை. நீங்கள் எப்படி செயல்பட வேண்டும் என்று அறிவுறுத்தப்படுகிறீர்கள், உங்களுக்குப் புத்திமதிகள் அளிக்கப்படுகின்றன. ஆனால், இங்குப் புத்திமதிகளும் அளிக்கப்படவில்லை, நீங்கள் எப்படிச் செயல்பட வேண்டும் என்றும் வலியுறுத்தப்படவில்லை. வழக்கமான விதத்திலிருந்து முற்றிலும் வித்தியாசப்பட்ட ஒரு வாழ்க்கைமுறையை கண்டுபிடிப்பதில் நாம் இங்கு சிரத்தையுடன் இருக்கிறோம். புதிய வாழ்க்கை முறையைக் கண்டுபிடிப்பதற்கு, எண்ணத்தின் இயல்பை யும், எண்ணத்திற்கு முக்கியத்துவமே தரப்படாத ஒரு வாழ்க்கைமுறை பற்றியும் நீங்கள் நன்கு புரிந்துகொள்ள வேண்டும்.

*பம்பாய், 22.01.1983*

■■

## 14

# நெஞ்சத்தினுள் இருக்கும் மனம்

நேற்றைய உரையாடலில், பிரிவினைகள் எவ்வாறு கொடூரமான யுத்தங்களைக் கொண்டுவந்தன என்பதைப் பார்த்தோம். தேசப்பிரிவினைகள், இனப்பிரிவினைகள், மொழிப் பிரிவினைகள், சமயப் பிரிவினைகள், முஸ்லீம், ஹிந்து, யூதர், அரேபியர், அமெரிக்கர், ஐரோப்பியர், ரஷ்யர், சீனர் என்பது போன்ற பிரிவினைகள், சச்சரவுகளைத் தோற்றுவிக்கின்றன. தேசியம் என்று பெருமைப்படுத்தப்படும் அந்த ஒன்று, உண்மையில் வெறும் இனப்பிரிவினையே. பிரிவினை இருக்கும் இடத்தில், சச்சரவும் கட்டாயம் இருக்கும். மனிதர்களுக்கிடையே ஏன் இந்த ஓயாத சச்சரவு என்பதைப் பற்றி நாம் உரையாடினோம்.

உலகில் நிலவும் இந்தக் குழப்பத்திற்கெல்லாம் எது காரணம்? அராஜகம், தரமற்ற அரசாங்கம், ஒவ்வொரு நாடும் செய்யும் போர் ஆயத்தப் பணிகள், தன் சமயம் மற்ற சமயங்களைவிட சிறந்தது மற்றும் தனது குரு, பிற குருமார்களைவிட சிறந்தவர் என்று எண்ணும் மனப்பான்மை ஆகியவற்றிற்கெல்லாம் எது மூலகாரணம்? பிரிவினை உலகெங்கும் வியாபித்துள்ளது. சரித்திரப்பூர்வமாகவும், பலபல நூற்றாண்டுகளாக, பிரிவினை இருந்து

வருவதை அறிய முடிகிறது. இந்த நிலைக்கு எது காரணம்? யார் பொறுப்பாளி?

எண்ணம், மாந்தர்களிடையே பிரிவினையை உண்டாக்குகிறது என்று பார்த்தோம். அதே சமயம், எண்ணம், பிரமிப்பூட்டும் கலைநயம்மிக்க கட்டிடங் களையும், ஓவியங்களையும், கவிதைகளையும் படைத் துள்ளது. தொழில்நுட்பம், மருத்துவம், தொலைத் தொடர்பு, கணினி, மனிதனைப்போல் இயங்கக்கூடிய இயந்திரங்களைத் தயாரித்தல் என்பதுபோல் பல்வேறு துறைகளிலும், எண்ணம், சாதனை புரிந்துள்ளது. உடல்நலப் பராமரிப்பிலும், சிறந்த மருந்துகள் தயாரிப்பிலும், சுகமாக வாழ்வதற்கு வசதிகளைப் பெற்றுத் தருவதிலும், எண்ணம் வெற்றி படைத்துள்ளது. இருப்பினும், மனிதர்களுக்கிடையே பெரும் பிரிவினையை கொண்டுவந்ததும் எண்ணம்தான்.

உலகின் இந்த அவலநிலைக்கு எது காரணம், யார் பொறுப்பாளி என்று கேட்கிறோம். காரணம் உண்டென்றால், அதற்கான முடிவும் உண்டு என்று கூறினோம். வியாதிக்கான காரணம் கண்டுபிடிக்கப் பட்டால், வியாதியை குணப்படுத்த முடியும். எனவே எங்கெல்லாம் காரணம் என்ற ஒன்று இருக்கிறதோ, அங்கெல்லாம் அக்காரணத்தின் முடிவும் இருக்கும் - இது வெளிப்படையான ஒரு உண்மை. உலகில் நிலவும் இந்தக் குழப்பங்களுக்கு, நிச்சயமற்றத் தன்மைக்கு, நிலைத்து நீடிக்கும் போர் அபாயங்களுக்கு, எண்ணம்தான் காரணம் என்றால், எண்ணத்தின் உபயோகத்தை நிறுத்திவிட்டால், என்னவாகும்?

மனித சமுதாயமே, முரண்பாடுகளில் வாழ்கிறது. மேலும், முரண்பாடுகளை நிலைத்திருக்கவும் செய்கிறது.

தனக்குள் மட்டுமன்றி, வெளியிலும், சமுதாயத்திலும், சமயங்களிலும், பொருளாதாரத்திலும் சச்சரவுகளை மனிதன் தோற்றுவிக்கிறான். உலகில் நிலவும் குழப்பங்களுக்கும், பிரிவினைகளுக்கும், துன்பங்களுக்கும் எண்ணம்தான் பொறுப்பு என்பது தெள்ளத்தெளிவாக விளங்குகிறது. இந்த உண்மையை, ஒரு கோட்பாடாகவோ, அல்லது, தத்துவ விளக்கமாகவோ எடுத்துக் கொள்ளாமல், நிஜமான மெய்ம்மையாகப் புரிந்துகொள்ள வேண்டும். எவ்வளவுதான் சாதுர்யமானதாக இருந்தாலும், எவ்வளவுதான் பாண்டித்தியம் பெற்றதாயிருப்பினும், எண்ணம், பிரிவினையைத்தான் தோற்றுவிக்கிறது. இந்நிலையில், மனிதனால் செய்யக்கூடியது என்ன? நாம் ஒருசேர இவ்விஷயத்தைப் பற்றி விசாரணை செய்யலாம், ஆழமாக சிந்தித்துப் பார்க்கலாம்.

வியக்கத்தகு தேவாலயங்களையும், கோயில்களையும், மசூதிகளையும் எண்ணம்தான் உருவாக்கியது என்று சொன்னோம். அங்கிருக்கும் சிலைகளும், சித்திரங்களும் எண்ணத்தின் கண்டுபிடிப்புகளே. இந்த அபாயகரமான உலகில், பாதுகாப்பைத் தேடிக் கண்டுபிடிக்கும் முயற்சியில் இறங்கும் எண்ணம், கடவுளைக் கண்டுபிடிக்கிறது. பாதுகாப்பையும், சுகத்தையும் அளிக்கவல்ல ஒன்றை, ஒரு கோட்பாட்டை, ஒரு இலட்சியத்தை, கடவுளை, எண்ணம் உருவாக்குகிறது. கடவுளிடமிருந்து, பாதுகாப்பையும், சுகத்தையும் பெறலாமென்பது எண்ணத்தின் புனைவு. இதைப்பற்றி ஆழமாக சிந்தித்தீர்களேயானால், உங்கள் சிந்தனையை கூர்ந்து கவனித்தீர்களேயானால், எண்ணம், எத்தன்மை உடையதாயிருப்பினும் - நுட்பமானதோ, தந்திரமானதோ, கபடமானதோ, மடத்தனமானதோ - அது, பிரிவினையையும், சச்சரவுகளையுமே தோற்றுவிக்கிறது என்பது நன்கு தெரியவரும்.

இப்போது, நாம் இந்தக் கேள்விகளை வினவுகிறோம்: ஏன் முரண்பாடுகள் தோன்றுகின்றன? நல்லது - கெட்டது, உள்ளது - இருக்கவேண்டியது, நிஜம் - இலட்சியம் என்பது போன்ற முரண்பட்ட உணர்வுகளோடு நாம் ஏன் காலங்காலமாய் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்? நல்லது என்றும் கெட்டது என்றும், தீமை என்றும் புனிதம் என்றும், ஏன் இந்தப் பிரிவினைகள் என்பதை நாம் இப்போது விசாரணை செய்யலாம்.

நாம் ஒருசேர சிந்திக்கிறோம். இந்த விவாதத்தில் நாம் ஒன்றை ஏற்றுக்கொள்வதோ மறுப்பதோ இல்லை. நாம் வாழும் உலகின் நிலையை, சமுதாயத்தின் நிலையை, அரசாங்கத்தின் நிலையை, பொருளாதார நிலையை, குருமார்களை, அவர்களின் எண்ணப் பிழைகளை, மற்றும் இதுபோன்றவற்றை நாம் ஆராயப்போகிறோம். நாம் மீண்டும் மீண்டும் உங்களுக்கு நினைவுபடுத்துவது, நாம் இங்கு ஒருசேர சிந்திக்கிறோம் என்பதையே.

ஏதோ சில கருத்துகளையோ அல்லது கோட்பாடு களையோ அல்லது வார்த்தைகளையோ வெறுமனே கேட்டுக்கொண்டு நீங்கள் அங்கு அமர்ந்திருப்பதில் பலன் இல்லை. உண்மையிலேயே இவ்விஷயங்களில் உங்களுக்குச் சிரத்தை இருந்தால் மட்டுமே, இந்த உரையாடலில் உங்கள் பங்களிப்பு இருக்க முடியும். ஆனால், இங்குப் பேசப்பட்டவைகளை நீங்கள் வெறும் கருத்துகளாகவோ தீர்மானங்களாகவோ கருதினால், உரையாடல் முடிந்துவிடும், நமக்கிடையே எவ்விதத் தொடர்பும் இருக்காது. எனவே, நீங்கள் அக்கறையோடு பங்குகொள்ள வேண்டும்.

கொடுங்கோலாட்சி, அதிகாரத்தைத் தேடி அலைதல், அதிகாரத்தை ஏற்றுக்கொண்டு ஆதிக்கம் செலுத்துதல் என்று உலகில் நிகழ்பவைகளை நீங்கள் விழிப்புடன் நோக்க வேண்டும். அனைத்துவித அதிகாரங்களும் தீமை விளைவிப்பவை, விகாரமானவை. மனைவி, கணவனின் மீது செலுத்தும் அதிகாரமோ, அல்லது அரசாங்கம், மக்களின் மீது செலுத்தும் அதிகாரமோ, அதிகாரம் எதுவாயினும், அது, கொடியது. விகாரங்கள் அனைத்தும் அதிகாரத்திற்குத் துணை போகின்றன.

மனிதன் ஏன் முரண்பாட்டில் வாழ்கிறான் என்று வினவுகிறோம். ஆணிற்கும் பெண்ணிற்கும் இடையே ஏற்படும் சச்சரவு என்பதோடல்லாமல், ஒரு இனக்குழுவிற்கும் மற்றோர் இனக்குழுவிற்கும் இடையே உண்டாகும் சச்சரவுகளும் உள்ளன. இந்த முரண்பாடுகளின் இயல்புதான் என்ன? பிரான்ஸ்ஸின் தென்பகுதியில் இருக்கும் குகை ஓவியங்களை, உங்களில் சிலர் பார்த்திருக்கக் கூடும். முப்பதாயிரம் வருடங்களுக்கு முன் வரையப்பட்ட அச்சித்திரங்களில், எருதின் வடிவில் இருக்கும் கொடிய சக்தியோடு மனிதன் சண்டையிடுவது போல் சித்தரிக்கப்பட்டுள்ளது. ஆக, பல்லாயிரமாண்டு களாக, மனிதன் முரண்பாடுகளில் வாழ்ந்து வருகிறான். தியானம் செய்வதுகூட ஒரு போராட்டமாகிவிடுகிறது. நாம் எதைச் செய்தாலும், எதைச் செய்யாவிட்டாலும், முரண்பாடுகள் தோன்றுகின்றன, சச்சரவுகள் குறுக்கிடு கின்றன.

ஒப்பிடுதல் செய்யப்படும் இடத்தில் சச்சரவுகள் தோன்றுகின்றனவா? ஒப்பிடுதல் என்றால் அளவிடுதல் என்று பொருள்படும். தன்னைவிட புத்திசாலியான, திறமையான ஒருவருடனோ, அல்லது, தன்னைவிட

உயர்ந்த நிலையில் அதிகாரத்துடனிருக்கும் ஒருவருடனோ, தன்னை ஒருவர் ஒப்பிட்டுப் பார்க்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவருக்கு கட்டாயம் ஒருவித அச்சமும், போராட்டமும் ஏற்படும். ஒப்பிடுதல் செய்யாமல் வாழ முடியுமா? பிறரோடு ஒப்பிட்டுப் பார்த்துக்கொள்வதால், நாம் முன்னேற்றம் காண்கிறோம் என்று நாம் எண்ணுகிறோம்.

நீங்கள், உங்கள் குருநாதரைப் போல ஆகிவிட விரும்புகிறீர்கள், இல்லையென்றால் அவரையும் மிஞ்சிவிட விரும்புகிறீர்கள். ஞானம் முதிர்ந்த நிலையை எட்டிவிட ஆசைப்படுகிறீர்கள். மேலும் உங்களுக்கென்று சீடர்பட்டாளம் இருக்கவேண்டும், அவர்கள் உங்களை துதிபாட வேண்டும் என்றெல்லாம் விரும்புகிறீர்கள். ஆக, மனரீதியில் 'அந்த' ஒன்றாக 'ஆதல்' வேண்டும் என்ற விருப்பம் ஏற்பட்டவுடனே, போராட்டம் துவங்கிவிடுகிறது. ஒப்பிடுதல் செய்யாத வாழ்க்கை வாழ, நம்மால் முடியுமா? அது நடைமுறை சாத்தியம் இல்லை என்று சொல்லிவிடாதீர்கள்.

மனரீதியான 'ஆதல்' குறித்து நாம் வினா எழுப்பு கிறோம். ஒரு குழந்தை வளர்ந்து பெரியவனாகிறான். ஒரு மொழியைக் கற்றுக்கொள்ள, ஒரு திறமையை வளர்த்துக் கொள்ள, நமக்குக் கால அவகாசம் தேவைப்படுகிறது. 'ஆதல்' என்ற இயக்கம், போராட்டத்திற்கான காரணங்களில் ஒன்றா? 'நான் நல்லவன் அல்ல. ஆனால், நல்லவனாகிவிடுவேன்', 'நான் பேராசைக்காரன், பொறாமைக்காரன். ஆனால், எதிர்காலத்தில் அந்தக் கெட்ட குணங்களிலிருந்து விடுபடுவேன்' என்று, நிஜத்தில் 'உள்ளதை', 'எவ்வாறு இருக்கவேண்டும்' என்று நான் விரும்புகிறேனோ அவ்வாறு மாற்ற எண்ணுவது,

முரண்பாட்டிற்கான காரணங்களில் ஒன்றாக இருக்கக்கூடுமா? 'ஆதல்' வேண்டும் என்ற விருப்பமானது, ஒரு அளவீடு, ஒரு ஒப்பீடு. 'ஆதல்' இயக்கம், முரண்பாட்டிற்கான காரணங்களில் ஒன்றா?

முரண்பாட்டிற்கு வேறு காரணங்கள் ஏதாவது உள்ளதா? இருமைநிலை, ஒரு காரணமாக இருக்கக் கூடுமா? நாம் தத்துவம் பேசவில்லை; முரண்பாட்டின் தன்மையை புரிந்துகொள்வதற்காக நாம் பரிசீலனை செய்கிறோம். முரண்பாடுகளிலிருந்து, முற்றிலுமாக, முழுவதுமாக விடுபடுவது சாத்தியம்தானா என்று விசாரணை செய்கிறோம். முரண்பாடுகள், மூளையை களைப்படைய செய்துவிடுகிறது, மனதை முதுமை யடைய வைத்துவிடுகிறது. முரண்பாடுகளற்ற மனிதர், ஒரு வியக்கத்தகு மனிதர்.

முரண்பாடுகளினால், மிக அதிக அளவில் ஆற்றல், சக்தி வீணடிக்கப்படுகிறது. இந்த இழப்பைத் தடுக்க, நாம் முரண்பாட்டைப் பற்றி அறிந்துகொள்வது அவசிய மாகிறது. அளவீடுகள் மற்றும் ஒப்பிடுதல் ஆகியவை, முரண்பாடுகளை கொண்டு வருவதைப் பார்த்தோம். இருமை நிலைப்பாடும் முரண்பாட்டிற்கான காரணமாய் இருப்பதையும் பார்த்தோம். பகல் - இரவு, ஒளி - நிழல், உயரம் - குள்ளம், பிரகாசம் - இருள், சூரியோதயம் - சூரிய அஸ்தமனம், ஆண் - பெண் என பௌதீக ரீதியில் இருமை நிலையை காண்கிறோம்.

உளரீதியான இருமை நிலை இருக்கக் கூடுமா என்ன? உண்மையில் இருப்பது 'உள்ளது' மட்டும்தானா? நான் வன்முறையாளன் - இங்கு 'உள்ளது' வன்முறை மட்டுமே, அஹிம்சை இல்லை. அஹிம்சை என்பது இங்கு

ஒரு கருத்து, நிஜமல்ல. எங்கு 'உள்ளதாக' வன்முறையும், அடைய வேண்டிய இலக்காக அஹிம்சையும் இருக்கிறதோ, அங்கு முரண்பாடு கட்டாயம் இருக்கும். இந்த நாட்டில், நீங்கள் ஓயாமல் அஹிம்சையைப் பற்றி பேசுகிறீர்கள்... ஆனால், நீங்களும் மற்றவர்களைப் போலவே கொடிய வன்முறையாளர்களாகவே இருக்கிறீர்கள். ஆக, நிஜமும் நிஜமற்றதும் இருக்கிறது.

உலகெங்கிலும் உள்ள மனிதர்கள், வன்முறையாளராக இருக்கிறார்கள் என்பதுதான் நிஜம். தேகத்திற்கு இழைக்கப்படும் கொடுமை மட்டுமே வன்முறை அல்ல. போலித்தனம், இணங்கிப்போதல், கீழ்ப்படிதல், ஏற்றுக்கொள்ளல் ஆகியவையும் வன்முறையே ஆகும். 'உள்ளதாக' இருப்பது இதுதான்; மற்றது, இல்லை. 'மற்றதற்கு' நீங்கள் பிணைக்கப்பட்டிருந்தால், அதாவது, நிஜத்திலிருந்து விலகிச்சென்று, வன்முறையாளனாக இருந்துகொண்டு, அஹிம்சையை பின்தொடர்ந்து சென்றால், உங்களுக்குள் முரண்பாடு இருக்கும். 'உள்ளதாக' என்னிடம் இருப்பது வன்முறை மட்டுமே. நான் வன்முறையோடு இருந்துகொண்டு, அஹிம்சையை நாடிச் சென்றால், நான் வன்முறைக்கான விதையையே விதைக்கிறேன் என்பதால், நான் அஹிம்சையை நாடிச் செல்வதில்லை. ஆக, உண்மையில் இருப்பது ஒரே ஒரு நிஜம் மட்டுமே, அதாவது, நான் வன்முறையாளன் என்ற நிஜம் ஒன்று மட்டுமே உள்ளது.

வன்முறையின் தன்மையையும், அதன் கட்டமைப்பையும் புரிந்துகொண்டபின், வன்முறை தானாகவே முடிவடையக்கூடும். வன்முறையை முடிவிற்குக் கொண்டுவருவது அங்குப் பிரச்சினையாக்கப் படவில்லை. கணிதவியல் தொடர்பான சிக்கல்களுக்கும்,

பொருளாதார, மற்றும், அரசியல் பிரச்சினைகளுக்கும் தீர்வு காண்பதற்கான பயிற்சியையும் படிப்பையும் நாம் பெற்றுள்ளோம், தீர்வுகாணும் வழிமுறையில் நம் மனம் பயிற்றுவிக்கப்பட்டுள்ளது. பயிற்சியின் வழியில், தீர்வுகாணும் பொருட்டு, பிரச்சினைகளை இயந்திரத் தனமாக நாம் அணுகுகிறோம்.

உளரீதியில், ஓயாத பிரச்சினைகளின் தொடராக, வாழ்க்கையை நாம் ஆக்கிவிட்டோம். இருப்பது, நிஜம் மட்டும்தான், அதன் எதிர்மறை அல்ல. நீங்கள் உன்னதம் என்று போற்றும் இலட்சியங்களும் நியதிகளும் வெறும் மாயைகள்தான் என்பது தெளிவாகப் புரிகிறதா? நாம் முரட்டுத்தனம், அறியாமை, ஊழல், நிச்சயமற்றத்தன்மை போன்ற குணங்களை கொண்டவர்களாக இருக்கிறோம் என்பதுதான் உண்மை. அந்த உண்மையை நாம் எதிர்கொள்ள வேண்டும். நீங்கள் உண்மையை எதிர்கொண்டால், உண்மை என்றுமே பிரச்சினைகளை உருவாக்குவதில்லை.

நான் முரடன் என்பதைக் காண்கிறேன். முரட்டுத்தனத்தின் எதிர்மறை என்னிடம் இல்லை. நிஜத்தில் என்னிடம் இல்லாத அந்த எதிர்மறைக்குப் பொருளேதுமில்லை, அதை நான் முற்றிலுமாக மறுக்கிறேன். உள்ளதாக இருப்பது 'நான் முரடன்' என்ற உண்மை மட்டுமே. இப்போது, அந்த உண்மையுடன் எவ்வாறு நான் நடந்துகொள்வேன்? அவ்வுண்மையை எப்படி அணுகுவேன்? அதை எந்தக் கண்ணோட்டத்தில் பார்ப்பேன்? எந்த உள்நோக்கத்துடன் பார்ப்பேன்? அவ்வுண்மையை எத்திசையில் நகர்த்த வேண்டும் என்று நான் விரும்புவேன்? அந்த உண்மையின் தன்மையையும், அதன் கட்டமைப்பையும் பற்றிய விழிப்புணர்வை நான்

பெற்றிருக்க வேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்ட ஒன்றாக அவ்விழிப்புணர்வு இருத்தல் ஆகாது. தெரிவு செய்யப்படாத விழிப்புணர்வுடன் நான் உண்மையை அணுகவேண்டும்.

இவ்வுரையைக் கேட்டுக்கொண்டிருக்கும்போதே, நீங்கள் விழிப்புணர்வோடு உண்மையை அணுகுகிறீர்களா? அவ்வாறு இல்லாமல், அங்கொன்றும் இங்கொன்றுமாக உங்களுக்குப் பொருத்தமானதும், சௌகரியப்பட்டதுமான வார்த்தைகளை மட்டும் பொறுக்கி எடுத்துக்கொண்டு, உரையை ஆனந்தமாக கேட்டுக் கொண்டிருக்கிறீர்களா? சுயவிசாரணையின் குரலை அடியோடு கேட்காமல் இருக்கிறீர்களா?

நான் முரடன் என்ற உண்மையை நான் எவ்விதமாக நோக்குகிறேன்? என்னிடமிருக்கும் வன்முறை, நான் கோபப்படும்போது, பொறாமைப்படும்போது, பிறருடன் என்னை ஒப்பிடும்போது, நன்றாக வெளிப்படுகிறது. கோபம், பொறாமை, ஒப்பிடுதல் போன்ற குணங்கள் என்னிடம் இருப்பின், என்னால் உண்மையை எதிர்கொள்ள முடியாது. ஒரு நல்ல மனம், உண்மையை எதிர்கொள்கிறது.

நீங்கள் ஒரு வியாபாரம் செய்கிறீர்கள் என்றால், வியாபாரத்தில் எதிர்ப்படும் பிரச்சினைகளை உள்ளபடி பார்க்கிறீர்கள், பிரச்சினையாக இருப்பதை மாற்றம் செய்கிறீர்கள். பிரச்சினையே இல்லாததுபோல் நீங்கள் பாசாங்கு செய்துகொண்டு, வேறு வேலையைப் பார்ப்பதில்லை. அப்படி செயல்பட்டீர்களென்றால், நீங்கள் ஒரு திறமையான வியாபாரி அல்ல. ஆனால், வாழ்க்கையில், உள்முகத்தில், நாம் திறனற்றவர்களாக

இருக்கிறோம். நிஜங்களை எதிர்கொள்ளாமலிருப்பதால், நாம் மாற்றம் அடைவதில்லை. நிஜங்களை, நாம் தவிர்க்கிறோம், அல்லது, அவற்றிலிருந்து தப்பிக்கப் பார்க்கிறோம். உண்மையை கண்டறியும்போது, அதை மூடி மறைத்து அடக்குகிறோம். எனவே, நிஜத்தில் பிரச்சினையாக இருப்பவைகளுக்கு, நம்மிடம் தீர்வு ஏதும் இல்லை.

மற்றுமொரு முக்கியமான விஷயத்தைப் பற்றி இப்போது பார்க்கலாம். நல்லமனம் என்றால் என்ன? எப்போதாவது இக்கேள்வியைக் கேட்டிருக்கிறீர்களா? விஷயஅறிவால் நிரப்பப்பட்டிருந்தால், அது, நல்ல மனமா? மேலும், விஷயஅறிவு என்றால் என்ன? படிப்பறிவு, அனுபவ அறிவு, நேர்ந்த விபத்துகளாலும், நிகழ்வுகளாலும் பெற்ற அறிவு என்பது போன்ற விஷய அறிவைப் பெற்றிருப்பதால் நாம் மிகவும் கர்வப்பட்டுக் கொள்கிறோம். சேகரித்து சேமித்து வைக்கப்பட்ட மனப்பதிவுகள் தாம் விஷயஅறிவு. இத்தகைய விஷய அறிவால் நிரப்பப்பட்டுள்ள மனம், 'நல்ல மனம்' எனக் கருதப்படுமா? சுதந்திரமான, விசாலமான, உலகப் பார்வை கொண்டதாய் இருக்கும் மனம், நல்லதோர் மனமா? தேசியவுணர்வு மேலிட்ட, சம்பிரதாய மரபுகளின்படி நடக்கும், குறுகிய மனப்பான்மை கொண்ட மனம், நல்ல மனமாகுமா என்றால், இல்லை என்பது வெளிப்படை.

நல்ல மனம், சுதந்திரமானது. அது சமகாலத்திய மனமன்று. நல்ல மனம், காலத்தின்பாற்பட்டதல்ல. அது காலத்தைப் பற்றியோ, சுற்றுச்சூழல் பற்றியோ அக்கறை கொள்வதில்லை. நல்ல மனம், காலத்தையும், சுற்றுச் சூழலையும் எதிர்கொள்ளும். ஆனால், அதற்கு

காலத்தோடும், சுற்றுச்சூழலோடும் எவ்விதத் தொடர்பும் இல்லை, அது முற்றிலும் சுதந்திரமானது. அத்தகைய மனதில் பயம் இல்லை. இதை நான் சொல்வதற்குக் காரணம், கல்விமுறையாலும், பயிற்சிகளாலும் பயிற்றுவிக்கப்பட்டதாய் நம் மனம் இருப்பதால், நாம் சுயசிந்தனையற்ற போலியானவர்களாகவும், ஆழமற்ற சிந்தனையுடையவர்களாகவும் இருக்கிறோம். விஷய அறிவு என்றுமே மேலோட்டமானதுதான். மனிதனின் புலன்களின் ஆற்றல் வரையறைக்குட்பட்டது. அதனால், புலன்களின்பாற்பட்ட செயல்களும், வரையறைக் குட்பட்டவைகளாகவே உள்ளன. இந்த நிலையிலிருக்கும் மனிதனின் மனம், அவன் செயல்பாடுகள், அவனுடைய நடத்தை, அவனுடைய உணர்வு பிரதிபலிப்புகள் போன்றவைகளைப் பற்றி புரிந்துகொள்வது நமது அக்கறையாக உள்ளது.

முரண்பாடுகளின் தன்மையையும், ஆழத்தையும் அறிந்துகொண்டு, அதிலிருந்து முழுமையாக விடுதலையடைந்து விடுவது என்பது சாத்தியம்தானா? ஒருவருக்கு நல்ல மனம் இருக்க வேண்டும் என்று சொல்லும்போது, புத்திசாலித்தனத்துடன் கூடிய மனதையோ, கள்ளங்கபடமான மனதையோ குறிப்பிட வில்லை. பலருடைய மனம், சூதுவாது நிறைந்ததாகவே இருக்கிறது, நல்ல மனமாக இல்லை. மிகவும் வஞ்சகமான தாகவும், கபடமிக்கதாகவும், நேர்மையற்றதாகவும், பூடகமானதாகவும், ஏமாற்றக் கூடியதாகவும் இருக்கும் நம் மனம், நல்ல மனம் அல்ல.

நாம் வாழும் இந்த நவீன உலகில், செய்தித்தாள்கள், விளம்பரங்கள், பல்வேறு ஊடகங்கள் போன்றவைகளின் தாக்கத்தை நாம் மிக அதிக அளவில் பெறுகிறோம்.

இவ்வளவு தாக்கங்களுக்கு ஆளாகும் நாம், நல்ல மனம் கொண்டிருப்பது சாத்தியம்தானா? கணினியைப் போல், நம் மனமும் செயல்திட்ட வரைவு செய்யப்பட்டுள்ளது. கடந்த மூவாயிரம் வருடங்களாக, நீங்கள் ஒரு ஹிந்து என திட்டவரைவு செய்யப்பட்டுள்ளீர்கள். அதையே இப்போது நீங்கள் திரும்பச் சொல்கிறீர்கள். அவ்வாறு நீங்கள் திரும்பச் சொல்வதே, உங்களுக்கு நல்ல மனம் இல்லை என்பதைச் சுட்டிக்காட்டுகிறது.

வலிமை, ஆரோக்கியம், சுறுசுறுப்பு, முடிவெடுக்கும் திறன், மிகுந்த விழிப்புணர்வு ஆகியவற்றை கொண்டிருக்கும் மனம் நமக்கு அவசியம் தேவை. அத்தகைய மனம் இருந்தால்தான், உளரீதியானப் புரட்சியை கொண்டுவர முடியும். உளரீதியானப் புரட்சி ஏற்பட்டால் மட்டுமே, புதிய சமுதாயம் மற்றும் புதிய பண்பாடு உலகில் மலரும்.

இவ்வுரையை, நீங்கள் கவனமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என நம்புகிறேன். 'கேட்கும் கலை' என்றிருக்கிறது. ஒன்றைக் கேட்பது, அதிலிருக்கும் உண்மையைக் காண்பது, அதன்படி செயலாற்றுவது - இதுவே கேட்கும் கலையின் சாரம். நாம் ஒன்றிலிருக்கும் உண்மையைப் பார்க்கிறோம், மிகத் தெளிவாகவே பார்க்கிறோம், ஆனாலும், அதன்படி செயல்படுவதில்லை. கண்டுணர்தலுக்கும் செயலுக்கும் இடையே ஒரு இடைவெளி இருக்கிறது. இந்த இடைவெளியில் வேறுபல நிகழ்வுகள் நிகழ்கின்றன. அதன் காரணமாக, நாம் செயல்படாமலேயே இருந்துவிடுகிறோம்.

உங்களிடம் குடிகொண்டுள்ள வன்முறையை, நிஜத்தில் இருக்கும் ஒன்றாகப் பார்க்கிறீர்கள். நிஜத்தில் உங்களிடம் இல்லாத அஹிம்சையைப் பெற முயற்சிக்காதீர்கள். ஆனால், உங்கள் வன்முறையின்

தன்மையையும், அதன் சிக்கலான- முடிச்சுகளையும் கண்டுணர்ந்து, உங்கள் வன்முறையின் குரலைச் செவிமடுத்தீர்களென்றால், அது, தன்னுடைய இயல்பை உங்களுக்கு வெளிப்படுத்தும். நீங்களாகவே அதைக் கண்டுணரலாம். உங்கள் வன்முறையைப் பற்றி உணர்ந்துகொண்டு செயலாற்றினீர்களேயானால், பிறகு, வன்முறை முழுமையாக முடிவுபெறும்.

சளசளத்துக்கொண்டிருக்கும் மனம், ஆரோக்கியமற்ற மனமாகும். அத்தகைய மனம், சதா தொணதொணத்துக் கொண்டே இருக்கும். சதா எண்ணமிட்டபடியே இருக்கும். செய்யும் வியாபாரம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் போன்றவற்றை மட்டுமல்லாமல், தன் மனைவி, குழந்தைகள், அண்டை வீட்டுக்காரர் ஆகியோருடன் தனக்குள்ள தொடர்பிலிருக்கும் பிரச்சினைகளையும், அது சதா எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்கும். அத்தகைய மனம், நிரந்தரமாக, எண்ணங்களால் நிரம்பி வழியும். எண்ணங்களின் ஆக்கிரமிப்பால், மூளை சோர்வுற்று, தனது ஆற்றலை வெகுவாக இழக்கிறது. இது எல்லோருக்கும் தெரிந்த வெளிப்படையான உண்மைதான். இத்தனை இடர்பாடுகளைத் தரும் அலைபாயும் எண்ணங்களைத் தடுத்து நிறுத்த முடியுமா என்று நாம் வினவினால், நாம் அந்த விஷயத்தைப் பிரச்சினை ஆக்கிவிட்டோம் என்றாகிறது.

நம் மூளையானது, பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் முறையில் பயிற்றுவிக்கப்பட்டுள்ளது. மனம் அலைபாய்வதை பிரச்சினையாகப் பார்க்கும் நாம், அதை அடக்குவதை தீர்வாகக் கருதி செயல்படுகிறோம். இங்கு அடக்குபவர் யார்? அடக்கப்படுவதிலிருந்து அடக்குபவர்

வேறுபட்டு இருக்கிறாரா? பிரச்சினை துவங்கிவிட்டது. நீங்களும் அதற்குத் தீர்வுகாண ஆயத்தமாகிவிட்டீர்கள். உலகம் முழுவதும் அரசியல்ரீதியாக, இதுதான் நடந்து கொண்டிருக்கிறது. அரசியலில் கணக்கிலடங்கா பிரச்சினைகள் உள்ளன. நமது மூளையைப் போலவே, அரசியல்வாதிகளின் மூளையும் பிரச்சினைக்குத் தீர்வு காண முற்படுகிறது. ஒரு பிரச்சினைக்கு அவர்களால் காணப்படும் தீர்வானது, அதன் தொடர்பான பல பிரச்சினைகளை உருவாக்குகிறது, அல்லது, வேறுவிதமான பிரச்சினைகளை தோற்றுவிக்கிறது. உலகம் முழுவதும் இதே முறையில் செயல்கள் நடந்துகொண்டிருக்கின்றன.

நீங்கள் வன்முறையாளர் என்ற உண்மையை கண்டுணருங்கள். வன்முறை, தன் கதையை உங்களுக்குச் சொல்ல அதை அனுமதியுங்கள். உங்கள் மனம் அமைதியாக இருக்கும்பட்சத்தில், வன்முறை கட்டாயம் அதன் கதையை உங்களுக்குச் சொல்லும். 'மனம் எப்படி அமைதிபெறும்?' என்று கேள்வி எழுப்பி, அதை ஒரு பிரச்சினையாக்கி விடாதீர்கள். 'தியானம்' என்று நீங்கள் பெயரிட்டு அழைப்பது, உண்மையில் அன்றாட வாழ்க்கையிலிருந்து தப்பிக்கும் ஒரு செயலாகவே உள்ளது. தியானத்திலும் உங்களுக்குப் பல சிக்கல்கள் உள்ளன - இதனால், அனைத்துமே, அர்த்தமற்றதாகவும், அறிவீனமானதாகவும் ஆகிவிடுகிறது.

உங்கள் பேராசை, பொறாமை, கர்வம், தன்முனைப்பு போன்றவற்றை தேர்வற்ற அறிநிலையோடு நோக்க உங்களுக்கு இயலுமா? மக்கள், தற்பெருமையுடன் நடந்துகொள்வதை கவனித்திருக்கிறீர்களா? அரசியல் வாதிகள், தற்பெருமை மிக்கவர்கள் என்பது தெரிந்த விஷயம். அவர்கள், அதிகாரம், பதவி, மதிப்பு

ஆகியவற்றை மிகவும் விருப்பத்துடன் கோருவதால், தற்பெருமையோடு நடந்துகொள்வது அவர்களுக்குத் தேவைப்படுகிறது. எங்கு அதிகாரம் இருக்கிறதோ, அங்கு கொடூரம் இருக்கும். மிருகத்தனமான முழு அதிகாரம் என்பது கொடூரத்தின் மொத்த உருவம். நீங்கள் கர்வம் மிக்கவரா? உளரீதியில் ஒரு உச்சத்தை அடைந்துவிட முயற்சி செய்பவர், கர்வம் மிக்கவராகத்தான் இருப்பார். தன் இயல்பில் இல்லாத ஒன்றை அடைந்துவிட முயற்சிப்பவர், கர்வம் மிக்கவராக இருக்கிறார்.

நாம் அனைவருமே என்றுமே தொடர்ந்து நீடித்திருக்கும் ஆனந்த நிலையை, ஞானத்தெளிவு மூலம் எட்டிவிட விழைகிறோம். ஒரு சீடர், தான் வணங்கும் விசித்திரமான கடவுளர்கள் மற்றும் சடங்குகளின் மூலம் ஞானத்தெளிவு பெற முயற்சிக்கிறார். கர்வத்தின் இயக்கமாக 'ஆதல்' இருக்கிறது. அது முற்றிலுமாக எளிமையை, அடக்கத்தை மறுதலித்து விடுகிறது. உண்மையை எதிர்கொள்ளும்போது, நீங்கள் முற்றிலும் அடக்கத்துடன் இருத்தல் வேண்டும் - அது, போலியாக வளர்த்துக்கொண்ட அடக்கமாய் இருத்தல் கூடாது. வெளிப்பகட்டு மிக்கவர்தான், அடக்கத்தை வளர்த்துக் கொள்வார்கள். ஆனால், அவர்கள் வளர்த்துக்கொண்ட அடக்கம், உண்மையில் ஒருவகைப்பட்ட கர்வமே ஆகும். நீங்கள் கர்வமிக்கவர்கள் என்பதை உணருகிறீர்கள். நீங்கள் சிறந்த விஞ்ஞானி, நோபல் பரிசு பெற்றிருக்கிறீர்கள் என்பதாலோ, அல்லது, நீங்கள் புகழ்பெற்ற எழுத்தாளர் என்பதாலோ, நீங்கள் கர்வம் கொண்டிருக்கலாம்.

ஆக, நாம் அனைவருமே 'ஆதல்' என்றதோர் பாதையில்தான் பயணித்துக் கொண்டிருக்கிறோம். அதன்

காரணமாக, போலி வேஷமிட்டு நடிக்கிறோம், நேர்மையற்றவராய் இருக்கிறோம். ஆனால் ஒரு நல்ல மனம், உண்மையை எதிர்கொள்கிறது, கர்வமுடன் வன்முறையும் இருப்பதைக் காண்கிறது. நீங்கள் கர்வம் பிடித்தவர் என்று அடுத்தவர் சொல்லவேண்டாம் - அது, வெளிப்படையாக நன்றாகவே உங்களுக்குத் தெரிகிறது. நீங்கள் விழிப்புடன் கவனித்தால், நீங்கள் பேசும் விதத்திலிருந்தே, நீங்கள் நடந்துகொள்ளும் விதத்திலிருந்தே, உங்கள் கர்வத்தின் தன்மையைப் பார்க்க முடியும்.

அகப்பார்வையால், உங்கள் கர்வத்தைப் பாருங்கள், அதிலிருந்து தப்பியோட முயற்சிக்காதீர்கள். 'உள்ளதாய்' இருக்கும் அந்தக் கர்வத்தைப் பற்றிய கண்டுணர்தல், உடனடி செயல்பாட்டிற்கான கோரிக்கையை விடுக்கிறது - இதுதான் நுண்ணறிவு. அபாயகரமானது என்று கண்டுணர்ந்ததுமே, அந்தக் கண்டுணர்தலே, உடனடியாக செயல்பட வேண்டும் என்று ஆணை இடுகிறது. ஆரோக்கியமான, தெளிவான, பகுத்தறியும் ஆற்றல்கொண்ட, உத்வேகம் கொண்ட மனதைப் பெற்றிருப்பதற்கு, பெரும் அபாயமாக விளங்குவது வன்முறை எனக் கண்டுணர்ந்ததும், உடனடியாக செயல்பட அக்கண்டுணர்தலே, அந்த அகப்பார்வையே ஆணை இடுகிறது. அதுவே வன்முறையின் முடிவாகவும் ஆகிறது.

கண்டுணர்தல், பகுத்தாய்வை கோருவதில்லை - நிஜத்தைப் பார்ப்பது, அதைப் புரிந்துகொள்வது, வன்முறையைப் பற்றிய புரிதல் அதை முடிவிற்குக் கொண்டுவருவது என்பதாகக் கண்டுணர்தல் செயல்படு கிறது. அவ்வாறு செயல்பட்ட பின், நீங்கள் அதைப்பற்றி

சிந்திக்கவும் அறிவுபூர்வமாக விளக்கம் தருவதற்கும் இயலும். ஆனால், விவாதம், விளக்கம், காரணத்தினை அறிதல் என்ற பாதையில் நீங்கள் விசாரணையை எடுத்துச் சென்றால், காலம் அதிகம் செலவாகும். மேலும், காரணங்கள் கணக்கிட முடியாமல் பெருகும். இவையெல் லாம் வெளிப்படையாகவே தெரிகின்ற உண்மைகள்.

ஒரே ஒரு பிரச்சினைகூட இல்லாமல், வாழ்க்கையை நடத்துவது சாத்தியம்தானா? நம் தொடர்புகளில் இருக்கும் பிரச்சினைகளைப் பற்றி மட்டுமே இங்கு நாம் பேசிக்கொண்டிருக்கிறோம். உங்கள் தாய் தந்தையர், மனைவி, பிள்ளைகள் ஆகியோருடனான உங்கள் உறவில் பிரச்சினைகள் உள்ளனவே, ஏன்? அன்றாட வாழ்க்கையைப் பற்றியே நாம் இங்கு பெரிதும் அக்கறை கொண்டுள்ளோம். உங்கள் அன்றாட வாழ்வில் ஒழுங்கு இல்லை என்றால், நீங்கள் முகம் சிவந்துப்போகும்வரை அசுர சாதனையாக தியானம் செய்தாலும், அந்தத் தியானத்திற்கு அர்த்தமேதுமில்லை. அது வெறும் தப்பித்தல் வழியே. அதற்குப் பதிலாக நீங்கள் கிறக்கம் தரும் மருந்தினைச் சாப்பிட்டு களிக்கலாமே!

உங்கள் உறவு என்பதாக இருக்கும் உங்கள் வீட்டில் ஒழுங்கைக் கொண்டுவராமல், உங்கள் சமுதாயத்தில் ஒழுங்கைக் கொண்டு வர முடியாது. வெகுதூரம் செல்ல, நீங்கள் அருகிலிருந்து தொடங்க வேண்டும். அருகிலிருப்பது, உங்கள் உறவுகளே. உறவுகளில் ஏன் பிரச்சினை வருகிறது? உங்கள் வாழ்க்கைத்துணையுடன், உங்கள் அண்டை வீட்டாருடன், உங்கள் அரசாங்கத் துடன், உங்கள் சமுதாயத்துடன், மற்றும் பிறவற்றுடன், உங்களுக்கு ஏன் பிரச்சினை ஏற்படுகிறது? மொத்தத்தில், உறவு என்றால் என்ன?

உறவுகளில் இயங்கும் இயக்கமாக வாழ்க்கை இருக்கிறது. உறவுகளிலிருந்து தப்பித்தல் என்பது இயலாத காரியம். நீங்கள், விசித்திரமான உடையணிந்து கொண்டு, பல சங்கல்பங்களை ஏற்றுக்கொண்டு, மற்றும், பல விதிமுறைகளை ஏற்றுக்கொண்டு, துறவியாகலாம். துறவியான நீங்கள், உங்களை அசாதாரணமானவர், அபூர்வ மனிதர் என்று நினைத்துக்கொள்ளலாம். ஆனால், நீங்கள் மற்றவர்களுடன் ஏதோ ஒருவிதத்தில் தொடர்புடையவரே.

கடவுளைப் புரிந்துகொள்வதோ, புனித நூல்களைப் புரிந்துகொள்வதோ மிக முக்கியமானதல்ல. உறவின் ஆழத்தை, அர்த்தத்தை, அழகை மற்றும் அதன் தன்மையைப் புரிந்துகொள்வதுதான் வாழ்க்கையில் மிக முக்கியமான ஒன்றாகும். என்ன, வார்த்தைகளில் மூழ்கிவிட்டீர்களா? இல்லையென்றால், விளக்கங்கள் இல்லாமல், பகுத்தாய்வு செய்யாமல், உடனடியாக உறவின் அசாதாரணமான முக்கியத்துவத்தை, அழகை, ஆழத்தைக் கண்டுகொள்கிறீர்களா? உண்மையான தொடர்பு இல்லாத இடத்தில், ஒழுங்கீனம் தாண்டவ மாடும்.

நமக்கு சொந்தமான வீடு இருக்கிறது. ஆனால், அந்த வீட்டிலேயே நாம் ஒரு விருந்தாளிதான் என்பதை நாம் புரிந்துகொள்ளவில்லை - இவ்வாறு சொல்வதின் பொருள் என்னவென்று தெரியுமா? அதாவது, ஒருவர், அவருக்கே குருவாகவும் சீடராகவும் இருக்கவேண்டும் என்பதே அதன் பொருள். உங்களைத் தாண்டி, உங்களுக்குக் குரு என்று யாருமில்லை. நீங்களே, உங்களுக்குக் குரு. நீங்களே சீடரும். ஆனால், குருவிடமிருந்து கற்கும் சீடராக இல்லாமல், தானே சுயமாகக் கற்றுணரும்

சீடராக இருக்கிறீர்கள். நீங்கள் கற்றுக்கொள்கிறீர்கள், மேலும், கற்றுத் தருகிறீர்கள் - நீங்களே வீட்டின் சொந்தக்காரராக, வீட்டைப் பராமரிக்கிறீர்கள், வீட்டின் விருந்தாளியாக, வீட்டிலிருப்பவர்களை மதித்து நடக்கிறீர்கள்.

இந்தப் பேச்சாளர், கடந்த அறுபது ஆண்டுகளாக உலகம் முழுவதும் பயணித்திருக்கிறார். பல்வேறு நாடுகளில் பல்வேறு இல்லங்களில் விருந்தாளியாக தங்கியிருக்கிறார். தங்கியிருக்கும் இல்லங்களுக்கேற்றாற்போல் நடந்துகொண்டு போவார். பெருக்கெடுத்தோடும் ஆறு, எப்படி எதிர்ப்படும் ஒவ்வொரு பெரும் பாறையையும், கற்களையும் சுற்றி வளைத்துச் சென்று ஓடுகிறதோ, அதுபோல, அவரும் வீட்டிலிருப்பவர்களுக்கேற்ப நடந்துகொள்வார். ஒரு விருந்தாளி அப்படித்தான் இருப்பார். இப்போது, நாம் மேற்கொண்டு பேசலாம்.

உறவு கொண்டிருப்பது என்பது வாழ்க்கையின் மிக முக்கியமான விஷயம் என்பது தெரிந்த ஒன்றுதான். அதனை நாம் ஏன் இத்தனை குழப்பத்திற்கும் பிரச்சினைக்கும் உள்ளாக்கிவிட்டோம்? நாமே உறவில் குழப்பத்தை உண்டாக்கிவிட்டு, உறவு ஒரு பிரச்சினையாகிவிட்டது என்கிறோம். பிரச்சினைகளுக்குத் தீர்வு காண பயிற்றுவிக்கப்பட்ட நமது மனம், உடனே உறவில் ஏற்பட்டிருக்கும் இந்தப் பிரச்சினைக்கும் தீர்வுகாண தயாராகிவிடுகிறது. நமது குடும்பத்தில் பிரச்சினைகள் வருகிறது. அப்பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண முயற்சிக்கிறோம். அப்பிரச்சினைக்குத் தீர்வு கண்டபின், மேலும் பல பிரச்சினைகள் தோன்றுகின்றன. மனம் உடனே தீர்வு காணத் தொடங்கிவிடுகிறது. ஆக, நம் மனம் எப்போதுமே சுதந்திரமாய் இருப்பதில்லை.

தீர்வைக் காண போராடிக்கொண்டிருக்கும் மனதால் உறவின் ஆழத்தையோ, அழகையோ பார்ப்பதற்கு முடிவதில்லை.

தொடர்பு / உறவு என்றால் என்ன? மற்றவருடன் தொடர்புடன் இருப்பதையே அச்சொல் குறிப்பாக உணர்த்துகிறது. உடல்ரீதியான உறவையோ, பாலுணர்ச்சி தொடர்பான உறவையோ நாம் இங்கு பேசவில்லை. மனதால், உணர்ச்சிகளால், உள்முகத்தில் மற்றவரோடு தொடர்புகொண்டிருப்பதையே, உறவு என்று கொள்கிறோம். அத்தகைய உறவில் பிரிவினை இல்லை. ஆனால், உங்களுக்கு அத்தகைய உறவு இல்லை. நீங்கள், அனைத்தையும் அடைந்துவிட பேரவா கொண்டவராய் இருக்கிறீர்கள், உங்கள் மனைவியும் அத்தகையவரே.

நீங்கள் ஒன்றை விரும்பினால், உங்கள் மனைவி மற்றொன்றை விரும்புகிறார். உங்கள் மனைவி, பெரிய மாளிகையில் வாழ விரும்புகிறார், நீங்களோ, 'தயவு செய்து ஆசைப்படாதே' என்கிறீர்கள். அவர் சமூகத்தில் பிரபலமானவராக இருக்க விரும்புகிறார், நீங்களோ புகழ் பெறுவதை அசட்டை செய்கிறீர்கள். நீங்கள் நன்கு படித்தவர், பேராசிரியர், உங்களுக்கான குறுகிய வட்டத்தில் வாழ்கிறீர்கள். உங்கள் மனைவியும் அவ்விதமாகவே அவருடைய குறுகிய வட்டத்திற்குள் வாழ்கிறார். உடலுறவைத் தவிர, உங்களுக்குள் வேறு தொடர்பு எதுவுமில்லை. இதுதான் உண்மை. இவ்வாறு இருப்பதை நீங்கள் 'உறவு' என்றழைக்கிறீர்கள். அவரைப் பற்றி நீங்கள் ஒரு கருத்துரு வைத்திருக்கிறீர்கள், உங்களைப் பற்றி அவரும் கருத்துரு வைத்திருக்கிறார். நீங்கள் இரக்கமற்றவர், முரட்டுத்தனமானவர், இப்படிப்பட்டவர், அப்படிப்பட்டவர் என்று உங்களைப்

பற்றி உங்கள் மனைவியும், அதேபோல் அவரைப் பற்றி நீங்களும் கருத்துரு கொண்டிருக்கிறீர்கள்.

இப்படி இருக்கும் சூழலில், அன்பிற்கு எங்கே இடம்? 'நான் உன்னை நேசிக்கிறேன்' என்று உங்கள் மனைவியிடம் நீங்கள் சொல்வதற்குப் பொருள் என்ன? நீங்கள் அவ்வாறு சொல்வீர்களா என்றே எனக்குச் சந்தேகமாக உள்ளது. ஆனால், அவ்வாறு சொல்லியிருந்தால், அதற்கு என்ன பொருள்? - மற்றவரை நீங்கள் நேசிக்கிறீர்கள் என்றா பொருள்? தொடர்பு என்றால் மற்றவருடன் நேசத்துடன் இருப்பதாகும். 'Love' என்ற ஆங்கில வார்த்தைக்குப் பொருள் என்ன? நாம் அந்த வார்த்தையை விளம்பரங்களில் நிறையவே உபயோகப்படுத்துகிறோம்: 'நான் கோகோ கோலாவை மிகவும் விரும்புகிறேன்' (I love Coke) என்று பிரபலங்கள் கூறுவதுபோல் விளம்பரங்கள் வருகிறது. நீங்களும் 'நான் கடவுளை நேசிக்கிறேன்', 'என் குருவை நேசிக்கிறேன்' என்றெல்லாம் சொல்கிறீர்கள்.

நேசித்தல் / அன்பு காட்டுதல் என்பதற்கு என்ன பொருள்? பரிசு மற்றும் தண்டனை என்பதையா அது அடித்தளமாகக் கொண்டிருக்கிறது? பரிசு மற்றும் தண்டனை என்ற இந்த இரண்டு விஷயங்களுக்கு இடையே சிக்கிக்கொண்டு நாம் என்ன பாடுபடுகிறோம்! என் குரு சொல்வதைப் பின்பற்றினால், அவர் உறுதியளிக்கும் சொர்க்கம் எனக்குப் பரிசாகக் கிடைக்கும். குரு என்னைத் தண்டிப்பார் என்பதால் நான் சிலவற்றை செய்யமாட்டேன். ஆக, பரிசு - தண்டனை என்பதற்குள் நாம் சிக்கிக்கொண்டிருக்கிறோம். உறவு என்பது பரிசு - தண்டனை என்ற இயக்கமாக உள்ளதா? - சிந்தித்துப் பாருங்கள். நீங்கள் உங்கள் வாழ்க்கைத்துணையை

உடல்ரீதியாக நெருங்குகிறீர்களே அன்றி ஒருபோதும் உளரீதியில் நெருங்குவதில்லை. உளரீதியில் உங்களிடையே சந்திப்பு நிகழாததால், முரண்பாடுகள் தோன்றுகின்றன.

சம காலத்தில், சம தளத்தில், ஒத்த தீவிரத்துடன், உங்களால், உங்கள் வாழ்க்கைத்துணையை, உங்கள் குழந்தைகளை, உங்கள் அண்டை வீட்டுக்காரரை, உங்களால் சந்திக்க இயலுமென்றால், அதுதான் அன்பு, நேசம். வெளிப்புறத்தில், உடல்ரீதியாக நீங்கள் சந்திப்பதைப் பற்றி நான் இங்குப் பேசவில்லை. ஒருவரை நீங்கள் உள்ளத்தளவில் சந்திப்பதென்றால், நீங்கள் அவரைச் சந்திக்க வேண்டும், அவரும் அதற்கு இணக்கம் தெரிவிக்க வேண்டும், சமகாலத்தில், சமதளத்தில், ஒத்த தீவிரத்துடன் நீங்கள் சந்திக்க வேண்டும் - அங்கு மலர்வதுதான் உறவு, தொடர்பு.

நீங்கள் ஒரு குறிக்கோளை நோக்கி பேரவாவுடன் முன்னேறிக் கொண்டும், மற்றவர், அவர் வழியில் சென்று கொண்டிருந்தால், நீங்கள் இருவரும் சந்தித்துக் கொள்ளவே மாட்டீர்கள். நீங்கள் இருவரும் மணம் செய்துக்கொண்டிருக்கலாம், உங்களுக்குக் குழந்தைகள் இருக்கலாம் - ஆனாலும், உங்களிடையே உண்மையான தொடர்பு இருப்பதில்லை. அதன் காரணமாக, தாங்கொணாத் தனிமையுணர்வை நீங்கள் அனுபவிக்கிறீர்கள். இதெல்லாம் உங்களுக்குத் தெரியாததா என்ன? உங்கள் வாழ்க்கைத்துணையோடோ, உங்கள் மேலதிகாரியோடோ, உங்கள் பொறியாளரோடோ, எவருடனும் உங்களுக்குத் தொடர்பு இல்லை. அதற்குக் காரணம், உங்களின் சுயநலமே. சுயநலம் மற்றும் தொடர்பின்மை, வேதனை அளிக்கும் தனிமையுணர்வை கொண்டுவந்து சேர்க்கிறது.

தனிமையுணர்வைப் பற்றி உணர்ந்ததும், அதை ஒரு பிரச்சினையாக்கி விடுகிறீர்கள், செய்வதறியாது கலங்கிப் போகிறீர்கள். பிரச்சினைகளுக்குத் தீர்வு என்ற முறையில் பயிற்றுவிக்கப்பட்ட உங்கள் மூளை, உடனே தீர்வைக் காண தயாராகி விடுகிறது. ஆனால், தனிமையுணர்வு ஏன் வந்தது என்ற காரணத்தை ஆராயமாட்டீர்கள், அந்தத் தனிமையுடன் ஒன்றி இருக்கமாட்டீர்கள். அன்பு இருக்குமிடத்தில், தனிமையுணர்வு இருக்காது. உங்கள் உள்ளத்தில் அன்பு இருந்தால், பிரச்சினைகள் ஏதும் தோன்றாது. உங்கள் மனைவி மீது உங்களுக்கு அன்பு இருப்பின், பிரச்சினைகள் எழாது.

உங்களிடம் அன்பு இல்லாததால்தான், ஆயிரம் பிரச்சினைகள் தோன்றுகின்றன. நான் சொன்ன இந்த வாசகத்திலிருக்கும் உண்மையை நோக்குங்கள். அதையும் ஒரு பிரச்சினையாக்கிவிடாதீர்கள். உண்மை என்னவென்றால், நாம் நுண்ணுணர்வுடன் இல்லை, அழகின் ஆழம் நம்மிடம் இல்லை, நாம் நேசிப்பதில்லை என்பதுதான் உண்மை. அந்த உண்மையைப் பாருங்கள், அதனுடனிருங்கள், அதிலிருந்து தப்பிக்கப் பார்க்காதீர்கள். அதைப்பற்றிய அறிவார்ந்த விளக்கம் அளிக்காதீர்கள். நீங்கள் உங்கள் மனைவியை நேசிக்கவில்லை - அதுதான் உண்மை. அதை, சுயவிசாரணை செய்து நீங்கள் காணும்போது, நீங்கள் அழவேண்டும். உங்கள் அனைவருக்காகவும் நான் கண்ணீர் சிந்த விரும்புகிறேன். இணைகோடுகள் இரண்டு, எங்கும் சந்திக்காமல் நீண்டுகொண்டே போவதுபோல், உண்மையான தொடர்புகளே இல்லாமல் நீண்டுகொண்டிருக்கும் உங்கள் வாழ்க்கையில் நீங்கள் இறக்கும்வரை, நாளுக்கு நாள் பிரச்சினைகள் பெருகிக்கொண்டே போகிறது. உங்கள் இதயத்தில் அன்பு இல்லை என்ற உண்மையை நோக்குங்கள்.

நெஞ்சத்தினுள் மனதைக் கொண்டிருங்கள் - மனதில் நெஞ்சத்தை அல்ல. இவ்விரு நிலைகளுக்கு இடையே உள்ள வித்தியாசம் உங்களுக்குப் புரிகிறதா? அன்பை வளர்த்துக்கொள்ள முடியும் என்று எண்ணுகிறோம். ஆனால், அன்பை வளர்த்துக்கொள்ள முடியாது. ஒன்று, அன்பு இருக்கும், இல்லையென்றால், அது இல்லை, அவ்வளவே. அன்பு உங்களிடம் இல்லையென்றால், அன்பு இல்லை என்ற உண்மையை நோக்குங்கள், ஏந்திக்கொள்ளுங்கள், இதயத்தில் அன்பு இல்லாத நீங்கள் யார் என்பதை உணர்ந்துகொள்ளுங்கள். அன்பு கொண்டிராத நீங்கள் வெறும் இயந்திர மனிதன், மென்மையற்ற, பண்பற்ற, உடலுறவு மற்றும் இன்பக் கேளிக்கைகளில் மட்டுமே விருப்பம் கொண்ட முரட்டுத்தனமானவர். நான் உங்களைத் திட்டவில்லை, அலைகழிக்கவில்லை. உங்களுக்கு என்ன நேர்ந்திருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்டினேன், அவ்வளவுதான்.

உங்கள் விஷயஅறிவு மற்றும் நீங்கள் படித்த புத்தகங்கள், உங்களைப் பாழடித்துவிட்டன. அன்பு, புத்தகங்களிலிருந்து வாங்கப்படும் பொருளல்ல. விஷய அறிவும் அன்பும் சேர்ந்து செல்வதில்லை. 'என் மனைவியைப் பற்றி எனக்குத் தெரியும்' என்று நீங்கள் சொல்லும்போது, அதில் வெளிப்படுவது, உங்கள் மனைவியைப் பற்றிய உங்கள் கருத்துருவாக இருக்கும், உங்கள் விஷயஅறிவு. அந்த விஷயஅறிவு, எண்ணங்களால் உருவாக்கப்பட்டது. எண்ணங்கள் ஒருபோதும் அன்பு அல்ல.

உங்கள் உள்ளத்தில் அன்பு உள்ளதா? அல்லது, உங்களைப் பொறுத்தவரை, அன்பு என்பது ஒரு ரம்மியமான கற்பனை அல்லது ஒரு பிதற்றல் அல்லது

மதிப்பற்ற ஒன்று அல்லது நடைமுறை சாத்தியமற்ற ஒன்று என்பதாக உள்ளதா? அன்பு, உங்களுக்குச் செல்வத்தைப் பெற்றுத் தருவதில்லை. அன்பைக் குறித்த இந்த நீண்ட உரையைக் கேட்டபின், அன்பின் ஆழத்தைப் பற்றிய புரிதல் உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் என்று நினைக்கிறேன். புரிதலின் விளைவாய், நீங்கள், உங்கள் மனதை நெஞ்சத்தினுள் கொண்டிருப்பீர்கள், உங்கள் உறவும் சீரான முறையில் இருக்கும். உறவின் சீர்மை என்றால் அங்கு அன்பு இருக்கிறது என்று பொருள். அன்புடன் கூடிய சீரான உறவில், நீங்கள் செய்வது என்றுமே தவறாக இருக்காது. பின்னர், அனைத்துமே சரியானதுதான்.

*பம்பாய், 23.01.1983*

■■

## 15

# உளரீதியான பரிணாம வளர்ச்சி என்று ஏதேனும் உண்டா?

நாம் மிகவும் ஆழமானதும், கடினமானதுமான வாழ்வியல் விஷயத்தைப் பற்றி ஆராய்ந்து கொண்டிருக்கிறோம். அதன்பொருட்டு, சத்தியம் என்றால் என்ன, எது பொய்ம்மை, எது அறியாமை, விஷயஅறிவு என்றால் என்ன என்பது போன்றவைகளுக்கான விடைகளை நமக்கு நாமே கண்டுணர வேண்டியது அவசியமாகிறது. நமக்குள் 'அமைதி மூனை' ஒன்றைக் கண்டுபிடித்து கொள்ளவேண்டும். அச்சமூட்டும் இந்நகரில், ஒரு சிறிய வீட்டில் திணறிக்கொண்டு வாழ்கிறோம். நாள் முழுக்க வேலை செய்கிறோம். ஒவ்வொரு நாளும் கூட்ட நெரிசலான பஸ்ஸிலும், ரயிலிலும் நீண்ட தூரம் சிரமப்பட்டு பயணித்து, பணி இடத்திற்குச் செல்கிறோம். இக்குழப்பங்களுக்கு நடுவே, நமக்கென்று ஒரு அமைதி மூனையை நாம் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும்.

அந்த அமைதி மூனை, வீட்டிலோ, தோட்டத்திலோ அல்லது ஆரவாரமற்ற குறுகிய தெருவிலோ இருக்கப்போவதில்லை; நமக்குள், மிகுந்த ஆழத்தில் அது இருக்க வேண்டும். அங்கு அது உயிர்ப்புடன்

இருந்துகொண்டு, நாம் செயல்பட வேண்டும். அழகு என்றால் என்ன, மற்றும், காலம் என்றால் என்ன என்பது பற்றியும், பயத்தின் இயல்பு மற்றும் அதன் இயக்கத்தைப் பற்றியும், இன்பக் களிப்பைத் தேடியோடுதல் பற்றியும், துக்கத்தை முடிவிற்குக் கொண்டுவருதல் பற்றியும், நாமே சுயமாகக் கண்டுபிடிக்க வேண்டும். நம் அமைதி முனையை, நாம் நம் மனதில் கொண்டிருக்கக் கூடாது; அது நம் நெஞ்சத்தில் இருக்க வேண்டும் - நெஞ்சத்துள் இருக்கும் மனதில் இருக்க வேண்டும். ஏனென்றால், நெஞ்சத்துள் இருக்கும் மனதில், அன்பு, பாசம், நுண்ணறிவு, புரிதல் ஆகியவை இருப்பதால், அவை களிலிருந்து தெளிவு பிறக்கும், தெளிவிலிருந்து செயல் வெளிப்படும்.

நம்மில் பெரும்பாலோர், வாழ்க்கையில் பெருமளவு முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது, முரண்பாடுகளுடன் வாழவேண்டியுள்ளது, பல்வேறு நெருக்குதல்களை சந்திக்கவேண்டியுள்ளது, உலகில் நடக்கும் பயங்கர நிகழ்ச்சிகளால் தாக்கம் அடைய வேண்டியிருக்கிறது. எனவே, உள்முகத்தில் நமக்கென ஒரு வெளியை கொண்டிருத்தல் அவசியமாகிறது. அந்த வெளி, எண்ணத்தால் உருவாக்கப்பட்டதல்ல. அந்த வெளி, கறைபடாதது, தெளிவானது, அதிலிருக்கும் ஒளி, பிறரால் ஏற்றப்படாதது. நாம் முற்றிலுமாக சுதந்திரத்துடன் வாழ, நமக்கு நாமே ஒளியாகத் திகழச் செய்யும் ஒளி, அது.

நாம் நம்மை சுதந்திரமான மனிதர்கள் என்று எண்ணிக்கொண்டாலும், உண்மையில் நாம் சுதந்திர மானவர்கள் அல்ல. எது வேண்டுமோ, அதைத் தெரிவு செய்துகொள்ளும் உரிமையை நாம் பெற்றிருப்பதும், விரும்பியதைச் செய்ய நமக்குச் சுதந்திரம் இருப்பதாலும்,

நாம் நம்மை சுதந்திரமானவர்கள் என்று எண்ணிக்கொள் கிறோம். விருப்பப்படி நடந்துகொள்ளும் சுதந்திரத் திலிருந்து, முற்றிலுமாக வேறுபட்டது உண்மை சுதந்திரம். எந்தவித வழிகாட்டுதலும் இல்லாமல், என்ன செய்யவேண்டும், எப்படி நடந்துகொள்ள வேண்டும், எது சரியான செயல் என்பதையெல்லாம் பிறர் நமக்கு உபதேசிப்பதாக இல்லாமல், எவ்வித உதவியையும் ஏற்காமலும் இருந்துகொண்டு, துவக்கமோ முடிவோ கொண்டிராத அந்த வெளியை நமக்குள் நாம் கண்டுகொள்ள வேண்டும்.

இங்கு, நாம் இரண்டு நண்பர்களைப் போல உரையாடிக் கொண்டிருக்கிறோம். அமைதியான, மலர்கள் பூத்துக்குலுங்குகின்ற, மரங்கள் நிறைந்த, பறவைகள் பலவற்றின் பலகுரலிசை கேட்கும் பாதையில், நடந்துகொண்டே பேசும் நண்பர்கள் போன்றோ, இல்லை, ஆள் நடமாட்டமற்ற, தனிப்பட்ட இடத்திலிருக்கும் பெஞ்சில் உட்கார்ந்துகொண்டு பேசும் நண்பர்கள் போன்றோ, நாம் கூடி உரையாடிக் கொண்டிருக்கிறோம். இந்நிகழ்ச்சி, ஒரு பிரசங்க நிகழ்ச்சி இல்லை என்பதை மீண்டும் நினைவுபடுத்த விரும்புகிறேன். குறிப்பிட்ட ஒரு விஷயத்தைப் பற்றி எடுத்துரைத்து, உங்களுக்கு அவ்விஷயத்தைக் குறித்து அறிவுறுத்துவதாகவே பிரசங்கங்கள் இருக்கும். ஆனால், இங்கு நாம் அக்கறையோடு அன்றாட வாழ்க்கையைப் பற்றி பேசிக்கொண்டிருக்கிறோம்; கற்பனை மாயங்களைப் பற்றி பேசவில்லை. நம் வாழ்க்கை, பதற்றமற்றதாகவும், தெளிவானதாகவும் இல்லாவிட்டால், நம் செயல்கள் அனைத்தும் அர்த்தமற்றதாகிவிடும் என்பதால், நம் வாழ்க்கையை அக்கறையுடன் நோக்கி, தெளிவைப் பெறுதல் அவசியமாகிறது.

வெகு தொலைவிற்குச் செல்ல, நாம் அருகிலிருந்து தொடங்கவேண்டும். அருகாமையில் இருப்பது எதுவென்றால் நாம் எப்படிப்பட்டவராக இருக்கிறோம் என்பதே. ஆகவே, இந்தக் கலந்துரையாடலில், நீங்கள் எதையும் ஆமோதிக்க வேண்டும் என்பதில்லை. ஆனால், ஒருங்கிணைந்து சிந்திக்க வேண்டியது உங்களுடைய கடமையாகிறது. எதையும் ஏற்குமுன், பெருமளவிற்கு ஐயப்பாடு கொண்டு அதை ஆய்வு செய்ய வேண்டும். பயம், அதற்குத் தடையாக இருக்கக் கூடாது. பயமற்று இருந்தால் இந்தப் பேச்சாளரின் பேச்சை மட்டுமல்லாமல், உங்கள் சிந்தனை, நம்பிக்கை, தீர்மானங்கள் மற்றும் உங்கள் மதம் ஆகியவற்றைப் பற்றியும் நீங்கள் ஐயுற்று, கேள்வி எழுப்பி, விசாரணை செய்ய முடியும்.

மனிதனின் சிந்தனையை குறுக்கி, ஐயுறுதல், கேள்வி எழுப்புதல், ஆழமாகப் பரிசீலனை செய்தல் போன்ற செயல்பாடுகளை வெகுவாக குறைத்துவிட்டதில், மதங்களின் பங்கு, மிகவும் கணிசமானது. அன்றாட வாழ்க்கையில் நாம் எதிர்கொள்ளும் பல விஷயங்களைப் பற்றி நாம் இங்குப் பார்க்கப்போகிறோம். நாம் தத்துவங்களையோ, கோட்பாடுகளையோ பற்றி பேசப்போவதில்லை. எந்தவொரு நம்பிக்கையையும் ஆதரித்து பேசப்போவதில்லை. எது உண்மை, மாயை எது, எது போலி, எது கற்பனை என்பன போன்றவற்றை சுயமாகக் கண்டுபிடிக்க வேண்டுமெனில், ஐயுறும், வினா எழுப்பும், விளக்கத்தைக் கோரும் மனதினை நாம் கொண்டிருக்க வேண்டும்.

அழகு என்றால் என்ன என்பதைப் பற்றி நாம் முதலில் ஆய்வு செய்ய இருக்கிறோம். அழகிற்கும் அன்றாட வாழ்க்கைக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது

என்று நீங்கள் கேட்கலாம். நம் அன்றாட வாழ்க்கையானது, தன்னலம் மிக்கதாகவும், தன்முனைப்பு கொண்டதாகவும், சொல்லப்போனால், விகாரமானதாகவும் உள்ளது; கடின உழைப்பு, முரண்பாடுகள், வேதனைகள், பதற்றங்கள், தாங்க முடியாத தனிமை என்பதாக நம் அன்றாட வாழ்க்கை இருக்கிறது. உண்மையில் அன்றாட வாழ்வை உள்ளபடி நோக்க, நமக்குச் சிறந்த கண்டுணரும் பாங்கு இருத்தல் அவசியம். காலம் என்பது நம் வாழ்க்கையில் முக்கிய காரணியாய் செயல்படுகிறது. காலம் என்றால் என்ன மற்றும் நம் வாழ்க்கையில் காலத்தின் பங்கு என்னவாய் இருக்கிறது என்பதையெல்லாம் கண்டுபிடிக்கப் போகிறோம்.

சூரிய உதயம் - சூரிய அஸ்தமனம், பௌர்ணமி - அமாவாசை, பத்தாம் நூற்றாண்டு - இருபதாம் நூற்றாண்டு, என்பது போன்ற பௌதீக கால வகைகளைத் தவிர, வேறு கால வகைகளும் உளதா? பிரிவினைகளைத் தோற்றுவிக்கும் காலம், துவக்கமாகவும், முடிவாகவும் விளங்கும் காலம், உள்ளதிலிருந்து வேறொன்றாக 'ஆதல்' என்பதில் செயல்படும் காலம் போன்றவைகளைப் பற்றியும், காலத்தில் அழகு பங்கு பெறுகிறதா அல்லது அழகு தள்ளிவைக்கப்படுகிறதா என்பன போன்ற விஷயங்களைப் பற்றியும் ஆராயப்போகிறோம். ரசனையுடன் கூடிய வாழ்தலை நாம் தொலைத்துவிட்டோம். அழகின் இயல்பைப் பற்றி அறியாதவர்களாய் இருக்கிறோம். அழகு என்பது முக அழகோ அல்லது உடையழகோ மட்டுமல்ல. அன்பு இல்லாத இடத்தில், அழகு இருப்பதில்லை. அழகு காலத்தின்பாற்பட்டதல்ல. படைப்பு, காலத்தால் நிகழ்வதில்லை.

ஆக, நம் வாழ்வில், காலம் முக்கிய பங்கு வகிக்கிறது. ஒரு மொழியைக் கற்கவும், ஒரு திறமையை வளர்த்துக் கொள்வதற்கும், ஒரு குமாஸ்தா, உயர் அதிகாரியாக உயர்வு பெறுவதற்கும் பௌதீகரீதியான காலம் தேவைப்படுகிறது. ஆனால், உள்முகத்தில், மனோரீதியான காலம் என்று ஏதாவது இருக்கிறதா? ஒருவர், மேலும் பெருந்தன்மை மிக்கவராக ஆவதற்கும், பேராசை, கோபம், வன்முறை ஆகியவற்றிலிருந்து விடுபடவும், மற்றும் இதுபோன்ற விஷயங்களில், காலமா வளர்ச்சிக்கு உதவுகிறது? மனம் என்ற களத்தில் காலத்தின் செயல்பாடு இருக்கிறதா? காலம் என்பது பரிணாம வளர்ச்சி. விதையிலிருந்து முளைத்துவரும் மரம், குழந்தை வளர்ந்து இளைஞனாகும் வளர்ச்சி, மரம் 'ஆதல்', இளைஞன் 'ஆதல்' என்பதிலெல்லாம் காலம், பரிணாம வளர்ச்சியாக சுட்டிக்காட்டப்படுகிறது.

இப்போது நாம் கேட்கிறோம்: மனோரீதியில் பரிணாம வளர்ச்சி என்று ஏதாவது உள்ளதா என்று. காலத்தின் தாக்கத்தைப் பற்றி கண்டுபிடிக்க, நாம் இங்கு ஒன்றுபட்டு சிந்திக்க வேண்டும். பயத்தின் ஆணிவேராக, காலமும் எண்ணமும் இருப்பதால், அவற்றைப் பற்றி புரிந்துகொள்வது அவசியமாகிறது. எல்லாவித பயங்களுக்கும் ஆணிவேராக இருக்கும் எண்ணம் மற்றும் காலத்தைப் பற்றிய புரிதல் இல்லையென்றால், பயத்தை முடிவிற்குக் கொண்டுவர முடியாது.

பௌதீகரீதியான காலம் இருக்கிறது - பிறைச்சந்திரன் முழுநிலவாவதற்கும், சிறிய விதை, பெரிய விருட்சமாவதற்கும் காலம் தேவை. ஒரு மொழியைக் கற்க, ஒரு திறமையை வளர்த்துக்கொள்ள காலம் தேவை. விஷய அறிவை சேகரிக்க, காலம் கட்டாயம் தேவை. நீங்கள்

ஒரு மொழியைக் கற்றுக்கொள்ள, ஒரு வாரகாலமாகலாம், இல்லை, ஆறு மாதமாகலாம். இங்கிருந்து உங்கள் வீட்டிற்குப் போய்ச்சேர நேரம் ஆகும். பௌதீகம் சம்பந்தப்பட்ட எல்லா செயல்களுக்கும், மற்றும், புதிய ஒன்றைக் கற்றுக்கொள்வதற்கும், காலம் தேவைப் படுகிறது.

உங்கள் சிந்தனைகள், உணர்வுகள், தீர்மானங்கள், நம்பிக்கைகள், எதிர்பார்ப்புகள் மற்றும் பயங்களின் ஒட்டுமொத்தத் தொகுதியாக, உங்கள் மனம் இருக்கிறது. அந்தத் தொகுதியே, உங்கள் பிரக்ஞையாகவும், நீங்களாகவும் இருக்கிறது. உங்கள் பிரக்ஞையானது, உங்கள் விஷய அறிவு, உங்கள் நம்பிக்கை, உங்கள் பயங்கள், உங்கள் கடவுளர்கள், உங்கள் களிப்புகள், உங்கள் தீர்மானங்கள், உங்கள் தனிமை, வலி மற்றும் துக்கம் பற்றிய உங்கள் கவலை ஆகியவற்றால் ஆனது. அவை அனைத்துமே உங்கள் பிரக்ஞையாக இருக்கிறது. இவ்வாறாக இருக்கும் பிரக்ஞைக்கு, பரிணாம வளர்ச்சி ஏற்படக் கூடுமா என்று நாம் வினவுகிறோம்.

பரிணாம வளர்ச்சி என்றால் 'ஆதல்' - மேலும் மேலும் வளர்ந்து வேறொன்றாக 'ஆதல்'. நான் பேராசைக்காரன், பொறாமைக்காரன், முரட்டுத்தன மானவன். பேராசை எங்காவது பரிணாம வளர்ச்சி பெற்று பேராசையற்றதாக ஆக முடியுமா? கோபம் மற்றும் தனிமையுணர்வு மெதுமெதுவாக வேறொரு குணநலனாக ஆக முடியுமா? இது சிறிது சிக்கலான விஷயம் - தயவுசெய்து கவனமாக நோக்குங்கள்.

நம் சம்பிரதாயம், நம் சமயக் கோட்பாடுகள், நம் நம்பிக்கைகள் மற்றும் நம் புனித நூல்கள் அனைத்துமே, 'நீங்கள் முயற்சி செய்தால், கடினமாக உழைத்தால்,

தியானம் செய்தால், நீங்கள் இப்போதிருக்கும் நிலையிலிருந்து, இலட்சிய நிலையை அடைய மெதுமெதுவே உயர்வீர்கள், அதுவே பரிணாம வளர்ச்சி' என்று உங்களுக்கு உபதேசிக்கிறது.

இங்கு, இந்தப் பேச்சாளர், அவ்வுபதேசங்களை பொய் என மறுக்கிறார். பேராசை என்பது, என்றும் 'நல்ல பேராசை'யாக ஆக முடியாது என்று கூறுகிறார். ஒன்றிற்கு முடிவு உண்டே தவிர, அது வேறொன்றாய் ஆவதில்லை. உங்களில் பலர், மறுபிறவியில் நம்பிக்கை உடையவர்கள். ஏன் மறுபிறவியில் நம்பிக்கை கொண்டிருக்கிறீர்கள் என்பது தெரிந்த விஷயமே. இந்தப் பிறவியிலிருந்து அடுத்த பிறவி எடுக்கும்போது, இப்பிறவியிலிருப்பதைவிட அப்பிறவியில், உங்களுக்கு நல்ல வாய்ப்புகள் கிடைக்கும், இன்னும் கூடுதலான சௌகரியங்கள் கிடைக்கும், மேலும் பெருந்தன்மை யுடையவராக ஆகிவிடுவீர்கள், மேலும் ஞானம் பெற்றுவிடுவீர்கள் என்று நம்புகிறீர்கள். அதாவது, இன்றிருக்கும் நிலையிலிருந்து, நீங்கள் இலட்சிய நிலைக்கு பரிணாம வளர்ச்சி அடைவீர்கள் என்று நம்புகிறீர்கள். ஆனால், இந்தப் பேச்சாளர், அந்த நம்பிக்கையைக் குறித்து வினா எழுப்புகிறார்.

உளரீதியான பரிணாம வளர்ச்சி என்று எதுவுமில்லை என்று அவர் கூறுகிறார். அந்த வாசகத்தின் தன்மையை, உட்பொருளை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். ஞானத்தெளிவு, சத்தியத்தைப் பற்றிய ஆழமான பார்வை, காலத்தைக் கடந்தது பற்றிய உணர்வு போன்றவை பரிணாம வளர்ச்சியாலோ, தொடர்ச்சியினாலோ வருவதில்லை என்பதை அவ்வாசகம் குறிப்பாக உணர்த்துகிறது. ஆக, உளரீதியில், எவ்வித இயக்கமும் இல்லை, எவ்வித 'ஆதல்'-ம் இல்லை.

என் சாதனைகளின் தரநிலையாக இருக்கும், நான் குணசீலனாகிவிடுவது, ஞானவொளி பெறுவது போன்றவையெல்லாம், நான் பெருமுயற்சி செய்வதாலோ, என்னை நான் வருத்திக்கொள்வதாலோ, கடினமான கட்டுப்பாடுகளை கடைப்பிடிப்பதாலோ வருவதில்லை. ஒருவர் காலத்தின் இயல்பைப் பற்றி புரிந்துகொள்ள வேண்டும். காலம், எதையும் பகுக்கிறது, பிரிக்கிறது. காலம் என்பது ஒரு துவக்கத்தையும் மற்றும் ஒரு முடிவையும் குறிப்பாக உணர்த்துகிறது.

பயத்தின் இயல்பைப் பற்றி இப்போது பார்க்கலாம். பயத்தை முடிவுறச் செய்ய எண்ணும் அத்தருணத்தில், அது, முடிவுறுமா, இல்லை, படிப்படியாக முடிவுறுமா என்பதைப் பற்றி பார்க்கலாம். கொஞ்சம் கொஞ்சமாக பயத்தின் பிடியிலிருந்து விடுபட முடியும் என்ற கருத்திற்கு உடன்பட்டவர்கள் நாம். எனவே, 'நான் அதை எண்ணிப் பயப்படுகிறேன், ஆனால், கொஞ்சம் கால அவகாசம் கொடுங்கள், அந்தப் பயத்திலிருந்து வெளிவந்து விடுவேன்' என்று சொல்கிறோம். காலத்தின் வழியாக பயம் முடிவிற்கு வரக்கூடுமா, அல்லது, காலமே பயத்தின் ஆணிவேராக இருக்கிறதா என்பதை நாமே சுயமாகக் கண்டுபிடிக்கப் பார்ப்போம்.

பயம் ஏற்பட எது காரணம்? பயம் என்றால் என்ன? இருட்டைக் கண்டால் பயம், மனைவியைக் கண்டால் பயம், அதிகாரத்திலிருப்பரைக் கண்டால் பயம், சாதிக்க முடியாமல் தோற்றுப்போவோமோ என்ற பயம், விரும்பியது கிட்டாமல் போகுமோ என்ற பயம் என்பன போல் பல்வேறுவிதமான பயங்களைப் பற்றி நாம் அறிவோம். பயம், பல்வேறு அம்சங்களைக் கொண்டுள்ளது. பயத்தின் பல்வேறு கூறுகளைப்

பார்ப்பதிலோ, அல்லது, ஒன்றிரண்டு பயங்களை ஒழித்துக்கட்டுவதிலோ இங்கு நம் சிரத்தை இருக்கப்போவதில்லை - அவ்வாறு செயல்படுவது, வேரோடு அழிக்க வேண்டிய மரம் ஒன்றின் கிளைகளை மட்டும் வெட்டுவதற்குச் சமமாகும். மரத்தை முற்றிலுமாக அழிக்க, அதை அடியோடு சாய்த்து, ஆழமாக ஆணிவேர் வரை சென்று அதை வெட்டிக் களைய வேண்டும்.

உங்களுக்கிருக்கும் பயங்களை உற்றுநோக்குங்கள். நீங்கள் சாமியாராகி, காவியுடை அணிந்து, சபதங்கள் எடுத்துக்கொள்ளலாம். ஆனாலும், உங்களுக்குள் பயம் இருக்கிறது. அந்தப் பயத்தை உற்றுநோக்குங்கள். பயம் என்றால் என்ன? விபத்து நேரிடக் கூடுமோ என்ற பயம், நோயால் அவதியுற நேருமோ என்ற பயம் போன்றவைத் தவிர, உச்சக்கட்ட பயமான, மரணத்தைப் பற்றிய பயம் மற்றும் வாழ்க்கையைப் பற்றிய பயம் போன்றவற்றையும் அனுபவிக்கிறோம்.

விசித்திரமான உடைகளையும், மாலைகளையும் அணிந்துகொண்டு நிற்கும் உங்களுக்கும் வாழ்க்கையைப் பற்றிய பயம் இருக்கிறது. இந்தப் பேச்சாளர் சொல்பவை, விசித்திர உடைகளை அணிந்து கொண்டிருக்கும் சாமியார்களிடம் எவ்விதத் தாக்கத்தையும் ஏற்படுத்தாது. ஏனெனில், பயத்தை, அவர்கள் நம்பிக்கொண்டிருக்கும் கருத்திடம் / கடவுளிடம், அர்ப்பணித்துவிட்டால், தங்களின் பயத்திலிருந்து விடுபடலாம் என்ற கருத்தினை அவர்கள் கொண்டிருக்கிறார்கள்.

அர்ப்பணிப்பதற்கும், கட்டுப்படுத்துவதற்கும், அடக்கி ஒடுக்குவதற்கும், பயம் ஒன்றும் மேம்போக்கானதல்ல; அது மிகவும் ஆழமான ஒன்று. அதன் ஆணிவேராய் எது

இருக்கிறது என்பதைப் பற்றி விசாரணை செய்ய வேண்டும். பயத்தின் ஆணிவேராய் இருப்பது எது? காலம் அல்லவா? பயம் என்பது நேற்று அனுபவித்த கசப்பான அனுபவத்தின் ஞாபகமும், அந்தக் கஷ்டம் திரும்பவும் வந்துவிடப் போகிறதே என்ற கவலையும்தான் அல்லவா? மனப்பதிவுகள், பயத்தின் வேராக இருக்கின்றன. ஞாபகங்களும், அவைத் தோற்றுவிக்கும் உணர்வுகளும், பயத்திற்கான அறிகுறிகள். நாம் அறிகுறிகளைக் குறித்து இங்கே ஆராயப் போவதில்லை.

நம் சிரத்தையெல்லாம் அனைத்துவித பயங்களையும் முழுவதுமாக வேரோடு நீக்கிவிட முடியுமா என்பதைப் பற்றியே. குறிப்பிட்டதொரு பயத்தைப் பற்றியோ, அல்லது, உங்களின் மனக்கிலேசம் தோற்றுவிக்கும் பிரத்யேக பயத்தைப் பற்றியோ நாம் இங்கு விசாரணை செய்யப்போவதில்லை. பயத்தின் இயல்பைப் பற்றியும், அதன் கட்டமைப்பு மற்றும் காரணங்கள் பற்றியும் நாம் ஆராயப்போகிறோம்.

ஒன்று நிகழ, ஏதோவொன்று காரணமாய் இருக்கிறது என்றால், அந்தக் காரணத்தை முடிவிற்குக் கொண்டுவர முடியும். பயத்தின் காரணிகளில் ஒன்றாக காலம் இருக்கிறது. அதாவது, எதிர்காலத்தில் என்ன நேரிடுமோ என்ற பயத்தை, கடந்த கால ஞாபகங்கள் தோற்றுவிக்கும் எண்ணங்கள் ஏற்படுத்துகின்றன. ஆக, ஞாபகங்கள், எண்ணங்கள், கடந்த காலம், எதிர்காலம் என்று காலத்தின்பாற்பட்டவைகளாக இருப்பவைகள், பயத்தின் காரணிகளாக உள்ளன.

காலமும் எண்ணமும், பயத்தின் ஆணிவேராக இருக்கின்றனவா என்று நாம் கேட்கிறோம். என்ன நடக்குமோ என்று பயப்படுகிறேன் - அது

எதிர்காலத்தைப் பற்றிய பயம். கடந்த காலத்தில் அனுபவித்த துயரம், மீண்டும் வந்துவிடுமோ என்ற பயம் - அதாவது, கடந்த காலம், நிகழ்காலத்தில் ஊடுருவி, தன்னை கொஞ்சம் மாற்றிக்கொண்டு, எதிர்காலத்தை நோக்கி நகர்கிறது என்றாகிறது. ஆக, பயத்திற்கான காரணங்களில் காலம் ஒன்றாக இருக்கிறது என்பது தெளிவாகத் தெரிகிறது.

இப்போது நாம் கேட்கிறோம்: எண்ணமும் பயத்திற்கான காரணிகளில் ஒன்றா என்று. எண்ணத்திற்கும் காலத்திற்கும் வித்தியாசம் உண்டா? காலத்தின் இயல்பை நீங்களே சுயமாக பார்க்க முடியும். நேற்று, இன்று, நாளை என்று காலம் பிரிந்திருக்கிறது. போன வாரம் அனுபவித்த அந்த வேதனை, மீண்டும் எதிர்காலத்தில் வந்துவிடுமோ என்ற எண்ணம், கடந்த கால நினைவின் வெளிப்பாடாக உள்ளது. எண்ணம், பயத்திற்கான காரணங்களில் ஒன்றா அல்லது எண்ணம்தான், பயத்திற்கான காரணமா?

எண்ணம் என்றால் என்ன? எண்ணுதல் என்றால் என்ன? எழுதப்படிக்கத் தெரியாத, கிராமத்தில் வாழும் வறிய பாமரரும்கூட, நீங்கள் சிந்திக்கிறீர்களே, அதுபோலவே, அவரும் சிந்திக்கிறார், விஞ்ஞானியும் சிந்திக்கிறார். எனவே, சிந்தித்தல் என்பது அனைவராலும் செய்யப்படும் ஒன்றாக இருக்கிறது. 'தனிநபர் எண்ணுதல்' என்று எதுவுமில்லை. இக்கூற்றினை ஏற்றுக்கொள்வது சிறிது சிரமமானதுதான் என்று எனக்குத் தெரியும். இருப்பினும் இதனுள் சென்று பாருங்கள். 'எண்ணம், பயத்திற்கான காரணிகளில் ஒன்றா?' என்பதாக நம் கேள்வி இருப்பதால், எண்ணுதல் என்றால் என்ன என்பதை நாம் ஆராய வேண்டும்.

எண்ணுதல் என்பது அனைவருக்கும் பொதுவான ஒன்றாய் இருக்கிறது. மனித குலமே எண்ணுதலில் பங்கேற்கிறது. மெத்தப் படித்த, அதிகாரமும் செல்வமும் பெற்றிருக்கும் நாகரீகமானவரும் எண்ணிப் பார்க்கிறார். அவரைப் போலவே, அரைவயிறு பட்டினி கிடக்கும் எளிமையான பாமரரும் எண்ணிப் பார்க்கிறார். ஆக, எண்ணுதல் என்பது 'உங்களின்' எண்ணுதல் அல்ல. நீங்கள், உங்கள் எண்ணத்தை ஒரு முறையில் வெளிப்படுத்தலாம், நான் வேறு வார்த்தைகளில் சொல்லலாம். உண்மையில், நாம் இருவருமே எண்ணிப்பார்த்தோம் - அதுதான் நிஜம். என்னுடைய எண்ணுதலோ, உங்களுடைய எண்ணுதலோ இல்லை - அது, எண்ணுதல், அவ்வளவே.

எண்ணுதல் என்றால் என்ன? நம் வாழ்க்கையில் எண்ணுதல் ஏன் இவ்வளவு முக்கியமான இடத்தைப் பிடித்துக் கொண்டிருக்கிறது? எண்ணுதலும் அன்பும் ஒருசேர பயணிக்க இயலாது. கருணையானது, எண்ணத்தின் விளைபொருள் அல்ல. எண்ணத்தின் நிழலில் அன்பு இருக்க முடியாது. அன்பு என்பது மனப்பதிவாக இல்லை. எண்ணுதல் என்பது அனைவருக்கும் பொதுவானது, மற்றும், தனிப்பட்ட எண்ணுதல் என்று எதுவுமில்லை என்ற உண்மையைப் புரிந்துகொள்ள உங்கள் மனதையும், இதயத்தையும் அவ்விஷயத்தில் பரிபூரணமாக ஈடுபடுத்தி, புரிந்து கொள்ளுங்கள்.

எண்ணுதல் என்றால் என்ன? இந்தக் கேள்வியை கேட்டவுடனே, நீங்கள் அதற்கான பதில் என்னவாயிருக்கும் என்று எண்ணத் துவங்கிவிடுகிறீர்கள், இல்லையா? அல்லது, அக்கேள்வியை நீங்கள் ஊன்றிக்

கவனித்து கேட்கிறீர்களா? கேள்வியை கவனத்தோடு கேட்கும்போது, உங்கள் தீர்மானங்கள் மற்றும் உங்கள் கருத்துகளோடு மனம் அங்கு வந்து குறுக்கிடுவதில்லை.

கவனத்தோடு கேட்பதில் உங்கள் புலன்கள் அனைத்தும் முழுவதுமாக விழிப்புநிலையில் இருந்து கொண்டு கேட்கின்றன. அவ்விதத்தில் கேட்கும்போது, எண்ணுதலின் தோற்றுவாய் எது என்பதை உங்களால் பார்க்க முடியும். அனுபவம்தான், எண்ணுதலின் தோற்றுவாய். அனுபவம், விஷயஅறிவைத் தருகிறது. அனுபவத்தின் மூலம் அறிவியல் விஷயஅறிவோ, அல்லது, உங்கள் வாழ்க்கைத் துணைவரைப் பற்றிய விஷய அறிவோ, அல்லது, வேறு வகை விஷயஅறிவோ, பெற முடியும். அனுபவம் தந்த விஷயஅறிவு, மனப்பதிவுகளாக மூளையில் சேமித்து வைக்கப்படுகிறது. மனப்பதிவுகளின் மறுமொழியாக எண்ணுதல் இருக்கிறது - இது ஒரு எளிமையான உண்மை.

ஒன்றைப் பற்றிய ஞாபகமோ, விஷயஅறிவோ, அனுபவமோ இல்லாவிட்டால், உங்களால் அதைப்பற்றி எண்ணிப்பார்க்க முடியாது. ஆக, விஷயஅறிவு என்பது காலத்தின் செய்முறையாக இருப்பதால், எண்ணுதலும் காலத்தின் செய்முறையாகவே உள்ளது. விஷயஅறிவு என்பது எப்பொழுதுமே முழுமையானதாக எதைப்பற்றியும் இருக்க முடியாது. உங்கள் வாழ்க்கைத் துணையைப் பற்றியதோ, அல்லது, உங்கள் குருவைப் பற்றிய உங்கள் அறிவோ, எதுவாயிருப்பினும், விஷயஅறிவு என்றுமே நிறைவுபெறாதது, முழுமையற்றது. விஷய அறிவின் இக்குறைபாட்டால், அதிலிருந்து பிறக்கும் எண்ணமும் முழுமையற்றது, பகுதிகளாகப் பின்னப்பட்டது.

எண்ணத்தால் உருவாக்கப்பட்ட மகவாக, பயம் உள்ளது. 'நான் தவறிழைத்துவிட்டேன். அதற்காக நான் தண்டிக்கப்படலாம்' - அதாவது, நான் தண்டிக்கப்படலா மென்று எண்ணி, பயப்படுகிறேன். ஆக, எண்ணமும் காலமும், பயத்தின் காரணிகளாக உள்ளன. எண்ணம், காலத்திலிருந்து வேறுபட்டதா? இல்லை, எண்ணம்தான் காலமா? எண்ணம் என்பது ஒரு இயக்கம், சரிதானே? அது ஒரு பௌதீக செய்முறை. எண்ணம் எதைச் செய்யினும், அது பௌதீக வகையானது. உங்கள் கடவுளர்கள், எண்ணத்தால் உருவாக்கப்பட்டவர்கள். உங்கள் சடங்குகளும் எண்ணத்தால் உருவானவை. மதத்தின் பெயரால் நடந்தேறும் அனைத்து விஷயங்களும் எண்ணத்தால் உருவாக்கப்பட்டவையே. கடவுள்கள் மற்றும் குருமார்கள் என்று அனைத்துமே எண்ணத்தின் விளைவாகவே உள்ளது.

விஷயஅறிவு, வரம்பிற்குட்பட்டது. அதன் காரணமாய், அதிலிருந்து பிறக்கும் எண்ணமும் செயல்களும் வரம்பிற்குட்பட்டவையாகவும், பாகுபாடு கொண்டதாகவும் இருக்கின்றன. எங்கெல்லாம் வரம்பு இருக்கிறதோ, அங்கெல்லாம் பயம் கட்டாயம் இருக்கும். எனவே, 'எண்ணமும் காலமும் ஒருசேர இயங்க முடியுமா? இல்லை, அவை இரண்டும் வேறு பட்டவையா?' என்ற கேள்வி எழுகிறது. இருப்பது எண்ணம் மட்டும்தான் - அது, தன்னை, காலம் என்றும் பரிணாம வளர்ச்சி என்றும் 'ஆதல்' என்றும் பகுத்துக்கொள்கிறதா என்றும் கேட்கத் தோன்றுகிறது. இவற்றைப் பற்றியெல்லாம் ஆராய்ந்துபாருங்கள், விசாரணை செய்யுங்கள்.

விஷயஅறிவின் அபரிமிதமான சேகரிப்பால், உங்கள் மூளையை மந்தப்படுத்தி கொண்டுவிடாதீர்கள்.

இயந்திரத்தனமாய் செயல்பட்டு, ஊக்கமின்றி இருக்கா தீர்கள். வாழ்க்கை என்பது நுண்ணறிவு, உணர்ச்சிகள் மற்றும் உணர்வுகள். ஆனால், இப்போது நீங்கள் செய்வதுபோல், எல்லா விஷயங்களிலும் எண்ணத்தை அதிகாரம் செய்ய அனுமதித்துவிட்டீர்களென்றால், வாழ்க்கை ஆழமற்றதாகவும், பொருளற்றதாகவும் பின்னப்பட்டதாகவும் ஆகிவிடுகிறது.

அன்பு என்றால் என்ன என்றும் நாம் கலந்துரையாட வேண்டும். நீங்கள் யார் மீதாவது அன்பு செலுத்து கிறீர்களா? அந்த அன்பில் பற்றுதலோ, பொறாமையோ இல்லாமல் இருக்கிறதா? பற்றுதல் இருப்பின், அங்கு அன்பு இருப்பதில்லை. தொடர்பில், எதிர்ப்போ, வெறுப்போ எவ்வகையில் இருந்தாலும், அங்கு அன்பு குடியிருக்க முடியாது. பயம் இருக்குமிடத்திலும், அன்பு இருப்பதில்லை. அடைந்துவிட வேண்டும் என்ற பேரவா இருந்தாலும், அன்பு அங்கு வாழ்வதில்லை. அதிகாரம் எவ்வகைத்தாயினும், அது இருக்குமிடத்தில்,அன்பு நிலைகொள்வதில்லை. மனைவி மீது கணவனோ, அல்லது, கணவன் மீது மனைவியோ, அதிகாரம் செலுத்தும்போது, அவர்கள் உறவில் அன்பு இருப்பதில்லை. எனவே, 'நீங்களென்ன நேசிக்கிறீர்களா?' என்று நாம் வினவு கிறோம். அன்பு இல்லாதபோது, துன்பம் தொடர்கிறது.

மேற்கூறப்பட்டவையெல்லாம் ஒன்றோடு ஒன்று சம்பந்தப்பட்டிருப்பதால், துன்பத்தை முடிவிற்குக் கொண்டுவர முடியுமா என்பது பற்றியும் நம் தேடல், நம் விசாரணை இருத்தல் அவசியம். பயத்திலிருந்து துன்பம் வேறுபட்டதல்ல. எண்ணத்திலிருந்தும் துயரம் மாறுபட்டதல்ல. வெறுப்பு மற்றும் நம் மனக்காயங் களிலிருந்தும் துயரம் வேறானதல்ல. இவையெல்லாம்

ஒன்றிற்கொன்று தொடர்பு உடையவை. இவையெல்லாம் தனித்தனி பிரச்சினைகள் அல்ல, எல்லாம் ஒரே பிரச்சினைதான். இப்பிரச்சினையை நாம் ஒட்டு மொத்தமாக அணுகவேண்டுமேயன்றி, பகுதிபகுதியாகப் பார்க்கக் கூடாது.

இந்தப் பிரச்சினையை அறிவுபூர்வமாகவோ, இலட்சியப்பூர்வமாகவோ, கற்பனையாகவோ அணுகினால், நீங்கள் வாழ்வின் முழுமையை காண முடியாது. எனவே, 'துன்பத்தை முடிவிற்குக் கொண்டு வருதல் என்பது சாத்தியம்தானா?' என்று நாம் கேட்கிறோம். எண்ணத்தால் கணிக்க முடியாத காலத்திலிருந்தே, பயம், களிப்பு மற்றும் துன்பம் ஆகிய உணர்வுகளை மனிதன் அனுபவித்து வருகிறான். இவைகளைத் தாண்டி மனிதன் அப்பால் செல்லவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. அவனுக்குத் தெரிந்த அனைத்து வழிமுறைகளையும் கையாண்டு, பயம், களிப்பு, மற்றும் துன்பம் ஆகியவற்றை அடக்கப் பார்த்திருக்கிறான். அவற்றிலிருந்து தப்பித்துச் செல்ல முயற்சி செய்திருக்கிறான். கடவுள் என்ற ஒன்றைக் கண்டுபிடித்து, அதனிடம் இவைகளையும் அர்ப்பணித்து விட பெரும் முயற்சி செய்திருக்கிறான். ஆனால், அம்முயற்சிகள் எந்தவிதப் பயனையும் அவனுக்கு அளிக்கவில்லை.

துன்பத்தின் இயல்பையும், அது தோன்றுவதற்கான காரணத்தையும், அது முடிவுறுமா என்பது பற்றியும் நாம் ஆராய வேண்டும். பயம் தோன்றுவதற்கான காரணங்களிலிருந்து, பயம் வேறுபட்டதா? களிப்பிலிருந்து, அதற்கான காரணம் வேறுபட்டதா? சாதனை பெற்றுத்தரும் களிப்பு, செல்வம் கொண்டுவரும்

களிப்பு, அதிகாரம் ஈட்டித்தரும் களிப்பு, திறமையால் வரும் களிப்பு என்று களிப்பு பல வகைகளில் வருகிறது.

இந்த நாடு, மேலும் மேலும் உலகாயதத்தில் மூழ்கிக்கொண்டிருப்பதை நீங்கள் கவனிக்கிறீர்களா என்று எனக்குத் தெரியவில்லை. பணம் உங்களுக்கு மிகப்பெரிய விஷயமாக இருக்கிறது. நீங்கள் கடவுளை வணங்க வில்லை, பணத்தை தான் பூஜிக்கிறீர்கள். உலகாயதமான விஷயங்களில் இன்பத்தைத் தேடிச் சென்றீர்களென்றால், உங்கள் வாழ்க்கை, தாறுமாறாகச் சென்று குழப்பத்தில் முடிவுறும். உலகத்தில் இதுதான் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அணு ஆயுதப்போர் அபாயம் எங்கும் நிலவுகிறது. ஆனால், இவற்றைப் பற்றியெல்லாம் அறியாதவர்களாக நீங்கள் இருக்கிறீர்கள்.

இன்பக்களிப்பை நாடிச் செல்வதற்கு முடிவே இல்லை, அது கணக்கிலடங்காதது. காம இன்பம் மட்டுமின்றி, விரும்பிய நிலையை எட்டுவதால் பெறும் இன்பம், சாதித்ததால் பெறும் இன்பம், ஒரு நபருடனோ, ஒரு கருத்துடனோ, ஒரு தீர்மானத்துடனோ தன்னை இணைத்துக்கொள்வதால் வரும் இன்பம் என்றிருக்கும் இன்பங்களை ஓயாமல் துரத்திச் செல்கிறோம். ஒரு இன்பத்தை நாடிச்செல்லும்போது, அதன் பின்னணியில் பயத்தின் நிழல் தொடர்ந்துகொண்டே இருக்கும். எங்கெல்லாம் பயம் இருக்கிறதோ, அங்கெல்லாம் துன்பம் இருக்கும்.

பயம், துன்பம் மற்றும் இன்பம் ஆகியவற்றை, அவை ஏதோ தனித்தனியானவை, வேறுபட்டவை என்று கருதாமல், அவை ஒன்றிற்கொன்று தொடர்புடையவை, ஒருங்கிணைந்தவை என்றுணர்ந்து, அவைகளைத்

தனித்தனியாகப் பார்க்காமல், முழுவதுமாக எதிர்கொள்ள வேண்டும். பயத்திலிருந்து துன்பம் வேறுபட்டது என்ற எண்ணத்துடன், நாம் துன்பம் என்ற விஷயத்தைப் பார்க்கப்போவதில்லை என்பதில் தெளிவாக இருங்கள். துன்பம் இருக்குமிடத்தில் அன்பு இருக்காது என்பதால், துன்பத்தின் இயல்பை அறிந்துகொண்டு, அதை முடிவிற்குக் கொண்டுவர வேண்டி, நாம் இந்தத் தேடலை மேற்கொள்கிறோம்.

தனிமையின் துன்பம், வறுமை, லஞ்சம் மற்றும் மனிதநேயமின்மை போன்றவற்றை இந்தப் பரந்த நாட்டில் பார்க்கும்போது உண்டாகும் துன்பம் என்று துன்பம், தன்னை பலவிதங்களில் வெளிப்படுத்திக் கொள்கிறது. தினம்தினம் இக்கொடுமைகளைப் பார்ப்பது, ஒரு துன்பம். 'அன்பு' என்பதற்கு நீங்கள் தரும் அர்த்தம் என்னவாய் இருக்கும்? நீங்கள் அன்பு காட்டிய ஒருவரின் இழப்பு தருவது துன்பம். இழப்பு தரும் துன்பம், போற்றிப் பாதுகாத்தது முடிவுறுவது தரும் துன்பம், அர்த்தமற்ற வாழ்க்கை வாழ்வது தரும் துன்பம் என துன்பங்களின் பட்டியல் நீண்டுகொண்டே போகிறது.

நீங்கள் செல்வந்தராய் இருக்கலாம். அனைத்து சுகங்களையும் அனுபவிக்கலாம். உங்களுக்கு மக்கட்பேறு கிட்டியிருக்கலாம், நீங்கள் நவநாகரீகமான வாழ்க்கை வாழலாம். இருப்பினும், உங்கள் வாழ்க்கை, ஆழமற்றதாக வும், வெற்றுத்தனமானதாகவும், அர்த்தமற்றதாகவும் இருப்பதைக் கண்டுணரும் நீங்கள் துன்பம் அடைகிறீர்கள். எல்லாம் இருந்தும் ஒன்றுமில்லாதவனாய் இருக்கும் சோகத்தையும் அறியாமையால் வரும் சோகத்தையும் அனுபவிக்கிறீர்கள்.

துன்பம் முடிவிற்கு வருமா? துன்பம், உங்கள் துன்பம் மட்டுமல்ல - அது என் துன்பமும் அடுத்தவரின் துன்பமுமாக இருக்கிறது. உங்களுக்கே உரிய ஒன்றாய், துன்பத்தை அணுக வேண்டாம். மனிதகுலம் முழுமையும் துன்பத்தைப் பகிர்ந்துகொள்கிறது. நீங்கள், உங்களுடைய சொந்தத் துன்பமாக எண்ணிக்கொண்டு, அதை எதிர்கொள்ளலாம். ஆனால், ஆணோ, பெண்ணோ, பணக்காரரோ, ஏழையோ, மேன்மையின் உச்சி யிலிருப்பவரோ, நவநாகரீகமானவரோ, எவராய் இருப்பினும், சொந்தத் துன்பமாக அவரால் கருதப் படுவது, உண்மையில் அனைவராலும் அனுபவிக்கப்படும் துயரமாக இருக்கிறது.

எனவே, தயவு செய்து, பயம், களிப்பு, துன்பம், அன்பு போன்றவைகளை தனித்தனி உணர்வுகளாகக் கருதி எதிர்கொள்ளாமல், அவற்றை முழுமையாகக் கருதி, ஒன்றிற்கொன்று தொடர்புடையதாகப் பார்த்து, அவற்றை அணுகுங்கள். பாகுபடுத்தி அவற்றை எதிர்கொண்டால், பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண முடியாது. சோகம், வலி மற்றும் துன்பத்தை, வாழ்க்கையிலிருந்து வேறுபட்டதாய் எண்ணாமல், அவற்றை வாழ்க்கையின் இயக்கமாகப் பார்க்கவேண்டும். அன்றாட வாழ்வில் நாம் அனுபவிக்கும் பயம், துக்கம், முரண்பாடு, வலி ஆகியவை முடிவிற்கு வருமா என்று நீங்கள் கண்டுபிடிக்க, அவற்றைப் பற்றிய விழிப்புணர்வும் கண்டுணரும் திறனும் உங்களுக்குத் தேவைப்படுகிறது.

கண்டுணர்தல் என்றால் என்ன? இவ்விஷயங்களை எவ்வாறு நோக்கவேண்டும்? வறுமை, தனிமை, பதற்றம், துக்கம், நிச்சயமற்றத் தன்மை போன்றவற்றைப் பார்க்கும் 'காண்பவராக' இருக்கும் நீங்கள், பார்க்கும் அக்காட்சிப்

பொருட்களிலிருந்து வித்தியாசமானவரா? இல்லை, பார்க்கும் அவை யாவும் காண்பவரான நீங்கள்தானா? காண்பவராக இருக்கும் 'தான்'-ஐ, காட்சிப் பொருளிலிருந்து பிரித்து வேறாக்கிவிடுகிறோம். நான் கஷ்டப்படுகிறேன். எனக்கு நானே சொல்லிக் கொள்கிறேன்: 'இந்தக் கஷ்டம் முடிவுற வேண்டும். அதன் பொருட்டு, நான் அதிலிருந்து தப்பித்து ஓடவேண்டும், அதை அடக்கிவிட வேண்டும், எந்த வழிமுறையையாவது கடைபிடித்து, இந்தக் கஷ்டத்தை முடிவிற்குக்கொண்டு வரவேண்டும்' என்று.

ஏதோ நான் அந்த வலியிலிருந்தும் கஷ்டத்திலிருந்தும் வேறுபட்டவன் போலவும், நான் வேறு, அவை வேறு போலவும் எண்ணுகிறேன். உண்மையில், நீங்கள் அவற்றிலிருந்து வேறானவரா? அவற்றிலிருந்து வேறுபட்ட ஒன்று உங்களிடம் இருப்பதாக நீங்கள் நினைக்கலாம். அப்படி எண்ண வைப்பது, உங்கள் எண்ணமே தவிர, புனிதம் ஏதும் உங்களிடம் இல்லை.

காணும் பொருளிலிருந்து, காண்பவர் வித்தியாசமானவரா? 'நான் காணும் அந்த மரத்திலிருந்து, நான் வித்தியாசமானவனா?' என்று அபத்தமாகக் கேட்காதீர்கள். ஆனால், நீங்கள் கோபத்தோடு இருக்கும்போது, நீங்களே கோபம், இல்லையா? கோபம், பொறாமை, மிருகத்தனம், கொடூரத்தன்மை ஆகிய உணர்வுகளோடிருக்கும்போது, நீங்களே அவ்வாறிருக்கிறீர்கள். தியானிப்பவரே, தியானம். காண்பவரே, காட்சிப்பொருள். காண்பவரிலிருந்து, காட்சிப் பொருளைப் பிரிக்கும்போது, அங்கு முரண்பாடு தோன்றுகிறது.

முரண்பாட்டின் காரணமாக, நீங்கள், காணும் பொருளை கட்டுப்படுத்த முயற்சிக்கிறீர்கள், அதை

அடக்கவும், அதனை எதிர்க்கவும் முற்படுகிறீர்கள். ஆனால், உண்மையில், நீங்களே பயம், நீங்கள்தான் துயரம், நீங்களே களிப்பு, நீங்களே அவ்வுணர்வுகளின் ஒட்டுமொத்த கலவை. இவ்வுண்மையைப் புரிந்து கொள்வதே, வாழ்வின் அளப்பரிய மெய்ம்மை நிலை. அந்நிலையில் காண்பவருக்கும், காட்சிப் பொருளுக்கு மிடையே பாகுபாடு இல்லாதிருப்பதால், அங்கு முரண்பாடு இல்லை. காண்பவரே, காட்சிப்பொருளான நிலையில், முற்றிலும் வேறுபட்டதோர் ரசவாதம் நடந்தேறுகிறது.

உங்கள் பண்புகளிலிருந்து நீங்கள் வித்தியாச மானவரில்லை என்ற உண்மையை உணர்ந்து கொள்ளாமல், அதை அறிவுபூர்வமாக, கோட்பாடாகப் பார்ப்பது ஒரு சாதனையாகாது. உங்கள் கோபம், பொறாமை, வெறுப்பு ஆகிய உணர்வுகளிலிருந்து நீங்கள் வேறுபட்டவரல்ல; நீங்களே அவை. வார்த்தையளவில் மட்டும் நின்றுவிடாமல், உள்முகத்திலும் அந்த உண்மையை நீங்கள் புரிந்துகொள்ளும்போது, என்ன நிகழ்கிறது என்பதைக் கண்டுபிடியுங்கள்.

பதிலை நான் சொல்வேன் என்று காத்திருக்காதீர்கள். நான் சொல்லப்போவதில்லை. உங்கள் மனம் எப்படி வேலை செய்கிறது பார்த்தீர்களா? நீங்களாகவே பதிலைக் கண்டுபிடிக்காமல், நான் சொல்வேன் என்று காத்திருக்கிறீர்கள். நான் சொல்வதை, 'ஆமாம்' என்று சொல்லி ஏற்றுக்கொண்டோ அல்லது 'இல்லை' என்று சொல்லி மறுத்துவிட்டு, மறுபடியும் உங்கள் போக்கில் போவீர்கள். 'காண்பவரே காட்சிப்பொருள்', 'பார்ப்பவரே, பார்க்கப்படுவதும்' என்ற நிஜத்தை சுயமாகக் கண்டுபிடியுங்கள். பனி மூட்டத்தைக்

கிழித்துக்கொண்டு வெளிவரும் பௌர்ணமி நிலவைப் பார்க்கிறீர்கள். பார்க்கப்படும் அந்த நிலவு நீங்கள் அல்ல - உங்கள் மனம் பேதலித்துப் போயிருந்தால்தான் அவ்வாறு நினைப்பீர்கள். உங்கள் பிரக்ஞையின் முழு தொகுதி நீங்கள். உங்கள் பிரக்ஞையின் உட்பொதி வாகவே நீங்கள் இருக்கிறீர்கள். பிரக்ஞையின் உட்பொதிவு, எண்ணத்தால் சேகரிக்கப்பட்டு வடிவமைக்கப்பட்டது.

எண்ணத்தை எவ்வாறு முடிவிற்குக் கொண்டுவருவது என்பதல்ல பிரச்சினை. பிரக்ஞையின் உட்பொதிவை எவ்வாறு நோக்குவது என்பதைத்தான் கண்டுபிடிக்க வேண்டும். பாகுபாடு இல்லாமல் நோக்கும்போது, முற்றிலும் வித்தியாசமான செயல் அங்கே நிகழ்கிறது. அன்பு இருக்குமிடத்தில், 'காண்பவர்' என்று யாருமில்லை. நீங்கள் மற்றும் உங்களால் நேசிக்கப்படுபவர் என்று இல்லை; அன்பின் தன்மை மட்டுமே அங்கு உள்ளது.

*பம்பாய், 29.01.1983*

■■

# 16

## எது சமய உணர்வுள்ள மனம்?

அன்றாட வாழ்க்கையுடன் தொடர்புடைய பல்வேறு முக்கியமான விஷயங்களைப் பற்றி நாம் கலந்துரையாடி வருகிறோம். இப்போது நாம் மரணத்தின் தாத்பரியத்தைப் பற்றி கலந்துரையாடலாம். மரணத்தைப் பற்றி சிந்திப்பது என்பது விரும்பத்தகாதவைகளைச் சிந்திக்கும், ஆரோக்கியமற்ற சிந்தனை அல்ல. சமயம் என்றால் என்ன, தியானம் என்றால் என்ன என்பவைகளைப் பற்றியும் நாம் ஆராய வேண்டும். இவற்றிற்கெல்லாம் முன்பாக, நம் மனமும் மூளையும், எவ்விதத் தாக்கங்களுக்கெல்லாம் உள்ளாகின்றன என்பதைப் பற்றியும் நாம் சிந்திக்க வேண்டும்.

சிந்தனைகளின் சிம்மாசனமாக இருக்கும் மூளையின் அசாதாரண ஆற்றலால் விளைந்த பிரமிப்பூட்டும் தொழில்நுட்ப சாதனைகளைப் பற்றிய விழிப்புணர்வுடன் நாம் அதைப்பற்றி ஆராய வேண்டும். நம்மில் பெரும்பாலோர் அறிந்திராத அசுர சாதனைகள், தொழில்நுட்ப உலகில் நிகழ்ந்தவாறு உள்ளன. அதிவேகமாக, தொழில்நுட்ப உலகில் நாம் முன்னேறி வருகிறோம். ஆனால், மனோரீதியில் நாம் பரிணாம வளர்ச்சி அடையாத நிலையில்தான் இருக்கிறோம். நம்

மனோபாவத்தில், நம் செயல்களில், நம் நடத்தையில் நாம் மாறவே இல்லை. ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தது போலவே, மனிதகுலம் இன்றும் மிருகத்தனத்துடனும், குரூரமாக, ஈவிரக்கம் இன்றியும் நடந்துகொள்கிறது. அடுத்தவரின் கஷ்டத்தைப் பற்றி சிறிதும் எண்ணிப் பார்க்காமல் மூர்க்கத்தனத்துடன் நடந்துகொள்கிறோம். ஆக, தொழில்நுட்பத்தில் மிகவும் முன்னேறிவிட்ட நாம், உளரீதியில் நாற்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்ததைப் போலவே ஏறக்குறைய இன்றும் இருக்கிறோம்.

தொழில்நுட்பத் துறையில் நாம் பயன்படுத்திய அதே அளவு வீரியத்தையும், துடிப்பையும், நம் உள்முகப் பயணத்திலும் கொண்டிருந்தோமென்றால், மிகமிக ஆழமாக நம்மைப் பற்றி அறிந்துகொள்வதோடு நின்றுவிடாமல், அதற்கு அப்பாலும் செல்ல முடியும் - நம் மூளைக்கு அத்தகைய ஆற்றல் உள்ளது. ஆனால், மிகச் சிலரே உள்முகப் பயணத்தை மேற்கொள்கின்றனர். முற்றிலுமாக விடுதலை பெற்ற, சுதந்திரமான மனதை / மூளையை கொண்டிருப்பது சாத்தியமாகுமா என்ற கேள்வியை மிகச் சிலரே வினவுகின்றனர். எண்ணத்தைத் தாண்டி, அதற்கப்பால் ஏதாவது உள்ளதா என்பது பற்றியும், அவ்வாறிருப்பின் அது என்ன என்பது பற்றியும் நாம் மிகுந்த தீவிரத்துடன் ஆழமாக சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

மனிதன், விலங்கு அல்லது தாவரத்தினுடைய மரபணுக்களிலுள்ள மெய்ம்மைக் கூறுகளை இரசாயன முறையில் மாற்றம் செய்வதின் மூலம் அவற்றின் வளர்ச்சியில் மாற்றம் விளைவித்தல் குறித்த மரபியல் மாற்றப் பொறியியல் (Genetic Engineering) பற்றி

கேள்விப்பட்டிருப்பீர்கள். தந்தையிடமிருந்து, அவருடைய ஒரு சில பண்புகள், குணாதிசயங்கள், படைப்பாற்றல் கூறுகள், ஒருசில மனோபாவங்கள், அவருடைய சந்ததியினருக்கு மரபு வழியில் வந்தடைகிறது என்ற கருத்து உண்மையென ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, மாற்றம் ஏதுமின்றி இம்முறை தொடர்வதால், மரபணுவின் மெய்ம்மைக் கூறுகளுக்குள் உட்புகுந்து மாற்றம் செய்வதன் மூலம், மனிதனுக்குள் மாற்றம் கொண்டுவர முடியும் என்று மரபணு நிபுணர்கள் கூறுகிறார்கள். இந்த விஷயம் மிகவும் சிக்கலான விஷயம் - இதைப்பற்றி நாம் விரிவாகப் பேசப்போவதில்லை. ஆனால், அறிவியல் உலகில் என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதைப் பற்றிய புரிதல் வேண்டும் என்பதாலேயே மரபணு பற்றிய விஷயத்தை சுருக்கமாகக் கூறினோம். பல்லாயிரம் ஆண்டுகளாக மனிதனின் குணாதிசயத்திலும், அவன் வாழ்வுமுறையிலும் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏதும் நிகழாததால், இரசாயனப் பொருட்களின் உதவியுடன் மரபணுக்களில் மாற்றம் ஏற்படுத்தி, மனிதனை மாற்றிவிடலாமென்று நிபுணர்கள் நம்புகிறார்கள்.

மரபியல் மாற்றப் பொறியியல் மற்றும் கணினி பொறியியல் ஆகியவற்றின் வளர்ச்சி தரும் தாக்கத்தை நாம் கண்டுகொள்ளாமல் உதாசீனப்படுத்த முடியாது. இயந்திர மூளையை கணினியின் மூலமாக உருவாக்க முயற்சிகள் நடந்துகொண்டிருக்கின்றன. மனிதனைவிட வேகமாகவும், துல்லியமாகவும் சிந்தித்து, வழிமுறைகள் வகுத்து, அதன்படி, இயந்திர மனிதனுக்கு ஆணைகள் பிறப்பித்து, அதனை இயக்கவல்ல திறமை பெற்றதாக, அச்செயற்கை மூளை இருக்குமாம். அறிதிறனின் உச்சமாக

இருக்கும் செயற்கை மூளையைக் கொண்ட கணினியை உருவாக்க பெரும் முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகின்றன. ஆக, ஒரு புறத்தில், மரபணுக்களை மாற்றம் செய்ய முயற்சிகள் நடக்கின்றது, இன்னொருபுறத்தில், அடுத்த தலைமுறை கணினிகளை மேலும் திறனுடையதாக்க முயற்சிகள் செய்யப்படுகிறது.

இவ்வாறிருக்கும் நிலைமையில், மனித மனதின் கதி என்னவாயிருக்கும்? எவ்விதத் தாக்கத்திற்கு அது ஆளாகும்? நாம் செய்யும் பணிகளில், ஏறக்குறைய எல்லாவற்றையுமே, கணினி செய்துவிடும்போது, நம் பாடு என்னவாகும்? செயற்கை மூளை கொண்ட கணினியால் தியானம் செய்ய முடியும், நீங்கள் கண்டுபிடிப்பதைவிட மேலான கடவுள்களைக் கண்டுபிடிக்க முடியும், இப்போது பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்களை விட, பன்மடங்கு நன்றாக, உங்கள் பிள்ளைகளுக்கு அது பாடம் சொல்லிக் கொடுக்கும் - இப்படி எத்தனை எத்தனையோ! தானே அனைத்து வேலைகளையும் செய்துவிட்டு, மனிதனுக்கு மிகப் பெரிய அளவில் ஓய்வை கணினி பெற்றுத்தரும். ஆக, மரபணு மாற்றப் பொறியியலும், கணினியியலும் அதிவேகமாக முன்னேறும்போது, நமக்கு என்ன நேரிடும்? நம் மனம் எப்படிச் செயலாற்றும்?

தொழிற்சாலைகள், அலுவலகங்கள் மற்றும் பிற பணியிடங்களில், கணினி மற்றும் இயந்திர மனிதன் நமது பணிகள் அனைத்தையும் செய்துவிட்டால், நமக்கு ஓய்வுநேரம் மிகுதியாகக் கிடைக்கும். ஓய்வு நேரத்தை எப்படி உபயோகிக்கப் போகிறோம்? கணினியானது, சிந்தனையில் உங்களை மிஞ்சிப் போகும், உங்களைவிட அதிக அளவில் தகவல்களை நினைவில் நிறுத்திக்

கொள்ளும், வெகுவிரைவாகக் கணக்குப் போடும் - ஆக, உங்களுக்கு ஓய்வுநேரம் அதிகம் கிடைக்கும். ஓய்வு நேரத்தைச் செலவழிக்க நமக்கிருப்பது இரண்டு வழிகள்தாம் - ஒன்று, கேளிக்கைகளில் ஈடுபட்டு சுகபோகத்தை நாடும் வழி. இதில், திரைப்படத்துறை அளிக்கும் திரைப்படங்கள், மதச்சார்பான கேளிக்கைகள், மற்றும் வேறு பல கேளிக்கைகள் - அதில் குருமார்களும் அடங்குவர் - ஆகிய கேளிக்கைகளில் நீங்கள் நேரத்தைச் செலவிடலாம். அல்லது, நீங்கள் உள்முகத் தேடலில் ஈடுபடலாம்.

எண்ணங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டிருக்கும் மிக உன்னதமான வெளியை நீங்களே கண்டுணர்வதற்கான தேடலாய் உள்முகத் தேடல் அமையும். நம் ஓய்வு நேரத்தைச் செலவிடுவதற்கான வழிகளாக கேளிக்கைகள், அல்லது, உளப்பாங்கினைப் புரிந்துகொள்வதற்கான தேடல் என்பதான இரண்டு சாத்தியக் கூறுகளே உள்ளன.

முதற்கண், மரணத்தின் தாத்பரியம் என்ன என்ற கேள்வியோடு தொடங்கலாம். இந்தக் கேள்வி, முதியோர்கள் கேட்கும் கேள்வியாக மட்டும் இல்லை. மனிதகுலத்தின் கேள்வியாக, வயது வித்தியாசம் இல்லாமல் அனைவரும் கேட்கும் கேள்வியாக உள்ளது. மரணம் என்றழைக்கப்படும் அந்த அசாதாரண விஷயத்தின் பொருள் என்ன, அதன் முக்கியத்துவம் என்ன? நேற்று, நாம், அன்பு மற்றும் கருணை உள்ளிட்ட பல்வேறு விஷயங்களைப் பற்றிப் பேசினோம். அன்பு மற்றும் மரணத்துடன் எத்தகைய தொடர்பினை, வாழ்க்கை கொண்டிருக்கிறது?

ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, சிந்தனையைத் தாண்டி ஏதாவது உள்ளதா என்ற மனிதனின் தேடலுடன்,

வாழ்க்கை எவ்வாறு சம்பந்தப்பட்டுள்ளது? கட்டாயம் என்றோ ஒரு நாள், இன்று இல்லாவிட்டால் நாளை, பூமியில் பிறந்தவர்கள் அனைவரும் இறப்பார்கள் என்றிருப்பதால், மரணத்தின் அர்த்தத்தை நாம் புரிந்துகொள்வது அவசியம். நாம் இறக்கப்போவது, நிச்சயம். அதைப்பற்றி, ஒன்று, நாம் பயப்படுகிறோம் அல்லது 'பகுத்தறிவோடு அதை நியாயப்படுத்துகிறோம். 'மரணத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன். நான் அனுபவிக்கும் வலியையும், துக்கத்தையும், தனிமையையும் ஏற்றுக்கொள்வதுபோல், மரணத்தையும் ஏற்றுக் கொள்கிறேன்' என்று நீங்கள் சொல்லலாம். வியாதிகளாலோ, வயோதிகத்தாலோ அல்லது பிற காரணங்களாலோ, மனித வாழ்க்கை முடிவிற்கு வரும், மரணம் வந்தே தீரும் என்ற கருத்திற்குக் கீழ்ப்படிகிறீர்கள்.

வாழ்ந்து கொண்டிருக்கும்போது இறத்தல் என்றால் என்ன என்பதை நீங்கள் உணர்ந்துகொள்ளவே இல்லை. வாழ்ந்து கொண்டிருக்கும்போது இறத்தல் என்றால் தற்கொலை செய்துகொள்வதில்லை. மாறாக, இறத்தலின் ஆழத்தைப் புரிந்துகொள்வதாகும். வன்முறையும் வெறுப்பும் எப்படி வாழ்க்கையின் ஒரு கசப்பான உண்மையாக இருக்கிறதோ, அவ்வாறானது தான் மரணமும். நீங்கள் மரணத்தை வாழ்வின் ஒரு நிகழ்ச்சியாக பார்க்க வேண்டும். நீங்கள் நல்லறிவும், விவேகமும் கொண்டவராய் இருப்பின், வன்முறையையும் வெறுப்பையும் கருதுவதுபோலவே, மரணத்தையும் 'வாழ்க்கையின் உண்மை' என்ற முறையில் பார்க்கவேண்டும். மரணத்தை ஏற்றுக்கொள்வதோ, அல்லது, அது தவிர்க்க முடியாத ஒன்று என்று சொல்வதோ, மரணத்தைத் தாண்டி என்ன இருக்கிறது

என்ற ஆராய்ச்சியோ செய்யாமல், இறத்தலின் இயல்பை கண்டுணர்தல் வேண்டும்.

மரணம் என்பதை நாம் எந்த அர்த்தத்தில் புரிந்துகொள்கிறோம்? ஏதோ வார்த்தைஜாலமாக இக்கேள்வியை கேட்கவில்லை - உண்மையை கண்டுபிடிப்பதற்காகவே கேட்கிறோம். மரணம் என்பது உடல்ரீதியில் உயிர்ப்பொருட்களின் முடிவு என்பது தெளிவாகத் தெரிகிறது. நாம் மிகவும் நேசித்தவை, நம் மனக்காயங்கள், வலிகள், தியாகங்கள், தனிமை, எதிர்ப்பு, கலக்கம் ஆகியவற்றின் முடிவாகவும் அது இருக்கிறது. 'தான்' என்பதின் உட்பொதிவாக இருக்கும் அவை, 'தான்' என்பதுடன் தொடரக்கூடும், அல்லது, 'தான்' என்ற எண்ணம் இறந்து முடிவுறலாம். மரணம் என்பது முடிவுறுதல். உங்களில் பலர், மறுபிறவி என்ற கோட்பாட்டில் நம்பிக்கை உடையவர்கள். அத்தகைய நம்பிக்கையுடையவர் நீங்கள் என்றால், இந்தக் கேள்விகளை உங்களையே கேளுங்கள்: எது மறுவிறவியில் தொடருகிறது? தொடர்ச்சி இருக்கிறதா? அல்லது, 'பிளவுபடுதல் - முடிவுறுதல் - மீண்டும் துவக்கம்' என்பதாக, மாற்றம் நிரந்தரமாக நடைபெறுகிறதா?

இந்தியாவில் பெரும்பான்மையோர் மறுபிறவியில் நம்பிக்கை உடையவர்கள். நீங்கள் மறுபிறவி எடுத்தால், உங்கள் சரீரம் திரும்பப் பிறப்பதில்லை என்பது உறுதியாகத் தெரிகிறது. பிறகு, எது திரும்பப் பிறக்கிறது? உங்கள் நம்பிக்கையின்படி, நீங்கள் இப்போது இருப்பதுபோலவே, உங்கள் நம்பிக்கைகள், உங்கள் செயல்கள், உங்கள் பேராசை, கோபம் ஆகியவை மறுபிறவியிலும் தொடரும், அல்லவா?

உங்கள் குணங்களின் தொகுதியானது, 'தான்' என்பதாகவும் பிரக்ஞை என்பதாகவும் இருக்கிறது. அடிப்படையில் பிரக்ஞையாக இருக்கும் 'தான்' என்ற உணர்வு, எண்ணத்தால் உருவேற்றப்பட்டது. பிரக்ஞை யின் உட்பொதிவாக இருக்கும் உங்கள் பேராசை, உங்கள் பொறாமை, உங்கள் மத நம்பிக்கைகள், உங்கள் மூட நம்பிக்கைகள், உங்கள் கோபம் போன்ற அனைத்தும் எண்ணத்தின் செயல்பாட்டால் விளைந்தவை. எண்ணத்தின் இடைவிடா இயக்கத்தின் பலனாக நீங்கள் இருக்கிறீர்கள். எனவே, 'தான்' என்ற உணர்வு, எண்ணம் தோற்றுவித்த ஒரு பொய்த் தோற்றமா அல்லது அது ஒரு மெய்ம்மையா என்பதை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும். நீங்கள், உங்கள் பெயராகவும், உங்கள் தோற்றமாகவும், உங்கள் அனுபவங்களாகவும் இருக்கும்பட்சத்தில், உங்கள் அடுத்த பிறவியில் 'தான்' என்ற உங்கள் எண்ணத்தில் தொடரப்போவது மேற்கூறப்பட்ட அவைகளா? 'தான்' என்பது எது?

நாம் ஒவ்வொருவரும் தனித்தனி நபர்கள், மற்றவர்களிலிருந்து வேறுபட்ட தனி மனிதர்கள் என்று நாம் எண்ணிக்கொள்கிறோம். தனிநபர் என்று கூறுவதற்கான அந்தத் தனித்தன்மை எது? உங்களின் பெயர், தோற்றம், மனப்பதிவுகள், உங்களின் மனோபாவம், தனிமை, வலி, கலக்கம், பதற்றம், துக்கம், நிச்சயமற்றத்தன்மை போன்றவையா உங்களின் தனித்தன்மை?

உங்களுக்கு வங்கியில் சேமிப்புக்கணக்கு இருக்கலாம், இல்லாமலிருக்கலாம் - நீங்கள் பெரிய மாளிகையில் வாழலாம், அல்லது, சிறிய வீட்டில் வசிக்கலாம் - எதுவாயினும், நீங்கள் அதுவாக இருக்கிறீர்கள். உங்கள்

வங்கிக் கணக்கின் மீது நீங்கள் பற்றுதல் வைக்கும்போது, நீங்களே அந்த வங்கிக் கணக்கு. உங்கள் வீட்டின் மீது பற்றுதல் வைக்கும்போது, நீங்களே அந்த வீடு. உங்கள் மேசை, நாற்காலி மீது பற்றுதல் கொள்ளும்போது, நீங்களே அந்த மேசை, நாற்காலி. உங்கள் தேகத்தின் மீது பற்றுதல் கொள்ளும்போது, நீங்களே தேகம். ஆக, நீங்களே அவையனைத்தும் என்பதின் பொருள் என்ன?

நீங்கள், ஒரு நாற்காலியுடன், ஒரு நபருடன், ஒரு கோட்பாட்டுடன், ஒரு இலட்சியத்துடன், ஒரு சுய அனுபவத்துடன் பற்றுதல் கொண்டிருக்கும்போது, அப்பற்றுதலால் விளையக்கூடிய தாக்கங்கள் என்னென்ன? 'இனி நீங்கள் பற்றுதல் கொண்டிருக்க முடியாது. இதுதான் முடிவு' என்று மரணம் சொல்கிறது. இருப்பினும், பற்றுகொள்கிறீர்களே, ஏன்? நீங்கள் எதிர்காலத்தின் மீது நம்பிக்கை வைக்கலாம். ஆனாலும், 'உங்கள் முடிவு வந்துவிட்டது, உங்கள் பற்றுதல்கள் ஓய்ந்தன, உங்கள் வங்கிக் கணக்கு தீர்ந்தது, உங்கள் குருமார்கள் மற்றும் உங்கள் சிஷ்யர்களின் தொடர்பு முடிந்தது' என்று மரணம் சொல்கிறது.

அடுத்த பிறவியில், எது தொடர்கிறது? எது மறுபடியும் பிறக்கிறது? ஞாபகங்களா மறுபிறவி எடுக்கிறது? கருத்துகளா தொடர்கிறது? ஏற்கனவே உயிர்ப்பு இல்லாத, இறந்துபட்ட அவையா மறுபடியும் பிறக்கிறது? இல்லை, மறுபிறவி என்ற தொடர்ச்சியே இல்லையா? தொடர்ச்சி என்றால், ஒன்று, தன்னை ஓயாமல் மாற்றம் செய்துகொண்டு தொடர்ந்து கொண்டிருப்பது என்று பொருள்.

நீங்கள் பெரிய வெற்றியை அடைந்து, சாதித்து இன்றைய நிலையிலிருந்து முன்னேறுகிறீர்கள், மேலும்

முன்னேற விரும்புகிறீர்கள். தொடர்ச்சி என்பதில், பாதுகாப்பு மற்றும் நிச்சயத்தன்மை குறிப்பாக வலியுறுத்தப்படுகிறது. எதைப்பற்றியாவது பரிபூரண உறுதிப்பாடு கொண்டிருக்கிறீர்களா? உங்கள் கோட்பாடுகள், பாதுகாப்பு அளிக்கவல்லவையா?

தொடர்ச்சியில் பாதுகாப்பு கிடைக்கும் என்று நாம் எண்ணுவதால், நாம் தொடர்ச்சியை வேண்டுகிறோம். ஒருவர் திருமண வாழ்க்கையை ஏற்றுக்கொள்கிறார். மணவாழ்க்கையில் தொடர்ச்சியாக பத்து ஆண்டுகளோ, ஐம்பது ஆண்டுகளோ வாழ்கிறார். சட்டரீதியான பொறுப்புடன் மணவாழ்க்கை தொடருகிறது. ஆனால், அந்தத் தொடர்ச்சியில், முரண்பாடுகளும், துக்கங்களும், மகிழ்ச்சியின்மையும் இருக்கிறது. விழிப்புடன் நோக்கினால், இவ்வகையான வாழ்க்கையில், அடிக்கடி மாற்றங்கள் ஏற்படுகிறதேயன்றி, எதுவும் தொடரவில்லை என்பது புலப்படும். ஏற்படும் மாற்றங்கள், மேலோட்டமானவைகளாக இருக்கலாம். அல்லது பரிபூரண அடிப்படை மாற்றமாக (mutation) இருக்கலாம். அடிப்படை மாற்றம் என்பது தன்மை மாறுதலிலிருந்து (transformation) மாறுபட்டது.

ஒவ்வொருவரும் தனிப்பட்ட தனிநபர் என்ற கூற்றின் நம்பகத்தன்மையைப் பற்றி சிந்திக்கவேண்டும். வாக்குவாதங்கள் மற்றும் சாட்சிகள் என அழைக்கப்படுபவைகள், அக்கூற்றினை நாம் ஏற்குமாறு தூண்டிவிட முடியாது. ஒருவரை எதைப்பற்றியும் நம்பவைக்க முடியாது. எது நிஜம், எது மாயை என்பதை ஒருவர் தீர விசாரித்து, தேடுதல் செய்து கண்டுபிடிக்க வேண்டும். நாம் தனிநபர்கள் என்ற மாயையோடு வாழ்ந்து கொண்டிருக்கிறோம். ஆனால், கூர்ந்து

கவனித்தால், நீங்களாகவே இருக்கும் பிரக்ஞையானது, உலகமாந்தர் அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்படுகிறது என்பது தெரியவரும்.

நீங்கள் துன்பப்படுவது போன்றே, அடுத்தவரும் துன்பப்படுகிறார். நீங்கள் நம்பிக்கையிழந்து கலக்கமுற்றிருப்பது போலவே, அவரும் இருக்கிறார். உங்களைப் போன்றே ஏனையோரும் தனிமை, துயரநிலை, குழப்பம், பதற்றம் ஆகியவற்றை அனுபவிக்கின்றனர். எனவே, உங்கள் பிரக்ஞை, தனிப்பட்டதல்ல. அது, மானுடத்தின் பிரக்ஞை. ஆக, நீங்கள், மனிதகுலம் என்றாகிறது. இவ்வாறு சொல்வது, தர்க்கரீதியான முடிவோ அல்லது ஒரு அபிப்பிராயமோ அல்ல; அது ஒரு உண்மை. சமயம் மற்றும் கல்வி ஆகிய இரண்டினாலும், நாம் ஒவ்வொருவரும் தனிப்பட்ட நபர்கள் என்று எண்ணும் வகையில், பயிற்றுவிக்கப்பட்டுள்ளோம். அதனால் நம் தனிப்பட்ட தரம் முடிவடைந்து போகுமோ என்று அஞ்சுகிறோம். ஆனால், நீங்கள், உலகின் ஏனையோர், நீங்களே உலகம் என்ற சத்தியத்தை உணர்ந்து கொண்டபின், மரணத்தின் அர்த்தம் என்ன?

நான் இறந்துவிடுவேன் என்று பயப்படுகிறேன். மீண்டும் பிறந்து வாழ்வேன் என்று நம்புகிறேன். என் பிறப்பு தொடர வேண்டும், அடுத்த பிறவிகளில் படிப்படியாக மாற்றங்கள் ஏற்பட்டு, நான் மேன்மையான நிலையை - அது என்ன நிலை? கடவுளுக்கே வெளிச்சம்! - அடைந்துவிட வேண்டும் என்று விரும்புகிறேன். இத்தகைய எண்ணத்தோடு, தான் தனிநபர் என்ற கோட்பாட்டுடன், ஒருவர் மரணத்தை எதிர்கொள்ளும் போது, அங்கு முடிவுறுதல் என்ற பயங்கர பயம் அவரைக் கவ்விக் கொள்கிறது.

முடிவுறுதல் / இறுதி என்பதின் இயல்பைப் பற்றி எப்போதாவது விசாரணை செய்திருக்கிறீர்களா? வேறொன்றை துவங்க ஒன்றை முடிவிற்குக் கொண்டுவருவது என்றில்லாமல், ஒரேயடியாக அதை முடித்துவிடுதல் என்ற கோணத்தில் இறுதியின் இயல்பை எண்ணிப்பாருங்கள். நீங்கள் உங்கள் குழந்தைகள் மீது, வாழ்க்கைத்துணை மீது, மற்றும் பலவற்றின் மீது பற்றுதல் கொண்டிருக்கிறீர்கள். மரணம் நேரிடுகிறது - பற்றுதல்கள் அனைத்தும் அழிக்கப்பட்டன. உங்கள் பணமூட்டையை நீங்கள் சொர்க்கத்திற்கு எடுத்துச்செல்ல முடியாது. வேண்டுமானால், கடைசி மூச்சுவரை அதைப் பக்கத்தில் வைத்துக்கொள்ளலாம். ஆனால், அதை உங்களுடன் எடுத்துச்செல்ல முடியாது - 'எடுத்து வரக்கூடாது' என்று மரணம் சொல்கிறது. எனவே, பயம், பொறாமை, பதற்றம், உரிமை கொண்டாடுதல் போன்ற உணர்வு களுடன் கூடிய பற்றுதலின் இயல்பைப் புரிந்துகொள்ள உங்களால் முடியுமா? பற்றுதலிலிருந்து விடுபட்டு வாழ உங்களால் முடியுமா?

மரணம் சம்பவித்து பற்றுதல்கள் அழிக்கப்படுவதாக இல்லாமல், வாழ்ந்து கொண்டிருக்கும்போதே, தன்னிச்சையாக, எளிதாக, பரிசுக்காகவோ அல்லது தண்டனைக்குப் பயந்தோ செய்யாமல், நிர்ப்பந்தத்தால் செய்யாமல், பற்றுதல்களை விட்டு வாழ்வதில் அளப்பரிய அழகு இருக்கிறது. அந்நிலையில், விடுதலையின் இயல்பை நீங்கள் புரிந்துகொள்ள முடியும். பற்றுதல்கள் முடிவுறும்போது, அங்கு புதியதோர் துவக்கம் மலர்கிறது. பன்னெடுங்காலமாக மனிதகுலம் சுமந்துவந்த அனைத்து பாரங்களையும் இறக்கி வைத்துவிட்ட உணர்வை, முழுமையான விடுதலை பெற்ற உணர்வை, பற்றுதல்களின் முடிவு பெற்றுத் தருகிறது.

இவ்வுரையைக் கேட்ட நீங்கள், தலையை அசைத்து அக்கருத்தை ஆமோதிக்கிறீர்கள், ஏற்றுக்கொள்ளும் அடையாளமாக புன்னகைப் புரிகிறீர்கள். ஆனாலும், நீங்கள் பற்றுதலுடன்தான் தொடர்ந்து வாழ்வீர்கள். ஏனெனில், அது சுலபமான வழியாகவும், சுகமளிப்பதாக வும் இருப்பதால், பற்றுதல்கள் வேதனையை தந்தாலும், நீங்கள் அதைத் தொடர்ந்து கொண்டிருப்பீர்கள். பற்றுதலுடன் இருப்பதுதான் நடைமுறைக்கு ஏற்றது என்றும் கூறுவீர்கள். போட்டா போட்டி மிக அதிக அளவிலிருக்கும் இவ்வுலகில், உங்கள் பேரவாவினை முடிவிற்குக் கொண்டுவருதல், உங்கள் கர்வம், திமிர், அந்தஸ்து ஆகியவற்றை முடிவிற்குக் கொண்டுவருதல் போன்றவற்றை பற்றிய புரிதல் உங்களுக்கு இருத்தல் வேண்டும்.

உயிர்ப்பொருள் முடிவிற்கு வந்தபின்னரும், மனிதப் பிரக்ஞையின் உட்பொதிவு தொடர்ந்து செல்கிறது. அப்பிரக்ஞையில் புரட்சிகரமான அடிப்படை மாற்றத்தை நீங்கள் கொண்டுவந்தீர்களென்றால், தொடர் இயக்கமாக இருக்கும் தன்னலம் என்ற நினைவுச் சிறுநதியில் நீங்கள் அடித்துச் செல்லப்படுவதில்லை. அடிப்படை மாற்றத்தின் பிறகு, நீங்கள் சிறைபிடிக்கப்பட்டு, பற்றுதல் மற்றும் நிச்சயமற்றத் தன்மை எனும் சிறைக்குள் அடைக்கப் படுவதில்லை. முற்றிலும் மாறுபட்ட வாழ்க்கைமுறை அங்கு பரிணமிக்கிறது.

சமயம் என்பது பற்றியும் நாம் கலந்துரையாட வேண்டும். சமயம் என்பது மிகச் சிக்கலான விஷயமாக இருக்கிறது. சமய உணர்வுள்ள மனம் என்றால் என்ன என்பதை நாம் காணவேண்டும். பூஜை, புனஸ்காரங்கள் மற்றும் சடங்குகள் பலவற்றை செய்வதாலோ,

நம்பிக்கைகள் கொண்டிருப்பதாலோ, ஒரு மனம் சமயவுணர்வுள்ள மனமாகிவிடாது. பூஜைகள் மற்றும் சடங்குகள் யாவும் எண்ணத்தின் கண்டுபிடிப்புகளே. கடவுள்கூட எண்ணத்தின் கண்டுபிடிப்புதான்.

உங்கள் வாழ்க்கை, சலிப்பூட்டுவதாகவும், வேதனை தருவதாகவும் இருப்பதால், அதற்கு மாற்றாக, மிகவும் ஆதர்சமான, அன்பே வடிவான, அழகின் உருவமான ஒன்றை, கடவுளை, நீங்கள் கண்டுபிடிக்கிறீர்கள். உங்கள் எண்ணத்தால் நீங்கள் உருவாக்கிய கடவுளை, நீங்கள் வழிபடுகிறீர்கள். எண்ணங்கள் உங்களை ஏமாற்றுகின்றன. இருப்பினும், நீங்கள் மாயைகளில் வாழ விரும்புவதால், தொடர்ந்து எண்ணங்களால் ஏமாற்றப்படுகிறீர்கள். புதியதோர் உலகை, புதியதோர் நாகரீகத்தை, புதியதோர் பண்பாட்டினை, புதியதோர் சக்தியின் துள்ளலை கொண்டுவருவதாக இருக்கும் சமய உணர்வுள்ள மனதினைப் பற்றி நாம் அறிந்துகொள்ள முடியும். சமய உணர்வுள்ள மனம் பற்றி பிறர் சொல்லக் கேட்டோ, மற்றவரின் வழிகாட்டுதலின்படியோ பிறர் தரும் விளக்கத்தின்படியோ அறிந்துகொள்வதாக இல்லாமல் நீங்களே சுயமாக கண்டறிய வேண்டும்.

உலகிலுள்ள மதங்கள் அனைத்துமே, பணம், சொத்து, நிலபுலன் போன்ற உடைமைகளின் அடிப்படையிலும், அவற்றின் தொடர்பான பல்வேறு சதித்திட்டங்களாலும், எண்ணங்களாலும், கோட்பாடு களாலும் தோன்றியவை, அவைகளின் பலனாக விளைந்தவை. இவ்வுண்மையை மறுப்பதற்கில்லை. நீங்கள் தேர்ந்த பண்டிதராய் இருக்கலாம், ஐயுறும் அறிவுஜீவியாய் இருக்கலாம், இல்லை, யதார்த்த வழக்கில் 'சமயவுணர்வுள்ளவர்' என்று அழைக்கப்படுபவராய்

இருக்கலாம். யாராக நீங்கள் இருந்தாலும், உங்களைச் சுற்றி உலகெங்கிலும் நிகழ்ந்து கொண்டிருக்கும் விஷயங்களைப் பற்றிய அக்கறை கொண்டவராக நீங்கள் இருந்தால், சமயம் என்றால் என்ன என்பதைப் பற்றி ஆராய்ந்து பாருங்கள்.

ஒரு கருத்தை ஏற்றுக்கொள்ளுதல், அதன் மீது நம்பிக்கை வைத்தல் மற்றும் அதை நம்புதல் போன்ற செயல்பாடுகள் அனைத்தும், ஒருவரின் விருப்பம், வசதி, எதிர்பார்ப்பு ஆகியவற்றுடன் தொடர்புடையதாகும். எனவே, அதன் மீது நம்பிக்கையோ, அதை ஏற்றுக்கொள்ளலோ இல்லாமல், சமயவுணர்வுள்ள மனம் என்றால் என்ன என்பதை ஆராய வேண்டும். சமயவுணர்வுள்ள மனதின் இயல்பை அறிந்துகொள்ள, உங்கள் மனம், சுதந்திரமாக இருக்கவேண்டும். சுதந்திரமான மனதைப்பெற, நீங்கள் தற்போதிருக்கும் சமயக் கட்டமைப்புகளை, சமய நம்பிக்கைகளை, சமயக் கோட்பாடுகளை முற்றிலுமாக மறுதலிக்க வேண்டும். அவற்றிலிருந்து விடுதலைப் பெற்ற மனமே, சுதந்திரமான மனமாகும்.

சுதந்திரமான நிலை மிகவும் அவசியம் என்று மிகத் தெளிவாக தெரிகிறது. 'அந்த ஒன்றிலிருந்து விடுதலை' என்பதாக இல்லை சுதந்திரம். கைதி ஒருவன், சிறையிலிருந்து விடுதலை கோருகிறான். அதாவது, முதலில் அவன் சிறை பிடிக்கப்பட்டான்; பிறகு, அச்சிறையிலிருந்து வெளியேற சுதந்திரம் வேண்டும் என்று விரும்புகிறான். அவ்விருப்பம், ஒரு எதிர்வினை, பிரதி உணர்ச்சி; அது சுதந்திரம் அல்ல. அனைத்துவித பொய்த்தோற்றங்களும், நம்பிக்கைகளும், சேகரிக்கப் பட்ட விருப்பங்களும், ஆசைகளும் முற்றிலுமாக

முடிவுறுதலையே, 'சுதந்திரம்' என்பது குறிப்பாக உணர்த்துகிறது. சுதந்திரமாக இருக்க ஆசைப் படுவதிலிருந்து, சுதந்திரம் முற்றிலும் வேறுபட்டது.

சமயவுணர்வுள்ள மனம், தெளிவானது, ஆரோக்கியமானது, மற்றும், கருத்துகளை விடுத்து, உண்மையை எதிர்கொள்ளும் தன்மையது. இந்தப் பேச்சாளரால் சமயவுணர்வுள்ள மனம் பற்றிய பல விளக்கங்களை அளிக்க முடியும். நீங்கள் அவற்றை ஏற்றுக்கொள்ளலாம், அல்லது, நிராகரிக்கலாம். அதைப்பற்றி விவாதிப்பதும், பகுத்தாய்வதும், வினா தொடுப்பதும், அத்தகைய மனதைப் புரிந்துகொள்வதற்கு ஓரளவிற்கு உதவலாமே தவிர, அவற்றின் மூலமாக, சமய உணர்வுள்ள மனதைப் பெற்றுவிட முடியாது.

ஒருவர் மிகுந்த அடக்கத்துடன், தனக்கு அதிகம் தெரியாது என்ற மனப்பாங்குடன் இருப்பது, சமய உணர்வுடனிருப்பதற்கு மிகவும் அவசியமாகிறது. ஆனால், நாமோ சாமர்த்தியமான அதிபுத்திசாலிகளாகி விட்டோம். மேலும், சமயவுணர்வுள்ள மனம், காருண்யம் கொண்டிருப்பதால், அக்கருணையிலிருந்து அது செயல்படுகிறது. நுண்ணறிவு, காருண்யம், அன்பு ஆகியவை அனைத்தும் சேர்ந்து செயல்படும் மனமாக சமயவுணர்வுள்ள மனம் இருக்கிறது. அதன் செயல்கள், நுண்ணறிவிலிருந்து பிறந்தவையாக உள்ளது.

தியானம் என்றால் என்ன என்பது பற்றியும் நாம் கலந்துரையாட வேண்டும். இதைச் சொன்னவுடனே, நீங்கள் எல்லோரும் நிமிர்ந்து உட்காருகிறீர்கள் - இதற்கெல்லாம் அர்த்தம் ஏதுமில்லை. நீங்கள் பத்மாசனம் போட்டு அமர்ந்துகொண்டு, மூச்சை சரியான முறையில் அடக்கி மற்றும் சுவாசித்து, பல்வேறு யோகமுறைகளை

பயிற்சி செய்து, தியானம் செய்யலாம். ஆனால், அவையெல்லாம் தியானம் அல்ல. எது தியானம் என்பதை சுயமாகத் தேடி கண்டுபிடிக்கப் போகிறோம்.

சிறந்த அகராதியின்படி, 'Meditation' (தியானம்) என்ற ஆங்கிலச் சொல்லிற்கு, 'எண்ணிப்பார்ப்பது', 'கவனமாக சிந்திப்பது', 'நெருக்கமாக கவனிப்பது' ஆகிய அர்த்தங்கள் தரப்பட்டுள்ளன. இங்கு 'நெருக்கமாகக் கவனிப்பது' என்பதின் அர்த்தம் அன்றாட வாழ்க்கையை கவனிப்பதாகுமே தவிர மேன்மையானதாக கருதப்படும் எண்ணத்தின் கண்டுபிடிப்புகளை, நெருக்கமாக கவனிக்கச் சொல்லவில்லை.

மேலும் 'Meditation' என்ற வார்த்தைக்கு, 'அளவீடு செய்தல்' என்ற பொருளும் உள்ளது. நாம் ஏன் அளவிடுதல் செய்கிறோம்? 'அளவீடு' என்று எந்த அர்த்தத்தில் சொல்கிறோம்? நம் மனதிலும் இதயத்திலும் சதா அளவிடுதல் நடந்துகொண்டே இருக்கிறதே, ஏன்? அளவிடுதல் என்றால் ஒப்பீடு செய்வது - அழகாகவும், தெளிவும் உறுதியும் கொண்டவராகவும் உள்ள உங்களோடு, நான் என்னை ஒப்பிட்டுக் கொள்கிறேன். என்னிலிருந்து முற்றிலுமாக வேறுபட்டவராக இருக்கும் உங்களுடன் என்னை ஒப்பிட்டுக் கொள்கிறேன், உங்களைப் போல ஆக விரும்புகிறேன், உயர்ந்த உதாரணமாக இருக்கும் அவரைப்போல, குருவைப்போல, ஆகவேண்டும் என்று ஆசைப்படுகிறேன்.

நாம் ஏன் வாழ்க்கையில் ஒப்பீடு செய்கிறோம்? முன்னேற்றம் அடைய வேண்டி, ஒப்பீடு செய்கிறோம் என்று சொல்கிறோம். நாம் சதா சர்வகாலமும் ஒப்பீடு செய்துகொண்டே இருக்கிறோம்: 'நீங்கள் அழகாய் இருக்கிறீர்கள் - நான் அழகாய் இல்லை. உங்களைப்

போல நான் அழகாகவும், அதிகாரம் உடையவராகவும் இருக்க விரும்புகிறேன்', 'உங்களைப் போல ஞானத்தெளிவு பெற்றுவிட விரும்புகிறேன்' என்றெல்லாம் சொல்கிறோம். ஆக, நமக்கிடையே எப்பொழுதுமே இந்த ஒப்பீடு போட்டி நடந்துகொண்டே இருக்கிறது. இந்த இயக்கத்திலிருந்து நாம் விடுபடுவதே இல்லை. விடுபட்டு விட்டோமென்றால், நாம் எத்தகையவராய் இருப்போம்?

இரண்டு ரக துணிவகைகளை, இரண்டு மாடல் கார்களை, இரண்டு வகைப் பொருள்களை, நீங்கள் ஒப்பிடலாம். ஆனால், மனித உறவுமுறையில், நாம் ஏன் ஒப்பீடு செய்கிறோம்? ஒப்பிடுதலை முடிவிற்குக் கொண்டுவர முடியுமா? அப்படி முடிவிற்குக் கொண்டுவந்துவிட்டீர்களென்றால், நீங்கள், நீங்களாக, உண்மையாக இருக்கிறீர்கள் - பொய்ம்மையான 'ஒப்பிடுதல்' என்ற பெரிய சுமையை தூக்கி எறிந்து விடுகிறீர்கள். சதா ஒப்பிட்டுக்கொண்டு, மற்றவரைப் போல் ஆக முயற்சித்துக்கொண்டு நீங்கள் இருக்கும் போது, சோகம், கலக்கம், பயம் போன்ற எதிர்மறை உணர்வுகளில் மூழ்கிப் போகிறீர்கள்.

ஒப்பீடு செய்யாமலும், எவ்விதமான அளவைகளைக் கொண்டிருக்காமலும் வாழ உங்களுக்கு இயலுமா என்ற கேள்வியை தயவுசெய்து, உங்களையே கேட்டுக் கொள்ளுங்கள். அவ்வாறிருப்பது மிகவும் கடினமான விஷயம். ஏனென்றால், 'நீங்கள் 'இது'வாக இருக்கிறீர்கள்' - 'நீங்கள் 'அது'வாக ஆவீர்கள்' என்ற முறையில், நீங்கள் பயிற்றுவிக்கப்பட்டுள்ளீர்கள், போதிக்கப்பட்டுள்ளீர்கள், நம்பவைக்கப்பட்டுள்ளீர்கள். 'அது'வாக 'ஆதல்' என்பது ஒருவகை அளவீடு. அளவீட்டின் ஒரு சிறு இயக்கம்கூட இல்லாமல் வாழத் தொடங்குங்கள். அவ்வாறு வாழ்வது, தியானத்தின் ஒரு பகுதியாகும்.

தியானம் செய்பவர்கள் பலர், பல்வேறு விதமான செயல்முறைகளை பின்பற்றுபவர்களாக உள்ளனர். அவரவர்களின் குரு, குறிப்பிட்ட வழிமுறைகளை அவர்களுக்குச் சொல்லித் தருகிறார். அதன்படி, அவர்கள் பயிற்சி செய்கிறார்கள். குறிப்பிட்ட வார்த்தையை திரும்பத் திரும்பச் சொல்கிறீர்கள் - அதைத் தியானம் என்று அழைக்கிறீர்கள். திரும்பத் திரும்ப ஒன்றைச் சொல்லும்போது, உங்கள் மூளை எவ்விதத் தாக்கத்திற்கு ஆளாகிறது? நீங்கள் மேலும் மேலும் மந்தமாகிப் போகிறீர்கள், இயந்திரத்தனமாகிப் போகிறீர்கள் - இதை நீங்கள் தியானம் என்று எண்ணுகிறீர்கள். இந்தப் பேச்சாளரின் பேச்சைக் கேட்ட பின்னரும், நீங்கள் தொடர்ந்து அவ்வாறுதான் நடந்துகொள்வீர்கள்.

தியானம் என்றால் என்ன என்ற விசாரணையில், எந்தவொரு வழிமுறைக்கும் முயற்சிக்கும் இடமில்லை. முயற்சி என்பது போராட்டம். வழிமுறைகளும், பயிற்சிகளும் மூளையை மந்தமாக்கி விடுகின்றன என்ற உண்மையை புரிந்துகொண்டு, அவற்றிலிருந்து விடுதலையாகி வெளிவர உங்களுக்கு முடியுமா? வழிமுறைகளாலும், பயிற்சியாலும் மந்தமாகிப் போன நாடு, இந்த நாடு - இது ஒரு அவலநிலை. வழிமுறைகளிலிருந்து விலகிச் செல்ல உங்களால் முடியுமா? வழிமுறைகளையும், பயிற்சிகளையும் பின்பற்றுவதால் விளையும் தீமைகளை கண்டபின், அவற்றை கைவிடுவதுதான் நியாயமான, புத்திசாலித் தனமான, அறிவார்ந்த செயல்பாடாகும்.

நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு, திரும்பத் திரும்ப ஒன்றை பயிற்சி செய்யும்போது, நீங்கள், மெதுமெதுவே, ஊக்கமிழந்து, இயந்திரத்தனமாகிப் போய், மந்தபுத்திக்

காரனாகிப் போகிறீர்கள். குறிப்பிட்ட குழுக்களாகவோ, சிறுசிறு கூட்டமாகவோ இருந்துகொண்டு கடுமையான பயிற்சி செய்யும் நபர்களுடன் நீங்கள் அறிவார்ந்த முறையில் பேச முடியாது. அவர்கள் தாங்கள் கொண்டிருக்கும் நம்பிக்கையில் மூழ்கிப்போய், அதையே பயிற்சி செய்து, தங்களைத் தாங்களே அழித்துக் கொள்கிறார்கள்.

வித்தியாசமான உடை அணிந்துகொண்டு, தன்னை குரு என்று சொல்லிக்கொள்கிறார் என்பதால் மட்டுமே அவருடைய உபதேசங்களைப் பின்பற்றி, அவருடைய சீடனாகிப் போவதால் விளையும் விபரீதங்களை மனதினால், மூளையினால் உணர்ந்துகொள்ள முடியுமா? வழிமுறை, பயிற்சி மற்றும் பிறரைப் பின்பற்றுதல் ஆகியவை சமயவுணர்வின் அழகை அழித்துவிடுகிறது. சிரஸாசனத்தில் நின்றுகொண்டும் யோகப் பயிற்சிகளை செய்துகொண்டும் திரும்பத் திரும்ப ஒன்றை ஜபித்துக்கொண்டும் இருப்பது தியானம் அல்ல என்பது தெளிவாகவே தெரிகிறது.

தியானம் என்றால் என்ன? நாம் அனுபவங்களைப் பெற விரும்புகிறோம். ஆன்மிக அனுபவங்கள் என்று அழைக்கப்படும் வினோதமான அனுபவங்களைப் பெற்றுவிட வேண்டும் என்று ஏங்குகிறோம். வேதனைகள், கலக்கங்கள், துயரங்கள் நிறைந்த ஏராளமான அனுபவங்களை நாம் வாழ்க்கையில் அனுபவிக்கிறோம். ஆனால், மேன்மையான அனுபவங்களை பெற வேண்டும் என்று துடிக்கிறோம்.

அனுபவங்கள், தியானத்தோடு எவ்விதத்திலும் தொடர்புடையதல்ல. அனுபவத்தை அனுபவிக்க,

அனுபவிப்பவர் ஒருவர் இருக்க வேண்டும். அனுபவிப்பவர், 'தான்' என்பதாக, தொடரும் ஞாபகங்களின் தொகுப்பாக இருக்கிறார். 'தான்' மற்றும் 'நான்' எனும் எண்ணத்தின் முழுமையான கட்டமைப்பைப் புரிந்துகொண்டு, 'மேன்மையான நான்' என்பதைப் பெற்றுவிட தேடியலையாமல், முற்றிலுமாக 'நான்' எனும் எண்ணத்திலிருந்து விடுபட முடியுமா என்பதைக் கண்டுபிடிப்பதே, தியானம் ஆகும். 'மேன்மையான நான்' என்றாலும், அதுவும் 'நான்' தான் என்பதால், அதற்குச் சிறப்பு ஏதுமில்லை. ஆக, தியானம் என்பது வளர்த்துக்கொள்ளப்படவேண்டிய, தீர்மானிக்கப் பட்ட செயல் அல்ல. சுதந்திரமான மனம் தேவை. சுதந்திரம் இருப்பின், அங்கு வெளி (Space) இருக்கும்.

வெளி என்றால் என்ன என்று நாம் புரிந்துகொண்டிருக்கிறோமா என்று நான் வியக்கிறேன். பௌதீக உலகிலிருக்கும் வெளியைத் தவிர, வேறு வெளி நம்மிடம் உண்டா? பம்பாயில் வாழும் நமக்கு எங்கிருக்கிறது வெளி? சிறிய அறையில், அடுக்குமாடி குடியிருப்பில் வாழ்கிறோம். நாளடைவில் அச்சிறு இடத்தை நம் மனம் ஏற்றுக்கொண்டு சமாதானமடைந்து விடுகிறது. ஆனால், நாம் இங்கு பேசுவது சுவர்கள் ஏதுமற்ற வெளியைப் பற்றி. நீங்கள் கடற்கரையில் நின்றுகொண்டு, கடலைப் பார்க்கும்போது, வெகு தொலைவிலிருக்கும் அடிவானத்தைக் காண்கிறீர்கள் - நீண்ட தூரம், நீண்ட இடைவெளி, வானத்தில் மின்னும் விண்மீன்கள் எத்தனை ஜொலிக்கின்றன, எவ்வளவு விரிந்து பரந்த வெளி! ஆனால், உங்கள் மனம் குறுகியதாய், சிறியதாய் இருப்பதையும் பாருங்கள். உங்கள் மனம், கட்டுப்படுத்தப்பட்டதாய், வடிவமைக்கப் பட்டதாய், தொகுக்கப்பட்டதாய் இருப்பதால், உங்களுக்குள் வெளி என்பதே இல்லை.

புனிதத்தைப் புரிந்துகொள்ள, உங்களுக்குள் நிறைய வெளிவேண்டும், வெளியே வெளி இருந்து பலனில்லை. வெளி என்பதில் பாகுபாடோ, பிரிவினையோ இல்லை. நீங்கள், இந்தியாவையும் மற்றொரு நாட்டையும் பிரித்து வேறுபடுத்தும்போது, அங்கு இடைவெளி இருக்கிறது, நீங்கள், உங்களையும் உங்கள் மனைவியையும் பிரித்துப் பார்க்கும்போது, இடைவெளி ஏற்படுகிறது. ஆனால், பிரிவினையால் தோன்றும் இடைவெளி, உண்மையில் வெளி அல்ல. எங்கு முரண்பாடோ போராட்டமோ இல்லையோ, அங்கு மட்டும் உள்முக வெளி இருக்கும்.

விரிந்து பரந்த, எல்லையற்ற வெளியை கொண்டதாய் இருக்கும் மனதில், அவ்வெளியின் சக்தி இருக்கிறது. அந்தச் சக்தி, எண்ணத்தின் உரசலால் பிறந்தது அல்ல, அது சுதந்திரத்திலிருந்து மலர்ந்தது. எல்லையற்ற வெளி, அமைதி, மற்றும், வெளியின் சுதந்திரத்தில் பிறந்த அளப்பரிய சக்தியை மனம் கொண்டிருக்கும்போது, காலம், அளவீடு, அடையாளம் ஆகியவற்றையெல்லாம் கடந்த 'அது' அங்கு இருக்கிறது, புனிதமாயிருக்கும் அது அங்கு இருக்கிறது. ஆனால், அப்புனிதத்தைக் காண, ஒருவருக்கு, அதீத அன்பும் கருணையும் இருக்க வேண்டும்.

அன்பும் கருணையும் நம் அருகிலிருந்து, நம் வீட்டிலிருந்து தொடங்க வேண்டும். நீங்கள் உங்கள் வாழ்க்கையை நேசிக்க வேண்டும், உங்கள் குழந்தைகளிடம் அன்பாக இருக்க வேண்டும். அன்பு ஒருபோதும் பற்றுதலுடன் கூடியதாய் இருக்க முடியாது. பற்றுதல் இருக்குமேயானால் வாழ்க்கையின் பிரச்சினைகள் அனைத்தையும் அனுபவிக்க நேரிடும்.

நண்பர்களே, இது உங்கள் வாழ்க்கை. புரட்சிகரமான மனோரீதியான அடிப்படை மாற்றத்தை உங்களுக்குள் கொண்டுவாருங்கள். மாற்றம் நிகழவில்லையென்றால், மரபணு நிபுணர்கள், தங்கள் வழியில் உங்களை வெறும் இயந்திரத்தனமானவர்களாக மாற்றி விடுவார்கள். பிறகு, வாழ்க்கைக்கு அர்த்தமேதுமில்லை. ஆனால், உண்மையில், வாழ்க்கைக்கு மேன்மையான அர்த்தமிருக்கிறது, விசேஷ முக்கியத்துவம் உள்ளது.

அன்பு என்றால் என்ன, காருண்யம் என்றால் என்ன, எது நுண்ணறிவு என்பனவற்றைப் பற்றிய விழிப்புணர்வும், புரிதலும் உங்களுக்கு இருக்குமேயானால், வாழ்க்கை அர்த்தமுள்ளதாக இருக்கும். அத்தகைய வாழ்க்கை பேரமைதியையும், விசாலமான வெளியையும் கொண்டு வருகிறது. தன்னலத்தின் நிழல் பட்டால்கூட, பேரமைதியும், வெளியும் அங்குத் தங்கியிருக்க முடியாது. வார்த்தைகளை ஓயாமல் ஜபித்தலோ, கடுமையான ஒழுங்குடன் கூடிய முயற்சியோ, தியானம் அல்ல. முரண்பாடுகள் ஏதும் இல்லாதபோது தோன்றும் ஒழுங்குமுறையே, தியானம் ஆகும்.

*பம்பாய், 30.01.1983*

■■

வாழ்க்கையை நடத்திச்செல்ல, நம்மிடம் இருக்கும் ஒரே கருவி எண்ணம் மட்டுமே என்றும், அது மிகவும் சக்தி வாய்ந்தது என்றும், பன்னெடுங்காலமாய் கருதப்படுகிறது. உண்மையென ஏற்றுக்கொள்ளப்பட்ட அக்கருத்தை, முற்றிலுமாக தகர்த்தெறிகிறார் கிருஷ்ணமூர்த்தி. தனி நபருக்குள் மட்டுமின்றி உலகம் முழுவதிலுமே, பெருங்குழப்பத்தை எண்ணம் விளைவிக்கிறது என்று அவர் எடுத்துரைக்கிறார். வாழ்வின் வளங்களைப் பெறுவதில், எண்ணம், மனிதனுக்குப் பெருமளவில் உதவுகிறது என்பதில் சந்தேகமேதும் இல்லை. நடைமுறை வாழ்க்கையில் எண்ணத்திற்கு உரிய இடம் உள்ளது. ஆனால், உளவியல் பிரச்சினைகளுக்கு எண்ணம் பெற்றுத்தரும் தீர்வுகள், பிரச்சினைகளை மேலும் பன்மடங்காக்குகிறது.

வன்முறை, முரண்பாடு, மனக் காயங்கள், பாதுகாப்பின்மை, பயம், துக்கம், களிப்பு போன்ற உணர்வுகளே நம் செயல்பாடுகளின் அடித்தளமாய் அமைந்துள்ளன. இவ்வுணர்வுகளையும், அவற்றின் வெளிப்பாட்டினால் உண்டாகும் பிரச்சினைகளையும் கையாள எண்ணத்திற்கு ஆற்றல் இல்லை என்பதை இந்நூலில் கிருஷ்ணமூர்த்தி நன்கு விவரிக்கிறார். வேறுபட்ட சூழ்நிலையில் நிகழ்பவை மூலமாக, எண்ணமே பிரச்சினைகளை உருவாக்கியும், அவற்றைத் தொடரச் செய்வதையும் நிரூபிக்கிறார். பிரச்சினைகளை எதிர்கொள்ள எண்ணத்திலிருந்து முற்றிலுமாக வேறுபட்ட உபகரணம் ஏதாவது இருக்கிறதா என்ற கேள்வியை அவர் எழுப்புகிறார். புது தில்லி, கல்கத்தா, மதராஸ், மற்றும் பம்பாய் ஆகிய இடங்களில் அக்டோபர் 1982-க்கும் ஜனவரி 1983 க்கும் இடைப்பட்ட நாட்களில் அவர் நிகழ்த்திய பேச்சுகள் இந்நூலில் வெளியிடப்பட்டுள்ளன. 'நெஞ்சத்தினுள் இருக்கும் மனம்' எனும் அருமையான கண்ணோட்டத்தையும் அவர் இந்நூலில் நமக்கு அறிமுகப்படுத்துகிறார்.